கழக வெளியீடு-௫௮௨

பதினெண் கீழ்க்கணக்கு

# நாலடியார்

## உரை



உரையாசிரியர்:

திரு. தி. சு. பாலசுந்தரம் பிள்ளையவர்கள்

(இளவழகனார்)





திருநெல்வேலித் தென்னிந்திய

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட்,

திருநெல்வேலி.................................................சென்னை. 1.

# பதிப்புரை

தண்டமிழ் மக்கள் கண்ட நூல்களுள் சங்க மேறிச் சிறப்புப் பெற்றன பற்பல. அவற்றுள் மாண்டன போக இன்றளவும் நின்று புகழொளி வீசுவன சிற்சில. அவை பத்துப்பாட்டு, எட்டுத்தொகை, பதினெண் கீழ்க்கணக்கு என்பன. இவற்றுள், கீழ்க்கணக்கில், ஒரு சில பிற்காலத்தன எனக் கருதப்படுமாயினும் பெரும்பாலன சங்க காலத்தனவே.

கீழ்க்கணக்காவன குறைந்த அடிகளுடையனவாய், வெண்பா யாப்பினவாய், அறம் பொருளின்பங்கள் நுவன்று, அம்மை முதலிய அழகுகளுடையவாய் வருவன. இவற்றில் பாக்கள் ஐம்பதின் மிக்கும் ஐஞ்ஞூற்றிற் குறைந்தும் வருமென்பா. களவழி முதலிய சில ஐம்பதிற் குறைந்தும், குறள் ஐந்நூற்றின் மிக்கும் வந்தன.

நானூறு பாக்கள் கொண்டவற்றை அகநானூறு புறநானூறு என வழங்கும் மரபுபற்றி, நாலடியாலான இந் நானூறு பாக்களை நாலடிநானூறு என வழங்கினர். அது சுருங்கி நாலடி என்றும், உயர்வு சிறப்பு விகுதிபெற்று நாலடியார் என்றும் வழங்கப்பெறும்.

இந்நூல் சொன்னயம் பொருணயஞ் சிறந்து விளங்குவது; நீதி நூல்களுள் தலை சிறந்து உலகுக்கெல்லாம் பொது நூலாக விளங்குந் திருக்குறளுக்கு அடுத்தபடியிற் பெருமையுற்று விளங்குவது. "பழகு தமிழ்ச் சொல்லருமை நாலிரண்டில்", "ஆலும் வேலும் பல்லுக் குறுதி, நாலும் இரண்டும் சொல்லுக் குறுதி" என்பன பழமொழிகள். சங்க நூல்களின் உரையாசிரியர்களான பரிமேலழகர், நச்சினார்க்கினியர், அடியார்க்கு நல்லார் முதலியோரால் இந்நூல் மேற்கோளாக எடுத்தாளப்படும் பெருமையினை யுடையது.

சிற்சில அதிகாரங்களில் அவ்வதிகாரங்கட்குப் பொருத்தமிலாப் பாக்கள் கலந்திருத்தலானும், கூறிய கருத்தே பின்னுங் கூறியது கூறலாக வருதலானும், இன்னும் இவைபோன்ற பல்வேதுக்களானும் இந்நூல் ஒருவரான் இயற்றப்படாது பல்லோராற் பாடப் பட்டுப் பின்னொருகால் மற்றோரால் தொகுக்கப்பட்டிருத்தல் வேண்டும் என்று கொள்ளக்கிடக்கின்றது. மேலும், தமிழ் கூறு நல்லுலகத்து ஆங்காங்கே வழங்கும் நீதிகளை முதலாகக் கொண்டு பாடப்பட்டதெனக் கொள்ளக்கிடக்கின்றதன்றி; இஃதொரு மொழிபெயர்ப்பு நூல் என்று கொள்வதற்கு யாதொரு சான்றுமின் றென்க.

இந்நூலில் பெருமுத்தரையர் வள்ளன்மைபற்றிய குறிப்புக்கள் வந்துள்ளமையின் பெருமுத்தரையர் காலத்திலேனும், அதற்குச் சற்றுப் பின்னரேனும் இந்நூலின் பாக்கள் பாடப்பட்டிருத்தல் வேண்டும். பெருமுத்தரையர் என்பார் பாண்டியர்க் கடங்கியிருந்த சிற்றரசராவர்; பாண்டியரையே அப் பெயர் குறிக்குமென்று கூறுவாரு முளர்.

இந்நூலைத் தொகுத்து ஒருரையும் இயற்றினார் பதுமனார் என்பர். அவ்வுரை கிடைத்திலது.

இந்நூல் அறத்துப்பால் பொருட்பால் காமத்துப்பால் என மூன்றாகப் பகுக்கப்பட்டுள்ளது. அறனாவது ஆன்றோர்களான் விதித்தன செய்தலும் விலக்கியன ஒழிதலுமாம். மக்களின் புறஉலக வாழ்க்கைக்குவேண்டிய பல்வகைப்பட்ட பொருள்களையும் விளக்கிக் கூறும் பகுதி பொருட்பால் எனப்பட்டது. பல்வகைப் பொருளும் சிறப்புறுதற்கு அரசியலமைப்பே பெரிதும் ஏதுவாதலின் இஃது இப் பகுதிக்கண் விரித்து விளக்கப்படுகின்றது. பொருளாலடையும் காதலின்பம் காமத்துப்பாலில் விளக்கப்படுகின்றது. காதலின்பமாவது ஒத்த தலைவனுந் தலைவியுங் கூடியடையும் இன்பம்.

இந் நூலுக்கு உரைகள் பல இருப்பினும் அவை அயல்மொழி கலவாதும், பாக்களின் போக்குக்கொப்ப முரண்பாடின்றியும் இல்லாமையோடு சொற்களை யுடைத்து வீணான கொண்டு கூட்டுக்களுடனும் உள்ளன. இத்தகைய குறைபாடுகளின்றி, குறளுக்குப் பரிமேலழகரால் எழுதப்பட்ட உரையை யொப்ப இந்நூலுக்கும் திட்பநுட்பஞ் செறிந்த ஒருரை இன்றியமையாததாயிற்று.

இத் தேவையை முற்றச்செய்வான்வேண்டிக் கழகப் புலவர் திரு. இளவழகனா ரவர்களால் உரை எழுதப்பெற்று இப்போது இந் நூல் வெளியிடப்பெறுகின்றது. தமிழுலகம் இதனைப் போற்றிப் பயனெய்தும் என நம்புகின்றோம்.

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.

# பொருளடக்கம்

# நாலடியார்

## இளவழகனாருரை



### கடவுள் வாழ்த்து

வான்இடு வில்லின் வரவறியா வாய்மையால்
கால்நிலம் தோயாக் கடவுளை—யாம்நிலம்
சென்னி யுறவணங்கிச் சேர்துமெம் உள்ளத்து
முன்னி யவைமுடிக என்று.

(பொருள்) *வான் இடு வில்லின் - மேகத்தால் உண்டாகின்ற இந்திரவில்லைப்போல, வரவு அறியா வாய்மையால் - பிறப்பின் வருகையை அறிந்துகொள்ளக்கூடாத உண்மையினால், யாம் எம் உள்ளத்து முன்னியவை முடிக என்று - எமது மனத்தில் நினைத்தவை நிறைவேறுக என்று கருதி, கால் நிலம் தோயாக் கடவுளை - திருவடிகள் நிலத்தில் படிதலில்லாத அருட்கோல இறைவனை, நிலம் சென்னி உற வணங்கி - தரையில் எமது முடி பொருந்தும்படி தொழுது, சேர்தும் - இடைவிடாது உள்ளுவோம்.*

(கருத்து) *பிறப்பின் தோற்றம் முதலியவற்றை நாம் முழுதுந் தெரிந்துகொள்ளக் கூடாமையால், விரும்பும் நலங்களின் பொருட்டு இறைவனைத் தொழுது அடைக்கலமாவோம்.*

(விளக்கம்) *வான் என்றது மேகம். மேகத்தால் இந்திரவில் உண்டாகும் காரணம் ஓர் இயற்கைப்பொருள் உண்மையாகும்; ஆதலால், அதனை மூன்றும் வேற்றுமையில் உரைப்பது சிறப்பு. வரவு - பிறப்பின் வருகை; அஃதாவது, பிறப்பின் தோற்றம் முதலிய தன்மைகள். வாய்மை - உண்மை நிலைமை; பிறப்பின் தோற்றம்*

முதலியவற்றை அறிந்துகொள்ளக் கூடாத இயற்கையுண்மை நிலைமை; இன்ன காலத்தில் இன்ன வகையில் தோன்றும் அல்லது மறையும் என்று தெரிந்துகொள்ளக் கூடாத நிலைமை. இந்திரவில் இக் கருத்துக்கு உவமையாதல், "வானிடு சிலையின் தோன்றி,"* என்று வரும் சிந்தாமணியிலுைங் துணியப்படும். 'அபியுத்தர்' என்னும் ஒருவர் இக் கடவுள் வாழ்த்துச் செய்யுள் இயற்றினரென வும், அன்று, பதுமனார் என்னும் ஒருவர் இயற்றினரெனவுங் கூறுப.

* சிந். குணமா. ௧0௧

# க. அறத்துப் பால்

[அறத்தின் பகுப்பு உணர்த்துவது. அறம், இம்மை மறுமை வீடு என்னும் மூன்றுந் தருவதனால், இது, முதலில் நின்றது.]

## க. செல்வம் நிலையாமை

[செல்வத்தின் நிலையாமையை உணர்த்துவது.]

1. அறுசுவை யுண்டி அமர்ந்தில்லாள் ஊட்ட
மறுசிகை நீக்கியுண் டாரும்—வறிஞராய்ச்
சென்றிரப்பர் ஓரிடத்துக் கூழ்எனின், செல்வம்ஒன்
றுண்டாக வைக்கற்பாற் றன்று.

(பொ - ள்) *அறுசுவை உண்டி - அறுசுவையுள்ள உணவை, இல்லாள் - மனையாள், அமர்ந்து ஊட்ட - விரும்பி உண்பிக்க, மறுசிகை நீக்கி உண்டாரும்-மறுபிடி தவிர்த்து உண்ட செல்வரும், வறிஞராய்ச் சென்று இரப்பர் ஓர் இடத்து கூழ் - ஒருகாலத்தில் வறுமையாளராகி எங்கேனும் ஓர் இடத்திற் போய்க் கூழ் இரப்பர், எனின் - ஆதலின், ஒன்று - செல்வமென்பதொன்று, உண்டாக வைக்கற்பாற்று அன்று - நிலையுடையதாக மனத்திற் கருதக் கூடியதன்று.*

(க - து) *செல்வரும் வறிஞராக மாறுதலால், செல்வம் நிலையுள்ளதாகக் கருதற்குரியதன்று.*

(வி - ம்) *'அமர்ந்து' 'ஊட்ட' என்னுஞ் சொற்கள் ஆற்றல் வாய்ந்தவை; அமர்தல் - மனம் பொருந்துதல்; அன்பு, மகிழ்வோடு உண்ணச் செய்தலின் 'ஊட்ட' என வந்தது. ஒவ்வொருவகை உணவிலும் ஒவ்வொரு பிடி யளவே போதுமானதா யிருந்தமையால், அச் செழுமை மிகுதியால் மறுசிகை நீக்கி உண்டார். உம்மை உயர்வின் மேல் வந்தது. வைக்கற்பாற்றன்று - வைக்கற்பாலதன்று. செல்வத்தின் நிலையாமை தெரிந்தால், அதனைக் காலத்தில் தக்கவாறு பயன்படுத்திக்கொள்ளும் உணர்வு உண்டாகும். நிலையாமை கூறும் பிறவிடங்களிலும் இங்ஙனமே கருத்துக்கொள்க.*

2. துகள்தீர் பெருஞ்செல்வம் தோன்றியக்கால் தொட்டுப்
பகடு நடந்தகூழ் பல்லாரோ டுண்க;
அகடுற யாரமாட்டும் நில்லாது செல்வம்
சகடக்கால் போல வரும்.

(பொ - ள்) துகள்தீர் பெரு செல்வம் - குற்றமற்ற சிறந்த செல்வம், தோன்றியக்கால்-உண்டானால், தொட்டு-அது தொடங்கி, பகடு நடந்த கூழ் - ஏர் நடந்ததனால் உண்டான உணவை, பல்லாரோடு உண்க - விருந்தினர் முதலிய பலரோடுங் கூடி உண்ணுக; ஏனென்றால்; செல்வம் - பொருள், அகடு உற யார்மாட்டும் நில்லாது - உறுதி பொருந்த யாரிடத்திலும் நிலைத்திராமல், சகடக்கால்போல வரும் - வண்டியுருளைபோல மாறிப் புரளும்.

(க - து) செல்வம் யாரிடத்திலும் நிலைத்திராமை யால், அது தோன்றினால் உடனே பலர்க்கும் அளித்துப் பயன்படுத்திக்கொள்ள வேண்டும்.

(வி - ம்) பொருள் நல்ல வழியில் வரவேண்டும் என்பது தோன்றத் 'துகள் தீர்' என்றும், செல்வம் தோன்றுவது உறுதி யன்று என்பது தோன்றத் 'தோன்றியக்கால்' என்றுங் கூறினார். பெருஞ்செல்வம் என்பது இங்கே மேன்மையான செல்வம்; வேளாண்மையால் வருகின்ற செல்வமே பெருஞ்செல்வம் என்பது குறிப்பு. தோன்றியக்கால் ஒற்று மிகுந்தமையால வினையெச்சமாகப் பொருள் கொள்ளப்படும். பகடு - கடா; இங்கே அது பூட்டிய ஏர். நடந்த என்னும் பெயரெச்சம் காரணப்பொருளில் வந்தது; ஆகவே, 'நடந்ததனால் உண்டான' என்று உரைத்துக்கொள்ளவேண்டும் பல்லார், பல பிரிவினர் என்பது காட்டும்; அவர் விருந்தினர், சுற்றத்தார், நண்பர் முதலியோர். அகடு - உறுதி; யார்மாட்டும் என்றது, எவ்வளவு விழிப்புடையவரிடத்தும் என்பது. நில்லாது - நில்லாமல். வரும் - கை மாறி மாறி வரும்.

3. யானை யெருத்தம் பொலியக் குடைநிழற்கீழ்ச்
சேனைத் தலைவராய்ச் சென்றோரும—ஏனை
வினைஉலப்ப வேறாகி வீழ்வர்தாம் கொண்ட
மனையாளை மாற்றார் கொள.

(பொ - ள்) யானை எருத்தம் பொலிய - யானையின் கழுத்து விளங்கும்படி, குடை நிழல் கீழ் - குடை நிழலில், சேனைத் தலைவராய் - பல சேனைகட்குத் தலைவராக, சென்றோரும் - ஆரவாரமாய் உலாச்சென்ற அரசர்களும், ஏனை வினை உலப்ப - மற்றத் தீவினை கெடுக்க அதனால், தாம்

கொண்ட மனையாளை மாற்றார் கொள - தாம் திருமணஞ் செய்துகொண்ட மனைவியையும் பகைவர்கள் கவர்ந்து கொள்ளும்படி, வேறு ஆகி வீழ்வர் - முன் நிலைக்கு வேறான வறுமையாளராகி நிலைகுலைவர்.

(க - து) அரசரும் வறியராவர்.

(வி - ம்) இவர் ஏறியதனால் யானையின் கழுத்துக்கு அழகு உண்டாயிற்று என்று குறிப்பதனால், இவரது பெருமை சிறப்பிக்கப் பட்டது. 'நிழற் கீழ்' என்பதிற், 'கீழ்' ஏழாவதன் உருபு. ஏனை வினை - மற்றை வினை; அது தீவினை என்னும் குறிப்பில் வந்தது. 'உலப்ப' என்னும் வினையெச்சம் காரணப் பொருளுள்ளது. மனையாளையும் என்று உம்மை விரித்துக்கொள்வது சிறப்பு. யானையெருத்தத்திற் சென்றோரும் இங்ஙனம் நிலைகுலைவா என்றமையால், ஏனையோர் நிலைகுலைதல் சொல்லாமலே பெறப்படும். தம் மனையாளைப் பிறர் கவர்ந்துகொள்ளுதலை விட இழிவானதொன்று வேறின்மையின், அடியோடு ஆற்றலைக் கெடுத்துவிட்ட வறுமையின் பெரும கொடுமைக்கு அதனை எடுத்துக் காட்டினார்.

**4. நின்றன நின்றன நில்லா எனவுணர்ந்**
**தொன்றின ஒன்றின வல்லே செயின்செய்க;**
**சென்றன சென்றன வாழ்நாள் செறுத்துடன்**
**வந்தது வந்தது கூற்று.**

(பொ - ள்) வாழ்நாள் - உடம்போடு கூடி வாழுமாறு ஏற்பட்ட நாட்கள், சென்றன சென்றன - செல்கின்றன செல்கின்றன; கூற்று - நமன், செறுத்து உடன்வந்தது வந்தது - சினந்து விரைந்து வருகின்றான் வருகின்றான்; ஆதலால்; நின்றன நின்றன - நிலைபெற்றன நிலைபெற்றன வென்று நினைத்துக்கொள்ளப்பட்ட செல்வப் பொருள்கள், நில்லா என - நிலைபெறா என்று, உணர்ந்து - தெரிந்து, ஒன்றின ஒன்றின - இசைந்தன இசைந்தனவாகிய அறங்களை, செயின் - செய்யக் கருதுவீர்களானால், வல்லே செய்க - விரைந்து செய்வீர்களாக.

(க - து) வாழ்நாள் கழிந்துகொண்டே யிருத்தலால் நிலையில்லாத செல்வப் பொருள்கள் கொண்டு உடனே அறம் செய்யவேண்டும்.

(வி - ம்) ஒல்லும் அளவு அறஞ் செய்க என்றற்கு, ‘ஒன்றின ஒன்றின செய்க’ எனவும், செயதலின் அருமை தோன்றச் ‘செயின்’ எனவுங் கூறினார். ‘செல்கின்றன’ என்னுங் கருத்து விரைவு பற்றிச் ‘சென்றன’ என்றும், ‘வரும்’ என்னுங் கருத் துத் துணிவு பற்றி ‘வந்தது’ என்றுஞ் சொல்லப்பட்டன. முதல் இரண்டு அடுக்குகள் பன்மையும், பின இரண்டு அடுக்குகள் அவ லமும் உணர்த்தும் “கூற்று - வாழ்நாள் இடையறாது செல்லுங் காலத்தினைப் பொருள் வகையாற் கூறுபடுத்துங் கடவுள்” என் னும் நச்சினார்க்கினியருரை* இங்கே நினைவுகூரற்பாலது. ௪

5. என்னுனும் ஒன்றுதம் கையுறப் பெற்றக்கால்
பின்னுவ தென்று பிடித்திரா—முன்னே
கொடுத்தார் உயப்போவர் கோடில்தீக் கூற்றம்
தொடுத்தாறு செல்லும் சுரம்.

(பொ - ள்) என் ஆனும் ஒன்று - யாதாயினும் ஒரு பொருளை, தம் கை உற பெற்றக்கால் - தமது கையில் கிடைக்கும்படி பெறுவாராயின், பின் ஆவது என்று - மூப்புக்காலத்தில் பயன்படுவதென்று, பிடித்து இரா - இறுகப் பிடித்துக்கொண்டு சும்மா இராமல், முன்னே கொடுத்தார் - இளமையிலேயே அறஞ்செய்தவர், கோடு இல் தீக் குற்றம் - நடுவுநிலைமையுள்ள அருளில்லாத கூற்று வன், தொடுத்து செல்லும் சுரம் ஆறு - கயிற்றாற் கட் டிக்கொண்டுபோகின்ற காட்டு வழியை, உய்ய போவர் - தப்பிப் புண்ணிய உலகம் புகுவார்.

(க - து) இளமையிலேயே அறஞ் செய்தவர் புண் ணிய உலகம் புகுவர்.

(வி - ம்) சிறிது கிடைத்தாலும் அறஞ்செய்க என்பதற்கு ‘என்னுனும்’ என்றார். பொருள் கிடைப்பதன் அருமை நோக்கிப் ‘பெற்றக்கால்’ என்றார். கிடைப்பது அங்ஙனம் அருமையா யிருத் தலின், கிடைத்த உடனே அறத்திற் செலவிடுக என்பது கருத்து. பிடித்திருத்தல், தாமும் உண்ணாது இறுக்கஞ் செய்துகொண்டிருத் தல். ‘முன்னே’ என்பது முதற்காலத்திலேயே என்னுங் கருத் தில் வந்தது; அஃதாவது, பெற்ற உடனே என்பது; கோடு இல் - கோணுதல் இல்லாத; நடுவு நிலைமையுள்ள. அறஞ்செய்வார் கூற்

* தொல். புறத். உ௪.

றுவனுலகுக்குச் செல்லும் வழி தப்பிப் புண்ணிய வுலகுக்குப் போவர் என்பது பின் இரண்டடிகளின் பொருள். ரு

**6.** **இழைத்தநாள் எல்லை இகவா; பிழைத்தொரீஇக்**
**கூற்றம் குதித்துய்ந்தார் ஈங்கில்லை;—ஆற்றப்**
**பெரும்பொருள் வைத்தீர் வழங்குமின்; நாளைத்**
**தழீஇம்தழீஇம் தண்ணம் படும்.**

(பொ-ள்) இழைத்த நாள் எல்லை இகவா - உடலோடு கூடி வாழ அளவு செய்துள்ள நாள்கள் தம் அளவைக் கடவா; பிழைத்து ஒரீஇ - அந்த அளவில் தவறி நீங்கி, கூற்றம் குதித்து உய்ந்தார் - கூற்றுவனிடத்தினின்றும் அப்புறப்பட்டு உயிர்பிழைத்திருப்பவர், ஈங்கு இல்லை - இவ் வுலகத்தில் இல்லை; நாளை - நாளையொருகால், தண்ணம் தழீஇம் தழீஇம் படும் - சாவுப்பறை தழீஇம் தழீஇம் என்று ஒலிக்கும்; ஆதலால்; பெரும் பொருள் ஆற்ற வைத்தீர் - பெருமையைத் தருவதாகிய பொருளை மிகுதி யாக வைத்துள்ள செல்வர்களே! வழங்குமின் - உடனே அப் பொருளைப் பிறர்க்கு உதவுங்கள்.

(க - து) குறித்த ஆயுளுக்குமேல் யாரும் உயிர் வாழ்தல் கூடாமையின், உடனே அறஞ்செய்து நலம்பெறு தல் வேண்டும்.

(வி - ம்) இழைத்த - உண்டாக்கிய; வைத்தீர், இங்கே பெயர். தழீஇம் தழீஇம் என்பது ஒலிக்குறிப்பு. படும் - ஒலிக்கும்; இறப்பு நேரும் என்றற்குத் 'தண்ணம் படும்' என்றார். தமக்கு வேண்டிய அளவுக்குமேற் பொருள் படைத்திருப்பவர், அங்ஙனம் மேற்பட்ட பொருளைப் பிறர்க்கு வழங்குங் கட்டாயமுடைய ராதலின், இச் செய்யுள் அவரை நோக்கிற்று. சு

**7.** **தோற்றம்சால் ஞாயிறு நாழியா வைகலும்**
**கூற்றம் அளந்துநும் நாளுண்ணும்;—ஆற்ற**
**அறஞ்செய் தருளுடையீர் ஆகுமின்; யாரும்**
**பிறந்தும் பிறவாதா ரில்.**

(பொ - ள்) கூற்றம்-யமன், தோற்றம் சால் ஞாயிறு- காலையில் தோன்றுதல் பொருந்திய பகலவனை, நாழி ஆக -

நாழி என்னும் அளவுகருவியாகக்கொண்டு, நம நாள் வைகலும் அளந்து உண்ணும - உம் வாழ்நாளாகிய தானியத்தை நாள்தோறும் அளவுசெய்து உண்ணுவான்; ஆதலால்; ஆற்ற அறம் செய்து அருளுடையீர் ஆகுமின் - மிகுதியாகப் பிறர்க்கு உதவிசெய்து உயிர்களிடத்தில் அருளுடையீராகுக, யாரும - அங்ஙனம ஆகாதவா யாரும், பிறந்தும் பிறவாதாரில் - பிறவியெடுத்தும பிறவாதவரிற் சேர்ந்தவரே யாவர்.

(க - து) அருளுடையராதலே பிறவியின் பயனாதலால், அறஞ்செய்து அருளுடைய ராகுக.

(வி - ம்) ஞாயிறு தோன்றுதலும் மறைதலுமே ஒரு நாளுக்கு அடையாளமாதலால், அது 'தோற்றம் சால்' என்னும் அடைமொழி கொடுத்து, அளவு கருவியாக உருவகஞ் செய்யப்பட்டது. பகலவனை நாழியாகக் கொணடமையால், கூற்றுவன் உணணுவதற்கு, நாள் தானியமாகக் கொள்ளப்பட்டது. ஒறுக்குங குறிப்புத தோன்ற, 'உண்ணும்' என்றார். 'பிறவாதாரில' என்பதன் பின் ஒரு சொல் வருவித்துக்கொள்க உயிா அருள்வடிவாகுமளவும அறஞ்செய்து கொண்டேயிருக்க என்றற்கு, 'ஆற்ற அறஞ் செய்து' எனப்பட்டது. "அறவினை ஓவாதே செலலும்வாயெல்லாஞ் செயல்"* என்பதனுலும் இக்கருத்து அறிந்துகொள்ளப்படும். எ

8. செல்வர்யாம் என்றுதாம் செல்வுழி எண்ணுத
புல்லறி வாளர் பெருஞ்செல்வம்—எலலில்
கருங்கொண்மூ வாயதிறந்த மின்னுப்போல் தோன்றி
மருங்கறக் கெட்டு விடும்.

(பொ - ள்) செல்வர் யாம் என்று - நாம் செல்வமுடையோம் என்று களித்து, தாம் செல் உழி எண்ணாத - தாம் இனிச் செல்ல விருக்கும் மறுமை யுலகத்தை நினையாத, புல் அறிவாளர் பெரு செல்வம் - சிறிய அறிவுடையவரது மிக்க செல்வம, எல்லில் - இரவில், கரு கொண்மூ வாய்திறந்த மின்னுப்போல் தோன்றி - கரியமேகம் வாய் திறந்ததனு லுண்டான மின்னலைப்போலச் சிறிதுகாலந்

---

* குறள், ௩ : ௩.

தோன்றி நின்று, மருங்கு அற கெட்டுவிடும் - இருந்த இடமும தோன்றுமல் அழிந்துபோம்.

(க - து) மறுமை யுலகத்தை எண்ணி வாழாதவர்களுடைய செல்வம, மின்னலைபபோல் தோன்றி அழியும்.

(வி - ம்) செல் உழி - செல்லும் இடம்; இஙகே, மறுமை குறித்து நின்றது. செல்லுழி என்பது 'செல்வுழி' என மருவி முடிந்தது; "எல்லா மொழிக்கும்"* என்னுந் தொல்காப்பிய நூற்பாவின் நச்சினார்க்கினியருரை கருதுக. அறியாமையில் ஒளிருஞ் செல்வமாதலின், இருளில் ஒளிரும மின் உவமைபாயிற்று. கொண்மூ-நீரைக் கொள்வது என்னும காரணப்பெயர். மின்னு-மின்னுதல் என்னுந் தொழிற் பெயரில் வந்தமையின் அப் பொருள் தோன்ற உகரச சாரியை பெற்று, அதுவே பின் தொழிலாகு பெயராயிற்று. மருஙகும் என எசசவுமமை கொள்க. செல்வம் இயல்பாகவே நிலையாமையுடையதாயினும் அது மின்னலைப்போல் அத்துணை விரைவில் அழிந்துபோதற்குக் காரணம், 'செல்வர் யாம்' என்னுஞ் செருககும், அச் செருக்கினல் மறுமையைப் பொருள் செய்து வாழாத தாறுமாறுன வாழ்க்கை நிலையும் முதலாயின வென்பது இச செயயுட் குறிப்பு. அ

**9.** உண்ணுன் ஒளிநிருன் ஓங்கு புகழ்செய்யான்
துன்னருங கேளிர் துயர்களையான்—கொன்னே
வழஙகான் பொருள்காத் திருப்பானேல், அ ஆ
இழந்தான்என் றெண்ணப் படும்.

(பொ - ள்) உண்ணுன்-இன்றியமையாத உணவுகளை உண்ணுமலும், ஒளி நிருன் - மதிப்பை நிலைக்கச் செய்யாமலும், ஓங்கு புகழ் செய்யான் - பெருகுகின்ற உரையும் பாட்டுமாகிய புகழைச் செய்துகொள்ளாமலும், துன் அரு கேளிர் துயர் களையான் - நெருங்கிய பெறுதலரிய உறவினரின் துன்பங்களை நீக்காமலும், வழங்கான் - இரப்பவர்க்கு உதவாமலும், கொன்னே பொருள் காத்திருப்பானேல் - ஒருவன் வீணுகச் செல்வப்பொருளைக் காத்துக் கொண்டிருப்பானுயின், அ ஆ இழந்தான் என்று-ஐயோ அவன் அப்பொருளை இழந்தவனேயென்று, எண்ணப் படும்-கருதப்படுவான்.

---

* தொல். புண ௩௨அ.

(க - து) ஒரு செல்வன், தனது செல்வத்தை அற வழிகளிற் செலவு செய்யாதிருந்தால் அவன் அதனை இழந்தவனாகவே கருதப்படுவான்.

(வி - ம்) ஒளி-மதிப்பு; "ஒளி ஒருவற்கு உள்ள வெறுக்கை"* என்னுமிடத்து, 'ஒளி - மிக்குத் தோன்றுதலுடைமை' என்பர் பரிமேலழகர். உண்ணான் முதலியன முற்றெச்சம். 'கொன்னே காத்திருப்பானேல்' என்று சேர்த்துக்கொள்க. அ ஆ, இரக்கக் குறிப்பு. செல்வம் தான் இறக்குமளவும் அழியாமலிருந்தாலும் அதனாற் கொண்ட பயன் யாதுமில்லாமையின், அவன் உடையவனாயினும் இழந்தவனே என்றார். செல்வத்தைச் செலவு செய்தற்குரிய துறைகள் பலவும் இச் செய்யுள் எடுத்துக்காட்டினமை நினைவிருத்துதற்குரியது. கூ

10\. உடாஅதும் உண்ணாதும் தம்உடம்பு செற்றும்
கெடாஅத நல்லறமும் செய்யார்—கொடாஅது
வைத்தீட்டி னார்இழப்பர், வான்தோய் மலைநாட !
உய்த்தீட்டும் தேனீக் கரி.

(பொ - ள்) வான் தோய் - வானத்தைப் பொருந்துகின்ற, மலைநாட-மலைநாட்டுத் தலைவனே ! உடாதும்-நல்ல ஆடைகள் உடுக்காமலும், உண்ணாதும்-உணவுகள் உண்ணாமலும், தம் உடம்பு செற்றும்-தம் உடம்பை வருத்தியும், கெடாத நல் அறமும் செய்யார்-அழியாத சிறந்த புண்ணியமுஞ் செய்யாமலும், கொடாது - வறியவர்க்குக் கொடாமலும், ஈட்டி வைத்தார் - பொருளைத் தொகுத்து வைத்தவர்கள், இழப்பர் - அதனை இழந்துவிடுவர், உய்த்து ஈட்டும் தேன் ஈ - பல பூக்களிலிருந்து கொண்டுபோய்த் தொகுத்து வைக்கும தேனீக்கள், கரி - அதற்குச் சான்று.

(க - து) அறவழியிற் பொருளைச் செலவு செய்யாதவர், ஒரு காலத்தில் தேனீயைப் போல அப் பொருளை இழந்துவிடுவர்.

---

* குறள், கூஅ: க.

(வி - ம்) கள்ளர், பகைவர் முதலியோராற் கட்டாயம் இழந்து விடுவர் என்பது கருத்து; அதன்பொருட்டே, கட்டாயம் ஒரு காலத்தில்தான் தொகுக்குந் தேனை இழந்துவிடுந் தேனீ உவமையாயிற்று. உடாமையும் உண்ணாமையுங் காரணமாக நோய் முதலியவற்றை உண்டாக்கித் தம் உடம்பை வருத்திக்கோடலின், 'தம் உடம்பு செற்றும்' என்றார். துறவோரைப் போல அங்ஙனம் வருத்திக்கொண்டாலும் அவர்போல் அறச்செயலேனுஞ் செய்கின்றனரோவெனின் அதுவுமின்றென்றற்குக், 'கெடாத நல் அறமுஞ் செய்யார்' என்று அதன்பிற் கூறினார். மலைநாட என்று ஓர் ஆண்மகனை முன்னிலைப்படுத்திக் கூறும் முறைமையில் இச் செய்யுள் அமைந்தது. இறுக்க நினைவினாற், பகை முதலியன உண்டாதல் பொருளைக் காக்கும் அறிவு மடம்படுதல் முதலாயின உணடாதலின் அவை பொருளை இழத்தற்குக் காரணங்களாகும். ௧0

---

## உ. இளமை நிலையாமை

[இளமையின் நிலையில்லாமையை உணர்த்துவது.]

11. நரைவரும் என்றெண்ணி நல்லறி வாளர்
குழவி யிடத்தே துறந்தார் ;—புரைதீரா
மன்னா இளமை மகிழ்ந்தாரே கோல்ஊன்றி
இன்னாங் கெழுந்திருப் பார்.

(பொ - ள்) நல் அறிவாளர்-பழுதற்ற அறிவினையுடையோர், நரை வரும் என்று எண்ணி - மூப்பு வருமென்று கருதி, குழவியிடத்தே துறந்தார் - இளமையிலேயே பற்றுள்ளத்தை விட்டார், புரைதீரா மன்னா இளமை மகிழ்ந்தாரே - குற்றம் நீங்குதலில்லாத நிலையில்லாத இளமைக் காலத்தை அறவழியிற் பயன்படுத்தாமல் நுகர்ந்து களித்தவர்களே, கோல் ஊன்றி இன்னாங்கு எழுந்திருப்பார் - மூப்பு வந்து கையிற் கோல் ஒன்று ஊன்றித் துன்பத்தோடு எழுந்து தள்ளாடுவார்கள்.

(க - து) இளமைப் பருவத்தை அறவழியிற் பயன்படுத்தாமல் நுகர்ந்து மயங்கியவர்கள், பின்பு மூப்பினால் வருந்துவார்கள்.

(வி - ம்) 'நரை' மூப்புப் பருவமும், 'குழவி' இளமைப் பருவமும் உணர்த்துங் குறிப்பில் வந்தன. துறத்தல் - பற்றுள்ளம்

விடுதல். 'புரை தீரா' 'மன்னு' இரண்டும் இளமைக்கு அடைமொழிகள். மகிழ்தல்-இங்கு நுகர்தல்; இளமையை அறஞ்செய்தற்குக் கருவியாகக் கொள்ளாமல், அதனையே துய்க்கும் பொருளாகக் கொண்டு இன்புறுதல் பிழை என்றபடி. நல்லறிவாளா துறந்தார் எனவே, இளமை மகிழ்ந்தார் புல்லறிவாளர் என்பது பெறப்படும். 'பட்டாங்கு' என்பது போல, 'இன்னுங்கு' என்பதும் ஒரு சொல்-பற்றுள்ளம் விட்டு எம் முயற்சியையும் இளமையிலேயே செய்க என்பது பொருள். அங்ஙனம் செய்தார்க்கு, மூப்பும் வராது; வரினும் இன்னல் செய்யாது என்பது உணர்த்தப்பட்டது. க

**12** நட்புநார் அற்றன நல்லாரும் அஃகினர்
அற்புத் தளையும் அவிழ்ந்தன ;—உட்காணாய் ;
வாழ்தலின் ஊதியம் என்னுண்டாம? வந்ததே
ஆழ்கலத் தன்ன கலி.

(பொ-ள்) நட்பு நார் அற்றன-நேயமும் கயிறு அறுந்தன; நல்லாரும் அஃகினர்-சான்றோரும் அணுக்கங் குறைந்தனர்; அன்பு தளையும் அவிழ்ந்தன - பொதுமக்களிடம் உண்டான அன்பு என்னுங் கட்டும் நெகிழ்ந்தன; உள் காணாய் - அகமாக எண்ணிப் பார், வாழ்தலின் ஊதியம் என் உண்டு-இளமையை மகிழ்ந்து வாழ்தலினால் பயன் என்ன உண்டு, ஆழ்கலத்து அன்ன கலி வந்தது - கடலில் மூழ்கிவிடுகின்ற மரக்கலத்தை ஒத்த துன்பம் இதோ வருகின்றது.

(க - து) இளமையையே பொருள் செய்து வாழ்வதனால், நண்பர் சான்றோர் பொதுமக்கள் முதலியோரது தொடர்பு குறைந்து வாழ்நாளுங் கெடும்.

(வி - ம்) *அற்றன அவிழ்ந்தன என்று பன்மையாக வந்தமையால், நட்புகள், அன்புகள் என்று அவ்வினைகளின் வினைமுதல்களையும் பன்மையாகக் கொள்க; பலராற் பலவகையாகக் கொள்ளப்படுதலால் அவை பன்மையாயின. அன்பு என்றது, அற்பு என்றாயிற்று! இடையிலுள்ள எழுத்து வலித்தது. இளமையைப் பொருளாக நினைத்துப் பற்றுள்ளத்தோடு உயிர வாழ்ந்தமையால், நண்பர் முதலியோர் அற்றனர். இங்ஙனம் நட்பு முதலியன அகல ஒருவன் உயிர் வாழ்தலால் உண்டான பயன்றானும் ஏது மில்லை. கடலுள் மரக்கலம் ஆழ்ந்தாற்போல இவ்வுடம்பு திடுமெனக் கூற்று*

வன்வாய் அழிவதுதான் அதனாற் கண்ட பயன் என்றற்கு, 'வாழ்தலின் ஊதியம் என்னுண்டாம? வந்ததே ஆழ்கலத் தன்ன கலி' என்றார். வந்தது என இறந்த காலத்தால் நின்றது, விரைவின் துணிவுப் பொருட்டு*. உ

13. சொல்தளர்ந்து கோல்ஊன்றிச் சோர்ந்த நடையினராய்ப்
பல்கழன்று பண்டம் பழிகாறும்—இல்செறிந்து
காம நெறிபடருங் கண்ணினார்க் கில்லையே
ஏம நெறிபடரு மாறு.

(பொ - ள்) சொல் தளர்ந்து-பேச்சின் வலி குறைந்து, கோல் ஊன்றி சோர்ந்த நடையினர் ஆய்-கையிற் கோல் ஊன்றித் தள்ளாடிய நடையை உடையவராய், பல் கழன்று - பற்கள் உதிர்ந்து, பண்டம் பழிகாறும் - இவ்வுடம்பாகிய பண்டம் பழிக்கப்படுமளவும், இல் செறிந்து காமநெறி படரும் கண்ணினார்க்கு - மனைவியோடு பற்றுக் கொண்டிருந்து காமவழியிற் செல்லும் சிற்றறிவுடையாருக்கு, ஏமம் நெறி படரும் ஆறு - மெய்யின்ப நெறியில் செல்லும் வகை, இல்லையே - உண்டாவதில்லையே

(க - து) வாழ்நாளளவுங் காம நோக்கமுடையவர் பேரின்ப நெறி செல்லுதல் இல்லை

(வி - ம்) பண்டம் - பொருள்; இங்கே உடம்புக்கு வந்தது; உயிரிருந்தும் உயிர்க்குரிய அறவினைகட்குப் பயனபடாமையால் உயிரில்லாததுபோல இழிவாக்கிப் பண்டம் என்றார். அது பழிக்கப்படுதலாவது, இறக்குமுன் நெடுங்காலம் நோய் முதலியன கொண்டு பிறரால் இழித்துக் கூறப்படுதல். 'பண்டம் பழிகாறும்' என்றது, சாகுமளவும் என்னும் குறிப்பின்மேல் நின்றது. மனைவியின்பால் அறிவான் அன்புறுமற் காமத்தான் பற்றுக்கொள்ளலென்பது, 'செறிந்து' என்பதனை குறிப்பினாற் பெறப்படும். இல்லையே என்னும் ஏகாரம் இரக்கப் பொருட்டு. ௩

14. தாழாந் தளராத் தலைநடுங்காத் தண்டூன்று
வீழா இறக்கும் இவள்மாட்டும்—காழ்இலா
மம்மர்கொள் மாந்தர்க் கணங்காகும் தன்கைக்கோல்
அம்மனைக்கோல் ஆகிய ஞான்று.

* தொல். வினை. ௪௪.

(பொ - ள்) தாழா - முதுகு தாழ்ந்து, தளரா-உடம்பின் கட்டுத் தளர்ந்து, தலை நடுங்கா - தலை நடுங்கி, தண்டு ஊன்றா - கையில் தடி ஊன்றி, வீழா - விழுந்து, இறக்கும் இறக்கப்போகும் மூப்புநிலையிலுள்ள, இவள் மாட்டும் - இத்தகைய ஒருத்தியிடத்தும், காழ் இலா - உறுதியான அறிவில்லாத, மம்மர்கொள் மாந்தர்க்கு - காம மயக்கத்தைக் கொள்ளுகின்ற மக்களுக்கு, தன் கைக்கோல்-அவள் இப்போது பிடித்திருக்கும் கையின் ஊன்றுகோல், அம்மனைக் கோல் ஆகிய ஞான்று - அவள் தாயின் கைக்கோலாயிருந்த காலத்தில், அணங்கு ஆகும் - வருத்துகின்ற காமத் தன்மையையுடைய அழகுருவம் இருந்திருக்கும்.

(க - து) முன்பு, கண்டோரைப் பிணிக்கும் அழகுருவோடு திகழ்ந்த மகளிர் பின்பு உடம்பு கூனித் தலைநடுங்குகின்ற இரங்கத்தக்க மூப்பு நிலையை அடையக் காண்டலின் இளமையை ஒரு பொருட்டாக எண்ணிக் காமத்தில் ஆழ்ந்து அதனால் அறச் செயல்களைக் கைநழுவ விடுதலாகாது.

(வி - ம்) முதுகு வளைந்து கூன் அடைந்து என்றதற்குத் தாழா எனப்பட்டது. 'இவள் மாட்டும்' என்னும் உம்மை இழிவு சிறப்போடு எச்சமும் உணர்த்திற்று. காழ் - உரம்; இங்கே அறிவு உரம். அணங்கு - வருத்தும் அழகுருவம்; பரிமேலழகர், "அணங்கு காமநெறியான் உயிர்கொள்ளுந் தெய்வமகள்"* என்றதும் இப்பொருட்டு. அணங்காயிருந்திருக்கும் என்னும் பொருளில் 'அணங்காகும்' என வந்தது. இப்போது மூத்திருக்கும் இவள் கையின் கோல் இவள் தாயின் கையில் ஊன்றுகோலாயிருந்தபோது இவள் இளமையுடையவளாய் இருந்திருப்பாள் என்பது குறிக்கத் 'தன் கைக்கோல் அம்மனைக்கோலாகிய ஞான்று' எனப்பட்டது. இவள் இளமைக் காலத்தில் என்று குறித்தற்கு இங்ஙனம் வந்தது, ஈது காண் உலகியல்பு என்று அறிவுறுத்துதற்கு. இது மேற் செய்யுளாலும் உணரப்படும். ௪

**15.** எனக்குத்தாய் ஆகியநாள் என்னைஈங் கிட்டுத்
தனக்குத்தாய் நாடியே சென்றாள் ;—தனக்குத்தாய்
ஆகி யவளும் அதுவானால் தாய்த்தாய்க்கொண்
டேகும் அளித்திவ் வுலகு.

---

* குறள், கஉ : அ.

(பொ - ள்) எனக்குத் தாய் ஆகியாள் - எனக்குத் தாயாயிருந்தவள், என்னை ஈங்கு இட்டு - என்னை இவ்வுலகத்தில் விட்டுவிட்டு, தனக்குத் தாய் நாடி - தனக்குத் தாய் விரும்பி, சென்றாள் - இறந்து போனாள்; தனக்கு தாய் ஆகியவளும்-அப்படிப்போன அவளுக்குத் தாயாக நேர்ந்தவளும், அது ஆனால் - அவ்வாறே போனால், தாய் தாய்க்கொண்டு - ஒரு தாய் தனக்குத் தாயைத தாவிக்கொண்டு, ஏகும் அளித்து இவ்வுலகு - போகின்ற எளிமையையுடையது இநத உலகம் என்க.

(க - து) இன்று இளையராயிருப்பவர் நாளை மூத்து இறந்துபோதலே இயல்பாதலால், இளமை நிலையாதென்பது திண்ணம்.

(வி - ம்) 'இட்டு' என்னுஞ் சொல், 'என்னை இங்கே பெற்றெடுத்து விட்டுத் தன்னை ஒருத்தி பெற்றெடுக்குமாறு பிரிந்தாள்' என்னுங் குறிப்பின் உருப்பாய் நின்றது. ஏ, இசைநிறை. தாய்க்கொண்டு - தாவிக்கொண்டு. இயல்பாயிருத்தலின், உலகுக்கு எளிமை கூறினார். ௬

**16.** வெறியயர் வெங்களத்து வேல்மகன் பாணி
முறியார் நறுங்கண்ணி முன்னர்த் தயங்க
மறிகுள குண்டன்ன மன்று மகிழ்ச்சி
அறிவுடை யாளர்கண் இல்.

(பொ – ள்) வெறி அயர் வெம் களத்து - வெறியாடுதலைச் செய்கின்ற கொடிய பலிக்களத்தில், வேல்மகன் பாணி - வெறியாடுவோனுடைய கைகளிற் கட்டியுள்ள, முறி ஆர் நறு கண்ணி-தளிர்கள் இடையிடையே பொருந்திய மணமமைந்த மலர்மாலை, முன்னர் தயங்க - தன்னெதிரில் விளங்கா நிற்க, மறி-அதைக் கண்ட பலி ஆடு, குளகு உண்டு அன்ன - அதிலுள்ள தளிரைத் தனக்கு உணவாக உண்டு மகிழ்ந்தாற்போன்ற, மன்று மகிழ்ச்சி-இளமையால் வரும் நிலையா மகிழ்ச்சி - அறிவுடையாளர்கண் இல் - அறிவுடையாரிடத்தில் இல்லை.

(க - து) அறிவுடையவர்கள், இளமை பெயூச்சிகளை அறவினைகட்கு ஊறு செய்வனவாகக் கருதி அஞ்சுவரேயல்லால் அவற்றை நுகர்ந்து களியார.

(வி - ம்) வெறி தெய்வமேறி யாடுந் தன்மை, அயர்தல் - அதனைச் செய்தல்; பலியிடுதலின், கொடிய களமாயிற்று. வேலைத் தன கையில் அடையாளமாகப் பிடித்துக்கொண்டு ஆடும் மகனாதலின், வெறியாட்டாளன் 'வேல் மகன்' எனப்பட்டான. வேலன் என்று கூறுதலும் உண்டு, இது குறிஞ்சி நிலத்து வழக்கம்; அங்கே முருகன் தெய்வமாகலின் இங்ஙனமாயிற்று. பூக்களுடன் இடையிடையே இலைகளும் இட்டு மாலை தொடுப்பாராகலின்,'முறி ஆர நறுங்கண்ணி' எனப்பட்டது. குளகு - தழையுணவு. பலிக்கடா, தான் கொலையுறுதற்கு அடையாளமாயுள்ள வேலன் கைமாலைக்கு அஞ்சாமல், அறியாமையால் அதிலுள்ள தழையைத் தனக்கு உணவாகக்கருதி உண்டு, சின்னேர இன்பம் நுகர்ந்தது; அறிந்தோர்க்கு அச் செயல் ஏழைமையுடையதாய்த் தோன்றும் இளமை யெழுச்சிகளின் மயங்கி, 'மற்றறிவாம் நல்வினை யாம் இளையம்'* என்று மக்கள் ஒழுகுதலும் அத்தகையதேயாம். பின் வரும் பேரிடையூறு கருதாமற் சிறிதின்ப நுகர்வுக்காக அறவினைகள் கைவிட்டு நிற்றல் தவறென்பது உணர்த்தப்பட்டது. கசு

17. பனிபடு சோலைப் பயன்மர மெல்லாம்
கனியுதிர்ந்து வீழ்ந்தற் றிளமை ;—நனிபெரிதும்
வேல்கண்ணள் என்றிவளை வெஃகன்மின் மற்றிவளும்
கோல்கண்ண ளாகுங் குனிந்து.

(பொ - ள்) இளமை - இளமைப்பருவம், பனி படு சோலை பயன் மரம் எல்லாம்-குளிர்ச்சிபொருந்திய சோலையிலுள்ள பயன் தரும் மரங்களெல்லாவற்றினின்றும், கனி உதிர்ந்து வீழ்ந்து அற்று - பழங்களுதிர்ந்து வீழ்ந்தாற் போலுந் தன்மையது; இவளும் குனிந்து - இவ்விளமையுடையவளும் ஒரு காலத்திற் கூனி, கோல் கண்ணள் ஆகும் - வழிதெரிந்து நடப்பதற்கு ஊன்றுகோலையே கண்ணாக உடையவளாவள்; ஆதலால்; வேல் கண்ணள் என்று - இப்பொழுது வேல்போலுங் கண்ணுடையாளென்று, இவளை-இந்த இளந்தன்மையாளை, நனி பெரிதும் வெஃகன்மின் - மிகப் பெரிதும் விரும்ப வேண்டாம்.

---
* நாலடி. உ: க.

(க - ரு) இப்போது கனிந்தும் குளிர்ந்தும் தோன்றும் இளமை ஒரு காலத்தில் நிலைமாறிக் கெடும்.

[வி - ம்) உவமையிற் சுட்டிய தன்மைகள் பொருளுக்கும் ஒக்கும். இளமை யாவர்க்கும் ஒரு படித்தாய்க் கெடுதலின், 'மரமெலலாம்,' என்றார். வீழ்தலின் விரைவு தோன்ற 'உதிர்ந்து வீழ்ந்தற்று,' என்றார். 'நனிபெரிதும்' ஒரு பொருளில் வந்த இருசொல்; அது வெஃகுதலின் முடிவின்மையையும் இளமைத் தன்மையை அளவாகப் பயன்படுத்திக்கொள்ளுங் கடமையையுங் குறித்து நின்றது. இவள் என்னுஞ் சுட்டுக்கள் இரண்டுள், முன்னது ஒரு மாதையும் பின்னது அவள் இளமைப் பண்பை யுஞ் சுட்டி நின்றன. கோல்கொண்டு வழிதெரிந்து செல்லுதலின் 'கோல கண்ணள்' எனப்பட்டது. மற்று - வினைமாற்று. எ

**18.** பருவம் எனைத்துள பல்லினபால் ஏனை
இருசிகையும் உண்டீரோ என்று—வரிசையால்
உண்ணாட்டம் கொள்ளப் படுதலால் யாக்கைக்கோள்
எண்ணார் அறிவுடை யார்.

(பொ - ள்) பருவம் எனைத்து உள-வயது எவ்வளவு ஆகியிருக்கின்றன, பல்லின்பால் ஏனை - பல்லின் தன்மை எப்படி யிருக்கின்றன, இரு சிகையும் உண்டீரோ-இரண்டு பிடியேனும் உண்கின்றீர்களா, என்று வரிசையால்-என்று ஒன்றன்பின் ஒன்றாக, உள் நாட்டம் கொள்ளப்படுதலால்- இங்ஙனம் பிறரைப்பற்றித் தமக்குள் ஆராயும் ஆராய்ச்சி மேற்கொள்ளப்படுவதனால், யாக்கைக் கோள் - உடம்பின் இளமையை, எண்ணார் அறிவுடையார் - அறிவுடையோர் ஒரு பொருளாகக் கருதமாட்டார்கள்.

(க - து) இளமை கழிதலை யாரும் தமக்குள் உணர்தலின், அறிவுடையோர் அந் நிலையா இளமையை ஒரு பொருளாக மதித்து மகிழார்.

(வி - ம்) வயது என்பது இத்தனை ஆண்டுகள் என்னுங் கருத்தில் வந்தமையின், 'உள' என்று பன்மை வினை கொண்டது. 'பல்லின் பால்' என்பதிற் 'பால்' தன்மை யென்னும் பொருட்டு; 'பான்மை' என்பதிற் போல. சிகையும் - சிகையேனும். ஆண்டு முதிர்ந்து பல் பழுதாகிக் குடலுங் கெடுதலின் இங்ஙனம் ஒருவரைப்

பற்றி ஒருவா நலம் உசாவும் உள் எண்ணம் கொள்ளப்படுகின்றது. யாக்கைக் கோள் - யாக்கையின் தன்மை; இளமை. இவ்வாற்றால், இளமை நிலையாமை உணரத்தப்பட்டது. அ

19 மறறறிவாம் நல்வினை யாம்இளையம் என்னாது
கைத்துண்டாம் போழ்தே கரவா தறஞ்செய்ம்மின்;
முற்றி யிருந்த கனியொழியத் தீவளியால்
நற்காய் உதிர்தலும் உண்டு.

(பொ - ள்) மற்று அறிவாம நல்வினை-நற்செயல்களைப் பின்னால் தெரிந்து செய்து கொள்ளலாம, யாம் இளையம் - இப்போது யாம் இளமைபபருவமுடையேம், என்னாது - என்று கருதாமல், கைத்து உண்டாம் போழ்தே - கையில் பொருள் உண்டானபொழுதே, கரவாது அறம் செய்மமின்- ஒளியாமல் அறஞ் செய்யுங்கள்; ஏனென்றால்; முற்றி யிருந்த கனி ஒழிய-பழுத்திருந்த பழங்களே யல்லாமல், தீ வளியால் - கோடைக் காற்றினால், நல் காய் உதிர்தலும உண்டு-வலிய காய்களும் மரங்களிலிருந்து உதிர்நது விடுதலுண்டு.

(க - து) மூத்தோரே யல்லாமல் இளையோருமதிடு மென இறந்துபோதல் உண்டாகலின், கையிற் பொருள் உண்டான இளமைக காலத்திலேயே அதனை அறஞ் செய்து பயன் கொள்ளவேண்டும்.

(வி - ம்) 'யாம் இளையம்,' என்ற குறிப்பு, 'இப்போது யாம் இளமையுடையேம்; அவ்விளமை யின்பங்கள் நுகாதற்குப் பொருள் தேவை; ஆகலின், அறவினைகளை மூப்பு வந்த பின் செய்வேம்,' என்று நினைததலாகாது என்னும கருததை உட்கொணடு நின்றது. கைத்து-கையிலுள்ளது; அது கைப்பொருள்; செல்வம். இளமைப் பருவத்தைக் 'கைததுண்டாம் போழ்து,' என்று விதந்தார், அப்பருவமே முயன்று பொருள் தேடுதற்குரிய காலமாகலின். 'கனியொழிய' என்பதை இரட்டுற மொழிதலாகக் கொண்டு, பழங்கள் உதிராமல் மரத்தில் நிற்கக், காய்கள் உதிர்ந்துவிடுதலும் உண்டு எனவும் ஒரு கருததுக் கொள்க. மூப்புடையோர் இறவா முன் இளமையுடையோா இறந்துபோதலும் உண்டு என்பது இதன் கருத்து. காயுதிர்தல் சிறுபான்மையாகலின், காயுதிர்தலும் என எதிர்மறை யும்மை கொடுக்கப்பட்டது. க

20. ஆட்பார்த் துழலும் அருளில்கூற் றுண்மையால்
தோட்கோப்புக்காலத்தால் கொண்டுய்ம்மின்-பீட்பிதுக்
பிள்ளையைத் தாய்அலறக் கோடலான் மற்றதன் [கிப்
கள்ளம் கடைப்பிடித்தல் நன்று.

(பொ - ள்) ஆள் பார்த்து-தான் உயிர் பிரித்துக் கொண்டு போகும் ஆளைக் கருதி, உழலும் - அதே வேலையாகத் திரிகின்ற, அருள் இல் கூற்று-இரக்கம் இல்லாத கூற்றுவன், உண்மையால்-ஒருவன் இருக்கின்றானாதலால், தோள் கோப்பு - மறுமையாகிய வழிக்குக் கட்டுச்சோறு போல் உதவும் புண்ணியத்தை, காலத்தால்-இளமையாகிய தக்க காலத்திலேயே, கொண்டு உய்ம்மின் - உண்டாக்கிக் கொண்டு பிழையுங்கள், பீள் பிதுக்கி - முற்றாத இளங் கருவையும் வெளிப்படுத்தி, பிள்ளையை-குழந்தையை, தாய் அலறக் கோடலான்-தாய் அலறியழும்படி உயிர் கொள்ளுதலால், அதன் கள்ளம்-அக் கூற்றுவனது கடுமையை, கடைப்பிடித்தல் நன்று-நினைவில் இருத்திக் காரியங்கள் செய்தல் நல்லது.

(க - து) இளங் கருவையும் அழிக்குங் கூற்றுவன் உண்மையால் இளமை நிலையாமை விளக்கமாதலின், இம்மை மறுமைக்குரிய புண்ணிய காரியங்களை இளமையுடையோர் உடனே செய்துகொள்ள வேண்டும்.

(வி - ம்) கூற்றுவன் கருத்தாயிருக்கிறானென்பதற்கு 'ஆட்பார்த்து' எனவும், அதுவே வேலையாயிருக்கிறானென்பதற்கு 'உழலும்' எனவும், கடமையைச் செலுத்தும்போது கண்ணோட்டம் குறுக்கிட இடந்தரான் என்பதற்கு 'அருள் இல்' எனவும், உயிரை மட்டும் உடம்பினின்று பிரித்துக்கொண்டு போவான் என்பதற்குக் 'கூற்று' எனவும், அவன் என்றும் உள்ளான் என்பதற்கு 'உண்மையால்' எனவும், உயிருடன் நெடுகச் செல்லத்தகுந்த புண்ணியத்தைத் தேடுமின் என்பதற்குத் 'தோட்கோப்புக் கொண்டுய்ம்மின்' எனவுங் கூறினார். பீள்-முதிராக் கருப்பம். கள்ளம் என்றது இங்கே 'உள் எண்ணம்' என்னும் பொருளில் வந்தது. கூற்றுவன் தன் உட்கருத்தை உறுதியாகச் செய்தே முடித்தலின், அக் கடுமை தோன்றக் 'கள்ளம்' என்றார். தோள் கோப்பு - தோளில் கோத்துச் செல்லுங் கட்டுணா. மறுமையாகிய வழிக்கு அதுபோல் உதவும் புண்ணியத்தை அச் சொல்லாற் கூறினார். "கூற்றங் கொண்

டோடத் தமியே கொடுநறிக்கட் செல்லும் போழ்தின், ஆற்றுணாக் கொள்ளீர்,''* என்றார் சிந்தாமணியினும். காலத்தாலேயே என் னுந் தேற்றேகாரமும், பிளையும் என்னும் இழிவு சிறப்பும்மையும் விகாரத்தால் தொக்கன. ௨0

---

## ௩. யாக்கை நிலையாமை

[உடம்பின் நிலையாமையை உணர்த்துவது.]

**21.** **மலைமிசைத் தோன்றும் மதியம்போல் யானைத்**
**தலைமிசைக் கொண்ட குடையர்—நிலமிசைத்**
**துஞ்சினர் என்றெடுத்துத் தூற்றப்பட் டாரல்லால்**
**எஞ்சினர் இவ்வுலகத் தில்.**

(பொ - ள்) மலைமிசை தோன்றும் மதியம்போல்-மலை யின் உச்சியில் தோன்றுகின்ற முழு நிலாவைப் போல, யானைத் தலைமிசைக் கொண்ட குடையர் - யானையினது தலையின்மேல் கொள்ளப்பட்ட குடைநிழலிற் சென்ற அரச ரும், நில மிசை - இந் நிலத்தில், துஞ்சினர் என்று-இறந்து மண்ணானார் என்று, எடுத்துத் தூற்றப்பட்டார் அல்லால்-குறித்து இழித்துரைக்கப்பட்டாரே யல்லாமல், எஞ்சினர் இவ்வுலகத்து இல் - இறவாமல் நின்றவர் இவ்வுலகத்தில் இல்லை.

(க - து) மக்களாய்ப் பிறந்தவர் எத்தகையோராயி னும் அவர் இறந்துபோதல் உறுதியாதலின், இருக்கும் போதே யாவரும் அறஞ் செய்துகொள்க.

(வி - ம்) 'யானைத் . தலை' என்றதற்கேற்ப உவமையிலும் 'மலையின் உச்சி' யென்று உரைத்துக்கொள்க. குடையர் - குடை யையுடையராய் அதன் நிழலில் இருக்கும் அரசர்; குடையரும் என உயர்வுசிறப்புக் கொள்க. இறுதியில் 'இவ்வுலகத்து' என வருத லின், 'நிலமிசை' யென்றது, மண்ணில் என்னும் பொருட்டு; மண் ணில் வீழ்ந்து மண்ணோடு மண்ணானார் என்பது குறிப்பு; எத்துணை உயரத்தில் ஏறிச் சென்றோர்க்கும் முடிவில் இருப்பிடம் மண்ணே எனவும் ஒரு நயம் காண்க. எனவே ஏனையோர் இறத்தல் பற்றிக் கூறவேண்டாதாயிற்று! இறந்தாரென்னுஞ் சொல் இழிவு தரு தலின், தூற்றப்பட்டார் எனப்பட்டது. க

---

* சிந்; க: ௧௩௯.

22. வாழ்நாட் கலகா வயங்கொளி மண்டிலம்
வீழ்நாள் படாஅ தெழுதலால்—வாழ்நாள்
உலவாமுன் ஒப்புர வாற்றுமின் ; யாரும்
நிலவார் நிலமிசை மேல்.

(பொ - ள்) வாழ்நாட்கு - ஆயுள் நாட்களுக்கு, அலகா - அளவு காணும்படி, வயங்கு ஒளி மண்டிலம் - விளங்குகின்ற கதிரவன் என்னும் ஒளிவட்டம, வீழ்நாள் படாது எழுதலால் - வீண் நாள் படாமல் தொடர்பாகத் தோன்றி வருவதனால், வாழ்நாள் உலவாமுன் - அம்முறையே கணக்கிடப்பட்டு ஆயுள்நாள் அற்றுப்போகுமுன், ஒப்புரவு ஆற்றுமின் - உதவி செய்யுங்கள்; மேல் - அந்த ஆயுள் நாளுக்குமேல், யாரும் நிலவார் நிலமிசை - யாரும் இவ்வுலகத்தில் நிலைக்கமாட்டார்கள்.

(க - து) கதிரவன் நாடோறுந் தோன்றுதலால் நாட்கணக்குத் தெரிதலின், அக் கணக்குக் கொண்டு வாழ்நாள் கழியுமுன் அறஞ் செய்துகொள்க.

(வி - ம்) அலகா - அலகாக, அஃதாவது, அலகு கண்டு கொள்ளும் வகையில். அலகு - அளவு; ஒளி மண்டிலம் – இங்கே பகலவன். ஒரு நாளாவது தவறாமல் என்றற்கு 'வீழ்நாள் படாது' எனப்பட்டது. வீழ்நாள் - தவறும் நாள்; தப்பிப்போகும் நாள் உண்டாகாதபடி என்பது பொருள். நிலவார் என்பதற்கு முதற் பகுதி நில் என்பதாகலின், நிலைக்கமாட்டார் எனப் பொருளுரைக்கப்பட்டது. ஒருவருக்கொருவர் உதவிக் கொள்ளுதலாலேயே இருவரறிவும் ஒத்து இணக்கமுறுதலின், உதவி 'ஒப்புரவு' எனப் பட்டது. உ

23. மன்றம் கறங்க மணப்பறை யாயின
அன்றவர்க் காங்கே பிணப்பறையாய்ப்—பின்றை
ஒலித்தலும் உண்டாமென் றுய்ந்துபோம் ஆறே
வலிக்குமாம் மாண்டார் மனம்.

(பொ - ள்) மன்றம் கறங்க - பேரவை முழுதும் ஒலிக்கும்படி, மணப் பறையாயின - திருமண மேளமாய் முழங்கியவை, அன்று அவர்க்கு ஆங்கே - திருமண நாளன்று

திருமண மக்களுக்கு அத்திருமணக்கூடத்திலேயே, பிணப் பறையாய் பின்றை ஒலித்தலும் உண்டாம் என்று - சாவு மேளமாய்ப் பின்பு ஒலித்தலும் நேருமெனக் கருதி, உய்ந்து போம் ஆறே - நன்னிலையுற்றுச் செல்லுவதற்கான அற வழியிலேயே, வலிக்குமாம் மாண்டார் மனம் - அறிவு மாட்சிமைப்பட்டோரது நன்மனம் துணிந்து நிற்கும் என்ப.

(க - து) மணப்பறையே பிணப்பறையாகவும் மாறுமாதலின், யாக்கையின் நிலையின்மை கருதி உடனே அறஞ் செய்க

(வி - ம்) மன்றம் - அவை; இஙகே, திருமணப் பேரவை. மணமக்கள் ஆணும் பெண்ணுமாயிருத்தலின் அவ்விருபாலார்க்கும் பொருந்த 'அவர்க்கு' எனப் பலர்பாலாற் கூறினார். பெரும்பான்மையன்றாகலின் 'ஒலித்தலும் உண்டாம்' என்னும் உம்மை எதிர் மறை. 'உய்ந்துபோம் ஆறு,' என்றது, பொதுவாக அறவழி. ஏகாரம், பிரிநிலை. இளமையைத் துய்ப்பதா அறவழியிற் செல்வதா என இருதலைப்பட்டு ஐயுறும்போது, மாட்சிமைப்பட்டாரது மனம் அறவழியின் பக்கமே ஈர்ப்புறும் என்னும் இயல்பை 'வலிக்கும்' என்னும் ஒரு சொல்லால் விளங்கவைத்தார். வலிக்குமாம் என்பதில் 'ஆம்', என்ப என்னுங் குறிப்பினது; அன்றி, அசையெனலும் ஒக்கும். ௩

24 சென்றே எறிப ஒருகால்; சிறுவரை
நின்றே எறிப பறையினை;—நன்றேகாண்
முக்காலைக் கொட்டினுள் மூடித்தீக் கொண்டெழுவர்
செத்தாரைச் சாவார் சுமந்து.

(பொ - ள்) சென்று - இறந்தவர் வீட்டுக்குப் போய், எறிப ஒருகால் - பறையடிப்போர் ஒருமுறை பறைகொட்டு வர், சிறுவரை நின்று - சிறிது பொழுது நிறுத்தி, எறிப் பறையினை - மீண்டும் அச்சாவுமேளத்தைக் கொட்டுவர், முக்காலைக் கொட்டினுள் - மூன்றாம் முறையாகக் கொட்டு முன், செத்தாரைச் சாவார் சுமந்து - இறந்தவரை இனி இறப்பவர் சுமந்துகொண்டு, மூடி தீ கொண்டு எழுவர் - துணியால் மூடித் தீயைக் கைக்கொண்டு இடுகாட்டுக்குப் புறப்படுவர், நன்றே - இந்நிலை இன்பந் தருவதோ, காண் - காணுக.

(க - து) இறந்த பின்னும் உடல் சிறிது நேரமேனும் வீட்டிலிருக்க இடமில்லாமையின், யாக்கையின் நிலையாமையைக் கருதி, உடனே அறவழிக்கண் நிற்க.

(வி - ம்) நன்றே என்னும் ஏகாரம் எதிர்மறை. ஏனைய அசை. வரை - பொழுதின் அளவு; சிறுவரை - சிறு பொழுதளவு. நின்று - நிறுத்தி என்னும் பொருட்டு முக்காலக் கொட்டினுள் - மூன்றாம் பொழுதின் கொட்டுதலுக்குள். சுமந்து எழுவா என்று கொள்க. சாவாா - சாவோா; இவா நிலையும் இன்னதே என்றதற்குச் 'சாவாா சுமந்து என அச்சொலலாலேயே கூறினா். இந் நிலையில்லா வாழ்வை நிலையாக எண்ணி இன்புறுவாரை நோக்கி, இது நன்றுமோ நினைமின் என்பார் 'நன்றே காண,' என்றாா்.  ௨

25 கணம்கொண்டு சுற்றத்தார் கல்லென் றலறப் [டீண்
பிணமகொண்டு காட்டுய்ப்பார்க் கண்டும்—மணங்கொண்
டுண்டுண்டுண் டெனனும் உணர்விறுற் சாற்றுமே
டொண்டொண்டொ டென்னும் பறை.

(பொ - ள்) கணம் கொண்டு - கூட்டம் கொண்டு, சுற்றத்தார் - உறவினா், கல் என்று அலற - கல்லென்று அலறி அழ, பிணம் கொண்டு - பிணத்தை எடுத்துக் கொண்டுபோய், காடு உய்ப்பார் கண்டும - இடுகாட்டிற் கிடத்துவாரை நேரிற் பார்த்தும், மணம் கொண்டு - திருமணம் செய்துகொண்டு, ஈண்டு உண்டு உண்டு உண்டு என்னும் உணர்வினான் - இவ்வுலகத்தில் இன்பம் உண்டு உண்டு உண்டு என்று கருதி மயங்குகின்ற மயக்க வுணர்வினையுடையானுக்கு, டொண் டொண் டொடு என்னும் பறை-டொண் டொண் டொடு என்று ஒலிக்கின்ற சாவு மேளம், சாற்றும-அங்ஙனம் ஓரின்பம இல்லை இல்லை இல்லை என்று சொல்லும.

(க - து) இவ்வுலக வாழ்க்கையை அறவழியிற் பயன் படுத்திக்கொள்ள வேண்டுமே யல்லாமல், இதில் இன்பம் உண்டென்று மயங்கலாகாது.

(வி - ம்.) கணங்கொணடு, கூடி யென்னும் பொருட்டு. கல். ஒலிக்குறிப்பு. உய்த்தல் - சேர்த்தல். உணர்விறுற்கு என நான்கனுருபு கொள்க. சாற்றுமே, அறிவுறுத்துமே என்றற்கு.

அடுக்கு, துணிவுக்கு*, உண்டு உண்டு உண்டு என்றதன் கருத்தை, அவ்வொலி போன்ற தோன்றால் எனதநோடு மறுக்கும முறையில் டொண் டொண டொடு என்பது வந்தது ; சாப்பறையின் ஒலி முறையும் இவ் வொலிக் குறிப்போ டிருப்பது அதற்கு இயைந்தது.

**26.** நார்த்தொடுத் தீர்க்கிலென் நன்றாய்ந் தடக்கிலென்
பார்த்துழிப் பெய்யிலென் பல்லோர் பழிக்கிலென் ;
தோற்பையுள் நின்று தொழிலறச் செய்தூட்டும்
கூத்தன் புறப்பட்டக் கால்.

(பொ - ள்) தோல் பையுள் நின்று - தோலாலான பையாகிய உடம்பினுள் இருந்து, தொழில் அறச் செய்து ஊட்டும் - தொழில்களை முடியச் செய்து அவ்வுடம்பை உண்பித்து வருகின்ற, கூத்தன் - கூத்தனை ஒத்த உயிர், புறப்பட்டக்கால் - வெளிப்பட்டு விட்டபின், நார் தொடுத்து ஈர்க்கில் என் - அவ்வுடம்பை நாரினாற் கட்டி இழுத்தாலென்ன, நன்று ஆய்ந்து அடக்கில் என் - நன்றாகத் தூய்மைசெய்து அடக்கஞ்செய்தால் என்ன, பார்த்துழிப் பெய்யில் என் - கண்ட இடத்திற் போட்டா லென்ன, பல்லோர் பழிக்கில் என் - அதனைப் பலரும் பழித்தாற்றான் என்ன ; வருகின்ற பெருமை சிறுமைகள் ஒன்றுமில்லை

(க - து) உயிர் நீங்கிய பின் உடம்பு இகழப்படுவதொன்றாதலால், இவ்வுடலை ஓம்பி மகிழ்வதற்காக நற்செயல்களைக் கைவிடற்க

(வி - ம்) பார்த்தஉழி எனப் பிரிக்க ; இழிவு தோன்றத் 'தோற்பை,' என்றார். அறச் செய்து என்றது, வேண்டுமளவும் என்னும் பொருட்டு ; இது முயற்சி மிகுதியைக் காட்டிற்று. கூத்தன் என்றா, அசைவோன் அவனே ; இவ்வுடம்பில ஒன்றுமில்லை : ஆதலால் இவ்வுடலை ஓம்புதற்காக அவ்வுயிரை ஓம்பும் அறச்செயல்களைக் கைவிடற்க என்றற்கு. உயிரைக் கூத்தன் என்றது உருவகம்.

**27** படுமழை மொக்குளில் பல்காலும் தோன்றிக்
கெடுமிதோர் யாக்கையென் றெண்ணித்—தடுமாற்றம்
தீர்ப்பேம்யாம் என்றுணரும் திண்ணறி வாளரை
நேர்ப்பார்யார் நீணிலத்தின் மேல்.

---

* தொல். எச். கஙி.

(பொ - ள்) படு மழை மொக்குளின் - மழை நீரில் தோன்றுகின்ற குமிழியைப்போல, பல்காலும் தோன்றிக் கெடும் இது ஓர் யாக்கை - பல தடவையும் தோன்றித் தோன்றி விரைந்து அழிந்து போகின்ற ஒருடம்பு இது, என்று எண்ணி - என்று இதன் இழிவு கருதி, தடுமாற்றம் தீர்ப்பேம் யாம் என்று உணரும் திண் அறிவாளரை. இங்ஙனம் பிறவியில் தடுமாறுதலை யாம் நீக்க முயல்வேம் என்று மெய்யுணரும் உறுதியான அறிவுடையவரை, நேர்ப் பார் யார் நீள் நிலத்தின் மேல் - ஒப்பவர் யாவர் இப் பெரிய நிலவுலகத்தில்; ஒருவருமில்லை.

(க - து) யாக்கையின் நிலைமை நீர்க்குமிழி போன்ற தாதலால், பிறவித் தடுமாற்றத்தைத் தீர்க்க முயல்பவரே உயர்ந்தவராவர்.

(வி - ம்) மழை படு மொக்குள் என்று மாற்றிக்கொள்க. 'பல் காலும்' என்னுங் குறிப்பால் விரைந்து கெடுதலும் பெறப்படும். உவமையின் இயல்பு பொருளில் விளக்கப்பட்டது. தோன்றிக் கெடுதல் - பிறந்து இறத்தல். இது ஓர் என்பன, இகழ்ச்சிப்பொருள. தடுமாற்றம், பிறவித் தடுமாற்றம். அது தீர்த்தலாவது, யாக்கை இன்பத்தை ஒரு பொருளாகக் கருதி யொழுகாமல், அறவழியில் நின்று மெய்யுணர்ந்து வீடுபெற முயலுதல். மயங்கி வலைப்படா மையின்,* 'திண்ணறிவாளர்' என்றார். நேர்ப்பார யாருமில்லை யெனவே, மேம்படுவாரின்மை தானே பெறப்பட்டது. எ

**28.** யாக்கையை யாப்புடைத்தாப் பெற்றவர் தாம்பெற்ற
யாக்கையா லாய பயன்கொள்க ;—யாக்கை
மலையாடு மஞ்சுபோல் தோன்றிமற் றாங்கே
நிலையாது நீத்து விடும்.

(பொ - ள்) யாக்கையை - உடம்பை, யாப்பு உடைத் தாப் பெற்றவர் - உறுதியுடையதாகப் பெற்றவர், தாம் பெற்ற யாக்கையால் - தாம் அங்ஙனம் முன் நல்வினையினால் அரிதின் அடைந்த அந் நல்யாக்கையினால், ஆய பயன் கொள்க - ஆகக்கூடிய புண்ணியபயனைக் காலந்தாழாமற் செய்து கொள்க. ஏனென்றால்; மலை ஆடு மஞ்சுபோல்

* குறள், ௩௫௭: அ.

தோன்றி - மலையுச்சியில் உலவுகின்ற மேகம் போலக் காணப்பட்டு, மற்று ஆங்கே நிலையாது நீத்துவிடும - பின்பு அங்ஙனங் காணப்பட்டபடியே நிலையாமல் இவ் வுடம்பு அழிந்துவிடும்.

(க - து) நல்ல யாக்கையை அடையப் பெற்றவர்கள், அதனாலான அறப்பயன்களை உடனே செய்து முடித்துக்கொள்ள வேண்டும்.

(வி - ம்) யாப்பு - உறுதி; நோயில்லாத நல்ல யாக்கையாகப் பெற்றவர்கள் என்பது கருத்து. பெறுதலின் அருமை நோக்கிப் 'பெற்றவா,' என்றும, தாந்தாம் செய்த முன்னை நல்வினையினாலேயே அதனை அடைதல் கூடுமென்று அங்ஙனம் அடைதலில இருந்த அருமையை மேலும் வலியுறுத்தக் கருதித 'தாம பெற்ற,' என்றும கூறினார். ஆய பயன் - அறம. மேகம் திடுமெனத் தோன்றினாற் போலவே திடுமென அழிந்தும் போம் என்றற்குத் 'தோன்றி ஆங்கே' எனப்பட்டது. மற்று - வினைமாற்று. நீத்து விடும் என்னுஞ் சொல் அழிந்துவிடும் என்னும் பொருளது. மேகம், நீரிலிருந்து தோன்றி அழகிதாய் வடிவமாய் நிறமாய ஒளி ஒலிகளோடு பிறர் விரும்பி எதிர்நோக்கும்படி மேன்மையான இடத்தில் அசைந்தாடிக்கொண டிருந்து பின் நீராகவே உருவழிந்து மறைந்துவிடுதல் போல, இவ்வுடம்பும் மண்ணிலிருந்து தோன்றி அழகியதாய் வடிவமாய்ப் பார்வையொளி பேசசொலிகளோடு பிறா விரும்பி எதிர் நோக்கும்படி செல்வாக்கான இடத்தில் உலவிக்கொண்டிருந்து பின் மண்ணாகவே உருவழிந்து போகும் என்று உவமையை விரித்துக்கொள்க. அ

**29.** புல்நுனிமேல் நீர்போல் நிலையாமை என்றெண்ணி
இன்னினியே செய்க அறவினை ;—இன்னினியே
நின்றான் இருந்தான் கிடந்தான்தன் கேள்அலறச்
சென்றான் எனப்படுத லால்.

(பொ - ள்) புல் நுனிமேல் நீர்போல் - புல் நுனியில் நிற்கும் நீர்த்துளி போன்றது, நிலையாமை - யாக்கை நிலையாமையென்பது ; என்று எண்ணி - என்று கருதி, இன் இனியே - இபபொழுதே இப்பொழுதே, செய்க அறவினை - அறச்செயல்கள் செய்க ; ஏனென்றால் ; இன் இனியே நின்றான் இருந்தான் கிடந்தான் - இப்போதுதான் ஒரு

வன் இங்கே நின்றான் இருந்தான் படுத்தான், தன் கேள் அலறச் சென்றான் - உடனே தன் உறவினர் அலறி அழும் படி இறந்துவிட்டான், எனபபடுதலால் - என்று உலகத் திற் சொல்லபபடுவதனால் என்க.

(க - து) புல்நுனி நீர்போல உடம்பு நொடிபபொழு திலும் மாய்தல் நேர்தலின் உடனே நற்செயல்கள் செய்து கொள்க.

(வி - ம்) 'எனப்படுதலால்,' நிலையாமை புல்நுனிமேல் நீர் போல் ஆகும,' என்று கூட்டுக. நுனிமேல் - நுனியில். நீர் - பனி நீர்; அது துளிநீராதலின் விரைந்து ஆவியாய்ப்போகும்; யாக்கை யின் நிலையாமை அத்தகையது. இனி இனி என்னும் அடுக்கு 'இன்னினி' யெனத் திரிந்து நின்றது; "இன்னினி வாரா,"* என்றார் பிறரும்; இந்நொடியே என்னும் விரைவுப் பொருளது. நின்றான் இருந்தான் கிடந்தான் சென்றான் எனறதும் மிக்க விரைவு புலப்படுத்துதற்கு. கூ

30. கேளாதே வந்து கிளைகளாய் இல்தோன்றி
வாளாதே போவரால் மாந்தர்கள்—வாளாதே
சேக்கை மரன்ஒழியச் சேண்நீங்கு புள்போல
யாக்கை தமர்க்கொழிய நீத்து.

(பொ - ள்) வாளாது சேக்கை மரன் ஒழிய - சும்மா கூடு மரத்தில் கிடக்க, சேண் நீங்கு புள் போல - அதி லிருநது தொலைவிலே பறந்து போய்விடும் பறவைகள் போல, மாந்தர்கள் - மக்கள், கேளாதே வந்து கிளைகளாய் இல் தோன்றி - ஒருவரையும் கேளாமலே வந்து சுற்றங்க ளாய் ஒரு குடும்பத்தில் பிறந்து, யாக்கை தமர்க்கு ஒழிய நீத்து - பின்பு தம் உடம்பை உறவினரிடம் கிடக்கும் படி நீக்கிவிட்டு, வாளாதே போவர் - பேசாமலே இறந்து போய்விடுவார்கள்.

(க - து) சொல்லாமலே போய்விடுவதனால் இன்ன போது இறக்கும் நேரமென்பது தெரியாமையின், உடனே அறஞ் செய்துகொள்க.

---

* ஐங. உ௩ : உ.

(வி - ம்) "வாளாதே' என்னுஞ் சொற்கள் இரண்டனுள் ஒன்று உவமத்துக்கும் ஒன்று பொருளுக்குங் கொள்க. மரம் மரன் என வந்தது போலி. சேண் நீங்கு என்னுங் குறிப்பால், திரும்பாமை புலப்பட்டது. புட்களில் அங்ஙனம் சேண் நீங்கி விடும் புட்களே ஈண்டைக்கு உவமை. முட்டையிட்டுக் குஞ்சு பொரித்தற்காகக் கூடுகட்டியிருந்து வினை முடிந்தபின் அக் கூட்டை விட்டுச் சேண் நீங்கிவிடும் புட்கள் இவ்வுவமத்துக்குப் பொருந்தும்; உயிரும் பிறர்க்குப் பயன்படும் பொருட்டே இவ்வுடம்பெடுத்துத் தங்குதலின் ஈது ஒக்கும். அசனாற்றான், கேளாதே வந்து வாளாதே போவர்; தமரின் பொருட்டு எடுத்த உடலாதலின் அத்தமர்க்கே அது கிடக்கும்படி நீத்தது என்றார். 'மாந்தர்கள் தோன்றிப், புட் போல நீத்துப்போவர,' எனக் கொள்க. ௩0

---

## ௪. அறன்வலி யுறுத்தல்

[அறத்தின் நிலைபேற்றை உணர்த்துவது; வலியென்றது, இங்கு நிலைபேறு; செல்வம இளமை யாக்கை முதலியன நிலையாமையின், இது வலியுடையதாயிற்று.]

**31.** அகத்தாரே வாழ்வார்என் றண்ணாந்து நோக்கிப்
புகத்தாம் பெறுஅர் புறங்கடை பற்றி
மிகத்தாம் வருந்தி இருப்பாரே மேலைத்
தவத்தால் தவஞ்செய்யா தார்.

(பொ - ள்) மேலைத் தவத்தால் - முன் பிறப்பில் செய்த தவத்தின் பயனான செல்வ நிலைமையால், தவம் செய்யாதார் - மறுபிறப்பிற்கு வேண்டுந் தவத்தைச் செய் யாமல் இறந்து பிறந்தவர், அம் மறுபிறப்பில்; அகத்து ஆரே வாழ்வார் - இம்மாளிகையில் வாழ்வார் எத்தகைய வரோ, என்று எண்ணி அண்ணாந்து நோக்கி - என்று மதிப் பாகக் கருதித் தலை நிமிர்ந்து மாளிகையின் மேனிலையைப் பார்த்து, தாம் புகப்பெறார் - தாமாக உள் நுழையப் பெறா ராய், புறங்கடை பற்றி - தலைவாயிலைப் பிடித்துக்கொண்டு, தாம் மிக வருந்தி இருப்பர் - தாம் மிகவும் வாடி ஒரு பயனுமின்றி நின்றுகொண் டிருப்பர்.

(க - து) இப்பிறப்பில் அறஞ்செய்யாதவர் வருபிறப்பில் இரந்து நிற்பர்.

(வி - ம்) அறஞ் செய்தல் உயிரோடு கூடவே அது நிலையாயிருந்து வருபிறப்பிலும் உதவும் என்று அதன் வலியுரைத்து வற்புறுத்தியவாறு. 'அகத்து ஆரே' என்று பிரிப்பது பொருட்சிறப்புடையது. எ, வினா. தவமும் தவமுடையார்க்கு ஆகு*மாதலின், 'தவததால் தவஞ்செயயாதாா,' என்றார். க

**32.** ஆவாம்நாம் ஆக்கம் நசைஇ அறமறந்து
போவாம்நாம என்னுப் புலைநெஞ்சே—ஓவாது
நின்றுஞற்றி வாழ்தி எனினும்நின் வாழ்நாள்கள்
சென்றன செய்வ துரை.

(பொ - ள்) ஆவாம் நாம் ஆக்கம் நசைஇ அறம் மறநது-அறத்தை மறந்நு பொருளை விரும்பி முயன்று நாம் மேலுமேலும் பெருஞ செல்வராவோம்; போவாம் நாம - நாம் இவ்வளவு விரைவில் இறந்துபோக மாட்டோம்; என்னு - என்று எண்ணி, புலைநெஞ்சே - தாழ்ந்த தன்மையையுடைய நெஞசமே, ஓவாது நின்று உஞற்றி வாழ்தி எனினும் - இடைவிடாமல் தொழிலில் நிலையாயிருந்து முயன்று நீ நினைததபடியே வாழ்கின்றா யென்றாலும், நின் வாழ்நாட்கள் சென்றன - நின் ஆயுள் நாட்கள இதோ கழிந்துவிட்டன, செய்வது உரை - மறுமைக்காக இனி என்ன செய்வது சொல்.

(க - து) பொருள் வாழ்வு முதன்மையன்று; அறவாழ்வே முதன்மையானது.

(வி - ம்) ஆவாம் போவாம் என்பன முறையே உடன்பாட்டிலும் எதிர்மறையிலும் வந்தன. போவாம என்பது செய்யாம் என்புழிப் போலக் கொள்ளப்படும். நாம் இருமுறை வந்தது சொற்பின் வருநிலை. என்னு. செய்யா என்னும வாய்பாட்டு வினையெசசம். முயற்சிக்கு வலிவுண்டாதலின், வாழ்தி யெனினும் என உடன்பட்டார்; ஆயினும் உறுபயன் இல்லை யென்றற்குச் 'செய்வது உரை' எனப்பட்டது. ஆக்கமே விரும்பி அறம் மறந்து தன் வாழ்நாட்களின் பெரும்பாகத்தைக் கழித்துவிட்ட ஒருவன், தன் நெஞ்சிற்குச் சொல்லியது இது. உ

* குறள், உள : உ.

33. வினைப்பயன் வந்தக்கால் வெய்ய உயிரா
மனத்தின் அழியுமாம் பேதை—நினைத்ததனைத்
தொல்லைய தென்றுணர் வாரே தடுமாற்றத்
தெல்லை இகந்தொருவு வார்.

(பொ - ள்) பேதை - அறிவில்லாதவன், வினைப்பயன் வந்தக்கால்-முன் தீவினையின் பயனாக இடர்கள் இப்போது வந்து தாக்கினால், வெய்ய உயிரா - உடனே கடுமையாகப் பெருமூச்சு விட்டு,மனத்தின் அழியும்-மனத்தின் வருந்தி ஊக்கங் கெடும்; நினைத்து அதனைத் தொல்லையது என்று உணர்வாரே-ஆராய்ந்து அவ்விடரைப் பழைய வினையினால் வந்ததென்று தெரிந்து அதற்கேற்ப ஒழுகுவோரே, தடுமாற்றத்து எல்லை இகந்து ஒருவுவார் - கலக்கத்தின் எல்லையைக் கடந்து அப்பால் நீங்குவார்.

(க - து) துன்பம் வந்தால் அதற்கு மனமழியாமல் அது நீங்க முயலவேண்டும்.

(வி - ம்.) பயன் என்றது இடர்; வந்தக்கால், வினையெச்சம். ‘அழியும்’ என்பதற்கு அழிந்து ஊக்கங் கெடும் எனவும், ‘உணர்வார’ என்பதற்கு உணர்ந்து அதற்கேற்ப ஒழுகுவார் எனவும் உரைத்துக்கொள்க. ஏகாரம் பிரிநிலை. நற்செயல்களினிடையே இடர் வந்தால், அந் நற்செயல்களால் அது வந்ததெனக் கருதி அவை செய்தலில் ஊக்கங் கெடாமல, தொல்லை வினையால் வந்ததெனத் தெளிந்து, அந் நல்லவற்றைத் திருந்தச் செய்து நலம் பெற வேண்டும் என்பது பொருள். ந

34 அரும்பெறல் யாக்கையைப் பெற்ற பயத்தால்
பெரும்பயனும் ஆற்றவே கொள்க;—கரும்பூர்ந்த
சாறுபோல் சாலவும் பின்உதவி மற்றதன்
கோதுபோல் போகும் உடம்பு.

(பொ - ள்) அரும்பெறல் யாக்கையை - அடைதற்கரிய உடம்பை, பெற்ற பயத்தால் - அடைந்த ஆக்கங்கொண்டு, பெரும்பயனும் - பெரும்பயன் என்னப்படும் புண்ணியச்செயல்களும், ஆற்றவே கொள்க - இயன்றவளவும் செய்துகொள்க; கரும்பு ஊர்ந்த சாறுபோல் சாலவும்

பின் உதவி-கரும்பு ஆட்டியெடுத்த சாறுபோல மிகவும் மறுமைக்கு அறப்பயன் உதவி, மற்று - பின்பு, அதன் கோதுபோல் போகும் உடம்பு - அக் கரும்பின் சக்கை போல இவ்வுடம்பு கழிந்துபோகும் இயல்புடையது.

(க - து) உடம்பைத் தக்கவழியிற் புண்ணியச் செயல் கட்குப பயன்படுத்திக் கொள்க

(வி - ம்) 'அரும்பெறல் யாக்கை' யென்றமையால் மக்கள் யாக்கை என்பது பெறப்படும். "மக்களுடம்பு பெறற்கரிது,"* என்றா பிறரும். யாக்கை கிடைத்தது ஓர் ஆக்கம்; உலகத்தில் வாழவும் காரியஙகள் செய்யவும் முடிந்தது; அந்த ஆக்கத்தைக் குறித்தற்கு 'யாக்கை பெற்ற பயம்,' என்றார். அவ் வசதிகொண்டு அறமும செய்துகொள்க என்றற்குப் 'பெரும் பயனும்' எனவும் இயன்ற அளவும் என்றற்கு 'ஆற்றவே' எனவுங் கூறினர். ஏகாரம் இசைநிறை. ஊர்ந்த சாறு - ஊர்ந்ததனுல் உண்டான சாறு. ஆலைக் காரனுக்குக் கரும்பு அவன் பின் உதவிக்காக மிகவும் சாறு உதவித் தான் சக்கையாய்க் கழிந்தது; அப்படியே அறவொழுக்க முடையா னுக்கு உடம்பு அவன் மறுமையுதவிக்காக மிகவும் புண்ணியம் உதவித் தான் கோதுபோலக் கழியுந் தன்மையது என்று உவமையை விரித் துக்கொள்க; நற்செயல்களில் உடம்பைச் சாறுபோலப் பிழியவேண் டும் என்பது இது; "வருந்தி உடம்பின் பயன்கொண்டார்," †என்பர் மேலும். அற வழிகளில் நல்ல உழைப்பெடுத்துக்கொள்ளவேண்டும் என்பது கருத்து. ௪

35. கரும்பாட்டிக் கட்டி சிறுகாலைக் கொண்டார்
துரும்பெழுந்து வேம்கால் துயராண் டுழவார்;
வருந்தி உடம்பின் பயன்கொண்டார் கூற்றம்
வருங்கால் பரிவ திலர்.

(பொ - ள்) சிறுகாலை-மிக்க காலைநேரத்தில், கரும்பு ஆட்டி - கரும்பை ஆலையில் ஆட்டி, கட்டி கொண்டார் - சருக்கரைக் கட்டியைச் செய்துகொண்டவர், துரும்பு எழுந்து-அக் கரும்பு பின் துரும்பாகித் தோன்றி, வேம் கால் - தீயில் வேகும்போது, துயர் ஆண்டு உழவார் - அது கண்டவிடத்தில் துன்பத்தினுல் வருந்தார், அதுபோல; வருந்தி உடம்பின் பயன் கொண்டார் - நற்செயல்களில்

* அறநெறிச். கக. †நாலடி. ௪: ௫.

உழைத்து உடம்பாலான அறப்பயனைப் பெற்றவர், கூற்றம் வருங்கால-நமன் வருகின்ற காலத்தில், பரிவது இலர்-தம் உடம்பின் கேடு குறித்து இரங்குதல் இலராவர்.

(க - து) மிக்க இளமையிலிருந்தே அறச்செயல்களில் உழைத்துவந்தால், இறந்துபோகும்போது துன்பமுண்டாகாது.

(வி - ம்) கரும்பை மிகக் காலநேரத்தில் ஆலையில் இட்டுச் சாறு பிழிந்தால் அது பதங்கெடாததுபோல அறப்பயன் கோடலும் வாழ்நாளின் காலை நேரமான இளமைப் பருவத்திலேயே நிகழ்தல்வேண்டு மென்பதும் அறிவுறுத்தப்பட்டது. சிறுகாலை-இளங் காலைநேரம். வேம்- வேகு; 'வேங் கால்' எனப்திற காலம் பெறப் பட்டமையால், 'ஆண்டு' என்பதற்கு இடப்பொருள் உரைககப் பட்டது. சாறு அற்ற கோது, எரிதலில் தவககமில்லாதது போல, உழைதது அறம பயந்த உடமபும இறத்தலில வேதனையின்றிக கழலும். (ரு)

**36** இன்றுகொல் அன்றுகொல் என்றுகொல் என்னாது
பின்றையே நின்றது கூற்றமென் றெண்ணி
ஒருவுமின் தீயவை ஒல்லும் வகையால்
மருவுமின் மாண்டார் அறம்.

(பொ - ள்) இன்றுகொல் அன்றுகொல் என்றுகொல் என்னாது பின்றையே நின்றது கூற்றம் என்று எண்ணி - இன்றோ அன்றோ என்றோ என்று இகழ்ந்திராமல பின்னாலேயே இருக்கின்றான் நமன் என்று மதித்து, ஒருவுமின் தீயவை - தீய செயல்களை நீக்குங்கள்: ஒல்லும் வகையால் மருவுமின் மாண்டார் அறம்-மாட்சிமைபபட்ட நல்லோர் கூறும அறச்செயல்களை இயன்ற வகையினால் தழுவிச் செய்யுங்கள்.

(க - து) கூற்றுவன் எந்த நேரத்திலும வருவான் என்று கருதி உடனே நல்லன செய்யவேண்டும.

(வி - ம்) நமன் வருவது இன்றோ அன்றோ என்றோ என்றற்கு, இன்றுகொல் அன்றுகொல் என்றுகொல் என்றார். கொல்-ஐயப்பொருட்டு. இன்றும் அன்றும் இளமை முதுமைகளைச்

சுட்டின. அறஞ்செய்து மாட்சிமைப்பட்டவராதலின், 'மாணடார் அறம்,' என்றார்.

37. மக்களா லாய பெரும்பயனும் ஆயுங்கால்
எத்துணையும் ஆற்றப் பலவானால்—தொக்க
உடம்பிறகே ஒப்புரவு செய்தொழுகா தும்பர்க்
கிடந்துண்ணப் பண்ணப் படும்.

(பொ - ள்) மக்களால் ஆய பெரும்பயனும்-மக்கட் பிறவியினால் செய்யத்தக்க பெரும்பயனான நற்செயல்களும், ஆயுங்கால் - எண்ணிப் பார்க்கும்போது, எத்துணையும் ஆற்றப் பல ஆனால்- எவ்வளவும் மிகப் பலவாகுமாதலால், தொக்க உடம்பிற்கே ஒப்புரவு செய்தொழுகாது - பல கருவிகளோடு கூடிய இவ்வுடம்புக்கே உதவிகள் செய்துகொண்டிராமல், உம்பர்க் கிடந்து உண்ணப் பண்ணப்படும்- மேலுலகத்தில் எளிதாக இருந்துகொண்டு இன்பம் நுகரும்பொருட்டு உயிருக்கான அறவினைகளே மிகவும் செய்து கொள்ளப்படுதல்வேண்டும்

(க - து) கருவியாக வந்த உடம்புக்கே காரியங்கள் செய்துகொண்டிராமல், உயிருக்கான காரியங்களையே மிகவும் செய்துகொள்ளல்வேண்டும்.

(வி - ம்) உயிர்க்குரிய அறச்செயல்கள் 'பெரும்பயன்' எனப் பட்டன. எச்சவும்மை, உடம்பிற்குரிய சிறுபயனைத் தழீஇயிற்று. உடம்பிற்குரிய சிறுசெயல்களைச் செய்தற்கிடையே உயிர்க்குரிய எவ்வளவோ மிகப் பலவான பெருஞ்செயல்களையுஞ் செய்துகொள்ளலாமென்றற்கு, 'எத்துணையும் ஆற்றப் பல,' என்றார். ஆற்ற-மிக; ஆனால் - ஆதலாலென்னும் பொருட்டு. உடம்பு, தன் காரியங்களைச் செய்துகொள்ளுதற்கு, இதயப் பை, மூச்சுப் பை, இரைப் பை முதலிய அகக் கருவிகளும்; நா, பல், கை, கால், கண், காது முதலிய புறக் கருவிகளும் பெற்றிருக்கின்றது; இங்ஙனங் கருவிகள் தொக்க உடம்பாயிருத்தலால் அவ்வுடம்பு தானே தன் காரியங்களைச் செய்து கொள்ளும் என்றற்குத் 'தொக்க உடம்பு,' என்று வினைவு கூட்டினார்; சிறப்பாகத் தாமே இயலுகின்ற அகக் கருவிகளை நினைந்தே அங்ஙனங் கூறப்பட்டது. ஆதலால், உடம்புக்கே உதவிசெய்து கொண்டிருக்கவேண்டிய கட்டாயமில்லை; செய்யவேண்டுவது உயிருக்கே என்று அறிவுறுத்தப்பட்டது. உடம்பு அதனியற்கையில்

நா.—3

இயலுகுமாறு விழிப்பாக நடந்துகொண்டால், அதன்பொருட்டுச் செயற்கையாக முயற்சிகள் எடுக்கவேண்டுங் கட்டாயமில்லாமற் போம் என்னுங் கருத்தும் இதுகொண்டு உணர்ந்துகொள்ளப்படும். 'இடையறாமல் இங்ஙனம் செயற்கை முயற்சிகளைச் செய்துகொண்டு வருந்தற்க,' என்றற்கு 'ஒழுகாது,' என்றார். கிடந்து என்றது, எளிமை தெரியும்பொருட்டு. எ

38 உறக்கும் துணையதோர் ஆலம்வித் தீண்டி
இறப்ப நிழற்பயந் தாஅங்—கறப்பயனும்
தான்சிறி தாயினும தக்கார்கைப் பட்டக்கால்
வான்சிறிதாப் போர்த்து விடும்.

(பொ - ள்) உறக்கும துணையது ஓர் ஆலம் வித்து - சிறிய அளவினதான ஓர் ஆலம் விதை, ஈண்டி - தழைத்து, இறப்ப நிழல் பயந்தாங்கு - மிகவும் நிழல் கொடுத்தாற் போல, அறப்பயனும்-அறச்செயல்களின் பயனை புண்ணியத்தைத் தருமு பொருள், தான் சிறிதாயினும் - தான் அளவில் சிறியதேயானாலும், தக்கார கைப்பட்டக்கால் - தகுதியுடைய பெரியோர் கையிற் சேர்ந்தால், வான் சிறிதாப் போர்த்துவிடும் - வானமும் சிறிதென்னும்படி அவ்வளவு பெரிய புண்ணியத்தைச் சூழ வைத்துவிடும்.

(க - து) சான்றோர்க்குச் செய்யும் உதவி மிகச் சிறியதாயினும், அது பெருமபயன் தரும்.

(வி - ம்) உறக்குதல் - சுருஙகுதல்; சிறிதாதல். ஈண்டி - அடர்ந்து; இங்குத் தழைத்து எனப்பட்டது. 'பயந்து ஆங்கு' எனப் பிரிக்க. அறத்தின் பயனைத் தரும் பொருள், 'அறப்பயன்' எனப்பட்டது. தக்கார் - ஞானவொழுக்கஙகளால் உணடாகும தகுதியை உடையவர். தக்கார் கைப்பட்டக்கால் என்பதன் கருத்தைத், தக்க இடத்தில் விதை முளைக்குமாறுபோல் என்று உவமத்துக்குங் கொள்க. புண்ணியத்தைச் சூழ வைத்துவிடும் என்றற்குப், 'போர்த்துவிடும்,' என்றார். அ

39. வைகலும் வைகல் வரக்கண்டும் அஃதுணரார்
வைகலும் வைகலை வைகுமென் றின்புறுவர்
வைகலும் வைகல்தம் வாழ்நாள்மேல் வைகுதல்
வைகலை வைத்துணரா தார்.

(பொ - ள்) வைகலும் - நாடோறும், வைகல் வரக் கண்டும், - நாட்காலம் தோன்றிவரக் கண்டும், அஃது உணரார் - அறத்தைக் கருதாதவராய், வைகலும்-என்றும், வைகலை வைகும் என்று இன்புறுவர் - நாட்பொழுதை அது நிலைத்திருக்கும் என்று கருதித் துய்த்து மகிழ்வர்; அவர் யாரெனின், வைகலும் வைகல் தம் வாழ்நாள்மேல் வைகுதல் - ஒவ்வொரு நாளும் அந் நாட்பொழுது தம் ஆயுள் கழிதலின்மேல் நிற்றலாக, வைகலை வைத்து உணராதார் - அந் நாட்காலத்தைக் கருத்திருத்தி அறியாதவர்.

(க - து) நாடோறும் வாழ்நாட்கள் ஒவ்வொரு நாளாகக் கழிந்து போதலின், அந்நாட்களைத் துய்த்து இன்புற்றுக்கொண்டிராமல் உடனே அறஞ்செய்துகொள்ளவேண்டும் என்பது.

(வி - ம்) வைகலை வைத்து உணராதார் அஃது உணராராய் இன்புறுவா என்று கொள்க. வாழ்நாட்கள் ஒவ்வொரு நாளாகக் கழிந்துபோவதற்கு நாட்கள் அடையாளமாய் நிற்றலின் 'வைகல் வரக் கண்டும்' எனப்பட்டது. வைகலை உணராதார் என்று ஈற்றடியில் வருதலால் அஃதுணரார் என்றது அறத்தைக் கருதாதவராய் என்பது உணர்த்தும். அதிகாரம் அறன்வலியுறுத்த லாதலாலும், வைகலை இன்புறுதலுக்கு வேறானது அறஞ்செய்தலாதலாலும், அறத்தை அஃதெனச் சுட்டினார். "அஃதும் பிறன்பழிப்பதில்லாயின் நன்று,"* என்றாற்போல. க

40. மான அருங்கலம் நீக்கி இரவென்னும்
ஈன இளிவினால் வாழ்வேன்மன்—ஈனத்தால்
ஊட்டியக் கண்ணும் உறுதிசேர்ந் திவ்வுடம்பு
நீட்டித்து நிற்கும் எனின்.

(பொ - ள்) ஈனத்தால் ஊட்டியக் கண்ணும் - இழி தொழில்களால் உண்பித்த இடத்தேனும், உறுதி சேர்ந்து இவ்வுடம்பு நீட்டித்து நிற்கும் எனின் - உறுதி பொருந்தி இந்த உடம்பு காலம் நீண்டு நிலைபெறுமென்றால், மான அருங்கலம் நீக்கி - மானமாகிய பெறற்கரிய அணிகலனை விடுத்து, இரவு என்னும் ஈன இளிவினால் வாழ்வேன் மன்-

* குறள், கு: க.

இரத்தல் என்னும் ஏளனமான இழிதொழிலினால் உயிர் வாழ்வேன்; ஆனால் அவ்வுடம்புதான் நிலைக்கப்போவ தில்லையே.

(க - து) என்றும் நிலையாயிருக்கும் உயிர்க்குணங் களுக்குரிய அறச்செயல்களே செய்யத்தக்கவை.

(வி - ம்) இழந்தால் மீண்டும் பெறற்கரியதாகலின, 'அருங கலம்' என்றார்; உடம்பு நிலையாது எனனும் ஒழிந்தபொருளைக் காட்டுதலின், மன் ஒழியிசை. உறுதி - கட்டுத தளராத நிலை. நீட்டித்து, தன்வினைப்பொருளது. கo

## ரு. தூய்தன்மை

அஃதாவது, தூயதல்லாமை; உடம்பின் அழுக்குடைமையை உணர்த்திற்று. மகளிருடம்பு அழகியதெனக் கருதப்படுதலின், அதன் தூய்தல்லாமையைப் பெரும்பாலும் இவ்வதிகாரம்விளக்கிற்று.

**41.** மாக்கேழ் மடநல்லாய் என்றரற்றும் சான்றவர்
நோக்கார்கொல் நொய்யதோர் புக்கிலை—யாக்கைக்
ஈச்சிற கன்னதோர் தோல்அறினும் வேண்டுமே
காக்கை கடிவதோர் கோல் [கோர்

(பொ - ள்) மா கேழ் மடநல்லாய் என்று அரற்றும சான்றவர் - மாந்தளிர்போன்ற இளநங்கையே என்று மாதரை நோக்கி பலகாலுங் கூறி உருகும பெரியோர்கள், நோக்கார்கொல் நொய்யது ஓர் புக்கிலை - அம் மாதரார் தது தாழ்ந்த சிற்றுடம்பின் இயல்பை எண்ணிப் பாரார்களோ, யாக்கைக்கு ஓர் ஈச்சிறகு அன்னது ஓர் தோல் அறினும் - அவ்வுடமபுக்கு ஓா ஈயின் சிறகைப்போன்றதொரு தோல் அறுபட்டாலும, வேண்டுமே காக்கை கடிவதோர் கோல் - காக்கையைத் துரத்துவதொரு கோல வேண்டியிருக்கும்.

(க - து) உடமபு அழுக்குடையதென்று உணர்ந் தொழுகவேண்டும்.

(வி - ம்) மா - மாந்தளிர்; கேழ், உவமப்பொருளது. இச் செய்யுள் உடம்பை நோக்கியதாகலின், நல்லாய் என்பதற்குப் பொது வில் 'பெண்' என்று உரைத்துக்கொள்ளவேண்டும். தாமு காமுறும்

மாதரார்பால் இங்ஙனம் பலமுறையுங் கூறி உள்ளங் கரைந்து குறையிரப்பதுதோன்ற 'அரற்றும்,' என்றார். சான்றவர் என்றது, இகழ்ச்சி. உயிர் புகுந்திருக்கும் இல்லமாதலின், உடம்பு 'புக்கில்' எனப்பட்டது. ஓர் - சிறிய என்னும் பொருட்டு. பின் இரண்டடிகளில் யாக்கையின் தூய்தல்லாமை காட்டப்படுதலாலும் உடம்பின் தாழ்ந்த தன்மை தோன்ற இங்கும் 'நொய்யது' என்றொரு சொல் வந்தமையாலும் மீண்டும் இழிவு தோன்றும்படி 'துச்சில்' எனப் பாடங்கொள்ளுதல் சிறப்பன்று; புக்கில் என்னும் பாடம் பொருட்போக்குக்கும் பொருந்தும். மிகச் சிறிய அளவுக்கும் மீந்தோல் நிலைமைக்கும் 'ஈச்சிறகு' கூறினர். காகத்தைக் கூறினமையின், புண் மிகுதி தோன்றிற்று. க

42 தோல்போர்வை மேலும் தொளைபலவாய்ப் பொய்ம்மறைக்கும்
மீப்போர்வை மாட்சித் துடம்பானால்—மீப்போர்வை
பொய்ம்மறையாக் காமம் புகலாது மற்றதனைப்
பைம்மறியாப் பார்க்கப் படும்.

(பொ - ள்) *தோல் போர்வை மேலும் தொளை பலவாய் - தோலாலான போர்வையின்மேலும் தொளைகள் பலவாகி, பொய் மறைக்கும் மீ போர்வை மாட்சித்து உடம்பானால் - அவற்றின் உள் அழுக்குகளை மறைக்கும் மேற்போர்வையாகிய ஆடையின் பெருமையையுடையது இவ்வுடம்பென்றால், காமம் புகலாது - அவ்வுடம்பைக் காமத்தால் மகிழாமல், மீபபோர்வை பொய் மறையா - அம் மேற்போர்வையாகிய ஆடையை அழுக்கு மறைக்குந் திரையாகவும், மற்றதனை - மற்றொரு போர்வையாகிய தோற்போர்வையை, பை மறியா - ஒரு பையின் திருப்பமாகவும், பார்க்கப்படும்-நினைத்துப் பார்த்து விருப்பத்தை நீக்கிக்கொள்ளவேண்டும்.*

(க - து) *உடம்பின் அழுக்குடைமையை எண்ணிப் பார்த்து அதன்மேல் உண்டாகும் அவாவை நீக்கிக்கொள்ள வேண்டும்.*

(வி - ம்) *பலவாய் என்னும் வினையெச்சம் காரணப்பொருட்டு; தொளை பலவானமையால் மேலே ஆடை போர்க்கவேண்டியதாயிற்று என வருதலின். மாட்சித்து என்றது, இகழ்ச்சி. மறியா, இரண்டிடத்தும் ஈறு கெட்டது; எண்ணும்மை விரித்துக்கொள்க.*

மற்று - பிறிதென்னும் பொருட்டு. பையின் உட்புறத்தை மேற்புறமாகத் திருப்பிப் பார்ப்பதுபோல என்றற்குப், 'பைம் மறியா' எனப்பட்டது. இங்கே தோலின் உட்புறத்தை நினைத்துப் பார்க்க வேண்டும் என்பது கருத்து. பார்க்கப்படும் என்பது ஓர் வியங்கோள் ஈறு; பார்த்து நீக்கப்படும் என்னுங் கருத்தும் அடங்கி நின்றது. "மக்கள் யாக்கை இதுவென உணர்ந்து மிக்கோய் இதனைப் புறமறிப் பாராய்"* என்றார் பிறரும். உ

**43.** தக்கோலம் தின்று தலைநிறையப் பூச்சூடிப்
பொய்க்கோலம் செய்ய ஒழியுமே—எக்காலும்
உண்டி வினையுள் உறைக்கும் எனப்பெரியோர்
கண்டுகை விட்ட மயல்.

(பொ - ள்) *தக்கோலம் தின்று* - தக்கோலம் முதலிய மணப்பொருள்களை வாயில் மென்று, *தலை நிறையப் பூ சூடி* - தலைநிரம்ப மணமலர் சூடி, *பொய் கோலம் செய்ய* - செயற்கை அழகுகளைச் செய்துகொள்வதனால், *ஒழியுமே* - நீங்கிவிடுமோ? *எக்காலும் உண்டி வினை உள் உறைக்கும் எனப் பெரியோர் கண்டு கைவிட்ட மயல்* - எப்பொழுதும் உணவுத்தொழில் உள்ளே அழுக்கை மிகுக்கும் என்று பெரியோர் தெரிந்து விருப்பத்தை ஒழித்த இவ்வுடம்பின் அழுக்கு.

(க - து) செயற்கையாக எவ்வளவு மணப்பண்டங்கள் ஊட்டினாலும் உண்ணுந்தொழில் அழுக்கை மிகுத்துக் கொண்டேயிருக்குமாதலால், இவ்வுடம்பின்மேல் விருப்பங் கொள்ளுதலிற் பயனில்லை.

(வி - ம்) இயல்பல்லாத கோலம் பொய்க்கோலம் எனப்பட்டது. ஏகாரம், வினா. உறைத்தல் - தனது நிலையை மிகுவித்தல். மயல், அழுக்கென்னும் பொருட்டு. 'மயல் ஒழியுமே?' என்று கூட்டிக்கொள்க. ஒழியாது என்றபடி. ங

**44.** தெண்ணீர்க் குவளை பொருகயல் வேலென்று
கண்ணில்புன் மாக்கள் கவற்ற விடுவேனோ
உண்ணீர் களைந்தக்கால் நுங்குசூன் றிட்டன்ன
கண்ணீர்மை கண்டொழுகு வேன்.

---

* மணிமே. ௪ : ௧௨௦ - ௧.

(பொ - ள்) தெள் நீர் குவளை - தெளிவான நீரில் உள்ள குவளைமலர், பொரு கயல் - புரள்கின்ற கயல்மீன், வேல் - வேற்படை, என்று - என்று சொல்லி, கண் இல் புன் மாக்கள் - மெய்யறிவில்லாத தாழ்ந்த மக்கள், கவற்ற விடுவேனோ - எனதுள்ளத்தைக் கவலைப்படுத்த இடம்விடுவேனோ! உள்நீர் களைந்தக்கால் - உள்ளுள்ள நீர் நீக்கப்பட்டால், நுங்கு சூன்றிட்டு அன்ன - நுங்கு தோண்டிவிட்டாற்போன்ற, கண் நீர்மை கண்டு ஒழுகுவேன் - கண்ணின் இயல்பை அறிந்து பற்றற்றொழுகுவேனாய நான்

(க - து) உடம்பின் அழுக்கியல்பு தெரிந்து அதன் கண் பற்றற்றொழுகுதல் வேண்டும்.

(வி - ம்) கண்களைக் குவளைமலர் என்றும் கயல்மீன் என்றும் ஒப்புமைபாற் கூறும் மரபுபற்றி அவற்றைக் குறிப்பிட்டார். மாதரை அவர்க்குரிய பெண்மைப் பண்பு* அறிந்து போற்றாமல் காமங் காரணமாக அவருடம்பை நச்சித் திரிவாரை உட்கொண்டு, 'கண்ணில் புன்' எனறதன் மேலும் மக்கட்பண்பில்லாதவர் என்னுங் கருத்தால் மாக்கள் எனவுங் கூறினார். மாக்கள் என்பது மக்கட்பிறவியின் மூன்னிலை.| உள்நீர் - கண்ணின் உள்ளுள்ள நீர்: கண்டொழுகுவேன் கவற்றவிடுவெனோ என்று கொள்க. மேல் வருஞ் செய்யுட்கும் இவ் விளக்கத்திற் சில கொள்க. ச

45. முல்லை முகைமுறுவல் முத்தென் றிவைபிதற்றும்
கல்லாப்புன் மாக்கள் கவறற விடுவெனோ
எல்லாரும் காணப் புறங்காட் டுதிரந்துக்க
பல்லென்பு கண்டொழுகு வேன்

(பொ - ள்) முறுவல் முல்லை முகை முத்து என்று - மாதர் பற்கள் முல்லையரும்புகள் முத்துக்கள் என்று, இவை பிதற்றும் - இப் புனைவுகளை அறிவின்றிச் சொல்லிக்கொண்டிருக்கின்ற, கல்லாப் புன்மாக்கள் - மெய்ப்பொருள் கல்லாத தாழ்ந்த மக்கள், கவற்றவிடுவெனோ - எனதுள்ளத்தைக் கவலைப்படுத்த விடுவேனோ! எல்லாரும் காணப் புறங்காட்டு உதிர்ந்து உக்க பல் என்பு - எல்லாரும் பார்க்கும்படி சுடலையில் பலவாய் வீழ்ந்து சிந்திய அவர்போன்று

* கலி. உ௫: ௧௨. † தொல். மரபி: ௩௨.

ருடைய பல்லெலும்புகளை, கண்டு ஒழுகுவேன் - பார்த்து அதனாற் பற்றற் றொழுகுவேனான நான்.

(க - து) முன் செய்யுட்குக் கூறியதே கொள்க

(வி - ம்) பிதற்றுதல் - அறிவுமயங்கிச் சொல்லுதல். ஊருக்குப் புறம்பேயுள்ள காடாதலின், புறங்கா டெனப்பட்டது. ரு

46 குடருங் கொழுவுங் குருதியும் என்பும்
தொடரும் நரம்பொடு தோலும்—இடையிடையே
வைத்த தடியும் வழும்புமாம் மற்றிவற்றுள்
எத்திறந்தாள் ஈர்ங்கோதை யாள்.

(பொ - ள்) குடரும் கொழுவும் குருதியும் என்பும் தொடரும் நரம்பொடு தோலும் இடையிடையே வைத்த தடியும் வழும்பும் ஆம் இவற்றுள் - குடலும் கொழுமையும் குருதியும் எலும்பும் தசைநாரும் நரம்பும் தோலும் இவற்றின் இடையிடையே வைத்த தசையும் கொழுப்பும் ஆகின்ற இவ்வுடற்பொருள்களுள், எத்திறத்தாள் ஈர்ங்கோதையாள் - எப் பகுதியைச் சேர்ந்தவள் இனிய மாலையை யணிந்த மாது

(க - து) பெண்மை யென்பது பெண்ணின் உடம்பில் இல்லை

(வி - ம்) பெண்ணுடம்பில் வெறுங் குடர் கொழு நரம்பு தோல் முதலியனவே உள; ஆதலின் அவ்வுடம்பிற் பற்றுவைத்து அறத்தைக் கைவிடுதல் ஒவ்வாது என்றபடி. மேல் வழும்பு என வருதலின் கொழுவென்றது, இங்கே இளமைச் செழுமை, தொடர் வேறாகவும் நரம்பு வேறாகவுங் கொள்க. மகளிரின் அழகிய பண்பை அவரது உயிரறிவில் வைத்துக் காணின், அவருடம்பிற் பற்று நீங்குமாகலின், இவ் வுடற்பொருள்களுள் மாது எப் பகுதியினள் என்றார். ஈர் - இனிமை: "ஈர்ங் கொடிக்கே"* என்னுந் திருக்கோவையார்க்குப் பேராசிரியரும் இவ்வாறு பொருளுரைத்தமை காண்க. சு

47. ஊறி உவர்த்தக்க ஒன்பது வாய்ப்புலனும்
கோதிக் குழம்பலைக்கும் கும்பத்தைப்—பேதை
பெருந்தோளி பெய்வளாய் என்னுமீப் போர்த்த
கருந்தோலால் கண்விளக்கப் பட்டு.

* திருக்கோ. உ அ.

(பொ - ள்) ஊறி உவர்த்தக்க - அடுக்குகள் ஊறி அருவருக்கத் தக்க, ஒன்பது வாய்ப்புலனும் - ஒன்பது சந்திடங்களும், கோதிக் குழம்பு அலைக்கும் கும்பத்தை - சீய்த்து அவ் வழுக்குக் குழம்பை அசைத்தொதுக்கும் உடலாகிய ஒரு குடத்தை, பேதை - அறிவிலான் ஒருவன், மீ போர்த்த கருந்தோலால் கண் விளக்கபபட்டு - அவ் வுடம்பின் மேலே போர்த்த பசுந்தோலினால் அவன் கண்கள ஒளி செய்யப் பட்டு அதனால், பெருந்தோளி பெய்வளாய் என்னும - பெரிய தோளையுடையாளே இட்ட வளையலுடையாளே என்று சொல்லி அழைப்பான்

(க - து) உடம்பின் அழுக்குநிலையை உணர்ந்து அதன் மேற் பற்று நீங்கி அறத்தைக் கடைபபிடிக்கவேண்டும்.

(வி - ம்) 'ஒன்பது இடஙகளும் அழுக்கை ஒதுக்கும்படியான மலக்குடத்தைப், பேதையான், பெருந்தோளி பெய்வளாய் என்று அழைப்பான்,' என்பது தொடா. மேல் போர்த்த தோல் உள் அழுக்கை மறைத்துத் தனது மேல் நிறத்தால் அவன் கண்களுக்கு அழகொளி தந்தன; அதனால அவன் கண்கள், உள் அழுக்கு உணாந்து இருளாமல் மேல் அழகு தெரிந்து விளக்கப்படுதலால், இங்ஙனம் அழைக்க விரும்பினன் என்பது. உண்மை இதுவாக லின், உடம்பின்மேற் பற்றறுக வென்பது கருத்தாயிற்று. தோளி, இயல்பு விளி. வளாய் ஈறு திரிந்த விளி. * கண விளக்கப்பட்டு, காரணப் பொருளது. கருமை, பசுமைப் பொருளில் வருதல், "காரக் கரும்பின்," † என்னுமிடத்துப் "பசிய கரும்பின்," என நச்சினார்க்கினியர் எழுதிய உரையினால் அறிக. எ

48 பண்டம் அறியார் படுசாந்தும் கோதையும்
கண்டுபா ராட்டுவார் கண்டிலர்கொல்—மண்டிப்
பெடைச்சேவல் வன்கழுகு பேர்த்திட்டுக் குத்தும்
முடைச்சாகா டச்சிற் றுழி.

(பொ - ள்) பண்டம் அறியார்-உடம்பாகிய பண்டத்தின் இயல்பை அறியாதவராய், படுசாந்தும் கோதையும் கொண்டு-அவ் வுடம்பின்மேல் அணியப்படும் சந்தனமும் மாலையுங் கருதி, பாராட்டுவார்-அவ் வுடம்பின்மேற் பற்று

* தொல். விளி. ச. † பட். க.

வைத் தொழுகுகின்றவர், கண்டிலர் கொல் - அறிந்திலர் போலும்! மண்டி - நெருங்கி, பெடைச் சேவல் வன் கழுகு - பெண்ணும் ஆணுமான வலிய கழுகுகள், போர்த் திட்டுக் குத்தும் முடைச் சாகாடு-உறுப்புக்களைப் புரட்டிக் குத்துகின்ற முடைநாற்றமுடைய இவ்வுடம்பாகிய வண்டியை, அச்சு இற்ற உழி - அவ்வண்டிக்கு அச்சுப்போன்ற தான உயிர் முறிந்துவிட்டபோது.

(க - து) செயற்கை யழகுகளால் இவ்வுடம்பைத் தூயதாகக் கருதிக்கொள்ளலாகாது.

(வி - ம்) பண்டம் என்றார், இழிவு கருதி. படுசாந்து-அணிந்த சாந்து. 'முடைச் சாகாட்டை அதன் அச்சு இற்றபோது கண்டிலர் கொல்,' என்று கொள்க அப்போது அதனைக் கண்டால், கழுகுகள் அதனைப் புரட்டிக் குத்தும் இயல்பு தெரியும் என்பது கருத்து. சாகாடு - வண்டி. உடம்பை வண்டி யென்றமையின் அதன் இயக்கத்துக்குக் காரணமான அச்சு உயிராயிற்று. 'மண்டிப் போர்த்திட்டுக் குத்தும் முடைச் சாகாடு,' என்று கூட்டுக. 'குத்தல்' என்னும் பாடம் கட்டுரைச் சுவை உடையதன்று. அ

**49.** கழிந்தார் இடுதலை கண்டார்நெஞ் சுட்கக்
குழிந்தாழ்ந்த கண்ணவாய்த் தோன்றி—ஒழிந்தாரைப்
போற்றி நெறிநின்மின் இற்றிதன் பண்பென்று
சாற்றுங்கொல் சாலச் சிரித்து.

(பொ - ள்) கழிந்தார் இடுதலை - இறந்துபோனவரது எரிக்கப்பட்ட தலை ஓடு, கண்டார் நெஞ்சு உட்கக் குழிந்து ஆழ்ந்த கண்ணவாய்த் தோன்றி - பார்த்தவர் மனம அஞ்சும்படி உட்குழிநது ஆழ்ந்த கண்ணிடங்களை யுடையன வாய் இடுகாட்டில் தோன்றி, ஒழிந்தாரை - இறவாதிருக்கும் மற்றவரை, சிரித்து - ஏளனமாக நகைத்து, இற்று இதன் பண்பு - இவ்வுடலின் இயல்பு இபபடிப்பட்டது, போற்றி நெறி நில்மின் - அறத்தைக் கடைப்பிடித்து அவ் வழியில் நில்லுங்கள், என்று சாற்றுங்கொல்-என்று சொல்லும் போலும்!

(க - து) அறம் கடைப்பிடித்து அந்நெறியில் நிற்க வேண்டும்.

(வி - ம்) இடுதலை என்பதில், இடுதல் நெருப்பிலிடுதல் என்னும் கருத்துடையது; இடுகாடு எனப்பட்டதும் இப்பொருட்டு. 'ஒழிந்தாரைச் சிரித்துச் சாற்றுங்கொல்,' என்று கொள்க. கழிந்தார் என முன் வந்தமையின், ஒழிந்தார் இனி இறக்கவிருப்பார்மேல் நின்றது. இயல்பு கூறுதலின் 'இற்று'* எனப்பட்டது. ௯

**50.** உயிர்போயார் வெண்டலை உட்கச் சிரித்துச்
செயிர்தீர்க்குஞ் செம்மாப் பவரைச்—செயிர்தீர்ந்தார்
கண்டிற் றிதன்வண்ண மென்பதனுல் தம்மையோர்
பண்டத்துள் வைப்ப திலா.

(பொ - ள்) உயிர் போயார் வெண்தலை-உயிர்போனவரது தசை நீங்கிய வெண்ணிறமான எலும்புத் தலை, உட்கச் சிரித்து - கண்டார் அஞ்சும்படி நகைத்து, செம்மாப்பவரைச் செயிர் தீர்க்கும்-இவ்வுடம்பின் காரணமாக இன்புறுகின்றவரை அக் குற்றத்தினின்றும் விடுவிக்கக்கூடும், செயிர் தீர்ந்தார் - இதற்குமுன் இயல்பாகவே அப் பிழை நீங்கினவர், கண்டு இற்று இதன் வண்ணம் என்பதனால்-தாமே அறிந்து இத்தகையது இவ்வுடம்பின் தன்மை என்னுங் கருத்தினால், தம்மை ஓர் பண்டத்துள் வைப்பது இலர் - தமதுடம்பை ஒரு பொருளில் வைத்து மதிப்பதிலர்.

(க - து) உடம்பின் தூயதல்லாத தன்மையை நினைத்தால், அதனை இன்புறும் பற்றுள்ளம் நீங்கும்.

(வி - ம்) வெண்டலை - இடுகாட்டில் உருளுந் தசை நீங்கிய தலை. செம்மாத்தல் - இன்பத்தால் இறுமாந்திருத்தல். "மிகப்பட்டுச் செம்மாக்குங் கீழ்,"† என்றார் நாயனார். தம்மை யென்பது, இங்கே அவரதுடம்பை. ௧0

---

## ௬. துறவு

[உலகத்தின் நிலையாமை உணர்ந்து யான் எனது என்னும் இருவகைப் பற்றும் விட்டு மெய்யுணர்வில் ஒழுகுதல். உடம்பின் மேல் உள்ள பற்று யான் என்னும் அகப்பற்று, செல்வம் முதலியவற்றின்மேல் உள்ள பற்று எனது என்னும் புறப்பற்று. துறத்தல்-இவ் விருவகைப் பற்றுகளையும் விடுதல்.]

---

* தொல். கிளவி. ௧௯.   † குறள். ௧0௮: ௪.

51. விளக்குப் புகஇருள் மாய்ந்தாங் கொருவன்
தவத்தின்முன் நில்லாதாம் பாவம்—விளக்குநெய்
தேய்விடத்துச் சென்றிருள் பாய்ந்தாங்கு நல்வினை
தீர்விடத்து நிற்குமாம் தீது.

(பொ - ள்) *விளக்குப் புக இருள் மாய்ந்தாங்கு - ஓரிடத்தில் விளக்கொளி வர அங்கே இருந்த இருட்டு நீங்கினாற்போல, ஒருவன் தவத்தின்முன் நில்லாது பாவம்-ஒருவனது தவமுயற்சியின் முன் அவன் அதற்குமுன் செய்த தீவினை நில்லாது, விளக்கு நெய் தேய்விடத்து - விளக்கின் நெய் குறையுமிடத்தில், சென்று இருள் பாய்ந்தாங்கு - இருட்டு மீண்டும் போய்ப் பரவினாற்போல, நல்வினை தீர்விடத்து நிற்கும தீது - நல்வினை நீங்குமிடத்தில் தீவினை சென்று சூழ்ந்து நிற்கும்.*

(க - து) *இடைவிடாமல் தவஞ் செய்யவேண்டும்.*

(வி - ம்) *விளக்கென்பது தவம்; விளக்கெரிவதற்குக் காரணமான நெய்யென்பது, தவம் நிகழ்தற்குக் காரணமான நல்வினை என்று கொள்க. முன் நல்வினையினாலேயே தவம் நிகழுமென்பது, "தவத்தால் தவம் செய்யாதார்," * என்று முன் வந்தமையின் பெறப்படும். ஆம், இரண்டிடத்தும அசை. புக மாய்ந்தாங்கு எனவும் தேய்விடத்துப் பாய்ந்தாஙகு எனவும் வருதலால், தவம் இடைவிடாமற் செய்யப்படும் என்பது பெறப்பட்டது.* க

52. நிலையாமை நோய்மூப்புச் சாக்காடென் றெண்ணித்
தலையாயார் தங்கருமம் செய்வார்—தொலைவில்லாச்
சத்தமும் சோதிடமும் என்றாங் கிவைபிதற்றும்
பித்தரின் பேதையார் இல்.

(பொ - ள்) *நிலையாமை நோய் மூப்பு சாக்காடு என்று எண்ணி - நிலையாமையியல்பும் பல் பிணிகளும் மூப்புத் தன்மையும் இறப்புத் துன்பமும இவ்வுடம்புக்கு உள்ளன என்று நினைத்து, தலையாயார் - சிறந்தவர்கள், தம் கருமம் செய்வார் - தமது கடமையாகிய தவமுயற்சியைச் செய்வார்கள், தொலைவு இல்லா சத்தமும் சோதிடமும் என்*

---

* நாலடி. ௨ : க.

றுங்கு இவை பிதற்றும் பித்தரின் - கற்று முடிதலில்லாத இலக்கண நூலும் கோள் நூலும் என்று இவைபோல்வன கூவிக்கொண்டிருக்கும் பித்தரைவிட, பேதையார் இல் - அறிவிலாதவர் பிறர் இல்லை

(க - து) இலக்கணம் முதலிய கருவி நூல்களையே என்றுங் கற்றுக்கொண்டிராமல் நிலையாமை முதலியன உணர்ந்து உடனே தவஞ்செய்யவேண்டும்.

(வி - ம்) எண்ணும்மையும் 'உள்ளன' வென்னும் ஒரு சொல்லெச்சமும் வருவித்துக் கொள்க. முதலில் நிலையாமை கூறினமையின, நோய் மூப்புச் சாக்காடு என்பன அவற்றால் வருந் துன்பங்களை உணர்த்தி நின்றன. தவம் உயிர்க்குரிய முயற்சியாத லின், தம கருமம் எனப்பட்டது. "தவஞ் செய்வார் தங்கருமஞ் செய்வார்,"* என்னும் பெருநாவலர் திருமொழியும் இங்கு நினைவு கூரற்குரியது. நல்வினை செய்யாமல் தீவினை செய்வார் கடையான வரும், மறுபிறவியின் நற்பயன் கருதி நல்வினை செய்வார் இடை யானவரு மாகலின். பிறவியையே அஞ்சிப் பயன் கருதாது, தம் கடமை யென்று கடைப்பிடித்துத் தவஞ் செய்வார் தலையானவரானார். கற்கக் கற்கத் துணிவுபெறாமல் பல்வேறு ஐயங்களுடன் முடிவின் றிச் செல்லுதலின், 'தொலைவில்லாச சத்தமும் சோதிடமும்,' என் றார். 'கலகல கூஉந் துணையல்லால்,'† என்றலின் இலக்கணம் இங்கே 'சத்தம்' என்னுஞ் சொல்லாற் குறிக்கப்பட்டது; இலக் கண நூல் உணர்ச்சியே நலல கல்வித் திறமாதலாலும் அக் கருவிக் கல்வியைத் தக்கவாறு கற்றுக்கொண்டு உடனே மெய்யுணர்விற் செல்லுதல் வேண்டுமாதலாலும் 'சத்தம்' என்பதையும், நடப்பன நடக்குமென்று துணிந்து தவமுயலாமல் வாழ்நாள் நலங்களையே மேலுமேலும விரும்பிக் கோள் நூலையே அலசிக்கொண்டிருத்தல் நன்றாகாதாதலால் 'சோதிடம்' என்பதையுங் குறித்தார். 'என் றுங்கு இவை,' யென்பதற்கு 'என்று இவை போல்வன,' என் றுரைத்துக் கொள்க. பிதற்றல் - அறிவின்றி இடைவிடாமற் கூறிக்கொண்டிருத்தல். கற்றும் மெய்யுணர்விற் செல்லாமையின், கல்லாதாரினும் இவர் பேதையார் என்றற்கு, 'இவை பிதற்றும் பித் தரின் பேதையார் இல்' எனப்பட்டது. ௨

53. **இல்லம் இளமை எழில்வனப்பு மீக்கூற்றம்**
**செல்வம் வலியென் றிவையெல்லாம்—மெல்ல**
**நிலையாமை கண்டு நெடியார் துறப்பர்**
**தலையாயார் தாம்உய்யக் கொண்டு.**

---

* குறள். ௨௭ : ௬. † நாலடி. ௧௪ : ௧0.

(பொ - ள்) இல்லம் இளமை எழில் வனப்பு மீக்கூற்றம் செல்வம் வலி என்று இவையெல்லாம் - இல்வாழ்வு, இளமை, எழுச்சி, அழகு, உயர்சொல், பொருள், வலிமை என்று இப் பேறுகளெல்லாம், மெல்ல நிலையாமை கண்டு - மெல்ல மெல்ல நிலையாமற் போதலை அறிந்து, தலையாயார் - பெரியோர்கள், தாம உய்யக்கொண்டு - தாம் உய்யுங் கருத்துக்கொண்டு, நெடியார் துறப்பர் - காலம் நீட்டியாதவராய் உடனே இருவகைப் பற்றுந் துறப்பர்.

(க - து) நிலையாமை உணர்ந்து துறவுள்ளங் கொள்வோரே துன்பங்களினின்றும் பிழைப்பவர்.

(வி - ம்) எழில் இளமையின் கொழுந்து ; அஃதாவது அதன் வளர்ச்சி நிலையாகிய தோற்றப் பொலிவு ; வனப்பு - உறுப்புக்களின் திருந்திய அமைப்பு ; "சீயமன்னான் இளமையும் வனப்பும் எரும்,"* என்றார் பிறரும். மீக்கூற்றம் - மேம்பாடான சொல் ; என்றது, தன் சொல் உலகத்திற் செல்லுதலை. இல்லம் என்பதிற் போலக் கூற்றம் என்பதிலும் அம் சாரியை. வலி - துணைவலி முதலியன. ஒவ்வொன்றாக நிலையாமற் போதலின் 'மெல்ல நிலையாமை,' யென்றார். தலையாயார் நிலையாமை கண்டு தாம் உய்யக்கொண்டு நெடியாராய்த் துறப்பர் என்க. ௩

**54.** துன்பம் பலநாள் உழந்தும் ஒருநாளை
இன்பமே காமுறுவர்† ஏழையார்—இன்பம்
இடைதெரிந் தின்னாமை நோக்கி மனையா
றடைவொழிந்தார் ஆன்றமைந் தார்.

(பொ - ள்) ஏழையார் - அறிவிலார், துன்பம் பல நாள் உழந்தும் - பல நாட்கள் துன்பத்தால் வருந்தியும், ஒருநாளை இன்பமே - சிறிதுபோழ்து நுகரும் ஒருநாளைய இன்பத்தையே, காமுறுவர் - விரும்புவார் ; ஆன்று - கல்வி கேள்விகளால் நிறைந்து, அமைந்தார் - அதற்குத் தக்கபடி அடங்கி யொழுகும் பெரியோர், இன்பம் இடை தெரிந்து - இன்பம் அங்ஙனம் இடையே சிறிது உளதாதல் தெரிந்து, இன்னாமை நோக்கி - துன்பத்தின் மிகுதியை அறிந்து,

*சிந். எ : கசுடு.

மனை ஆறு - இல் வாழ்க்கையின் வழியில், அடைவு - சார்ந்து நிற்பதை, ஒழிந்தார் - நீங்கினார்.

(க - து) உலகத்திற் பல துன்பங்களினிடையிற் சிறிது இன்பமுண்டாதலின், அந்நிலை தெரிந்து தவம முயலுதல் வேண்டும்.

(வி - ம்) 'நுண்ணுணர்வின்மை வறுமை அஃதுடைமை செல்வம்,'* ஆதலின் இங்கே ஏழையார் என்றது அறிவில் வறுமையுடையாரை. மனையாறு அடைவொழிந்தார் என்றது, மேன் மேலும் இளமை துய்த்தலிற் பற்றுள்ளம் நீங்கினாரென்றற்கு. ௪

**55.** கொன்னே கழிந்தன் றிளமையும் இன்னே
பிணியொடு மூப்பும் வருமால்—துணிவொன்றி
என்னொடு சூழா தெழுநெஞ்சே போதியோ
நன்னெறி சேர நமக்கு.

(பொ - ள்) கொன்னே கழிந்தன்று இளமையும் - இளமைப் பருவமும் வீணே கழிந்தது, இன்னே பிணியொடு மூப்பும் வரும் - உடனே நோயோடு கிழத்தனமும் வரும், ஆல் - ஆதலால், துணிவு ஒன்றி என்னோடு சூழாது எழு நெஞ்சே - துணிதல் பொருந்தி என்னோடு ஆராயாமல் புலன்களின் வழியிற் செல்கின்ற நெஞ்சமே, போதியோ நல் நெறி சேர நமக்கு - நமக்கு நல்வழி உண்டாக நீ என்னுடன் வருகின்றனையா?

(க - து) புலன்வழிச் செல்லுதலைத் தவிர்த்து மனத்தை அறவழியிற் செலுத்துதல் வேண்டும்.

(வி - ம்) கழிந்தன்று - கழிந்தது; அன் - சாரியை. இன்னே உடனே என்னும் பொருட்டு. இது நெஞ்சத்தின் இயல்பு கூறித் திருத்தியபடியாம். ௫

**56.** மாண்ட குணத்தொடு மக்கட்பே றில்லெனினும்
பூண்டான் கழித்தற் கருமையால்—பூண்ட
மிடியென்னும் காரணத்தின் மேன்முறைக் கண்ணே
கடியென்றார் கற்றறிந் தார்.

---

*நாலடி. ௨௬ : ௧.

(பொ - ள்) மாண்ட குணத்தொடு மக்கட்பேறு இல் எனினும் - திருமணம் ஆனபின் மனைவிக்கு மாட்சிமைப் பட்ட குணத்தோடு குழந்தைப்பேறும் இல்லையென்றாலும், பூண்டான் கழித்தற்கு அருமையால் - கொண்ட கணவன் அவளை விட்டுவிடுவதற்கு அருமையாகுமாதலால், பூண்ட மிடி என்னும் காரணத்தின் - மேலும் தனக்கு உண்டாகும் வறுமை யென்னும் காரணமுங் கொண்டு, மேன்முறைக் கண்ணே - மேலான ஒழுக்க நெறியிலே, கடி என்றார் கற்றறிந்தார் - பற்றினை நீக்கு என்றனர் கற்றறிந்தோர்.

(க - து) இளமையிலேயே தவம் முயலுதல் நல்லது.

(வி - ம்) காரணத்தின் என்பதற்குக் காரணத்தினாலும் என இறந்தது தழீஇய எச்சவும்மை கொள்க. மேலான ஒழுக்க நெறி யென்றது, இங்கே தவநெறி. அந் நெறிக்கண் நிற்கும் ஆற்றலாலேயே பற்றினைக் கடியும் உள்ளம் தோன்றுதலின், 'மேன் முறைக் கண்ணே கடியென்றார,' எனப்பட்டது. "அப் பற்றைப் பற்றுக பற்று விடற்கு,"* என்பதனானும் இம்முறைமை பெறப்படும். ௬

57. ஊக்கித்தாம் கொண்ட விரதங்கள் உள்ளுடையத்
தாக்கருந் துன்பங்கள் தாந்தலை வந்தக்கால்
நீக்கி நிறூஉம் உரவோரே நல்லொழுக்கம்
காக்கும் திருவத் தவர்

(பொ - ள்) ஊக்கித் தாம்கொண்ட விரதங்கள் உள் உடைய - முயன்று தாம் மேற்கொண்ட நோன்புகள் உளளத்தில் தளர்வடையும்படி, தாக்க அருந் துன்பங்கள் தாம் தலைவந்தக்கால் - போக்குதற்கரிய துன்பங்கள் தம்மிடம் வந்தடைந்தால், நீக்கி நிறூஉம் உரவோரே - எப்படியானும் அத் துன்பங்களைப் போக்கித் தம் நோன்புகளை நிலை நிறுத்திக்கொள்ளும் வலியுடையோரே, நல்லொழுக்கம் காக்கும் திருவத்தவர் - துறவொழுக்கத்தினைக் காத்துக் கொள்ளும் பேறுடையவராவர்.

(க - து) இன்னல்களை எதிர்த்துத் தவம் முயலுதல் வேண்டும்.

---

* குறள். ௩௫ : ௧௦.

(வி - ம்) 'தாங்கரு' என்பது 'தாக்கரு' என வலித்ததெனினும் ஒக்கும். 'துன்பங்கடாம்' என்பதில் தாம் சாரியை. நிறாஉம் - நிறுத்தும்; உள்ள உரம் உடையோரே இடைவரும் இன்னல்களை நீக்கித் தம் நோன்புகளை நிலைநிறுத்துக் கொள்ளுதல் கூடுமாகலின், 'உரவோரே,' என்றார். ஏகாரம் பிரிநிலை. நல்லொழுக்கமென்றது, இங்கே துறவொழுக்கத்தை. திருவத்தவர் என்பதில், 'அத்து, அ' சாரியைகள். முற்றுகர ஈறு, வேற்றுமையில் அத்துச் சாரியை வகர உடம்படுமெய் பெற்றுப் புணர்ந்தமை, 'கிளந்தவல்ல'* என்னும் அதிகாரப் புறனடையாற் கொள்ளப்படும். எ

58. தம்மை யிகழ்ந்தமை தாம்பொறுப்ப தன்றிமற்
றெம்மை யிகழ்ந்த வினைப்பயத்தால்—உம்மை
எரிவாய் நிரயத்து வீழ்வர்கொல் என்று
பரிவதூஉம் சான்றோர் கடன்.

(பொ - ள்) தம்மை இகழ்ந்தமை தாம் பொறுப்பது அன்றி - காரணமின்றித் தம்மைப் பிறர் இகழ்ந்தமையைத் தாம் பொறுத்துக்கொள்வதல்லாமல், எம்மை இகழ்ந்த வினைப் பயத்தால் - எம் போல்வாரை இங்ஙனம் இகழ்ந்த தீவினையின் பயனால், உம்மை - மறுமையில், எரிவாய் நிரயத்து வீழ்வர்கொல் என்று - ஒருகால் அழலிடமான நரகத்தில் அவர் வீழ்வரோ என்று, பரிவதும் சான்றோர் கடன் - இரங்குவதும் தவம் நிறைந்தவரது கடமையாகும்.

(க - து) தவமுயற்சியில் நிற்பவர், தம்மை இகழ்பவர்பால் பொறுமையும் இரக்கமுங் கொள்ளவேண்டும்.

(வி - ம்) மற்று - வினைமாற்றுப் பொருளது. எம்மை - தன்மைப் பன்மை; தனித்துத் தம்மை நினையாராகலின் பிறரையும் உட்கொண்டே 'எம்மை' யெனக் கூறுவரெனக் கொள்க. நல்லோர்பாற் பிழை செய்தமையின் அவரிரக்கத்தால் ஒருகால் உய்தலும் கூடுமாதலின், 'வீழ்வர்கொல்' என்பதிற்'கொல்' ஏன்பதை ஐயப்பொருட்டாகவே கொள்ளுதலில் இழுக்கில்லை. சான்றோர் பரிவையும் அது மிகுதிப்படுத்தும். சான்றோர் அவர்பாற் பரிவுகொள்ளாவிட்டால், அவருள்ளம் ஒருகால் அப் பிழைசெய்தோருக்குக் கேடு நினைந்து தன்னையே மாசுபடுத்திக் கொள்ளவும் கூடுமாதலாலும், தவத்தோர் நல்லதுநினைத்தால், அவர் ஆற்றலுடையோராதலின், பிழை செய்தவர் திருந்தவுங் கூடுமாதலாலும் அங்ஙனம் பரிவதனைக் 'கடன்' என்றார்.

* தொல். குற்றிய. எஅ.

59. மெய்வாய்கண் மூக்குச் செவியெனப் பேர்பெற்ற
ஐவாய வேட்கை அவாவினைக்—கைவாய்
கலங்காமற் காத்துய்க்கும் ஆற்ற லுடையான்
விலங்காது வீடு பெறும்.

(பொ - ள்) மெய் வாய் கண் மூக்கு செவி எனப் பேர் பெற்ற—, ஐ வாய வேட்கை அவாவினை-ஐந்து வழிகளாகச் செல்லுதலையுடைய பற்றுள்ளத்தால் உண்டாகும் அவாவை, கலங்காமல் காத்து - தீயவழிகளில் நிலைமாறிச் செல்லாமல் பாதுகாத்து, கைவாய் உய்க்கும் ஆற்றலுடையான் - ஒழுக்க நெறியிற் செலுத்தும் வல்லமையுடையவனே, விலங்காது வீடு பெறும் - தவறாமல் வீடு பேறடைவான்.

(க - து) ஐம்புல விருப்பங்களை ஒழுக்கநெறியிற் செலுத்தி உய்தல் வேண்டும்.

(வி - ம்) பேர், பெயர் என்பதன் மரூஉ. வேட்கை - பற்றுள்ளம்; அவா - அதனாலுண்டாகும் விருப்பம். நச்சினார்க்கினியர் கருத்தும் இது* கை - ஒழுக்கம்; கைவாய் உய்க்கும் எனக் கூட்டிக் கொள்க. 'கலங்காமற் காத்து' என்பது இடைப்பிறவரலாதலின் 'கைவாய்க் கலங்காம'லென ஒற்று மிகாது இயல்பாயிற்று. விடுதலை, பற்றுக்களினின்றும் விடுதலை. புலனடக்கம் என்பது, அதனை நல்வழியிற் செலுத்தலே என்று இதன்கண் அறிவுறுக்கப்பட்டமை கருத்திருத்துதற்குரியது; "ஐந்தும் அடக்கா அறிவறிந்தேனே,"† என்றார் பிறரும். க

60. துன்பமே மீதூரக் கண்டும் துறவுள்ளார்
இன்பமே காமுறுவர் ஏழையார்—இன்பம்
இசைதொறும் மற்றதன் இன்னுமை நோக்கிப்
பசைதல் பரியாதாம் மேல்.

(பொ - ள்) துன்பமே மீதூரக் கண்டும் - வாழ்க்கையில் துன்பமே மேலுமேலும் மிகுந்து வருதல் உணர்ந்தும், துறவு உள்ளார் - பற்றில்லாமலிருத்தலை நினையாராய், இன்

* தொல். உயிர்மயங். அகூ.
† திருமந். ஐந்திந்திரியம் அடக்குமுறைமை, ௩.

பமே காமுறுவர் ஏழையார்-இடையே தினையளவாக உண்டாகும் இன்பமே விரும்பி நிற்பார் மனவலிமையில்லாதார், இன்பம் இசைதொறும் - ஆனால் அச் சிற்றின்பம் கிடைக்கும்போதெல்லாம், அதன் இன்னாமை நோக்கி - அதனால் உண்டாகும் பெருந்துன்பங் கருதி, பசைதல் பரியாதாம் மேல் - அதனை விரும்புதலை மேற்கொள்ளார் மேலோர்.

(க - து) வாழ்க்கையிற் சிறிய இன்பத்துக்காகப் பெருந்துன்பம் உண்டாதலின், அச் சிற்றின்பத்திற் பற்று வைக்கலாகாது.

(வி - ம்) ஏகாரங்கள் பிரிநிலை. உள்ளவலியில்லாதவராதலின் இரக்கந் தோன்ற 'ஏழையார்,' என்றார். இசைதல்-வந்து பொருந்துதல்; கிடைத்தல். மற்று - அசை; பரிதல், "காய் பரீஇ" * என்புழிப்போலக் கொள்ளுதற் பொருளில் வந்தது. ௬0

---

## எ. சினமின்மை

என்றது, குற்றம் ஒருவனிடத்து உண்டானபோதும் சினமில்லாமையை உணர்த்துவது.

**61.** மதித்திறப் பாரும் இறக்க மதியா
மிதித்திறப் பாரும் இறக்க—மிதித்தேறி
ஈயுந் தலைமேல் இருத்தலால் அஃதறிவார்
காயும் கதமின்மை நன்று.

(பொ - ள்) மதித்து இறப்பாரும் இறக்க - தம்மைப் பொருள்செய்து நடப்பாரும் நடக்கட்டும்; மதியா மிதித்து இறப்பாரும் இறக்க - அங்ஙனம் மதியாமல் கீழ்ப்படுத்தி நடப்பாரும் நடக்கட்டும், மிதித்து ஏறி ஈயும் தலைமேல் இருத்தலால் - ஈயும் மிதித்து ஏறித் தலைமேல் இருத்தலினால், அஃது அறிவார் - அந் நிலைமையைத் தெரிந்து சிந்திக்குஞ் சான்றோர், காயும் கதம் இன்மை நன்று - எரிந்து விழுஞ் சினமிலராயிருப்பது நல்லது.

* சிந். கனக. ௬0.

(க - து) பிறர் மதித்தாலும் மதியாவிட்டாலும் சான்றோர் சினம் கொள்ளலாகாது.

(வி - ம்) இறத்தல் இங்கே ஒழுகுதல் என்னும் பொருட்டு மதியா, ஈறு கெட்டு நின்றது. உம்மைகள், எச்சம். தாழ்ந்த தொன்று கூறும்பொருட்டு ஈயைக் கூறினர். "ஈச்சிறகு அன்ன தோர் தோல் அறினும்,"* என முன்னும் வந்தது. கதம் இன்மை கதம் உடையராகாமை. க

**62.** தண்டாச் சிறப்பின்தம் இன்னுயிரைத் தாங்காது
கண்டுழி யெல்லாம் துறப்பவோ—மண்டி
அடிபெயரா தாற்ற இளிவந்த போழ்தின்
முடிகிற்கும் உள்ளத் தவர்.

(பொ - ள்) மண்டி அடிபெயராது ஆற்ற இளிவந்த போழ்தின் - அடர்ந்து அடிதவறாமல் அடுக்கி மிக்க இழிவு நேர்ந்த காலங்களில், முடிகிற்கும் உள்ளத்தவர் - தாம் மேற்கொண்ட காரியங்களை முடிக்கும் ஊக்கமுடைய நல்லோர், தண்டாச் சிறப்பின் தம் இன் உயிரை - அழியாச் சிறப்பினையுடைய தமது இனிய உயிரை, தாங்காது கண்டுழியெல்லாம் துறப்பவோ - சிறிதே இடர் கண்ட நேரங்களிலெல்லாம் பொறுத்துத் தாங்கிக்கொண்டிராமல், சினந்து விட்டுவிடுவார்களோ ?

(க - து) இடர்கள் கண்டு சினத்தால் உயிரை விடுதல் ஆகாது.

(வி - ம்) கண்டதற்கெல்லாம் உயிரை இழக்குமளவுக்குச் சினம் மிகுவாரை நோக்கிற்று இச் செய்யுள். வீடுபேறடையும் அழியாத பேரின்பச் சிறப்புக்குரிய இனிய உயிராதலின் 'தண்டாச் சிறப்பின் இன் உயிர்,' எனப்பட்டது. ஓ-வினா. அடிபெயராதென்றதனால், அடுக்கி வருதல் உணர்த்தினர். முடிகிற்கும் என்பதிற்'கில்' ஆற்றலுணர்த்துவதோர் இடைநிலையாகலின், இடத்துக்கேற்ப அது பயன்படுத்தப்பட்டது. தெளிவு பெறுதற்குத் தோன்றிய பிறவியை அந் நோக்கத்துக்கு மாறாக வீணே இழந்து விடுதலாகாமையின், இச் செய்யுள் அந் நோக்கத்தையும் எடுத்துக் காட்டி அவ்வுள்ளத்தவர் துறப்பரோ என அறிவுறுத்திற்று. உ

---

*நாலடி. ௫: க.

63. காவா தொருவன்தன் வாய்திறந்து சொல்லுஞ்சொல்
ஓவாதே தன்னைச் சுடுதலால்—ஓவாதே
ஆய்ந்தமைந்த கேள்வி அறிவுடையார் எஞ்ஞான்றும்
காய்ந்தமைந்த சொல்லார் கறுத்து.

(பொ - ள்) காவாது ஒருவன் தன் வாய் திறந்து சொல்லும் சொல் - அடக்காமல் சினத்தினால் ஒருவன் தன் வாய்விட்டுச் சொல்லிய சினச்சொல், ஓவாதே தன்னைச் சுடுதலால்-என்றைக்குமே தன்னை வருத்துதலால், ஓவாதே ஆய்ந்து அமைந்த கேள்வி அறிவுடையார் - இடைவிடாமல் ஆராய்ந்து பண்பட்ட கேள்வி ஞானத்தையுடையவர்கள், எஞ்ஞான்றும் - எப்பொழுதும், காய்ந்து அமைந்த சொல்லார் கறுத்து - மனம் வெதும்புதலால் அமைந்த சுடுமொழிகளைச் சினந்து சொல்லமாட்டார்கள்.

(க - து) சினப்பது தன்னையே சுடுமாதலால், பண்பட்ட உள்ளமுடையோர் சினங் கொள்ளார்.

(வி - ம்) உள்ளடங்காது வெளிவருதல் தோன்ற 'வாய் திறந்து' எனப்பட்டது. ஏகாரங்கள் இரண்டனுள் முன்னது தேற்றம்; மற்றது அசை. வருத்துதலின் மிகுதி தோன்றச் 'சுடும்' என்றார். 'ஆய்ந்தமைந்த' என்பது கேள்விக்கு அடைமொழி. ஓவாதே உடையார் எனக் கொள்க. ஆய்தல் - நூலான் வந்த அறிவைத் தம் பழக்கத்தால் உணர்ந்து முடிவு செய்தல். அமைதல் - அம் முடிவின் வழிப் பண்படுதல். 'காய்ந்தமைந்த' என்னுமிடத்துக் 'காய்ந்து' காரணப்பொருட்டும், 'அமைந்த' அமைந்த சொற்கள் என்னும் பொருட்டுமாம். 'கறுத்தல்' உரிச்சொல் அடியாகப் பிறந்த சொல்.* சினமில்லாமலிருத்தற்குப் பண்பட்ட கேள்வி ஞானம் இன்றியமையாததென்னும் உண்மையும் இச் செய்யுட்கண் அறிவுறுத்தப்பட்டமை கண்டுகொள்க. ௩

64. நேர்த்து நிகரல்லார் நீரல்ல சொல்லியக்கால்
வேர்த்து வெகுளார் விழுமியோர்—ஓர்த்ததனை
உள்ளத்தான் உள்ளி உரைத்துராய் ஊர்கேட்பத்
துள்ளித்தூண் முட்டுமாம் கீழ்.

* தொல். உரி. எசு.

(பொ - ள்) நேர்த்து நிகரல்லார் - சமானமில்லாதவர்கள் தம்மைச் சமானமாகக் கருதிக்கொண்டு, நீரல்ல சொல்லியக்கால் - தகைமையல்லாத சொற்களைச் சொன்னால், வேர்த்து வெகுளார் விழுமியோர் - சிறந்தவர்கள் மனம் புழுங்கிச் சினந்துகொள்ளமாட்டார்கள்; ஆனால்; கீழ் - கீழ்மக்கள், ஓர்த்து அதனை உள்ளத்தான் உள்ளி - ஆராய்ந்து அத்தகைமையற்ற சொல்லை மனத்தாற் பலகாலும் நினைத்து, உரைத்து உராய் ஊர் கேட்ப - ஊரிலுள்ளவர்கள் கேட்கும்படி அங்கங்கும் சொல்லித் திரிந்து, துள்ளித் தூண் முட்டும் - அதனால் மேன்மேலும் பெருகுங் கோபத்தினால் உடம்பு துடித்து அருகிலிருக்குந் தூணில் மோதிக்கொள்வார்கள்.

(க - து) தகுதியல்லாதவர்கள் சொல்லும் சொற்களுக்குச் சான்றோர் சினந்துகொள்ளமாட்டார்கள்.

(வி - ம்) 'நிகரல்லார் சொல்லியக்கால் வெகுளா'ரெனவே, நிகருள்ளோரும் மிக்கோரும் தக்கவை சொல்லின் அவற்றின் வழி விரும்பித் திருந்துவர் என்பது அருத்தாபத்தியான் பெறப்படும். வேர்த்து வெகுளா ரென்றதனோடு அச் சொல்லை அறிவான் ஓரார்; உள்ளத்தான் உள்ளார்; பிறர்பாற் சென்று கூறார்; இழிதகைமையாகத் துள்ளி முட்டிக்கொள்ளார் ' என்பனவும் ஏனையோர் செயலாகக் கூறியவற்றினின்று எதிர்முகமாகக் கூட்டிக்கொள்க. ஓர்த்தல், அறிவினால் அதன் தகைமையின்மையை ஆராய்ந்து பகைமைகொள்ளுதல்; பின்பு உள்ளல் என்றது, அப்பகைமையை மேலுமேலும் நினைந்து நெடுங்காலம் உள்ளத்து நிகழச் செய்தல். "இகலொடு செற்றம்,"* என்பதன் உரை இங்கு நினைவுகூரற்பாலது. உராய் - உலாவி; திரிந்தென்னும் பொருட்டு. சினத்தை அடக்கமாட்டாத எளிமை மிகவுந் தோன்றத் 'துள்ளித் தூண் முட்டுமாங் கீழ்,' என்றார். ஆம், அசை. ௪

65. இளையான் அடக்கம் அடக்கம் கிளைபொருள்
இல்லான் கொடையே கொடைப்பயன்—எல்லாம்
ஒறுக்கும் மதுகை உரனுடை யாளன்
பொறுக்கும் பொறையே பொறை.

* முருகு, கங௧ - உ.

(பொ - ள்) இளையான் அடக்கம் அடக்கம்-இளமைப் பருவமுடையவனது புலனடக்கமே அடக்க மெனப்படும். கிளைபொருளில்லான் கொடையே கொடைப்பயன் - கிளைக்கும் பொருளில்லாதவனது ஈகையே பயனெனப்படும் ஈகையாம். (அவைபோல) எல்லாம ஒறுக்கும் மதுகை உரனுடையாளன் பொறுக்கும் பொறையே பொறை - எதனையும் அழிக்க வல்ல வலிமை யறிவினையுடையோன் பொறுத்துச சினம் ஆறும பொறுமையே பொறுமை யெனப்படும்.

(க - து) தமது சினம் செல்லக்கூடிய இடங்களிற் பொறுத்துக் கொள்ளுதலே சிறந்த பொறுமையாகும்.

(வி - ம்) அடக்கம் என்னுமிடத்தும் பிரிநிலை ஏகாரம கூட்டுக. கிளைக்கும் பொருளென்றது பலமுகமாக மேன்மேற் பெருகுஞ் செல்வத்தை. பொருளாலாம் பயன் கொடையாதலின், கொடைப் பயன் எனப்பட்டது. எல்லாம் என்றது, எத்தகையதனையும் என்னும் பொருட்டு. ஒறுத்தல் இங்கு அழித்தல். 'எல்லாம் ஒறுக்கும்,' என்ற குறிப்பால், உரனுடையாளன் என்றது, தவமுடையானை. வலிமை மிக்க அறிவு தவ அறிவேயாதலின், மதுகை யுரமெனச் சிறப்பிக்கப்பட்டது. அதிகாரம் நோக்கி, முன்னிரண்டு கருத்துக்களை ஏனையதற்கு உவமமாகக் கொள்க. இங்கே காட்டிய அடக்கம் முதலியனவே உள்ள மாட்சிமைக்காவனவென உரைத்தபடி. ரு

**66.** கல்லெறிந் தன்ன கயவர்வாய் இன்னுச்சொல்
எல்லாருங் காணப் பொறுத்துய்ப்பர்—ஒல்லை
இடுநீற்ருல் பைஅவிந்த நாகம்போல் தத்தம்
குடிமையான் வாதிக்கப் பட்டு.

(பொ - ள்) ஒல்லை இடு நீற்ருல் பை அவிந்த நாகம் போல் - மந்திரித்து இட்ட திருநீற்ருல் உடனே படம் சுருங்கிச் சினம் ஒடுங்கிய நல்ல பாம்பைப் போல, தத்தம் குடிமையான் வாதிக்கப்பட்டு - தங்கள் உயர்குல ஒழுக்கத்தால் தடைசெய்யப்பட்டு, கல் எறிந்தன்ன கயவர் வாய் இன்னுச் சொல் - கற்களை வீசினுற்போன்ற கீழ்மக்கள் வாயிற் ருேன்றிய துன்பச் சொற்களை, எல்லாரும் காணப்

பொறுத்து உய்ப்பர் - அனைவரும் அறியப் பெரியோர் பொறுத்துக்கொண்டு தமது மேற்கோளை நடத்திச்செல்வர்.

(க - து) தமது உயர்நிலை கருதிச் சான்றோர், கீழ் மக்கள் சொற்களைப் பொறுத்துக்கொள்ள வேண்டும்.

(வி - ம்) 'எறிந்தன்ன இன்னாச்சொல்,' என்க. 'கயவர்,' என்பதற்குக் "குணங்கள் யாவும் இலராய கீழோர்," * என்று உரைகூறுவார் பரிமேலழகர். பொறுப்பதினும், பலரெதிரிற் பொறுத்துக்கொள்வது அரிய தொன்றாதலின், 'எல்லாருங் காணப் பொறுப்பர்,' என்றார். ஒல்லை - உடனே. பை - படம்; அவிந்த - அவிந்து ஒடுங்கிய. தத்தம் என்னும் அடுக்குப் பன்மை. உயர்குலம் என்றது, நல்லோர் கூட்டம்; அவரிணக்கத்தால் உண்டாகும் பெருந்தன்மையான ஒழுக்கமே உயர்குல வொழுக்கம் எனப்பட்டது; குடிமை யென்றது அது; அஃதாவது, பெருந்தன்மை. கயவர் என வந்தமையின், பொறுத்துய்ப்பவர் பெரியோர் எனப் பட்டது. மேற்கோளை என்றது, தம் நற்கொள்கைகளை. 'கல் லெறிந்தன்ன,' என்றமையால் இன்னாச் சொல்லால் உண்டாகுஞ் சுறுக்கென்ற துன்பமும், 'பையவிந்த நாகம்,' என்றமையாற் சீற்றந் தணிதலும் பெறப்படும். சு

67. மாற்றாராய் நின்றுதம் மாறேற்பார்க் கேலாமை
ஆற்றாமை என்னார் அறிவுடையார்—ஆற்றாமை
நேர்த்தின்னா மற்றவர் செய்தக்கால் தாம்அவரைப்
பேர்த்தின்னா செய்யாமை நன்று.

(பொ - ள்) மாற்றாராய் நின்று தம் மாறு ஏற்பார்க்கு - தமக்குப் பகைவராயிருந்து அப் பகைமையைப் பாராட்டு கின்றவர் பொருட்டு, ஏலாமை ஆற்றாமை என்னார் அறி வுடையோர் - தாமும் அப் பகைமையைப் பெரியோர்கள் மேற்கொள்ளாமையை அறிவுடையோர் மாட்டாத தன்மை என்று சொல்லி இகழமாட்டார்கள்; ஆற்றாமை நேர்த்து இன்னா மற்று அவர் செய்தக்கால்-தம்முடைய தீய தன்மை களை அடக்கிக்கொள்ளமாட்டாமல் எதிர்த்து அப் பகைவர் துன்பங்கள் செய்தால், தாம் அவரைப் பேர்த்து இன்னா செய்யாமை நன்று - தாம் அவர்களுக்குத் திருப்பித் துன்பங்கள் செய்யாமை நல்லது.

* குறள், க0அ-ம் அதி. விளக்கம்.

(க - து) தமக்குத் துன்பஞ் செய்தவர்களுக்குத் தாமுந் துன்பஞ் செய்வது ஆற்றலன்று; துன்பஞ் செய் யாமையே ஆற்றலாவது.

(வி - ம்) அவனை என்றது உருபு மயக்கம்.* நான்கனுருபு, பொருட்டு. 'ஏலாமை ஆற்றாமையன்று; மாறு ஏற்றலே ஆற்றாமை,' என்பது தோன்ற, ஈரிடத்தும் 'ஆற்றாமை' யென்னுஞ் சொல் வந்தது. இன்னா - இனிமையல்லாமை. மற்று - அசை. முன் னிரண்டடிகள் மனத்தளவாய் மாறுகொள்ளலும் பின்னிரண்டடிகள் அப் பகைமையைச் செயலிற் காட்டுதலுமாக விளக்கப்பட்டன. ௭

**68.** நெடுங்காலம் ஓடினும் நீசர் வெகுளி
கெடுங்காலம் இன்றிப் பரக்கும்—அடுங்காலை
நீர்கொண்ட வெப்பம்போல் தானே தணியுமே
சீர்கொண்ட சான்றோர் சினம்.

(பொ - ள்) நெடுங் காலம் ஓடினும் - நீண்ட காலம் சென்றாலும், நீசர் வெகுளி - கீழ்மக்கள் கோபம், கெடுங் காலம் இன்றிப் பரக்கும் - தணியுங்காலம் இல்லாமலே பெருகிக்கொண்டு போகும். ஆனால், அடுங் காலை நீர் கொண்ட வெப்பம்போல் - காய்ச்சுங் காலத்தில் தண்ணீர் அடைந்த வெப்பத்தைப்போல, தானே தணியும் சீர் கொண்ட சான்றோர் சினம் - பெருமை மிக்க சான்றோரது கோபம் தானே தணிந்துவிடும்.

(க - து) கோபம் விரைவில் தணிந்துவிடவேண்டும்.

(வி - ம்) கெடுங்காலம் - கோபம் தணிகின்ற காலம். இயல் பாகத் தண்மையாயிருக்கும் நீர், காய்ச்சும்போது சூடேறிப் பின்பு தானே தணிந்து முன்போல் தண்ணீராய்விடுகின்றது: அது போலச் சான்றோரும இயல்பாகவே குளிர்ந்த மனமுடையவரா யிருப்பர்; பிறர் துன்புறுத்தும்போது மனவருத்தத்தால் சினம் எழுந்தாலும், விரைவில் அது தானே தணிந்துவிடும். அவரும் முன்போற் குளிர்ச்சியுடையவராகவே யிருப்பர்; ஆற்றலுள்ள வர்க்குச் சினம் எழுவது இயல்பு; அவ்வாற்றலோடு சான்றாண்மை யும் உள்ளவரானால் அவர் அதனைப் பரக்கவிடாமல் தணித்துக் கொள்வர். காய்ச்சும் வரையில் நீர் வெப்பமாயிருந்து பின் தணிந்துவிடுவதுபோலப் பிறர் துன்புறுத்தும் வரையில், சான்றோ

* தொல். வேற்றுமைமயங். உரு.

ருள்ளம் கொதிப்பாயிருந்தாலும் பின் அறவே தணிந்துவிடும்; இது, 'நீர் கொண்ட வெப்பம்,' என்னும் உவமையாற் பெறப் படும். 'தானே தணியும்,' என்றமையால், துன்பஞ் செய்த வர்களைத் திரும்ப ஒறுப்பதில்லாமல் தானே தணிந்துவிடும் என்பது கொள்ளப்படும். அ

**69.** உபகாரம் செய்ததனை ஓராதே தங்கண்
அபகாரம் ஆற்றச் செயினும்—உபகாரம்
தாம்செய்வ தல்லால் தவற்றினல் தீங்கூக்கல்
வான்தோய் குடிப்பிறந் தார்க் கில்.

(பொ - ள்) உபகாரம் செய்ததனை ஒராது - தாம் முன்பு உதவி செய்ததை நினையாமல், தங்கண் அபகாரம் ஆற்றச் செயினும்-பிறர் தம்மிடம் தீமைகளை மிகுதியாகச் செய்தாலும், உபகாரம் தாம் செய்வதல்லாமல் - அவருக்குத் தாம் திரும்பவும் உதவிசெய்வதல்லாமல், தவற்றினல் தீங்கு ஊக்கல் - அவர் குற்றங் காரணமாக அவருக்குத் தீங்கு செய்ய முயலுதல், வான் தோய் குடிப்பிறந்தார்க்கு இல் - உயர்குலத்தில் தோன்றிய மேலோர்களுக்கு இல்லை.

(க - து) தாம் நன்மைசெய்தும தமக்குத் தீமை செய்வோர்க்கு மேலுமேலும நன்மை செய்வதல்லாமல், தீங்கு செய்ய முயலார் சான்றோர்.

(வி - ம்) பிறர்பால் உண்டாகும் தீய வினைவை அவருக்கு நன்மை செய்து செய்தே மாற்றுதல் இயலும் என்பதனுலும், தமக்கும் அம் மனப்பான்மை மேன்மேலும் ஞான விளக்கத்துக்கு இடஞ் செய்யுமென்பதனுலும இஙஙனங கூறப்பட்டது. உயர்வை நன்கு புலப்படுத்தும் பொருட்டு, 'வான் தோய் குடி,' என்றார்; "வானுயர் தோற்றம்," * என்புழிப் போல. இதனை 'இலக்கணை' என்ப. க

**70.** கூர்த்துநாய் கௌவிக் கொளக்கண்டும் தம்வாயால்
† பேர்த்துநாய் கௌவினர் ஈங்கில்லை—நீர்த்தன்றிக்
கீழ்மக்கள் கீழாய சொல்லியக்கால் சொல்பவோ
மேன்மக்கள் தம்வாயால் மீட்டு.

* குறள். உ௮ : உ. † பழமொ. ௬௧.

(பொ - ள்) கூர்த்து நாய் கௌவிக் கொளக் கண்டும் - சினம் மிகுந்து நாய் தமதுடம்பை வாயினால் கடித்துத் தசையைப் பிடுங்குதலைப் பார்த்தும், தம் வாயால் பேர்த்து நாய் கௌவினார் ஈங்கு இல்லை - அதற்கு எதிராகத் தமது வாயினால் திருப்பி நாயைக் கடித்தவர் இவ்வுலகத்தில் இல்லை ; அதுபோல ; நீர்த்து அன்றிக் கீழ்மக்கள் கீழாய சொல்லியக்கால் - தகுதியான சொல் அல்லாமல் கீழ்மக்கள் தாழ்வான சொற்களைச் சொன்னால், சொல்பவோ மேன்மக்கள் தம் வாயால் மீட்டு - மேன்மக்கள் தம் வாயினால் திருப்பி அத் தாழ்வான சொற்களையே சொல்வார்களோ?

(க - து) கீழ்மக்களுக்கு எதிராக மேன்மக்கள் ஒருகாலும் தாழ்வான சொற்களைத் திருப்பிச் சொல்லமாட்டார்கள்.

(வி - ம்) திரும்ப வாயாற் கடிப்பது இல்லாமைபோலத் திரும்பித் தாழ்வான சொற்களாற் பேசமாட்டாரென்பது ஒப்புமை. கூர்த்து - மிகுத்து ; சினத்தை மிகுத்து ; நீர்த்து - நீர்மையுடையது, தகுதியான சொல் சுருக்கமாகவும் தாழ்வான சொல் பலவாகவும் வருதலின் 'நீர்த்து' என ஒருமையாகவும், 'கீழாய' எனப் பன்மையாகவும் சுட்டப்பட்டன. "எதிர்மறை யெச்சம் எதிர்மறை முடிபின"* வாதலின், சொல்பவோ வென விறுத்தினா ; சொல்லார் என எதிர்மறை முடிபு உரைத்துக்கொள்க. ௭0

---

## அ. பொறையுடைமை

[பிறர் தமக்குக் காரணத்தினாலாவது அறியாமையினாலாவது குற்றஞ்செய்தால் தாமும் அவர்க்குக் குற்றஞ் செய்யாமற் பொறுமையுடையராயிருத்தல்.]

**71.** **கோதை யருவிக் குளிர்வரை நன்னாட**
**பேதையோ டியாதும் உரையற்க—பேதை**
**உரைப்பிற் சிதைந்துரைக்கும் ஒல்லும் வகையான்**
**வழுக்கிக் கழிதலே நன்று.**

---

* தொல். எச். ௬௬.

(பொ - ள்) கோதை அருவிக் குளிர்வரை நல் நாட - மாலைபோல ஒழுகுகின்ற அருவிகளையுடைய குளிர்ச்சி பொருந்திய நல்ல மலைகளையுடைய நாடனே, பேதையோடு யாதும் உரையற்க - அறிவில்லாதவனோடு ஏதொன்றும் பேசவேண்டாம். உரைப்பின் பேதை சிதைந்து உரைக்கும் - பேசினால் அப் பேதை முறைமை தவறி எதிர் பேசுவான்; ஒல்லும் வகையான் வழுக்கிக் கழிதலே நன்று - கூடுமான வழிகளால் அவன் தொடர்பிலிருந்து தப்பி நீங்குதலே நல்லது.

(க - து) தகுதியறியாதவரோடு பேசுதல் நல்லதன்று.

(வி - ம்) யாதும் என்றார், நன்மையாவதொன்றும் என்றற்கு. பேதை சிதைந்துரைக்கும் என்று தொடர்க. சிதைதல் - இங்கு முறையினின்றுந் தவறுதல். பதமாகத் தப்பித்துக் கொள்ளுதல் என்றற்கு, 'வழுக்கி' எனப்பட்டது; "கல்லாதவரிடைக் கட்டுரையின் மிக்கதோர் பொல்லாததில்லை" † என்றார் பிறரும். க

72. நேரல்லார் நீரல்ல சொல்லியக்கால் மற்றது
தாரித் திருத்தல் தகுதிமற்—றோரும்
புகழ்மையாக் கொள்ளாது பொங்குநீர் ஞாலம்
சமழ்மையாக் கொண்டு விடும்.

(பொ - ள்) நேர்அல்லார் நீர்அல்ல சொல்லியக்கால் - தமக்குச் சமானமல்லாதவர் குணமல்லாதனவான சொற்களைச் சொன்னால், அது தாரித்து இருத்தல் தகுதி - சான்றோர் அதனைப் பொறுத்திருத்தல் தகுதியாகும். மற்று - அங்ஙனம் பொறுத்திராமையை, ஒரும் புகழ்மையாகக் கொள்ளாது - கருதத் தகுந்த புகழ்க்குரிய குணமாகக் கொள்ளாமல், பொங்குநீர் ஞாலம் - கடல் சூழ்ந்த இவ்வுலகம், சமழ்மையாக் கொண்டுவிடும் - பழிப்புக்குரிய இழிகுணமாகக் கருதிவிடும்.

(க - து) தமக்குச் சமானமல்லாதவர்கள் தம்மை ஒன்று சொன்னால் அதனைப் பொறுத்துக் கொள்ள வேண்டும்.

† பழமொ. கஙி.

(வி - ம்) நேரல்லாரென்றது கீழோரை. மற்று இரண்டனுள் முன்னது அசை; பின்னது பிறிதென்னும் பொருட்டு. ஒரும், அசை ; "அஞ்சுவதோரும் அறனே,"* என்புழிப் போல. தரித்து என்பது முதல் நீண்டது. இருத்தல் - மேன்மேலுந் தனதொழுக் கத்திலேயே நிலைத்திருத்தல். 'ஞாலம்,' என்றது உயர்ந்தோரை. கொண்டுவிடும் என்னும் முடிபு ஞாலம் என்னும் சொன்னிலை கருதியது. சமழ்மை என்றது இழிவு ; "கள்வன் சமழ்ப்புமுகங் காண்மின்" † என்னும் பரிபாட்டினும் இப்பொருளுண்மை பெறப்படும். உ

73. காதலாற் சொல்லுங் கடுஞ்சொல் உவந்துரைக்கும்
ஏதிலார் இன்சொலின் தீதாமோ—போதெலாம்
மாதர்வண்டு ஆர்க்கும் மலிகடல் தண்சேர்ப்ப !
ஆவ தறிவார்ப் பெறின்.

(பொ - ள்) போது எலாம் மாதர் வண்டு ஆர்க்கும் மலி கடல் தண்சேர்ப்ப - பேரரும்புகளிலெல்லாம் விருப் பத்தையுடைய வண்டுகள் ஆரவாரிக்கும் வளம் நிறைந்த கடலையுடைய குளிர்ச்சி பொருந்திய கடற்கரைத் தலைவ ! ஆவது அறிவார்ப் பெறின் - தமக்கு முன்னேற்றமாவதை அறிந்துசெய்வாரைப் பெற்றால், காதலால் சொல்லும் கடு சொல் - அவர்கள் உள்ளன்பினால் நன்மை கருதிச் சொல் லும் கொடிய சொல், உவந்து உரைக்கும் ஏதிலார் இன் சொலின் தீது ஆமோ - மனமகிழ்ந்து கூறும் அயலவர் இன்சொல்லினுந் தீதாகுமோ? ஆகாது.

(க - து) அன்புடையார் கூறுங் கடுஞ்சொல் அயல வர் கூறும் இன்சொல்லினும் நல்லதாகலின், அதன்மேற் பொறுமை கொள்ளவேண்டும்.

(வி - ம்) 'கடுஞ் சொல்' லென்றது இங்கே செவிக்கினிமை யல்லாத சொல். உவத்தல் அகமகிழ்ச்சியாதலின், 'மனமகிழ்ந்,' தென உரைக்கப்பட்டது. ஏதிலார் - அன்பும் பகைமையுமில்லாத அயலவர். எதுவுமில்லாதவரென்பது பொருள். மாதர் என்னும் அடைமொழி வண்டுகளின் விருப்ப உள்ளத்தினை உணர்த்தும். ‡ அறிவார்ப் பெறின் என்பதற்கு, அறிந்து செய்வாரைப் பெறின் என்று உரைத்துக்கொள்க. பெறுதல் அரியதொன்றாகலின்,

* குறள். ௬எ : ௬. † பரி. ௨௦ : ௬௬. ‡ தொல். உரி. ௬௦.

''பெறின்'' என்றார். அயலவர் இன்சொல்லில் தமக்கு முன்னேற்றமாவதொன்றும் இல்லாமையால், அதனையுடைய அன்புடையாரது கடுஞ்சொல் நல்லதாயிற்று. ஆதலின் பொறுத்துக்கொள்க என்பது கருத்து. அயலவர் மகிழ்ந்து பேசுதலை நல்லதென்று நினைத்தலின், அதனினுந் தீதாமோ எனப்பட்டது; இன்சொலினும் என உயர்வு சிறப்பும்மை கொள்க. அயலவர் இன்சொல்லில் தீங்கில்லாமையாலும், அன்புடையார் வன்சொல் இன்சொல்லாக இருப்பது இன்னும் நல்லதாதலாலும் 'ஏதிலார் இன்சொலின் நன்றாகு,' மென்னுது, 'ஏதிலார் இன்சொலின் தீதாமோ,' என மறைமுகமாகக் கூறினார். இனி, 'ஏதிலா' ரென்பவரைப் 'பகைவர்,' எனக் கருதி உள்ளே பகைமை கொண்டு மேலே முகம் மகிழ்ந்து பேசும் பகைவரது இன்சொலலைப் போலத் தீதாகுமோ என்றுரைப்பாரும் உளர்; இது வெளிப்படையாகலின், இதனினும், மேலே கூறிய உரை ஒன்றேடொன்று ஒப்பிட்டுரைப்பதற்கேற்ற பெருமை வாய்ந்து நுண்ணியதாய்ச் சிறக்கின்றமை துணியப்படும். ௩

**74.** அறிவ தறிந்தடங்கி அஞ்சுவ தஞ்சி
உறுவ துலகுவப்பச் செய்து—பெறுவதனுல்
இன்புற்று வாழும் இயல்பினுர் எஞ்ஞான்றும்
துன்புற்று வாழ்தல் அரிது.

(பொ - ள்) அறிவது அறிந்து - நூல்வழக்கினும் உலகவழக்கினுந் தெரிந்து கொள்ளவேண்டுவன தெரிந்து கொண்டு, அடங்கி - அடக்கமுடையவராய், அஞ்சுவது அஞ்சி - அஞ்சத்தக்க நிலைகளுக்கு அஞ்சி, உறுவது-தமக்குத் தகுதியாகத் தாமே பொருந்துஞ் செயல்களை, உலகு உவப்பச் செய்து - உலகம் பயன்கொண்டு மகிழும்படி செய்து, பெறுவதனுல்-அதுகொண்டு அடைந்த ஊதியத்தினளவில், இன்புற்று வாழும் இயல்பினுர் - மகிழ்ந்து வாழ்க்கை நடத்தும் தன்மையையுடையவர், எஞ்ஞான்றும் துன்புற்று வாழ்தல் அரிது - எந்தக் காலத்திலும் துன்பமடைந்து உயிர்வாழ்வது இல்லை.

(க - து) அறிந்து அடங்கி அஞ்சி நேர்ந்ததைச் செய்து, கிடைத்தது கொண்டு வாழ்வோர்க்கு எப்போதுந் துன்பமில்லை.

(வி - ம்) அறிவது அஞ்சுவது உறுவது பெறுவது என்பன சாதியொருமை. தமக்குத் தகுதியாகப் பொருந்தியதொரு செயலைப் பிறர்க்கு நலம் பயக்கவேண்டுமென்னும் எண்ணத்துடன் திருத்தமாகவும பற்றில்லாமலும் செய்து, கிடைத்த ஊதியத்தினளவில் மகிழ்ந்து, வாழ்க்கை நடத்தவேண்டுமென்று இச செய்யுளிற் புலப்படுத்தியிருப்பது மிக்க மாட்சிமையானது. இனிய வாழ்க்கை நடத்துவதற்கு இது சிறந்த வழி. "பெற்றது மகிழ்ந்து சுற்றம் அருத்தி ஓம்பாது உணடு கூம்பாது வீசி,"* என்னுஞ் சான்றோர் செய்யுட்கள்போல்வன இங்கு நினைவுகூரற்குரியன. ச

**75.** வேற்றுமை யின்றிக் கலந்திருவர் நட்டக்கால்
தேற்றா ஒழுக்கம் ஒருவன்கண் உண்டாயின்
ஆற்றுந் துணையும் பொறுக்க பொறானாயின்
தூற்றாதே தூர விடல்.

(பொ - ள்) வேற்றுமையின்றிக் கலந்து இருவர் நட்டக்கால் - வேறுபாடில்லாமல் மனங் கலந்து இரண்டு பேர் நேசித்தால், தேற்றா ஒழுக்கம் ஒருவன்கண் உண்டாயின்-தக்கதென்று பெரியோரால் தெளியப்படாது ஒதுக்கிய தகாத நடத்தை ஒருவனிடத்தில் உண்டானால், ஆற்றுந் துணையும் பொறுக்க - பொறுக்கக் கூடுமளவும் மற்றவன் பொறுத்துக்கொள்க; பொறானாயின்-அதன்மேற் பொறுக்கக்கூடாதவனாயின், தூற்றாதே தூரவிடல் - அக் குற்றத்தைப் பலரும் அறியப் பழிக்காமல் அவன் தொடர்பை, மீண்டும் அணுகவொட்டாதபடி நெடுந்தொலைவில் விட்டு விடுக.

(க - து) நண்பனிடத்திற் பொறுக்குமளவும் பொறுமைகொள்க ; பொறுக்கக் கூடாதவிடத்து அவனுக்குத் தீங்கேதுஞ் செய்யாமல் தூர விலகிக்கொள்க.

(வி - ம்) தகுதியென்று தெளியப்படாத ஒழுக்கம் இங்குத் 'தேற்றா வொழுக்கம்,' எனப்பட்டது. 'தேற்றா' என்பது இங்கே தன்வினைக்கண் வந்தது; "தேற்றாய் பெரும பொய்யே,"† என்புழிப் போல. தூற்றி விடுதலினின்றும் பிரித்தலின், ஏகாரம் பிரிநிலை. 'தூர விடல்' என்பதற்குத் தூர்ந்துபோகும்படி மெல்ல

* புறநா. சஎ. † புறநா. இக.

விட்டுவிடுக என உரைத்தலும் ஒன்று. இச் செய்யுள் நண்பரிடத்துப் பொறுக்கும் முறைமை கூறிற்று. (5)

76. இன்னு செயினும் இனிய ஒழிகென்று
தன்னையே தான்நோவின் அல்லது—துன்னிக்
கலந்தாரைக் கைவிடுதல் கானக நாட
விலங்கிற்கும் விள்ளல் அரிது.

(பொ - ள்) இன்னு செயினும்-நண்பர் தனக்கு இன்னல் தருவன செய்தாலும், இனிய ஒழிக என்று - அவை இனியவாய் வந்து கழிக என்று பொறுமையாய் நடந்து கொண்டு, தன்னையே தான் நோவின் அல்லது - அதற்குக் காரணமான தனது முன்வினையை நினைந்து தன்னையே தான் நொந்துகொள்ளின் அல்லாமல், துன்னிக் கலந்தாரைக் கைவிடுதல்-நெருங்கி மனங்கலந்து பழகினவரை ஒருவன் கைவிடுதலென்பதோ, கானக நாட-காடுகள் சிறந்த நாடனே, விலங்கிற்கும் விள்ளல் அரிது - தாழ்ந்த விலங்குகளுக்கும் அங்ஙனம் விட்டுவிடுதல் அருமையாகும்; ஆதலின் அது மக்கட்கு மிகவும் அரியதொன்றாகும்.

(க - து) நண்பர் தீங்கு செய்த காலத்தும் அதனைப் பொறுத்துக் கொள்வதன்றி அவரைக் கைவிட்டுவிடுதல் மக்கட்கு அழகன்று.

(வி - ம்) செயினும் என்னும் உம்மை பெரும்பாலும் அவர் அங்ஙனம் செய்யாமையை உணர்த்தி நின்றமையின், எதிர்மறை. பிறர் செய்யுந் தீங்குகளும், தாம் நடந்துகொள்ளும் நன்முறைமைகளால் யார்க்கும் இனிமையாக வந்து கழியுமாதலின், 'இனியவாய் ஒழிக என்று பொறுத்திருத்தல்,' இங்குக் குறிப்பிடப்பட்டது. 'தன்னையே தான் நோவின் அந்நேரத்து நிலை எளிதாவதல்லது, கைவிடுதல் என்பதோ அரிது,' என்பது கருத்து. 'கைவிடுதல் என்பது, விலங்கிற்கும் விள்ளல் அரிது என்பதனுல், இசையெச்சமாகத் தனக்கும் அம் முடிபு பெற நின்றது. விலங்கிற்கும், என்பதன் உம்மை இழிவு சிறப்பு. கைவிடுதல் அரிது எனக் கொள்ளுமிடத்து 'அரிது,' என்னுஞ் சொல், 'அது மக்கட்பண்பாகாது,' என்னுங் கருத்துணர நின்றது. 6

**77. பெரியார் பெருநட்புக் கோடல்தாம் செய்த
அரிய பொறுப்பஎன் றன்றே—அரியரோ
ஒல்லென் அருவி உயர்வரை நன்னாட
நல்லசெய் வார்க்குத் தமர்.**

(பொ - ள்) பெரியார் பெருநட்புக் கோடல்-சான்றோர்களது மேன்மையாகிய நேயத்தை யாரும் விரும்பித் தேடிக்கொள்ளுதல், தாம் செய்த அரிய பொறுப்ப என்றன்றே - தாம செய்துவிட்ட அரிய குற்றங்களையும் அவர்கள் பொறுப்பார்கள் என்று கருதித்தானே? ஒல் என் அருவி உயர்வரை நல் நாட-ஒல் என்று ஒலிக்கும் அருவிகளையுடைய உயர்ந்த மலைகள் சிறந்த நல்ல நாட்டையுடையவனே! அரியரோ நல்ல செய்வார்க்குத் தமர் - பிழையில்லாத நல்ல செயல்களையே செய்யும் மேம்பாடுடையவர்க்கு நண்பராவோர் அரியரோ? அல்லரென்றபடி.

(க - து) தம்மோடு பழகுவார் செய்யும் பிழைகளைப் பொறுத்துக் கொளவதே சிறந்த நட்பாகும்.

(வி - ம்) பிழை பொறுப்பவர் பெரியாராகலின் அவரைப் பெரியாரென்றும், அவரது நட்பைப் 'பெருநட்பு,' என்றும் ஆசிரியர் கூறினார். அரிய - பெருங்குற்றங்கள்; என்றது, பொறுக்கரிய குற்றங்கள்; அருமை இங்குப் பெருமைமேல் நின்றது; அரியவும் என்னும் உம்மை உயர்வு சிறப்பு. பிழைபொறுக்கும் பெரியார் நட்புக் கிடைப்பதுதான் அருமை; பிழையில்லாமல் நல்லனவே செய்வார்க்கு நண்பராவோர் அங்ஙனம் அரியரல்லர்; பலராவர்; ஆதலின், நட்பிற் சிறந்தது, பிழைபொறுக்கும் நட்பேயாகும் என்று உணர்த்தியபடி. பொறுப்ப - பலர்பால் முற்று; இதற்கு விகுதி பகரமெனக் கொள்க; அகரமெனக் கொள்ளின் பலவின்பால் முற்றாகும். 'அரியரோ' வென்பதன் ஓகாரம் எதிர்மறை. 'உயர் வரை,' யென்பதற்குப் பண்பு விரித்தலாகாது; 'உயர்' என்பது வினைச்சொல்லின் பகுதியாய் வினைத்தன்மையில் நிற்றலின் வினைத்தொகை. எனவே, 'உயர்ந்த வரை' என்று உரைகொள்க. நச்சினார்க்கினியர் 'உயர்திணை' என்பதற்கு உயர்ந்த ஒழுக்கமென உரைத்து, 'இது காலந்தோன்ற நிற்றலின்' எனக் காரணமுங் காட்டினமை* இங்கு நினைவுகூரப்படும். எ

* தொல். கிளவி. க.

**78.** **வற்றிமற் றற்றப் பசிப்பினும் பண்பிலார்க்**
**கற்ற மறிய உரையற்க—அற்றம்**
**மறைக்குந் துணையார்க் குரைப்பவே தம்மைத்**
**துறக்குந் துணிவிலா தார்.**

(பொ - ள்) *வற்றி ஆற்றப் பசிப்பினும் - உடம்பிற் செந்நீர் சுண்டும்படி மிகப் பசித்தாலும், பண்பு இலார்க்கு- பிறர் நிலையறிந்து ஒழுகும் தன்மையில்லாதவர்களுக்கு, அற்றம் அறிய உரையற்க - தமது இல்லாமையை அவர் அறியும்படி சொல்லவேண்டாம்; தம்மைத் துறக்குந் துணிவிலாதார் - தம்மைத் துறவு நெறியிற் செலுத்துந் தெளிவில்லாதவர், அப்படிச் சொல்ல விரும்பினால், அற்றம் மறைக்குந் துணையார்க்கு உரைப்ப - தமது இல்லாமையை நீக்கும் உதவியாளர்க்குச் சொல்லுவர்.*

(க - து) *இல்லையென்று கூறிப் பெறாமல் மதிப்போடிருந்து பொருள் தேடவேண்டும்.*

(வி - ம்) *வற்றியென்னுஞ் செய்தென் எச்சம் செயவென் எச்சமாகக் கொள்ளப்பட்டது. மற்று - அசை. பண்பென்றது, பிறர் பாடு அறிந்து ஒழுகுதலை.* அற்றம் - யாவும் அற்ற நிலைமை; அது, வறுமை. மறைக்குமென்பது "தம்வயிற் குற்றம் மறையா வழி,"† என்புழிப் போல நீக்குதலென்னும் பொருளில் வந்தது. 'மறைக்குந் துணையார்க்கு,' என்பதை 'நீக்குமளவான தகுதியுடையார்க்கு,' என்று உரைத்தலும் ஒன்று. 'துறக்குந் துணிவிலாதார் உரைப்ப' என்றமையின் அத் துணிவுடையார் ஆண்டும் உரையார் என்றபடி. துறவு நெறியிற் செல்லுந் துணிவுடையார் காய் கனி சருகு முதலியன உண்டு பசி தீர்வர்; மக்கள் அவர்களாகவே ஏதும் உதவின் உண்பர். தாம் அவர்பால் தமக்கு இல்லையென்று தெரிவியார். ஏனெனில், அவர் இறைவனை நம்பி அவன் அருளாகிய இயற்கையின்பாற் சென்றவர்.* அ

**79.** **இன்பம் பயந்தாங் கிழிவு தலைவரினும்**
**இன்பத்தின் பக்கம் இருந்தைக்க—இன்பம்**
**ஒழியாமை கண்டாலும் ஓங்கருவி நாட!**
**பழியாகா ஆறே தலை.**

---

* கலி. கஙங: அ. † குறள், அ௫:௬.

(பொ - ள்) இன்பம் பயந்த ஆங்கு - இன்பம் உண்டான இடத்தில், இழிவு தலைவரினும் இன்பத்தின் பக்கம் இருந்தைக்கு - தாழ்வுகள் நேர்ந்தாலும் இன்பத்தையே எண்ணி அதன்கண் நிலைத்திருந்த நினக்கு, இன்பம் ஒழியாமை கண்டாலும் - அச் செயலில் பின்னும் பின்னும் இன்பம் இடையறுமை கண்டாலும், ஒங்கு அருவி நாட - பெருகுகின்ற அருவிகளையுடைய மலைநாடனே! பழி ஆகா ஆறே தலை - பழித்தல் உண்டாகாத வழியே நினக்குச் சிறந்தது.

(க - து) இன்பம் இடையறாமல் உண்டாவதாயினும் பழிப்பில்லாத நற்செயல்களே செய்யத்தக்கது

(வி - ம்) இன்பம் பயந்தாங்கு - இன்பம் பயந்த செயலிடத்து என்று கொள்க. உம்மை, ஆக்கம்; 'இருந்தைக்க' என்பதன் ஈற்றில் அகரம் சாரியை; "கடிநிலையின்றே ஆசிரியர்க்க"* என்பதிற் போல. க

80. தான்கெடினும் தக்கார்கே டெண்ணற்க ; தன்உடம்பின்
ஊன்கெடினும் உண்ணார்கைத் துண்ணற்க;—வான்கவிந்த
வையக மெல்லாம் பெறினும் உரையற்க,
பொய்யோ டிடைமிடைந்த சொல்

(பொ - ள்) தான் கெடினும் தக்கார் கேடு எண்ணற்க - ஒருவன் தான் கெடுவதாயிருந்தாலும் அக் கேட்டினை நீக்கிக் கொள்ளும்பொருட்டுச் சான்றோர் கெடுதலை எண்ணாதிருக்கக்கடவன். தன் உடம்பின் ஊன் கெடினும் உண்ணார் கைத்து உண்ணற்க - தனதுடம்பின் தசை பசியால் உலர்வதாயினும் நுகரத்தகாதவரது பொருளை நுகராமலிருக்க வேண்டும். வான் கவிந்த வையகமெல்லாம் பெறினும் உரையற்க பொய்யோடு இடைமிடைந்த சொல் - வானத்தால் கவியப்பெற் றிருக்கும் உலகம் முழுமையும் பெறுவதாயிருந்தாலும் தனது பேச்சினிடையில் பொய்யொடு கலந்த சொற்களைச் சொல்லாமலிருப்பானாக.

* தொல். புள்ளி. கஅ.

(க - து) மேலோர் கெடுதலை நினைதலும், தகாதவர் பொருளை நுகர்தலும், பொய்யுரை மொழிதலும் ஒருவனுக்கு ஆகா.

(வி - ம்) கைத்து - பொருள்; "கைத்துண்டாம் போழ்தே கரவா தறஞ்செய்ம்மின்,"* என முன்னும் வந்தது. தான் கெடுதலும் பெறுதலும் பொருளல்ல; தக்க உணர்வுகளை ஓம்புதலே பொருளாவது என்பது இச் செய்யுளால் உணர்த்தப்பட்டது. ௮௦

---

## ௯. பிறர்மனை நயவாமை

காம மயக்கத்தாற் பிறர் மனைவியரை விரும்பாமை.

81. அச்சம் பெரிதால், அதற்கின்பம் சிற்றளவால்,
நிச்சம் நினையுங்காற் கோக்கொலையால்,—நிச்சலும்
கும்பிக்கே கூர்த்த வினையால், பிறன்தாரம்
நம்பற்க நாணுடை யார்.

(பொ - ள்) அச்சம் பெரிதால் - உண்டாகும் அச்சம் பெரிதாதலாலும், அதற்கு இன்பம் சிற்றளவால் - அப் பேரளவான அச்சத்துக்கு ஈடாக அடையும் இன்பம் சிறிதளவேயாதலாலும், நிச்சம் நினையுங்கால் கோ கொலையால் - நினைக்குமிடத்து அதற்கு ஏற்ற தண்டனை உண்மையாக அரசனது கொலைக்கட்டளை யாதலாலும், நிச்சலும் கும்பிக்கே கூர்த்த வினையால் - நாடோறும் அழல்வாய் நரகுக்கே உருவாகிய செயலாதலாலும், பிறன் தாரம் நம்பற்க நாணுடையார் - பழிபாவங்கட்கு அஞ்சுதலுடையார் பிறன் மனைவியை விருமபாமலிருப்பாராக!

(க - து) பிறன் மனைவியை விரும்பி யொழுகுவார்க்கு எந்நாளும இருமையிலும் துன்பமே யாகும்.

(வி - ம்) ஆல் - ஆதலால்; உம்மை விரித்துக்கொள்க. நிச்சம் - உண்மையாக. கும்பியென்பது 'தீக் கனை' யாதலின், இங்கு 'அழல்வாய் நரகம்' எனப்பட்டது. கூர்தல் - உள்ள தன்மை சிறந்து வருதல். ஆதலின், இஙகே அது, நரகுக்கே உருவாகிவரும்

* நாலடி. உ : ௧.

செயல் என்னுங் கருத்தில் வந்தது. "நம்பும் மேவும் நசையா கும்மே".* என்பது தொல்காப்பியமாதலின், 'நம்பற்க' என்ப தற்கு 'விரும்பற்க' என்பது பொருளாயிற்று. க

82. அறம்புகழ் கேண்மை பெருமைஇந் நான்கும்
பிறன்தாரம் நச்சுவார்ச் சேரா;—பிறன்தாரம்
நச்சுவார்ச் சேரும் பகைபழி பாவம்என்
றச்சத்தோ டிந்நாற் பொருள்.

(பொ-ள்) அறம் புகழ் கேண்மை பெருமை இந் நான்கும் - புண்ணியம் புகழ் தக்கார் நேயம் ஆண்மை என இந் நான்கும், பிறன் தாரம் நச்சுவார்ச் சேரா - பிறன் மனைவியை விரும்புவாரிடத்திற் சேரமாட்டா; பகை பழி பாவம் என்று அச்சத்தோடு இந் நாற்பொருள் - பிறர் பகையும் பழியும் பாவமும் அச்சமும் என்று இந் நான்கு பொருள்களும், பிறன் தாரம் நச்சுவார்ச் சேரும் - பிறன் மனைவியை விரும்புவாரிடத்துச் சேரும்.

(க-து) பிறன் மனைவியை விரும்புவார்க்குப் புண்ணியமும் புகழும் தக்கார் கூட்டுறவும் வீரமும் உண்டாகா.

(வி-ம்) பெருமையென்றது பெருமிதம்; ஆவது ஆண்மை. பிறிது கூறுவாருமுளர். அறம் முதலியவற்றிற்கு நேராக ஆசிரியர், பாவம் பழி பகை அச்சம் என நான்கும் முறையே கூறுதலின், அம்முறைமைப்படி அச்சத்துக்கு எதிராக உரைக்குமிடத்துப் பிறருரை சிறவாமை கண்டு கொள்க. பாவம் பழி பகையென நிற்றற்குரியவை, செய்யுளாதலின் பகை பழி பாவமெனப் பிறழ நின்றன அச்சத்தோடு என்பதில் ஒடு என்னும் இடைச்சொல் உம்மைப் பொருட்டு; 'பாவம் என்று' என்பதிலுள்ள 'என்று' என்பதை 'அச்சமும் என்று இந்நாற்பொருள்' 'பெருமை என்று இந்நான்கும்' எனக் கூட்டிக்கொள்க.† 'அகப்பொருள்' 'புறப்பொருள்' என்றாற் போல, இங்கும் பண்புகள் 'பொருள்' எனப்பட்டன. உ

83. புக்கவிடத் தச்சம்; போதரும்போ தச்சம்;
துய்க்குமிடத் தச்சம்; தோன்றுமற் காப்பச்சம்;
எக்காலும் அச்சம் தருமால், எவன்கொலோ
உட்கான் பிறன்இல் புகல்.

* தொல்: உரி. நூக. † தொல். இடை. சகூ.

(பொ - ள்) புக்கவிடத்து அச்சம் - புகும்போது அச்சம்; போதரும்போது அச்சம் - திரும்பிவரும்போது அச்சம்; துய்க்குமிடத்து அச்சம் - நுகரும்போது அச்சம்; தோன்றாமல் காப்பு அச்சம் - பிறர்க்குத் தெரியாமல் காத்துக்கொள்ளுதல் அச்சம்; எக்காலும் அச்சம் தரும் - இங்ஙனம் எந்நேரமும் அச்சம்தரும்;எவன் கொலோ உட்கான் பிறன் இல் புகல் - ஏனோ இவற்றைக் கருதானாய் ஒருவன் பிறன் மனைவியை விரும்பியொழுகுதல் ?

(க - து) பிறன் மனைவியை விரும்பி யொழுகுதலில் முழுதும் அச்சமேயல்லாமல் இன்பமில்லையே.

(வி - ம்) எவன் கொலோ என்பதற்கு என்ன பயன் கருதியோ என்பது பொருள். கொல் அசை; ஓ இரக்கப்பொருளது. உட்குதல் இங்குக் கருதுதல்;"நின்னை, உட்கிச் சிறந்தோர் அஞ்சிய,"* என்புழிப்போல. புகல் - விரும்புதல்; என்றது விரும்பி யொழுகுதல் என்க. ௩

**84.** காணின் குடிப்பழியாம்; கையுறின் கால்குறையும்;
ஆணின்மை செய்யுங்கால் அச்சமாம்;—நீள்நிரயத்
துன்பம் பயக்குமால்; துச்சாரி! நீ கண்ட
இன்பம் எனக்கெனைத்தால் கூறு.

(பொ - ள்) காணின் குடிப்பழியாம் - பிறர் கண்டுவிட்டால் குடிப் பழிப்பாம்; கையுறின் கால் குறையும் - கையில் அகப்பட்டுக் கொண்டால் கால் ஒடியும். ஆண் இன்மை செய்யுங்கால் அச்சமாம் - ஆண்மை யில்லாமையாகிய இப் பிறர்மனை புகுதலைச் செய்யுங்கால் அச்சம் நிகழும். நீள் நிரயத் துன்பம் பயக்கும் - நெடுங்கால நிரயத் துன்பத்தைப் பின்பு உண்டுபண்ணும். துச்சாரி - தீயொழுக்கமுடையோய், நீ கண்ட இன்பம் எனைத்து எனக்குக் கூறு - நீ நுகர்ந்த இன்பம் இதில் எவ்வளவு? எனக்குச் சொல்.

(க - து) பிறன்மனை நயத்தலில் இடுக்கணும் இன்னலுமின்றி இன்பம் சிறிதுமில்லை.

---

* பரிபா. ௧௪: ௨௫-௬.

(வி - ம்) பிறன்மனை புகுகின்ற தொழில் பற்றிக் 'கால் குறையு,' மென்று முதன்மையாக எடுத்துக்கூறினரேனும் இவையுபற்றிப் பிற உறுப்புக்கள் குறைதலுங் கொள்ளப்படும். "பிறன்மனை நோக்காத பேராண்மை," * என்றாராகலின், பிறன்மனை நோக்குதல் இங்கு 'ஆணின்மை' யெனப்பட்டது. ஆல், அசை. ச

85. செம்மையொன் றின்றிச் சிறியா ரினத்தராய்க்
கொம்மை வரிமுலையாள் தோள்மரீஇ—உம்மை
வலியாற் பிறர்மனைமேற் சென்றாரே, இம்மை
அலியாகி ஆடிஉண் பார்.

(பொ - ள்) செம்மை ஒன்று இன்றி - நடுவுநிலைமை என்னுங் குணம் சிறிது மில்லாமல், சிறியார் இனத்தராய் - கீழ்மக்கள் கூட்டத்தோடு கூடியவராய், கொம்மை வரி முலையாள் தோள் மரீஇ - திரட்சி பொருந்திய கோலமெழுதிய மார்புகளையுடைய பெண்மகளின் தோள்களைச் சேர விரும்பி, உம்மை-முற்பிறப்பில், வலியால் பிறர் மனைமேல் சென்றாரே - தமக்குள்ள இடம் பொருள் ஏவல் என்னும் வலிமைகளால் அயலார் மனைவியர்பாற் சென்றவரே, இம்மை - இப்பிறப்பில், அலியாகி ஆடி உண்பார் - அலித் தன்மையுடையவராய்க் கூத்தாடி வயிறு பிழைப்பவராவர்.

(க - து) முற்பிறப்பிற் பிறர் மனைவியரைக் கூடியவரே இப் பிறப்பில் கூத்தாடி இரந்து உண்பவர்.

(வி - ம்) செம்மையென்பது நடுவுநிலைமைக்கே சிறப்பாக வழங்கும் பெயர். திருவள்ளுவரும் இதனைச் 'செப்பம்' † என்பர். ஒன்று - சிறிதென்னும் பொருட்டு. சிறியாரினம் என்றது, 'வறுமொழியாளர் வம்பப் பரத்தர்,' ‡ முதலாயினோர். பொதுவாகப் பெண்ணென்னும் பொருட்டுக் 'கொம்மை வரிமுலையாள்,' என்றார். 'பெண்ணின் சேர்க்கையை விரும்பி,' என்பது கருத்து. மரீஇ - விரும்பியென்னும் பொருட்டு. அலி, ஆண் தன்மை யிழந்த பிறவி; பெண்ணின் நலத்தைத் துய்க்க இயலாத பிறவி. ஆடியுண்பாரென்றது, தெருக்களிற் பிறர் நகைக்கக் கூத்தாடிய பிச்சை யேற்று வயிறு பிழைத்தலை யுணர்த்திற்று. முற்பிறப்பில் ஆண் தன்மையும் வளம் முதலிய வலிமையும் உடையவராய்ப் பிறர் மதிக்க வாழ்ந்திருந்தவர். அவ் வாண்டன்மையையும் வலிமையையும் அப்போது தவறாகச்

* குறள், கடு: அ. † குறள், கஉ : உ. ‡ சிலப். கக: கூ௩. ௫.

செலுத்தினமையின், இப் பிறப்பில் அவ் விரண்டையும் முற்று மிழந்து பிறர் அருவருக்க வருந்துவரென்றற்கு, 'அலியாகி,' எனவும் 'ஆடியுண்பா' ரெனவுங் கிளந்து கூறினர். 'சென்றாரே,' யென்னும் ஏகாரம் பிரிநிலை. ஐ

**86.** பல்லா ரறியப் பறையறைந்து நாள்கேட்டுக்
கல்யாணஞ் செய்து கடிப்புக்க —மெல்லியற்
காதன் மனையாளும் இல்லாளா என்னொருவன்
ஏதின் மனையாளை நோக்கு.

(பொ - ள்) நாள் கேட்டு - நல்ல நாள் கேட்டறிந்து, பல்லார் அறியப் பறை அறைந்து - அந்நன்னாளிற் பலரும் அறியும்படி மணமுரசு கொட்டி, கல்யாணம் செய்து கடி புக்க மெல் இயல் காதல் மனையாளும் இல்லாளா - திரு மணம் செய்து தன் காவலிற் புகுந்த மென்றன்மை வாய்ந்த அன்புடைய மனையாட்டியும் தன் இல்லத்தில் இருப்பவ ளாக, என் ஒருவன் ஏதில் மனையாளை நோக்கு - ஏன் ஒரு வன் அயலான் மனைவியைக் கருதுதல்?

(க - து) தன் மனைவி இல்லத்திலிருக்க ஒருவன் அய லான் மனைவியைக் கருதுவது எதற்கு?

(வி - ம்) தனக்கு அழகும் அன்பும் உடைய மனைவியிருந்தும் பிறன் மனைவியைக் கருதும் ஒருவனது பெருங்காம மடக்கத்தை இது கண்டித்தபடி. மகளிர்க்கு அழகு என்பது மென்றன்மையென் றற்கு 'மெல்லியல்,' என்றார். நல்ல ஒழுக்கமுடையவன் போலப் பலரும் அறியத் திருமணஞ்செய்ததன் பயன என்னாயிற்று என்றற்கு முதலிரண்டு வரிகள் கூறப்பட்டன. இதனால் அவன் ஒரு நெறி முறைமையில் நில்லாமை கண்டிக்கப்பட்டது. பறை, இங்கே மணப் பறை; அறைதல் - பிறர்க்கு அறிவிக்கும் பொருட்டுக் கொட்டுதல், காவல் என்பது தனக்கே உரிமையை உணர்த்தி நின்றது. மனையாள் இல்லாதபோதே பிறன்மனை புகுதல் பிழையாயிருக்க, மனையாளும் இருக்கும்போது அது கருதுதல் எத்தனை பெரும்பிழை என முன் எஞ்சியதை உணர்த்துதலின் உம்மை எச்சமாகும். இல்லாளாக என நிற்கவேண்டுவது 'இல்லாளா' என ஈறுகெட்டு நின்றது. 'நோக்கு' இங்கு மனத்தாற் கருதுதல்.* கூ

* தொல். வேற்றுமைமயங். கப.

**87.** அம்பல் அயல்எடுப்ப அஞ்சித் தமர்பரீஇ
வம்பலன் பெண்மரீஇ மைந்துற்று—நம்பும்
நிலைமைஇல் நெஞ்சத்தான் துப்புரவு, பாம்பின்
தலைநக்கி யன்ன துடைத்து.

(பொ - ள்) *அம்பல் அயல் எடுப்ப - அயலார் பழித்தல் செய்ய, அஞ்சித் தமர் பரீஇ-அதனால் தன்னைத் தடுப்பரென்று அஞ்சித் தம் உறவினரினின்றும் நீங்கி, வம்பலன் பெண் மரீஇ மைந்து உற்று - அயலான் மனைவியைச் சேர்ந்து களிப்படைந்து, நம்பும் நிலைமை இல் நெஞ்சத்தான் துப்புரவு - எவராலும் நமபுதற்குரிய நிலைமையில்லாத நெஞ்சத்தையுடையானது அக் காமநுகர்ச்சி, பாம்பின் தலை நக்கியன்னது உடைத்து - பாம்பின் மழமழப்பான தலையை நாவினால் தடவி இன்புற்றதைப் போன்ற தன்மையையுடையது.*

(க - து) *பிறர் மனைவியர்பால் நிகழ்த்துங் காமவொழுக்கம் எப்போதும் இடரானது.*

(வி - ம்) *அம்பல் - வாயோடு முணுமுணுப்பது.* பரிதல், இங்கு நீங்குதலென்னும் பொருட்டு. வம்பலன் என்பதில் அல் எதிர்மறையன்று; சாரியை. 'வம்பன்' என்பதே சொல், புதியவன்; அஃதாவது அயலான் என்பது அதற்குப் பொருள். "மனக்கினி யார்க்கு நீ மகளாயதூஉம்" † என்புழிப் போலப் 'பெண்' என்பது இங்கு 'மனைவி' யென்னும் பொருளில் வந்தது. உவமை உயிர்க்கு இறுதி தரும் இடரை உணர்த்தி நின்றது.* எ

**88.** பரவா, வெளிப்படா, பல்லோர்கண் தங்கா;
உரவோர்கண் காமநோய் ஓ! ஓ! கொடிதே;
விரவாருள் நாணுப் படல்அஞ்சி யாதும்
உரையாதுஉள் ஆறி விடும்.

(பொ - ள்) *பரவா - அறிஞர்களிடத்திற் காமநினைவுகள் பரவமாட்டா; வெளிப்படா - ஒரோவொருகாற் பரவினும் அவை வெளிப்படமாட்டா; பல்லோர்கண் தங்கா -*

---

* தொல். களவு. ௪௮, இறைய. உஉ. † மணிமே. உக : ௩௦.

அப்படி வெளிப்பட்டாலும் அவர்களுக்கு உரிமை மனைவியரிடத்தன்றி அயல் மாதர் பலரிடத்துஞ் சென்று நில்லா. உரவோர்கண் காமநோய் ஓ கொடிது - அறிவுடையவர்களிடம் காமநோய் ஓ, கொடுமையுடையது! விரவாருள் நாணுப்படல் அஞ்சி - அங்ஙனம் அவர்கள் மனைவியரிடத்தே சென்று தங்கினாலும் அம் மனைவியர் அந்நினைவு கலவாதவராயிருப்பின், அப்போது அவ்வறிஞர்கள் நாணப்படுவதற்குப் பின்னிடைந்து, யாதும் உரையாது உள் ஆறிவிடும் - சிறிதும் வெளிப்படாமல் உள்ளேயே தணிந்துவிடும்.

(க - து) அறிவுடையோர் காம நினைவுக்கு இடங் கொடார்.

(வி - ம்) 'உரவோர்கண காமநோய் ஓ கொடிதே,' யென்றது, இடையே பொதுவாக ஆசிரியர்க்கு அச்சத்தினால் தோன்றிய தொடர்; அவர் 'உரன் என்னுந் தோட்டியான் ஓரைந்துங் காப்பவ'* ராதலின். மற்றவை, எடுத்த பொருள்மேற் செல்லுந் தொடர்கள். பொறுத்தற்குரிய பொறுப்புக் கருதி 'ஓ கொடிதே,' என்றார். 'யாதும் உரையாது' என்பது சிறிதும் வெளிப்படாமை சுட்டுக் குறிப்புமொழி. அறிஞர்கள் காம நுகர்வை மென்மையாக ஆளுந் திறமும் இப் பாட்டிற் புலப்படும். அ

**89.** அம்பும் அழலும் அவிர்கதிர் ஞாயிறும்
வெம்பிச் சுடினும் புறஞ்சுடும்;—வெம்பிக்
கவற்றி மனத்தைச் சுடுதலால், காமம்
அவற்றினும் அஞ்சப் படும்.

(பொ - ள்) அம்பும் அழலும் அவிர் கதிர் ஞாயிறும் - வில்லம்பும், தீயும், ஒளிர்கின்ற கதிர்களையுடைய சூரியனும், வெம்பிச் சுடினும் புறம் சுடும் - வெதும்பிச் சுட்டாலும் வெளிப்பொருளையே சுடும், வெம்பிக் கவற்றி மனத்தைச் சுடுதலால் காமம் அவற்றினும் அஞ்சப்படும் - அழன்று கவலைப்படுத்தி உள்ளத்தைச் சுடுவதனால் காமம் என்பது அவற்றைப் பார்க்கிலும அஞ்சப்படும்.

* குறள், ௩ : ௪.

(க - து) காமம் என்பது உள்ளத்தை வெதுப்புங் கொடுமையுடையது.

(வி - ம்) அம்பு, பெரும்பான்மைக்கு உரிய 'சுடும்' என்னும் வினையை ஏற்றது. நன்றாய்ச் சுடுகின்றபோது வெம்பிச் சுட வேண்டுதலின், அவ்வியல்புபற்றி அசசொல் இரண்டிடங்களிலுங் கூறப்பட்டது. புறம் என்றது, "பைம்புறப் படுகிளி," * என் புழிப்போல உடம்பை; உடம்பைச் சுடுதலினும் உள்ளத்தைச் சுடுதல் கொடுமையாதலின், அவற்றினும் அஞ்சப்படும் என்றார். உள்ளம் சுடப்பட்டால், அதனால் உடம்பும் உயிரும் வாடுதல் ஒருதலையாகலின், அது கொடுமையுடையதாயிற்று. மேலும், ஆறாத முறையிற் சுடுதல் தோன்றக் கவிற்றிச சுடும் எனவுங் கூறப்பட்டது. க

**90.** ஊருள் எழுந்த உருகெழு செழுந்தீக்கு
நீருள் குளித்தும் உயலாகும் ;—நீருள்
குளிப்பினும் காமம் சுடுமேகுன் றேறி
ஒளிப்பினும் காமம் சுடும்.

(பொ - ள்) ஊருள் எழுந்த உரு கெழு செந்தீக்கு - ஊர் நடுவில் பற்றிக்கொண்டு ஓங்கிய அச்சம் மிக்க செந்தழலுக்கு, நீருள் குளித்தும உயலாகும் - அருகிலிருக்கும் நீருள் மூழ்கியும் பிழைத்தல் கூடும்; ஆனால், நீருள் குளிப்பினும் காமம் சுடும் குன்று ஏறி ஒளிப்பினும் காமம் சுடும் - நீருள் மூழ்கினாலும் காமம் எரிக்கும் ; மலை ஏறி ஒளித்தாலும் காமம் எரிக்கும்.

(க - து) காமம், தீயினுங் கொடியது.

(வி - ம்) ஊருள் என்பதில் 'உள்' நடுவென்னும் பொருட்டு. எழுந்த, மேலே ஓங்கிய ; உரு - அச்சம் ; "உரு உட்காகும்"† என்பது, தொல்காப்பியம். கொடுமை தோன்றப் பெருந் தீ என்றற்குச் 'செந்தீ' எனப்பட்டது. நீருள் என்றது, நீர்நிலையுள், குளித்தும் என்னும் உம்மை எளிமையைச் சிறப்பித்தமையின் சிறப்பும்மை. இச் செய்யுட் பொருள் "காமத்தீ நீருட் புகினுஞ் சுடும்,"‡ என்னுங் கலித்தொகைப் பகுதியிலும் வந்துள்ளது. ஏகாரம், தேற்றம் ; மற்றொன்றுக்கும் ஒட்டுக. காமம் இரண்டிடத்தும் வந்தது, சொற்பின் வருநிலை. ௰

* ஐங். உகூ : ௰. † தொல். உரி. ச. ‡ கலி. கசச : கூக - உ.

## ௧௦. ஈகை

வறியார்க்கு ஒன்று ஈதல்.

**91**. இல்லா விடத்தும் இயைந்த அளவினால்
உள்ள விடம்போற் பெரிதுவந்து—மெல்லக்
கொடையொடு பட்ட குணனுடைய மாந்தர்க்கு
அடையாவாம் ஆண்டைக் கதவு.

(பொ - ள்) இல்லாவிடத்தும் - பொருளில்லாத காலத்திலும், இயைந்த அளவினால் - கூடிய அளவினால், உள்ள இடம்போல் பெரிது உவந்து - பொருளுள்ள காலத்தைப் போல மிகவும் மகிழ்ந்து, மெல்லக் கொடையொடு பட்ட குணன் உடை மாந்தர்க்கு - ஒருவர்க்கு ஒன்று இனிமையாகக் கொடுத்தல் தொழிலோடு பொருந்திய அருட்குணத்தையுடைய மக்களுக்கு, ஆண்டைக் கதவு அடையா - அவ்வுலகத்துக் கதவுகள் வழியடைக்கமாட்டா.

(க - து) ஈகைக் குணமுடையவர்கள் மறுமையின்பம் பெறுவர்.

(வி - ம்) இடம் என்றது இங்கே காலங் குறித்து நின்றது. மெல்ல - மென்மையாக; உவந்து என்னும் வினையெச்சம் பட்ட என்னும் பெயரெச்சத்தோடு இயைந்தது. அவ்வுலகமென்றது துறக்கம். ஆம், அசை. அறிவு, அன்பு முதலிய உயிர்க்குணங்களிலும், உதவுகின்ற இயற்கையோடு கூடிய குணங்களே மாட்சிமையுற்று மறுமைப் பயனுக்கு ஏதுவாதலின், 'கொடையொடு பட்ட குணன்' என்றார். 'அடையாவாம் ஆண்டைக் கதவு' என்னுங் கருத்து, மேலும் * வரும். 'குன்றாப் புகழோன் வருகென்று மேலுலகம் நின்றது, வாயில் திறந்து,'† என்றார் பிறரும். 'கதவு அடையா,' என்றது, செய்ததுபோலக் கிளத்தல்.‡ ௧

**92**. முன்னரே சாநாள் முனிதக்க மூப்புள
பின்னரும் பீடழிக்கும் நோயுள ;—கொன்னே
பரவன்மின் பற்றன்மின் பாத்துண்மின் யாதுங்
கரவன்மின் கைத்துண்டாம் போழ்து.

* நாலடி. உ௮ : ௧. † அறநெறிச். ௬௨. ‡ தொல். வினை. ௪௬.

(பொ - ள்) முன்னரே சாம் நாள் முனிதக்க மூப்பு உள - வெறுத்தற்குரிய கிழப்பருவமும் இறக்கும் நாளும் எதிரிலேயே உள்ளன. பின்னரும் - அவையல்லாமலும், பீடு அழிக்கும் நோய் உள - வலிமையைக் குலைக்கும் நோய்களும் வரவிருக்கின்றன. ஆதலால்; கைத்து உண்டாம் போழ்து - செல்வம் உண்டாகுங் காலத்திலேயே, கொன்னே - வீணாக, பரவன்மின் - மேலுந் தேட அலையாதிருங்கள், பற்றன்மின் - இறுக்கிப் பிடியாதிருங்கள்; பாத்து உண்மின் - பலர்க்கும் பகுத்து உண்ணுங்கள்; யாதும் கரவன்மின் - சிறிதும் ஒளியாதிருங்கள்.

(க - து) பொருளுண்டானபோதே, மேலுமேலும் அதனைத் தேட அலையாமல், நன்முறைகளிற் பயன்படுத்திக் கொண்டு அமைதியாக வாழ்க்கை நடத்துதல்வேண்டும்.

(வி - ம்) காட்சியளவையை நினைந்து - முன்னரே என்றார். முனி, முதனிலைத் தொழிற்பெயர்; அனைவரும் பொருள்தேடி மகிழ வேண்டுமாதலின், ஒருவரே மேலு மேலுந் தேடுதல் மன்பதைக்குக் கேடும் வீணுமாமெனக் கருதிப் 'பரவன்மின்,' எனவும். சிக்கனம் பிடியாமல் முறையாகத் துய்த்தல் உடல்நலம் அறிவுநலம் முதலியன கொள்ள ஏதுவாகலின், 'பற்றன்மின்,' எனவும், பலர்க்கும் பகுத்தீதலின் உலகமும் நன்றாம், தமக்கும் உயிர்ப் பண்பு வளர்ச்சிபெறுமாதலின், 'பாத்துண்மின்,' எனவும், பொருளோடு பற்றின்றியொழுகும் பண்பு கைவந்து தெளிவுண்டாமாதலின், 'கரவன்மின்,' எனவுங் கூறினர். ௨

93. நடுக்குற்றுத் தற்சேர்ந்தார் துன்பந் துடையார்;
கொடுத்துத்தான் துய்ப்பினும் ஈண்டுங்கால் ஈண்டும்;
இடுக்குற்றுப் பற்றினும் நில்லாது, செல்வம்
விடுக்கும் வினையுலந்தக் கால்.

(பொ - ள்) செல்வம் - பொருள், கொடுத்துத் தாம் துய்ப்பினும் ஈண்டுங்கால் ஈண்டும் - பிறர்க்குக் கொடுத்துத் தாமும் நன்றாக நுகர்ந்தாலும் திரளுதற்குரிய காலத்தில் மேலுமேலுந் திரளும். வினை உலந்தக்கால் - நல்வினை முடிந்துவிட்டபோது, இடுக்குற்றுப் பற்றினும் நில்லாது

விடுக்கும் - அச் செல்வத்தை எவ்வளவுதான் இடுக்கிப் பிடித்தாலும் அது நில்லாமல் தனது தொடர்பை நீக்கிக் கொள்ளும், நடுக்குற்றுத் தன் சேர்ந்தார் துன்பம் துடையார் - இவ்வுண்மைகளை அறியாதார், வறுமைத் துன்பத்துக்கு அஞ்சித் தம்மை அடைந்தவர்களின் இன்னலைப் பொருள் கொடுத்துத் தீர்க்கமாட்டார்கள்.

(க - து) செல்வம் நிலைப்பதற்கும் நில்லாததற்கும் ஏது இறுக்கிப் பிடித்தலும் பிறர்க்குக் கொடுத்தலும் அன்றாதலின், அவை முன் வினை காரணமாக நிகழ்வன எனக் கருதிப், பிறர்க்கு ஒன்று கொடுத்தலை மகிழ்வோடு நெகிழாமற் செய்துவரல் வேண்டும.

(வி - ம்) தளர்ந்து நிலைகுலைதல் 'நடுக்குற்று' எனப்பட்டது. தன் - ஒருமைப்பன்மை மயக்கம். 'தற்சேர்ந்தார் துன்பந் துடைத்தலே வாழ்க்கையின் குறிக்கோளாக இருக்கவேண்டும்; அதனாலே தான் வாழ்க்கைக்கு விளக்க முண்டாகின்றது,' என்னும் உண்மை இதன்கண் விளங்கிற்று; 'மிக்க மிகுபுகழ் தாங்குபவோ தற் சேர்ந்தார், ஒற்கம் கடைப்பிடியாதார'* என்னுஞ் சான்றோர் செய்யுட்களிலும் இம் முடிபு தீர்த்துரைக்கப்படும். தக்கவாறு தெளிவில்லாமையினாலேயே உலகத்தில் நற்செயல்கள் நிகழாமற் போதலின், இப்பாட்டுத் தகுமுறையிற் காரணங் காட்டுவதாயிற்று.

**94.** இம்மி யரிசித் துணையானும் வைகலும்
நும்மில் இயைவ கொடுத்துண்மின் ;—உம்மைக்
கொடாஅ தவரென்பர் குண்டுநீர் வையத்
தடாஅ அடுப்பி னவர்.

(பொ - ள்) இம்மியரிசித் துணையானும் - 'இம்மியரிசி' எனப்படும் ஒருவகைச் சிறிய அரிசியின் அளவாவது, வைகலும் நும்மின் இயைவ கொடுத்துண்மின் - நாடோறும் உமக்குக் கூடியன பிறர்க்குக் கொடுத்துப் பின் உண்ணுங்கள்; ஏனென்றால்; உம்மைக் கொடாதவரென்பர் குண்டு நீர் வையத்து அடா அடுப்பினவர் - கடல் சூழ்ந்த இவ்வுலகத்தில் சமைத்தலில்லாத அடுப்பினையுடைய வறியவர்

* ஐந்திணையைம். சஅ.

கள் முற்பிறப்பிற் பிறர்க்கு ஒன்று உதவாதவர்கள் என்று சான்றோர் கூறுவர்.

(க - து) இயைந்த அளவாவது பிறர்க்கு உதவுதலை மேற்கொள்ளவேண்டும்.

(வி - ம்) 'இம்மியரிசி' யென்பதை "மத்தங்காய்ப் புல்லரிசி" என்பர் நச்சினார்க்கினியர் சிந்தாமணியுரையில்;* மிகச் சிறியதாகலின், 'இம்மி யரிசி' நுவலப்பட்டது. பிறர்க்குக் கொடுக்க இயலாத நாளை இன்னாத நாளாகக் கருதுவாராகலின், 'வைகலும்' எனப்பட்டது. உம்மை - முற்பிறப்பு. குண்டு நீர், ஆழமான நீர்நிலை என்னும் பொருட்டாய்க் கடலை உணர்த்திற்று. மிகக் கொடிய வறுமை தோற்றுதற்கு 'அடாஅ அடுப்பினவர்,' எனப்பட்டது, இரக்கம் என்னும் உயிர்ப்பண்பு மிகும்பொருட்டு இங்ஙனம் இப் பிறப்பில் அவர் துன்புறுவோராயினர். ச

**95.** மறுமையும் இம்மையும் நோக்கி ஒருவற்கு
உறுமா றியைவ கொடுத்தல்;—வறுமையால்
ஈதல் இசையா தெனினும் இரவாமை
ஈதல் இரட்டி யுறும்.

(பொ - ள்) மறுமையும் இம்மையும் நோக்கி - மறுமை இம்மை நிலைகளைக் கருதி, ஒருவற்கு உறுமாறு இயைவ கொடுத்தல் - கூடிய பொருள்களைத் தக்கமுறையில் ஒருவனுக்குக் கொடுக்கவேண்டும்; வறுமையால் ஈதல் இசையாதெனினும்-அப்படிக் கொடுப்பதும் வறுமையினால் மாட்டாதாயினும், இரவாமை - பிறரை இரவாமலிருப்பது, ஈதல் இரட்டி உறும் - அவ் வறுமைக் காலத்தில் கொடுத்தலினும் இருமடங்கு தக்கதாகும்.

(க - து) வறுமைக் காலத்தில் தான் பிறரை இரவாதிருத்தலும், தன்னிடம் இரந்து வந்தவர்க்கு இயைந்தன கொடுத்தலும் ஒருவர்க்குக் கடமை.

(வி - ம்) உறுமாறு கொடுத்தல் - உள்ளமும் உரையும் செயலும் இனியனாய்த் தருதல்; பொருந்தும் வகையில் என்றபடி. ரு

* சிந். ௩: ௩.

96. நடுவூருள் வேதிகை சுற்றுக்கோட் புக்க
படுபனை யன்னர் பலர்நச்ச வாழ்வார்;
குடிகொழுத்தக் கண்ணுங் கொடுத்துண்ணா மாக்கள்
இடுகாட்டுள் ஏற்றைப் பனை.

(பொ - ள்) பலர் நச்ச வாழ்வார் - பலரும் தம்மை விரும்பி அணுகும்படி வள்ளன்மையுடன் வாழ்பவர்கள், நடுவூருள் வேதிகை சுற்றுக்கோட் புக்க படுபனை அன்னர் - ஊர் நடுவில் மேடையினால் சூழ்ந்துகொள்ளுந்தலைப் பொருந்திய காய்த்தலையுடைய பெண்பனையை ஒப்பர்; குடிகொழுத்தக்கண்ணும் கொடுத்துண்ணா மாக்கள் - தமது குடி செல்வமிக்க காலத்தும் பிறர்க்கு வழங்கியுண்ணாத மாக்கள், இடுகாட்டுள் ஏற்றைப் பனை - சுடுகாட்டுள் நிற்கும் காய்த்தலில்லாத ஆண்பனையேயாவர்.

(க - து) பிறர்க்கு வழங்கிப் பலர் நச்ச வாழ்தல் வேண்டும்.

(வி - ம்) படுதல், இங்குக் காய்க்குந் தன்மை யுடையதாதல். கொழுத்தக்கண், வினையெச்சம். 'ஏற்றை' எனவே ஆசிரியர் தொல்காப்பியர் ஒரு பெயர் குறிப்பாராதலின்,* அதன் ஈற்று ஐகாரம் சாரியையெனக் கூறவேண்டுவதின்று. சு

97. பெயற்பால் மழைபெய்யாக் கண்ணும், உலகம்
செயற்பால செய்யா விடினும்,—கயற்புலால்
புன்னை கடியும் பொருகடல் தண்சேர்ப்ப!
என்னை உலகுய்யு மாறு.

(பொ - ள்) கயல் புலால் புன்னை கடியும் பொருகடல் தண் சேர்ப்ப - கயல் மீனின் புலால் நாற்றத்தைப் புன்னை தனது மலர் மணத்தால் நீக்குகின்ற அலைமோதுங் கடலின் குளிர்ந்த கரையினையுடைய தலைவனே, பெயல்பால் மழை பெய்யாக்கண்ணும் - பெய்தற் குரியதான மழை பெய்யாத போதும், உலகம் செயற்பால செய்யாவிடினும் - உயர்ந்

* தொல். மரபி. உ.

தோர் பிறர்க்குச் செய்தற்குரிய உதவிகளைச் செய்யா விட்டாலும், என்னை உலகு உய்யுமாறு - உலகத்துயிர்கள் பிழைக்கும் வகை எவ்வாறு?

(க - து) மழையைப்போலப் பெரியோர் பிறர்க்கு உதவியாயிருக்கவேண்டும்.

(வி - ம்) காலத்திற் பெய்தல், கைம்மாறு கருதாது பெய்தல்; வேறுபாடின்றிப் பெய்தல், மீண்டும் மீண்டும் பெய்தல் முதலியன மழையின் இயல்புகளாகக் கொள்ளப்படும். "அறுகுளத் துகுத்தும் அகல்வயற் பொழிந்தும், உறுமிடத்து உதவாது உவர்நிலம் ஊட்டியும், வரையா மரபின மாரிபோல"* "கழிந்தது பொழிந்தென வான்கண் மாறினும்"† எனபவை முதலிய சான்றோர் செய்யுட்களினெல்லாம் இவ்வியல்புகள் காண்க. எ

98. ஏற்றகை மாற்றாமை என்னானுந் தாம்வரையா
தாற்றாதார்க் கீவதாம் ஆண்கடன்—ஆற்றின்
மலிகடல் தண்சேர்ப்ப மாறீவார்க் கீதல்
பொலிகடன் என்னும் பெயர்த்து.

(பொ - ள்) மலி கடல் தண் சேர்ப்ப - வளம நிறைந்த கடலின் குளிர்ந்த கரையை யுடையவனே, ஆற்றின் - ஒருவர்க்கு ஒன்று உதவுவதானால், ஏற்ற கை மாற்றாமை என்னானும தாம் வரையாது - இரந்த கையை மறுமல் இயன்றது எதையேனும் வேறுபாடின்றி, ஆற்றாதார்க்கு ஈவது ஆம் ஆண் கடன்-கைமமாறு செய்ய இயலாத வறிஞர்க்கு உதவுவதே ஓர் ஆண்மகனின் கடமையாகும். மாறு ஈவார்க்கு ஈதல் பொலி கடன் * என்னும். பெயர்த்து - எதிருதவி செய்வார்க்கு ஒன்று உதவுதல் விளக்கமான கடன் என்னும் பெயருடையது.

(க - து) எதிருதவி ஏதுஞ் செய்தலியலாத வறிஞர்க்கு இயன்றதை மறுமல் உதவுவதே ஆண்மை யாகும்.

(வி - ம்) "ஆற்று மாக்கள் அரும்பசி களைவோர் மேற்றே உலகின் மெய்ந்நெறி வாழ்க்கை" யாதலின்‡ இங்ஙனங் கூறினர். பொது

---

* புறம், உ௩உ. † புறம், உ௦௩. ‡ மணிமே. கக : ௯௩-௪.

வான கடனிலும் விளக்கமான கடன் என்றற்குப் 'பொலி கடன்,' எனப்பட்டது; எல்லார்க்குந் தெரிந்த கடன் என்பது கருத்து. அ

**99.** இறப்பச் சிறிதென்னு தில்லென்னு தென்றும்
அறப்பயன் யார்மாட்டுஞ் செய்க—முறைப்புதவின்
ஐயம் புகூஉந் தவசி கடிஞைபோல்
பைய நிறைத்து விடும்.

(பொ - ள்) இறப்பச் சிறிது என்னாது - நம்மிட மிருப்பது மிகவுஞ் சிறியது என்று கருதாமலும், இல் என்னாது - இல்லை என்று மறுத்துவிடாமலும், என்றும் - எப்போதும், அறப்பயன் யார்மாட்டும் செய்க - பய னுடையதான அறத்தை அனைவரிடத்தும் செய்து வருக. முறைப் புதவின் - வாயில்கடோறும், ஐயம் புகும் தவசி கடிஞைபோல்-பிச்சையெடுக்குந் தவசியின் உண்கலத்திற் போல, பைய நிறைத்துவிடும்-மெல்ல மெல்ல அறப்பயனை நிறைவாக்கிவிடும்.

(க - து) சிறிய உதவியாயினும் மருமற் செய்து வந்தால் மெல்ல மெல்லப் புண்ணியம் நிறைந்துவிடும்.

(வி - ம்) வேறுபாடின்றி என்றற்கு 'யார் மாட்டும்,' என்றார். 'செய்க' என்றது ஈண்டு கொடுத்துவருக என்னும் பொருட்டு. முறைப்புதவின் - முறையே வாயில்களில்; அஃதாவது வாயில்க டோறும் என்பது. 'புதவு' வாயிலென்னும் பொருட்டாதல், "பூரித் துப் புதவந்தோறும்,"* என்னுஞ் சிந்தாமணியிற் காண்க. தவசியின் பிச்சைக் கலம் எடுத்துக்காட்டினமையின், புண்ணியமும் ஆற்ற லோடு நிரம்புமென்பது கொள்ளப்படும். கூ

**100.** கடிப்பிடு கண்முரசம் காதத்தோர் கேட்பர்;
இடித்து முழங்கியதோர் யோசனையோர் கேட்பர்;
அடுக்கிய மூவுலகுங் கேட்குமே சான்றோர்
கொடுத்தா ரெனப்படுஞ் சொல்.

(பொ - ள்) கடிப்பு இடு கண் முரசம் காதத்தோர் கேட்பர் - குறுங்கோலால் ஒலிக்கப்படும் கண்போன்ற

* சிந். கஉ: கசுகூ.

இடத்தையுடைய முரசின்து ஒலியைக் காத எல்லை வரையி லுள்ளோர் கேட்பர்; இடித்து முழங்கியது ஓர் யோசனை யோர் கேட்பர் - இடித்து முழங்கிய மேகத்தினொலியை ஓர் யோசனை எல்லைவரையிலுள்ளோர் கேட்பர்; சான் ேறார் கொடுத்தார் எனப்படும் சொல் அடுக்கிய மூவுலகும் கேட்கும் - தக்கோரால், 'இவர் உதவிசெய்தவர்,' என்று மகிழ்ந்து கூறப்படும் புகழுரை அடுக்காகவுள்ள மூன்று உலகங்களில் உள்ளா ரனைவருங் கேட்டு நிற்பர்.

(க - து) பிறர்க்கு உதவிசெய்யும் வள்ளன்மையே ஒருவர்க்கு யாண்டும் புகழ்பரப்பும்.

(வி - ம்) கடிப்பு - முரசறையுங் கோல். காதம் - ஏழரை நாழிகை வழி யென்ப. முழங்கியதென்பது முழங்கிய ஒலியென் னும் பொருட்டாதலின் ஈண்டுப் பெயர். சிந்தாமணியுரையில்* 'யோசனை'யென்பது 'நாற்காத எல்லை என்பர் உரையாசிரியர் நச்சினார்க்கினியர். சான்றோராற் கூறப்படுஞ் சொல் எனப்படுதலின், ஞான ஒழுக்கங்களிற் சிறந்த அந்தணையோர்க்கு ஒன்று உதவுதலே சிறந்த ஈகையாகும் என்பது பெறப்படும்; "நன்றாய்ந்தடங்கினார்க்கு ஈத்துண்டல்," † என்றார் பிறரும். 

---

## கக. பழவினை

*முற்பிறப்பிற் செய்த வினைகளின் விளைவைப்பற்றி நுவல்வது.*

**101.** பல்லாவுள் உய்த்து விடினும் குழக்கன்று
வல்லதாம் தாய்நாடிக் கோடலைத்—தொல்லைப்
பழவினையும் அன்ன தகைத்தேதற் செய்த
கிழவனை நாடிக் கொளற்கு.

(பொ - ள்) பல் ஆவுள் உய்த்துவிடினும் - பல ஆக்க ளின் இடையில் செலுத்திவிடப்பட்டாலும், குழக்கன்று - இளைய ஆன் கன்று, வல்லதாம் தாய் நாடிக் கோடலை - தன் தாய் ஆவினைத் தேடித் தெரிந்தடைதலை வல்லதாகும்;

---

* சிந். அ: கடு. † அறநெறிச். கூஉ.

தொல்லைப் பழவினையும் - பிறப்புக்கள்தோறும் தொன்று தொட்டுவரும் பழவினையும், தன் செய்த கிழவனை நாடிக் கொளற்கு - தன்னைச் செய்த உரிமையாளனைத் தேடி அடையும் வகையில், அன்ன தகைத்தே - அத்தகைய தன்மையுடையதேயாகும்.

(க - து) பழவினை தனக்குரியவனைத் தவறாது சென்று பற்றும்.

(வி - ம்) "மழவுங் குழவும் இளமைப் பொருள,"* வாதலின் குழக்கன்றென்றது, இளங்கன்றை. தாய், இருதிணைக்கும் பொதுப் பெயர்; 'பெண்மை சுட்டிய எல்லாப் பெயரும்,'† என்ற விடத்து, 'எல்லாப் பெயரும்' என்றதனால் இம் முறைப்பெயரும் பெறப் பட்டது. 'தொல்லை,' யென்றார், தொடர்ந்துவருதல் தோன்ற. கிழவன்-உரிமை யுடையோன். விடாது பற்றும் என்றற்கு, இவ்வுரிமைப்பொருள் உணர்த்துஞ் சொல் வந்தது. க

**102.** உருவும் இளமையும் ஒண்பொருளும் உட்கும்
ஒருவழி நில்லாமை கண்டும்—ஒருவழி
ஒன்றேயும் இல்லாதான் வாழ்க்கை உடம்பிட்டு
நின்றுவீழ்ந் தக்க துடைத்து.

(பொ - ள்) உருவும் இளமையும் ஒண்பொருளும் உட்கும ஒருவழி நில்லாமை கண்டும் - தோற்றமும் இளமை நிலையும் மேன்மை வாய்ந்த செல்வமும் நன்மதிப்பும் எல்லாரிடமும் ஒரே வகையாகப் பொருந்தாமை நேரிற் பார்த்தும், (அதற்குக் காரணம் பழவினையே யென்றும், ஆகவே, நல்வினைகள் செய்தால் மேற் பிறவிகளில் நன்னிலைமைகள் பொருந்தும்போதுமென்றும் அறிந்தொழுகாமல்) ஒருவழி ஒன்றேயும இல்லாதான் வாழ்க்கை - யாதானும் ஒரு வகையால் ஒரு நல்வினையையேனும செய்யாதவனது உயிர்வாழ்க்கை, உடம்பு இட்டு நின்று வீழ்ந்தக்கது உடைத்து - உடம்பு தோற்றிச் சிலகாலம் பயனில்லாமல் இருந்து பின் இறந்துபோகும் வீண் நிலையினையே யுடையதாகும்.

* தொல். உரி. கச. † தொல். பெய. உரு.

(க - து) நல்வாழ்வுக்குக் காரணம் நல்வினையே யென்றறிந்து அதனை இயன்ற அளவிலாயினுஞ் செய்து பிறவியைப் பயனுடையதாக்குதல் வேண்டும்.

(வி - ம்) செல்வம், அறம் முதலிய நோக்கங்கட்குப் பயன் படுதற்குரியதாகலின், 'ஒண்பொரு' ளெனப்பட்டது. நில்லாமை - நின்று பொருந்தாமை. 'உடம்பு இட்டு' என்பதற்குத் 'தம்மைப் போல் உடம்பு மாத்திரையாக உணர்ச்சியில்லாச் சில குழந்தைகளைத் தோற்றி,' என உரைத்தலும் ஒன்று. வீழ்ந்தக்கது என்பது 'வீழ்ந் தகையது,' என்னும் பொருட்டு; இதனால் உட்கு முதலியன இல்லாத வாழ்க்கை வீண் என்பது பெறப்பட்டது; "உட்கில்வழி வாழா ஆக்கம் மிக இனிதே,"* என்றார் பிறரும். உ

**103.** வளம்பட வேண்டாதார் யார்யாரு மில்லை ;
அளந்தன போகம்† அவரவ ராற்றன் ;
விளங்காய் திரட்டினார் இல்லை, களங்கனியைக்
காரெனச் செய்தாரும் இல்.

(பொ - ள்) வளம்பட வேண்டாதார் யார்யாரும் இல்லை - செழுமைபெற விரும்பாதவர் உலகில் ஒருவரு மில்லை. அளந்தன போகம் அவரவர் ஆற்றல் - ஆனால் இன்பநுகர்வு அவரவர் முன்வினைப்படியே அளவு செய்யப் பட்டுள்ளன. விளங்காய் திரட்டினார் இல்லை களங்கனி யைக் கார் எனச் செய்தாரும் இல் - விளங்காயை உருண்டை வடிவினதாக அமைத்தவரும் இல்லை, களம் பழத்தைக் கரிய உருவினதாகச் செய்தவரும் இல்லையாதல் போல வென்க.

(க - து) அவ்வவற்றின் முறைப்படியே அவையவை அமைதலின், வளம்பெற விரும்புவோர் அதற்கேற்ப நல் வினை செய்தல்வேண்டும்.

(வி - ம்) யார்யாரு மில்லை என்னும் அடுக்கு எஞ்சாமைப் பொருளது. ஆற்றல் - வினைவழியே. 'திரட்டினாரில்லை; செய் தாருமில்,' என்றது, எடுத்துக்காட்டுவமையணி. ங

---

* இனியவைநாற். உஎ. † சிந். நாம. கஅச.

104. உறற்பால நீக்கல் உறுவர்க்கும் ஆகா,
பெறற்பா லனையவும் அன்னவாம்; மாரி
வறப்பின் தருவாரும் இல்லை, அதனைச்
சிறப்பின் தணிப்பாரும் இல்.

(பொ - ள்) *உறற்பால நீக்கல் உறுவர்க்கும் ஆகா - உருத்து வருந் தீவினைகளை நீக்குதல் சான்றோர்க்கும் ஆகாது. பெறற்பால் அனையவும் அன்னவாம்-அங்ஙனமே அடைந்தின்புறற்குரிய நன்மைகளும் அப் பெரியோர்களால் தடை செய்தற்குரியன அல்லவாம். மாரி வறப்பின் தருவாரும் இல்லை, சிறப்பின் அதனைத் தணிப்பாரும் இல்லை - மழை பெய்யாதொழியின் அதனைப் பெய்விப்பாருமில்லை; மிகப் பெய்யின் அதனைத் தணிப்பாருமில்லையாதல்போல வென்க.*

(க - து) *இருவினைகளும் பொருந்தியே தீருமாதலின், தீவினைகளை நீக்கி நல்வினைகளைச் செய்தல் இன்றியமையாததாகும்.*

(வி - ம்) *உறுவர் - தக்கோர். ஆகா - பண்மையன்று; ஈறு தொகுத்தல். தீவினைகளை ஒப்பவே தவறாது வந்து பொருந்துவவான என்றற்கு 'அனையவும்' எனப்பட்டது. தருவாரும் தணிப்பாரு மென்னும் உம்மைகள் ஒன்றையொன்று தழீஇநின்றன. ஆற்றலாகிய வினையின் விளைவு அமையினன்றி மாரி தருவாருமில்லை, தணிப்பாருமில்லை என்பது கருத்தாகக் கொள்க.* ச

105. தினைத்துணைய ராகித்தந் தேசுள் ளடக்கிப்
பனைத்துணையார் வைகலும் பாடழிந்து வாழ்வர்;
நினைப்பக் கிடந்த தெவனுண்டாம் மேலை
வினைப்பய னல்லாற் பிற.

(பொ - ள்) *தினைத்துணையராகித் தேசு உள் அடக்கிப் பனைத்துணையார் வைகலும் பாடு அழிந்து வாழ்வர் - பனையளவினரான பெருமை யுடையோர் சிலர் நாடோறும் பெருமை குறைந்து தினையளவினராய்ச் சிறுத்துத் தம்து மேன்மையை உள்ளத்தில் அடக்கிக்கொண்டு உலகில்*

உயிர்பொறுத் திருக்கின்றனர் ; நினைப்பக் கிடந்தது எவன் உண்டு மேலை வினைப்பயன் அல்லால் பிற - இதற்குக் காரணம் முன்னை வினைப்பயனல்லால் வேறு கருதக் கிடந்தது யாதுண்டு !

(க - து) முன்னைத் தீவினை எத்தகைய பெரியோரையும் உருத்து வருத்தும்.

(வி - ம்) தினை பனை யென்னும் அளவுகள் கண்ணியங் கருதின. எவனுண்டாம் என்பதில், 'ஆம்' அசைநிலை. பிற, வேறு என்னும் பொருட்டு. தேசு என்பது மேன்மைப் பொருட்டாதல் "வலிசினமும் மானமும் தேசும்,"* என்னும் புறப்பொருள் வெண்பாமாலையினுங் காண்க. ரு

**106.** பல்லான்ற கேள்விப் பயனுணர்வார் வீயவும்
கல்லாதார் வாழ்வ தறிதிரேல்—கல்லாதார்
சேதனம் என்னுமச் சேறகத் தின்மையால்
கோதென்று கொள்ளாதாம் கூற்று.

(பொ - ள்) பல் ஆன்ற கேள்விப்பயன் உணர்வார் வீயவும் கல்லாதார் வாழ்வது அறிதிரேல்-பலவகைப்பட்ட பரந்த நூற்கேள்விகளின் பயனை அறிந்தொழுகுங் கற்றோர் உலகில் விரைவில் இறக்கவும் கல்லாதார் நீடு வாழ்வது எங்ஙனமென்று கருதுவீர்களானால் ; (அதற்குக் காரணம்) சேதனம் என்னும் அச்சேறு அகத்து இன்மையால் கோது என்று கொள்ளாதாம் கூற்று - அறிவென்னும் அப் பிழிவு அவர்கள் உள்ளத்தில் இல்லாமையால் அவர்களை வெறுங் கோது என்று கருதிக் கழித்துவிடுவான் கூற்றுவன் என்பது.

(க - து) சாதல் நேரினும் கற்றல் கேட்டல் முதலிய நல்வினைகளைச் செய்து புண்ணியம் பெறுதல்வேண்டும்.

(வி - ம்) கேள்வியின் பயனாவது மெய்யுணர்வுப்பேறு. அறிந்து ஒழுகுவாரென்றற்கு 'உணர்வார்' எனப்பட்டது. கற்றோர் அறிவுச்சாறு பெற்றுக் கனிந்துவிட்டோராதலின், பிறவிப் பயனை

* புறப். வெ. உ : ச.

அவர் அடைந்துவிட்டமை கருதி அதனினும் மேனிலையுறும் பொருட்டு விரைவில் அவரது ஊனுடல் கழற்றப்பட்டதெனவும், கல்லாதார் இன்னும் அத் தகுதி பெறாமையால் இவ்விடமே கழித்து விடப்பட்டன ரெனவுந் தெரிவித்து, அம் முகமாக, விரைவில் நல் வினை செய்து நன்னிலையுறுகவென அறிவுறீஇயது இச் செய்யுள். 'அச் சேறு' என்னுஞ் சுட்டுக் கல்வி கேள்வி யறிவு கருதிற்று. சு

**107.** இடும்பைகூர் நெஞ்சத்தார் எல்லாருங் காண
நெடுங்கடை நின்றுழல்வ தெல்லாம்—அடம்பப்பூ
அன்னங் கிழிக்கும் அலைகடல் தண்சேர்ப்ப!
முன்னை வினையாய் விடும்.

(பொ - ள்) அடம்பப்பூ அன்னம் கிழிக்கும் அலை கடல் தண் சேர்ப்ப-அடம்பங்கொடியின் மலரை அன்னப் பறவைகள் கோதுகின்ற அலைமோதுங் கடலின் குளிர்ந்த துறைவனே, இடும்பை கூர் நெஞ்சத்தார் எல்லாரும் காண நெடுங்கடை நின்றுழல்வதெல்லாம் - மக்களிற் சிலர், துன்பம் மிக்க உள்ளத்தவராய் எல்லாருங் காணும்படி பெரிய வீடுகளின் நெடிய தலைவாயிலில் நின்று பிச்சையேற்றுழல்வதெல்லாம், முன்னை வினையாய் விடும் - ஆராய்ந்து பார்க்குங்கால் பழவினைப்பயனாய் முடிந்து நிற்கும்.

(க - து) நல்வினையுடையோர் இரந்துழலார்.

(வி - ம்) எளனமும் இரக்கமுந் தோன்ற 'எல்லாருங் காண' எனவும், உழல்வாரது ஏழைமை நன்கு வெளிப்பட 'நெடுங்கடை' எனவுங் கூறப்பட்டன. அடம்பு நெய்தல் நிலத்து நீர்ப் பூங்கொடி. "அடும்பிவர் அணியெக்கர்"* என்றார் பிறரும். எ

**108** அறியாரும் அல்லர் அறிவ தறிந்தும்
பழியோடு பட்டவை செய்தல்—வளியோடி
நெய்தல் நறவுயிர்க்கும் நீள்கடல் தண்சேர்ப்ப!
செய்த வினையான் வரும்.

(பொ - ள்) வளி ஓடி நெய்தல் நறவு உயிர்க்கும் நீள் கடல் தண் சேர்ப்ப - காற்று வீசி நெய்தல்மலர் தேன்

* கலி. கூஉ : கசு.

சிந்தும் பரந்த குளிர்ந்த கடற்கரையின் தலைவனே ! அறி யாரும் அல்லர் அறிவது அறிந்தும் பழியோடு பட்டவை செய்தல் செய்த வினையான் வரும் - மக்களிற் சிலர் அறி யாதாருமல்லராய் அறியத்தக்கதை அறிந்தும் பழியோடு கூடிய தீச்செயல்களைச் செய்தல் முன் செய்த தீவினையால் நேர்வதாகும்.

(க - து) அறிஞராய் விளங்குதலோடு பழிப்படா நல்வினைகளுஞ் செய்து புண்ணியப் பேறுடையராதல் வேண்டும்.

(வி - ம்) 'இது தீது; இது செய்யின் இதன் விளைவு இத் தனைத் துன்பமாகும்,' என்பதை அறிந்தவரே யென்றற்கு, 'அறி யாருமல்லர்,' எனப்பட்டது. 'அறிவது' என்றது, ஒழுக்க முறைமைகள். ஒடியென்னும் எச்சம் காரணப்பொருட்டு. நெய் தல் - ஒரு மலர். "சான்றோர் பழியொடு வரூஉம் இன்பம் வெஃ கா,"*ராதலின், இது முன்வினைப்பாலதாயிற்று. அ

**109.** ஈண்டுநீர் வையத்துள் எல்லாரும் எத்துணையும்
வேண்டார்மன் தீய ; விழைபயன் நல்லவை ;
வேண்டினும் வேண்டா விடினும் உறற்பால
தீண்டா விடுத லரிது.

(பொ - ள்) ஈண்டு நீர் வையத்துள் - மிக்க நீரை யுடைய கடலாற் சூழப்பட்ட உலகத்தில், எல்லாரும் எத் துணையும் வேண்டார் தீய - யாரும் சிறிதும் துன்பந்தருந் தீயவற்றை விரும்பமாட்டார்கள். விழை பயன் நல்லவை - எல்லாரும் எவ்வளவும் விரும்புகின்ற பயன்கள் இன்பந் தரும் நல்லனவே. வேண்டினும் வேண்டாவிடினும் உறற் பால தீண்டாவிடுதல் அரிது - மக்கள் விரும்பினாலும் விரும்பாவிட்டாலும் அவர்கள்பால் வந்து பொருந்துதற் குரியன பொருந்தாதொழிதல் இல்லை.

(க - து) இன்பந் தரும் நல்லவற்றையே மக்கள் விரும்புதலால், அவற்றிற்கேற்றபடி நல்வினைகளைச் செய்து வரல்வேண்டும்.

---

* அகநா. கஅஉ.

(வி - ம்) மன் - அசைநிலை. 'தீண்டா' என்னும் வினையெச்ச ஈறு தொக்கது. அரிதென்றது, "மனக்கவலை மாற்ற லரிது,"* என்புழிப்போல இன்மைப் பொருட்டு. கூ

**110.** சிறுகா பெருகா முறைபிறழ்ந்து வாரா
உறுகாலத் தூற்றுகா ஆமிடத்தே யாகும்
சிறுகாலைப் பட்ட பொறியும் அதனால்
இறுகாலத் தென்னை பரிவு.

(பொ - ள்) சிறுகாலைப் பட்ட பொறியும் - கருவமையுங் காலத்திலேயே அமைந்த ஊழ்வினைகளும், சிறுகா பெருகா முறைபிறழ்ந்து வாரா உறுகாலத்து ஊற்றுகா ஆமிடத்தே ஆகும் - குறையமாட்டா, மிகமாட்டா, முறைமாறிப் பொருந்தமாட்டா, உற்ற காலத்தில் உதவியாகமாட்டா, உதவியாதற்குரிய காலத்தில் உதவியாகும். அதனால் - ஆதலால், இறுகாலத்து என்ன பரிவு - ஊழ்வினையாற் கெடுங்காலத்தில் வருந்துவது ஏன் ?

(க - து) ஊழ்வினைகளை நுகர்ந்தே தீரவேண்டுமாதலின், தீவினைகள் செய்யாதிருத்தல் வேண்டும்.

(வி - ம்) 'ஊன்றுகா' என்பது ஊற்றுகா என நின்றது ஊன்று - ஈண்டு ஊன்றுகோல்; ஊன்றுகோல்போல உதவியாகா என்பது கருத்து. எவ்வளவு துன்புற்றாலும் வினை உருத்து வருத்துமேயல்லது அவ்வுற்ற நேரத்தில் உதவிசெய்யாதென்றற்கு அங்ஙனங் கூறப்பட்டது. உதவி செய்தற்குரிய நல்வினையாயின் உதவும் என்றற்கு 'ஆமிடத்தே ஆகும்' எனப்பட்டது. சிறுகாலை யென்றது பிறவித் தொடக்கத்தை; ஈண்டுக் கருவின் நிலையை உணர்த்திற்று. பொறியும் என்னும் உம்மை எதிரது தழீஇய தாய்ப் பின்னர்ச் செய்யும் வினைகளும் அத்தகையனவே என்பதைப் புலப்படுத்தி நின்றது. 'என்னை' யெனப்பட்டது, பயனில்லை யென்றற்கு. பரிவு என்றார், பெற்ற காலத்துற்ற அன்பினால் வருந்துதலின். இக் கருத்து, சிந்தாமணியில் † 'நோதலும் பரிவு மெல்லாம்,' என விதந்துரைக்கப்பட்டது. கO

---

* குறள், க : எ.   † சிந். க: உ௬O.

## கஉ. மெய்ம்மை

'மெய்ம்மை'யாவது ஒன்றன் இயற்கைத் தன்மை; ஈண்டு உலகத்தின் இயல்பு இனைத்தென்று நுவன்றபடி.

**111.** இசையா ஒருபொருள் இல்லென்றல் யார்க்கும்
வசையன்று வையத் தியற்கை—நசையழுங்க
நின்றோடிப் பொய்த்தல் நிரைதொடீஇ! செய்ந்நன்றி
கொன்றாரின் குற்ற முடைத்து.

(பொ - ள்) இசையா ஒரு பொருள் இல் என்றல் - கொடுக்க இயலாத ஒரு பொருளை இரப்போர்க்கு இல்லை என்று கூறிவிடுதல், யார்க்கும் வசை அன்று வையத்து இயற்கை - யார்க்கும் பழியாகாது, அஃது உலகத்தின் இயற்கையேயாகும்; நசை அழுங்க நின்று ஓடிப் பொய்த்தல் - ஆசையால் நையுமபடி உதவுவார்போல் தோன்றிக் காலம் நீடிப்பின் பொய்த்துவிடுதல், நிரைதொடீ - ஒழுங்காக அமைந்த வளையல்களையணிந்த மாதே! செய்ந்நன்றி கொன்றாரின் குற்றம் உடைத்து-ஒருவர் செய்த நன்றியை அழித்தாரது குற்றத்தை யொப்பத் தீதுடைத்தாகும்.

(க - து) இயன்றதை உடனே உதவிவிடுதல் உண்மை அறம்.

(வி - ம்) ஓடி - காலந்தாழ்த்தென்னும் பொருட்டு; தன்வினைக்கண் வந்தது, அஃது அவன் செயலாதலின். நெடுங்காலம் நம்பி அதுகாறும் வள்ளல் நிலையில் வைத்துப் பெருமைப்படுத்தினமையின் இரப்போர் நன்றி செய்தவராகின்றனராதலின்; அவரைப் பொய்த்தல் செய்ந்நன்றி கொல்லுங் குற்றத்தோடொப்பதாயிற்று; அக் குற்றமாவது, கழுவாய் இல்லாத குற்றம்;* இச்செய்யுட்பொருள், "ஒல்லுவ தொல்லும் என்றலும், யாவர்க்கும் ஒல்லாது இல்லென மறுத்தலும் இரண்டும் ஆள்வினை மருங்கிற் கேண்மைப்பாலே; ஒல்லாதொல்லும் என்றலும் ஒல்லுவது இல்லென மறுத்தலும் இரண்டும் வல்லே இரப்போர் வாட்டலன்றியும் புரப்போர் புகழ் குறைபடூஉம் வாயில்" † என்னும் புறச்செய்யுட்கண்ணுங் கண்டு கொள்ளப்படும்.

---

* புறம். உச. † புறம். கசுக.

**112.** தக்காரும் தக்கவ ரல்லாரும் தந்நீர்மை
எக்காலுங் குன்றல் இலராவர் ;—அக்காரம்
யாவரே தின்னினும் கையாதாம் கைக்குமாம்
தேவரே தின்னினும் வேம்பு.

(பொ - ள்) *தக்காரும் தக்கவரல்லாரும் தம் நீர்மை எக்காலும் குன்றல் இலராவர்* - சான்றோரும் சான்றவரல்லாதாரும் தத்தம் இயல்புகள் எப்பொழுதும் குறைதல் இலராவர். *அக்காரம் யாவர் தின்னினும் கையாது* - கருப்பங்கட்டியை யார் தின்றாலும் கைக்காது. *கைக்கும் தேவரே தின்னினும் வேம்பு* - தேவரே தின்றாலும் வேப்பங்காய் கசக்கும்.

(க - து) *நல்லோருந் தீயோரும் அவரவரியல்பை எந்நிலையிலுங் காட்டிக்கொண்டிருப்பர்.*

(வி - ம்) *நீர்மை என்றது, இங்கே இயற்கைப் பண்பு. எக்காலுமென்றது, வறுமையிலுஞ் செம்மையிலும் தக்கார் முன்னுந் தகாதார் முன்னும் என்க. ஏகாரமும் ஆம் என்பதும் அசை. தேவரேயென்னும் ஏகாரம் பிரிநிலை. யாவரே யென்றார் தேவரல்லாதாருமென்றற்கு. தேவர், ஈண்டு நல்லோரென்னும் பொருட்டு.* ௨

**113.** காலாடு போழ்திற் கழிகிளைஞர் வானத்து
மேலாடு மீனின் பலராவர்—ஏலா
இடரொருவர் உற்றக்கால் ஈர்ங்குன்ற நாட !
தொடர்புடையேம் என்பார் சிலர்.

(பொ - ள்) *காலாடு போழ்தில் கழிகிளைஞர் வானத்து மேல் ஆடு மீனின் பலர் ஆவர்* - சாய்கால் உண்டான காலத்தில் மேலே வானத்தில் விளங்குகின்ற விண்மீன்களைப்போல நெருங்கிய உறவினர் பலராவர்; *ஏலா இடர் ஒருவர் உற்றக்கால்*-ஒவ்வாத வறுமையை ஒருவர் அடைவராயின், *ஈர் குன்ற நாட* - குளிர்ந்த மலைகளையுடைய நாடனே ! *தொடர்புடையேம் என்பார் சிலர்* - அக்காலத்தில், நட்புடையேம் என்று உரிமை பாராட்டுவோர் சிலராவர்.

(க - து) சாய்காலுள்ளபோது பலரும் சூழ்ந்து நின்று, வறுமை வந்தபோது அவர் பிரிந்துபோவது உலகியற்கை.

(வி - ம்) உலகில் உண்மை நட்புடையோர் சிலர் என்றபடி. கால் ஆடு போழ்தில் - காலம் ஆக்கமாக நடைபெறுகின்ற போழ்தில் என்க; சாய்கால் என்பதன் பொருளும் அது; இலக்கணையால் ஈங்குச் செல்வாக்குணர்த்திற்று. விண்மீன்கள் பன்மைக்குஞ் செறிவுக்கும் உவமை. 'சிலராவர்' எனவும், 'ஒருவர் காலாடு போழ்தில்' எனவும் ஒட்டிக்கொள்க. சிந்தாமணியுரையில் நச்சினார்க்கினியர் 'கண் ஆடி ஒன்று,' என்று வருமிடத்தில் * "கண் எல்லாரிடத்தும் உலாவி வென்று; 'கால் ஆடு போழ்தின்,' என்றாற்போல" என்றுரைத்து இதனை எடுத்துக் காட்டினார். இதனாற் 'கால்' என்பதை உடம்பின் உறுப்பாகிய கால் என்று அவர் கருதினமைபெறப்படும். இதனினுங் 'காலம்' என்னும் மேலுரை அதற்குச் சிறக்குமா றறிந்துகொள்க. ௩

114. வடுவிலா வையத்து மன்னிய மூன்றில்
நடுவண தெய்த இருதலையும் எய்தும்
நடுவண தெய்தாதான் எய்தும் உலைப்பெய்
தடுவது போலுந் துயர்.

(பொ - ள்) வடு இலா வையத்து மன்னிய மூன்றில் - குற்றமில்லாத உலகத்தில் இன்றியமையாதனவாய்ப் பொருந்திய அறம் பொருள் இன்பம் என்னும் மூன்று உறுதிப் பொருள்களுள், நடுவணது எய்த இருதலையும் எய்தும் - நடுவில் நின்றதான 'பொருள்' என்பதை ஒருவன் அடைய அது காரணமாக அதன் இருபக்கத்தனவான 'அறம்' 'இன்பம்' என்னும் இரண்டையும் அவன் அடைவான். நடுவணது எய்தாதான் - அவ்வாறு நடுவில் நின்றதான செல்வப்பொருளை அடையாதவன், எய்தும் உலைப் பெய்து அடுவதுபோலும் துயர்-கொல்லன் உலையில் இட்டு இரும்பைக் காய்ச்சுவதுபோலும் வறுமைத் துன்பத்தை அடைந்து நைவன்.

(க - து) தக்கோர்க்குப் பொருள் ஏனையெல்லா அறங்களையும் நல்கும்.

---

* சிந். கக : க.

(வி - ம்) அறமுதலா உறுதிப் பொருள்களை நாடும் நல்லோரை நினைந்து 'வடுவிலா வையம்,' எனப்பட்டது. மூன்றறங்கள் கூறினர், இவற்றின் விடுதலை வீடாகலின். மன்னிய வென்னும் நிலைபேற்று மொழியாற் கூறியது; இவற்றின் பேறு பல பிறவிகளினுந் தொடர் தலின் என்க. ஒன்றன் படர்க்கையாதலின் * எய்தும் என்னுஞ் செய்யுமென் முற்று வந்தது. இச் செய்யுட்கு ஓர் விரிவுரை போலப் 'பாரோர் சொலப்பட்ட மூன்றன்றே அம் மூன்றும் ஆரா யிற்றானே அறம்பொரு ளின்பமென்று ஆரார் இவற்றின் இடைய தனை எய்துவார் சீரார் இருதலையும் எய்துவார்'† என நாலாயிரப் பனுவல் விளக்கிச் செல்லுதலும் இங்கு நினைவு கூரற்பாலது. ௪

115. நல்லாவின் கன்றாயின் நாகும் விலைபெறூஉம்
கல்லாரே யாயினும் செல்வர்வாய்ச் சொற்செல்லும்
புல்லீரப் போழ்தின் உழவேபோல் மீதாடிச்
செல்லாவாம் நல்கூர்ந்தார் சொல்.

(பொ - ள்) நல் ஆவின் கன்றாயின் நாகும் விலைபெறா உம் - உயர் இனத்து ஆவின் கன்றாயின் இளங்கன்றும் மிக்க விலைபெறும், கல்லாரே யாயினும் செல்வர் வாய்ச் சொல் செல்லும - ஆதலின் படியாதவரேயாயினும் செல்வரது வாய்ச்சொல் மதிக்கப்படும்; நல்கூர்ந்தார் சொல் புல் ஈரப் போழ்தின் உழவேபோல் மீதாடிச் செல்லா - வறிஞரது வாய்மொழி, அவர் கற்றவரே யாயினும், சிறிது ஈரமுள்ள காலத்தில் உழுகின்ற உழவுபோல மேலளவாய்ச் சென்று உள்ளே மதிக்கப்படாதொழியும்.

(க - து) கல்வியுடையராயினும் உலகத்திற் செல்வமும் எய்தி வாழ முயலல்வேண்டும்.

(வி - ம்) 'நல் ஆ' என்றது செல்வரையும், 'நாகு' என்றது அவருட் படிப்பில் இளையராயினரையும், 'புல் ஈரம்' என்றது செல்வமில்லாக் கல்வியாளர்பால் உலகு காட்டுஞ் சிறுமதிப்பை யுங் குறிப்பால் உணர்த்தின. ஏ, ஆம் அசை. புலவர் சொல்லே ருழவராதலின்,‡ ஈண்டு உழவுவமை ஆற்றலுடைத்து. ரு

---

* தொல். வினை ௩௦. † சிறிய திருமடல். ௩-௪.

‡ புறம். ௪௬.

**116.** இடம்பட மெய்ஞ்ஞானங் கற்பினும் என்றும்
அடங்காதார் என்றும் அடங்கார்;—தடங்கண்ணாய்
உப்பொடு நெய்பால் தயிர்காயம் பெய்தடினும்
கைப்பரு பேய்ச்சுரையின் காய்.

(பொ - ள்) இடம்பட மெய்ஞ்ஞானம் கற்பினும் என்றும் - விரிவுமிக மெய்யுணர்வு நூல்களை என்றுங் கற்பினும், அடங்காதார் என்றும் அடங்கார் - இயல்பாக அமைந்தொழுகாதவர் என்றும் அமைந்தொழுகார்; தடம் கண்ணாய் - அகன்ற கண்களையுடைய மாதே! உப்பொடு நெய் பால் தயிர் காயம் பெய்து அடினும் - உப்போடு நெய் பால் தயிர் பெருங்காயம் இட்டுச் சமைத்தாலும், கைப்பு அறு பேய்ச சுரையின் காய் - பேய்ச்சுரையின் காய்கள் தம் கசப்பியல்பு நீங்கா.

(க - து) இயற்கைத் தன்மை எதனாலும் நீங்காது.

(வி - ம்) ஞானம், ஆகுபெயர். என்றுங் கற்பினுமெனக் கொண்டு வாழ்நாள் முழுமையும் கற்றாலும் என்று உரைத்துக் கொள்க. தண்ணாள் என்பது விளித்தலிற் கண்ணாய் என நின்றது. * பொதுவாம் முதன்மை நோக்கி உப்பு ஒடுக்கொடுத்துப் பிரிக்கப்பட்டது. நெய் பால் தயிர் என்பவற்றுள் எதனை இட்டு அடினும் என்பது கருத்து. சு

**117.** தம்மை இகழ்வாரைத் தாமவரின் முன்னிகழ்க;
என்னை அவரொடு பட்டது?—புன்னை
விறற்பூங் கமழ்கானல் வீங்குநீர்ச் சேர்ப்ப!
உறற்பால யார்க்கும் உறும்.

(பொ - ள்) தம்மை இகழ்வாரைத் தாம் அவரின்முன் இகழ்க - தம்மைப் புறக்கணிப்பவரை அவரினும் முற்படத் தாம் புறக்கணிக்க; என்னை அவரொடு பட்டது - என்ன அவரோடு உண்டான தொடர்பு! புன்னை விறல் பூ கமழ் கானல் வீங்குநீர்ச் சேர்ப்ப - புன்னையின் வெற்றிவாய்ந்த மலர் மணங் கமழ்கின்ற சோலைகளையுடைய கடற்கரைத்

* தொல். விளி. உக.

தலைவ! உறற்பால யார்க்கும் உறும் - வரற்குரிய நன்மை தீமைகள் யார்க்கும் வரும்.

(க - து) வருவன வந்தே தீருமாதலின் அதன் பொருட்டு உலகத்தில் யாரும் தம் கண்ணியத்தைக் குறைத்துக்கொள்ளுதலாகாது.

(வி - ம்) இகழ்தல் ஈண்டுப் புறக்கணித்தற்பொருட்டு; அவரின் முன் - அவர் இகழ்தற்குமுன்பே. எதுவும் தம் பழவினைப்படியே வருதலின், 'என்னை அவரொடுபட்டது,' என்றார். 'உறற்பால தீண்டா விடுதல் அரிது,'* என்றார் முன்னும். கடலின் புலால் நாற்றத்தைக் கடிதலின் புன்னைமலர்க்கு விறல் நுவலப்பட்டது. வீங்கு நீர் - கடல்; மிக்க நீர் என்னும் பொருட்டா வந்தது. பிறர்க்குத் தாழ்ந்தொழுகுவாரை நினைந்து 'யார்க்கும்' என்றாரென்க. எ

**118.** ஆவே றுருவின வாயினும், ஆபயந்த
பால்வே றுருவின வல்லவாம்;—பால்போல்
ஒருதன்மைத் தாகும் அறநெறி, ஆபோல்
உருவு பலகொளல் ஈங்கு.

(பொ - ள்) ஆ வேறு உருவினவாயினும் ஆ பயந்த பால் வேறு உருவின அல்ல - ஆக்கள் வேறுவேறு நிறத்தனவாயினும் அவ்வாக்கள் உதவிய பால்கள் அவ்வாறு வேறுவேறு நிறத்தன அல்ல; பால்போல் ஒரு தன்மைத்தாகும் அறம் - பாலைப்போல் அறம் ஒரே தன்மையுடையதாகும்; நெறி ஆ போல் உருவு பல கொளல் ஈங்கு - இவ்வுலகில் அவ்வறத்தை ஆற்றும முறைகள் ஆக்களைப் போல் பல செயல்களாக உருக்கொள்ளற்குரியது.

(க - து) இயன்ற செயல்களின்வாயிலாக அறத்தைத் தேடிக்கொள்ளவேண்டும்

(வி - ம்) உரு, நிறத்திற்காயிற்று; 'களங்கனி யன்ன கதழ்ந்து கிளர் உருவின்'† என்றார் பிறரும். கொளல் என்னும் முற்று ஈண்டு உடன்பாட்டிற் படர்க்கைக்கண் வந்தது. பல செயல் முகமாகவும் அறந் தேடிக்கொள்ளுதற்குரியதாக உலகத்தின் இயல்பு அமைந்திருக்கின்றதென்பது பொருள். ஆம் - அசை. அ

* நாலடி. கக : க. † மலைபடு. நடசு.

119. யாஅர் உலகத்தோர் சொல்லில்லார் ? தேருங்கால்
யாஅர் உபாயத்தின் வாழாதார் ?—யாஅர்
இடையாக இன்னாத தெய்தாதார் ? யாஅர்
கடைபோகச் செல்வம்உய்த் தார் ?

(பொ - ள்) தேருங்கால் - உலகியலை ஆராயுமிடத்து, யார் உலகத்து ஓர் சொல் இல்லார் - உலகத்தில் ஒரு பழிச் சொல் இல்லாதவர் யார்? யார் உபாயத்தின் வாழாதார் - யாதானும் ஓர் ஏதுவினால் உலகில் வாழாதவர் யார்? யார் இடையாக இன்னாதது எய்தாதார் - வாழ்வின் இடையே இடர் அடையாதார் யார் ? யார் கடைபோகச் செல்வம் உய்த்தார் - முடிவுவரையிற் செல்வத்தை நுகர்ந்தவர் யார்? யாருமில்லை.

(க - து) இன்ப துன்பங்கள் கலந்துவருவதே உலகியற்கை

(வி - ம்) யார் என்னும் வினா ஒருவருமிலர் என்னும் விடையை உட்கொண்டது. ஈதொப்பதை 'அறிபொருள் வினா,' என்பா சேனாவரையா.* அறியலுறவினா, அறிவுறுத்துதலின், இங்ஙனம் வினாவும் விடையாகும் என்பது. உபாயம் என்றது, பலவகைப் பட்ட தொழிலேதுக்களை உணாத்தும். உய்த்தல் - ஆளல் ; ஈண்டு நுகர்தலென்க. கூ

120 தாஞ்செய் வினையல்லால் தம்மொடு செல்வதுமற்
றியாங்கணும் தேரின் பிறிதில்லை;—ஆங்குத்தாம்
போற்றிப் புனைந்த உடம்பும் பயமின்றே,
கூற்றங்கொண் டோடும் பொழுது.

(பொ - ள்) தேரின் - ஆராய்ந்தால், தாம் செய் வினை யல்லால் தம்மோடு செல்வது யாங்கணும் பிறிது இல்லை - தாம் செய்த நல்வினை தீவினைகளல்லாமல் தம் உயிரோடு துணைவருவது எப்பிறவியிலும் பிறிதெதுவுமில்லை, ஆங்கு தாம் போற்றிப் புனைந்த உடம்பும் பயம் இன்று கூற்றம் கொண்டு ஓடும்பொழுது - கூற்றுவன் உயிரைப் பிரித்

* தொல். கிளவி. கங.

தெடுத்துக்கொண்டு செல்லும்பொழுது அதுகாறும் தாம் பாதுகாத்து அழகுகள் செய்துகொண்ட உடம்பும் அவ்வாறே பயனின்றாயிற்று.

(க - து) செல்லுங் கதிக்கு உறுதுணையாக நல்வினைகள் செய்துகொள்ளல்வேண்டும்.

(வி - ம்) மற்று, ஏ - அசை. ஆங்கு, பிறிதெதுவும் துணைவராததுபோல என்னும்பொருட்டு. போற்றிப் புனைந்தவென்பது, அச் செயல்களினும் புண்ணியம் ஈட்டுஞ் செயல் முதன்மையானதென்னுங் குறிப்பிற்று. இது, குறிப்பெச்சமாக* வருவித்து உணர்ந்துகொள்ளப்படும். ௧0

---

## ௧௩. தீவினையச்சம்

தீவினை செய்தற்கு அஞ்சுதல்

**121.** துக்கத்துள் தூங்கித் துறவின்கட் சேர்கலா
மக்கட் பிணத்த சுடுகாடு—தொக்க
விலங்கிற்கும் புள்ளிற்கும் காடே புலன்கெட்ட
புல்லறி வாளர் வயிறு.

(பொ - ள்) சுடுகாடு துக்கத்துள் தூங்கித் துறவின்கண் சேர்கலா மக்கள் பிணத்த - உலகத்திலுள்ள சுடுகாடுகள், வாழ்க்கைத் துன்பங்களிற் கிடந்தழுந்தி, அவற்றினின்று நீங்குதற்குரிய துறவற நெறியிற் சார்ந்தொழுகாத கீழ்மக்களின் பிணங்களையுடையன; புலன் கெட்ட புல்லறிவாளர் வயிறு - ஆனால் நல்லறிவு கெட்ட புல்லறிவாளரின் வயிறுகளோ, தொக்க விலங்கிற்கும் புள்ளிற்கும் காடு-தொகுதியான விலங்குகளுக்கும் பறவைகளுக்கும் இடுகாடுகளாயிருக்கின்றன.

(க - து) பிற உயிர்களைக் கொன்றுண்ணுந் தீவினைக்கு அஞ்சுதல் வேண்டும்.

---

* தொல். எச். ௪௪.

(வி - ம்) அருளொழுக்கமுடைய சான்றோர் நோய்கொண்டு மறையாமல், செயற்கருஞ் செயல்கள் செய்து தூயராய் மறைதலால்* அவர்கள் மறையும் இடம், புனிதமாகப் போற்றப்படுதலின், 'சுடுகாடுகள் கீழ்மக்கள் பிணங்களையுடையன' எனப்பட்டது. அக் கீழ்மக்களினும் இழிந்தனவான சிற்றுயிர்களின் பிணங்களையுடையன புல்லறிவாளர் வயிறுகள் என்க. பலகாலுந் தின்று உள்ளே செலுத்துதலின் 'தொக்க' எனவும், நல்லோர் கூறும் அறவுரைகளையேனும் கேட்டொழுகுதலில்லாமையின் 'புல்லறிவாளர்' எனவும் உரைக்கப்பட்டன. ஏகாரம், ஈற்றசை. க

**122.** இரும்பார்க்குங் காலராய் ஏதிலார்க் காளாய்க்
கரும்பார் கழனியுட் சேர்வர்—சுரும்பார்க்குங்
காட்டுளாய் வாழுஞ் சிவலும் குறும்பூழும்
கூட்டுளாய்க் கொண்டுவைப் பார்.

(பொ - ள்) சுரும்பு ஆர்க்கும் காட்டுளாய் வாழும் சிவலும் குறும்பூழும் கூட்டுளாய்க் கொண்டு வைப்பார் - வண்டுகள் ஆரவாரிக்கும் இனிய காட்டில் இருந்து உயிர் வாழும் கவுதாரியையும் காடையையும் கூட்டில் இருந்து வருந்தும்படி பிடித்துக்கொண்டு வந்து சிறை வைப்பவர், இரும்பு ஆர்க்கும் காலராய் ஏதிலார்க்கு ஆளாய் கரும்பார் கழனியுள் சேர்வர் - இருப்பு விலங்குகளாற் பூட்டப்பட்ட கால்களையுடையராகவேனும் அயலார்க்கு அடிமைப்பட்டவர்களாகவேனும் கட்டுப்பட்டு வலிய பார்நிலத்திலாதல் விளைநிலத்திலாதல் போய்த் தொழில் செய்து உழல்வர்.

(க - து) சிற்றுயிர்களைச் சிறைப்படுத்துந் தீவினைக்கும் அஞ்சுதல்வேண்டும்.

(வி - ம்) "பூவைகிளி தோகைபுணர் அன்னமொடு பன்மா, யாவையவை தங்கிளையின் நீங்கிஅழ வாங்கிக், காவல்செய்து வைத்தவர்கள் தங்கிளையின் நீங்கிப். போவர்புகழ் நம்பிஇது பொறிலது கண்டாய்',† என்றார் பிறரும். காலராய்க் கரும் பார் சேர்வர், ஆளாய்க் கழனியுட் சேர்வர் என நிரனிறையாகக் கொள்க. கரும் பார் சேர்தல் சிறைச்சாலைகளுட் செய்யுந் தொழில். இரும்பு,

* புறம். கககூ, உகஅ. † சிந். கரு: உஎஎ.

ஆகுபெயர். சிவலும் குறும்பூழுமென்றது, இலக்கணையாற் பிற சிற்றுயிர்களையும் உணர்த்தும். பின் அடிகளில் வரும் ஆய் இரண்டனுள் முன்னது செய்தெனெச்சமும் பின்னது செயவெனெச்சமுமாகக் கொள்க. உ

123. அக்கேபோல் அங்கை யொழிய விரலழுகித்
துக்கத் தொழுநோய் எழுபவே—அக்கால்
அலவனைக் காதலித்துக் கான்முரித்துத் தின்ற
பழவினை வந்தடைந்தக் கால்.

(பொ - ள்) அக்கால் அலவனைக் காதலித்துக் கால் முரித்துத் தின்ற பழவினை வந்தடைந்தக்கால்-முற்பிறப்பில் நண்டின் ஊனை விரும்பி அதன் கால்களை ஒடித்துத் தின்ற பழவினை இப்போது வந்தடைந்தால், அக்குபோல் அங்கை ஒழிய விரல் அழுகித் துக்கத் தொழுநோய் எழுப - சங்கு மணிபோல வெண்ணிறமாய் உள்ளங்கைகள் மட்டும் இருக்க ஏனை விரல்களெல்லாம் அழுகிக் குறைந்து துன்பத்திற்கேதுவான தொழுநோய் உண்டாகப்பெறுவர்.

(க - து) ஊனுண்ணுந் தீவினைக்கு அஞ்சி அதனை விடல்வேண்டும.

(வி - ம்) ஏகாரங்கள் அசைநிலை. 'அகஙகை' யென்பது "அகமென் கிளவிக்கு"* என்னும் விதிப்படி 'அங்கை' என நின்றது. 'எழுப' வென்பது ஈண்டு உயர்திணை யீறு. அக்கால் கால் முரித்த விரல் இக்கால் அழுகிக் குறைந்த தென்பது. ௩

124. நெருப்பழற் சேர்ந்தக்கால் நெய்போல் வதூஉம்
எரிப்பச்சுட் டெவ்வநோய் ஆக்கும்—பரப்பக்
கொடுவினைய ராகுவர் கோடாருங் கோடிக்
கடுவினைய ராகியார்ச் சார்ந்து.

(பொ - ள்) நெருப்பு அழல் சேர்ந்தக்கால் நெய்போல் வதும் எரிப்பச் சுட்டு எவ்வம் நோய் ஆக்கும் - உடம்புக்கு நன்மை செய்யும் நெய்யும நெருப்பின் அழற்சியைப்

* தொல். புள்ளி. ௨௦.

பொருந்தினால், எரிந்து தீயும்படி சுட்டு மிக்க வருத்தந் தரும் நோயை உண்டாக்கும்; கொடாரும் கடுவினைய ராகியார்ச் சார்ந்து கோடிப் பரப்பக் கொடுவினைய ராகுவர் - நெறிகோணாத நல்லோரும் தீவினையராயினரைச் சார்ந்து அதனால் நெறிகோணி மிக்க கொடுந்தொழிலுடைய ராவர்.

(க - து) தீச்செயலாளரோடு சேர்தற்கு அஞ்சுதல் வேண்டும்.

(வி -ம்) 'போல்வது' மென்பது ஒப்பில்போலி* சார்ந்து என்னும் எச்சம் காரணப்பொருட்டு. இயல்பில் நல்லோரும் தீய சேர்க்கையால் திண்ணமாய்த் தீயோராக மாறிவிடுவர் என்று அவ் வகையில் ஐயமின்மையை இச்செய்யுள் உணர்த்திற்று. ச

**125.** பெரியவர் கேண்மை பிறைபோல நாளும்
வரிசை வரிசையா நந்தும்—வரிசையால்
வானூர் மதியம்போல் வைகலும் தேயுமே
தானே சிறியார் தொடர்பு.

(பொ - ள்) பெரியவர் கேண்மை பிறைபோல நாளும் வரிசை வரிசையா நந்தும் - சான்றோர் நட்பு பிறைத்திங் களைப்போல ஒவ்வொரு நாளும் முறைமுறையே வளரும்; சிறியார் தொடர்பு வான் ஊர் மதியம்போல் வைகலும் வரிசையால் தானே தேயும் - கீழோர் உறவு வானத்தில் தவழ்கின்ற முழுத் திங்களைப்போல ஒவ்வொரு நாளும் முறையாகத் தானே தேய்ந்தொழியும்.

(க - து) சிற்றினத்தாரோடு சேர்தற்கு அஞ்சுதல் வேண்டும்.

(வி - ம்) முழுத் திங்கட்கு 'மதி' எனவும், குறைத் திங்கட்குப் 'பிறை' எனவும் வரும் சொல் வழக்குக் கருத்திருத்துதற்குரியது. தானே என்பதை முன்னுங் கூட்டலாம். 'வரிசை வரிசையா' என்னும் அடுக்கு உவகைப்பொருட்டு. வான் ஊர்தல் பிறைக்கும் உரியதேனுஞ் சிறப்புநோக்கி மதியத்துக்கு அடைமொழியாக வந் தது. இச் செய்யுளின் உவமமும் பொருளும் "நிறைநீர நீரவர்

* தொல். இடை, கூ0.

கேண்மை பிறைமதிப், பின்னீர பேதையர் நட்பு,"* என்னுந் திருக்குறளில் உள்ளவாறே உள்ளன. ௫

சான்றோ ரெனமதித்துச் சார்ந்தாய்மன் சார்ந்தாய்க்குச்
சான்றாண்மை சார்ந்தார்கண் இல்லாயின்—சார்ந்தாய்கேள்
சாந்தகத் துண்டென்று செப்புத் திறந்தொருவன்
பாம்பகத்துக் கண்ட துடைத்து.

(பொ - ள்) சான்றோர் என மதித்துச் சார்ந்தாய்மன்- நீ சிலரைக் குணநிறைந்தவர் என மதித்து மிகுதியும் உறவு கொள்கின்றனை; சார்ந்தாய்க்குச் சான்றாண்மை சார்ந்தார்கண் இல்லாயின்-அவ்வாறு உறவு கொள்ளும் நினக்கு நீ சார்வோரிடத்தில் குணநிறைவு காணப்படாதாயின், சார்ந்தாய் கேள் - ஆராயாமல் உறவுகொள்வோனே, கேட்பாய்; சாந்து அகத்து உண்டு என்று செப்புத் திறந்து ஒருவன் பாம்பு அகத்துக் கண்டது உடைத்து-அச்செயல், சந்தனம் உள்ளே இருக்கின்றதென்று கருதிச் சிமிழைத் திறந்து, ஒருவன், பாம்பை அதனுள் கண்டாற்போன்ற தன்மையுடையது.

(க - து) எவரோடும் ஆராயாமல் நட்புக்கொள்வதற்கு அஞ்சுதல் வேண்டும்.

(வி - ம்) இச்செய்யுள் மனத்தை விளித்துக் கூறியபடி; மன், மிகுதிப்பொருட்டு. நிகழ்கால வினைகள் மனத்தின் விரைவு நோக்கி இறந்தகால வினைகளாக வந்தன.† உவமையிற் பாம்பென்றது பொருளில் தீக்குணங்களை. கருதி என ஒரு சொல் வருவிக்க. ௬

127. யாஅர் ஒருவர் ஒருவர்தம் உள்ளத்தைத்
தேருந் துணைமை யுடையவர்—சாரல்
கனமணி நின்றிமைக்கும் நாட! கேள்; மக்கள்
மனம்வேறு செய்கையும் வேறு.

(பொ - ள்) யார் ஒருவர் ஒருவர்தம் உள்ளத்தைத் தேரும் துணைமை உடையவர் - எவரொருவர், ஒருவரது

* குறள். எக௨: ௨. † தொல். வினை. ௪௪.

உள்ளத்தைத் தேர்ந்து துணியும் ஆற்றலுடையவர்? சாரல் கன மணி நின்று இமைக்கும் நாட - மலைச்சாரலில் பெரிய மாணிக்க மணிகள் கிடந்து ஒளிவிடும் நாடனே கேள்; மக்கள் மனம் வேறு செய்கையும் வேறு - உலகத்தில் மக்களின் உள்ளமும் வேறு செய்கையும் வேறாயிருக்கின்றனவே!

(க - து) நட்பாராய்தலிலும் பலகால் பலவழியால் ஆராய்ந்து துணிதல் வேண்டும்.

(வி - ம்) நற்செயல் கண்டவுடன் உள்ளமும் அத்தகையதென்று உடனே துணிந்துவிடலாகாதென்பது பொருள். 'யாரொருவர் உடையவர்' என்னும் வினா, அரிதாதல் நோக்கி எழுந்தது. துணைமை, துணையால் உண்டாம் ஆற்றல் கருதி அப் பொருட்டாயிற்று. எ

**128.** உள்ளத்தான் நள்ளா துறுதித் தொழிலராய்க்
கள்ளத்தான் நட்டார் கழிகேண்மை—தெள்ளிப்
புனற்செதும்பு நின்றலைக்கும் பூங்குன்ற நாட!
மனத்துக்கண் மாசாய் விடும்.

(பொ - ள்) உள்ளத்தான் நள்ளாது உறுதித்தொழிலராய்க் கள்ளத்தான் நட்டார் கழிகேண்மை - அகத்தால் நேயங்கொள்ளாது, ஆனால் உறுதியான நேயத்துக்குரிய செய்கைகளை மேலே உடையவராய்க், கரவினால் நேயஞ் செய்தவரது மிக்க நட்பு; புனல் தெள்ளிநின்று செதும்பு அலைக்கும் பூ குன்ற நாட - நீர் தெளிவுடையதாய் ஒழுகிச் சேற்றை அலைத்தொதுக்கும் அழகிய மலைகள் விளங்குகின்ற நாட்டையுடையவனே! மனத்துக்கண் மாசாய் விடும் - என்றும் மனத்தில் வேதனை தருங் குற்றமாய் முடியும்.

(க - து) மேலோடு செய்யும் நட்புக்கு அஞ்சுதல் வேண்டும்.

(வி - ம்) உள்ளத்தானென்றது ஈண்டு அகத்தன்பினால் என்னும்பொருட்டு; கழிகேண்மை யென்றார் அத்தகைய நட்புக்கு

மூதலில் அவ்வாறு மிகுநெருக்கமாயிருப்பதும் ஓர் அறிகுறியாதலின். 'அல்வழியெல்லாம் உறழெனமொழிப'*வாதலின் எதுகைநோக்கிப் 'புனற்செதும்பு' எனத் திரிபேற்றது. அ

**129.** ஒக்கிய ஒள்வாள்தன் ஒன்னார்கைப் பட்டக்கால்
ஊக்கம் அழிப்பதூஉம் மெய்யாகும்—ஆக்கம்
இருமையுஞ் சென்று சுடுதலால் நல்ல
கருமமே கல்லார்கண் தீர்வு.

(பொ - ள்) ஒக்கிய ஒள் வாள் தன் ஒன்னார் கைப்பட்டக்கால் ஊக்கம் அழிப்பதூஉம் மெய்யாகும் - ஓங்கிய தனது ஒளிமிக்க வாள் தன் பகைவர் கையில் அகப்பட்டு விட்டால் அது தனது மனவலிமையைக் கெடுப்பதும் திண்ணமாகும்; ஆக்கம் - அவ்வாறே தீயோர் கைப்பட்ட தனது செல்வம், இருமையும சென்று சுடுதலால் - இம்மை மறுமை என்னும் தன் இருமைப்பயன்களையும் தொடர்ந்து கெடுத்தலால், நல்ல கருமமே கல்லார்கண் தீர்வு - அத்தகைய மூடர்களிடத்தினின்று நட்பு நீங்குதல் அறச் செய்கையேயாகும்.

(க - து) கல்லாத மூடர் சேர்க்கையினின்று அஞ்சி விலகுதல்வேண்டும்.

(வி - ம்) 'ஊக்கம் அழிப்பதும்' என்னும் உம்மை 'மேல் உயிரை அழிப்பதும்' என்னும் எதிரது தழீஇயது. 'கைப்பட்டக்கால்' என்பதை ஆக்கம் என்பதற்கும் 'ஆகும்' என்பதைக் கருமமே என்பதற்குமு கொள்க. தனது பொருள் கல்லாத மூடர் வழியாகப் பலர்க்குந் தனக்குந் தீஙகு விளைத்தலாலும், இம்மையிற் செய்த வினைகள் மறுமையிலுந் தொடர்தலாலும் 'இருமையுஞ் சென்று சுடுதல்' நுவலப்பட்டது. க

**130.** மனைப்பாசம் கைவிடாய் மக்கட்கென் றேங்கி
எனைத்தூழி வாழ்தியோ நெஞ்சே—எனைத்தும்
சிறுவரையே யாயினும் செய்தநன் றல்லால்
உறுபயனே இல்லை உயிர்க்கு.

* தொல். புள்ளி. எ௬.

(பொ - ள்) மனைப் பாசம் கைவிடாய் மக்கட்கென்று ஏங்கி - மக்கட்கு நல்வாழ்க்கை அமையும்பொருட்டு மனம் ஏங்கி வாழ்க்கைப்பற்றை இன்னும் விடமாட்டாய்; எனைத்து ஊழி வாழ்தியோ நெஞ்சே - நெஞ்சமே, அதற்காக நீ எத்தனை ஊழி வாழவிருக்கின்றனையோ? எனைத்தும் சிறுவரையேயாயினும் செய்தநன்றல்லால் உறுபயனோ இல்லை உயிர்க்கு - சிற்றளவாயினும் செய்த அறச்செயலன்றி உயிர்க்கு அடையும் பயன் வேறு சிறிதும் இல்லை.

(க - து) செய்யும் நல்வினைகளே உயிரோடு தொடர்ந்து வரும்.

(வி - ம்) "வாழச்செய்த நல்வினை யல்லது ஆழுங்காலைப் புணை பிறிதில்லை"* என்றார் பிறரும். வாழ்நாள் சிறிதாதலை நினைந்து 'எனைத்தூழி வாழ்தியோ' எனப்பட்டது. எனைத்தும் இல்லை என்று கூட்டுக. 'உயிர்க்கு' என்றமையின் மறுமை பெறப்படும். ௧0

அறத்துப்பால்

முற்றும்

---

* புறம். ௩௬௭.

# உ. பொருட் பால்

இது பொருளை உணர்த்தும் பகுதி; அறத்தைப்போல் இம்மை மறுமை வீடு என்னும் மூன்றற்கும் நேரே காரணமாதலின்றித், துய்த்தலானும் வழங்குதலானும் முறையே இம்மை மறுமை இரண்டற்குமட்டும் ஓராற்றால் காரணமாதல்பற்றி, இப் பொருட்பால் அறத்துப்பாலை அடுத்துநின்றது.

## கச. அதி. கல்வி

கற்றற்குரிய நூல்களைக் கற்றல். பொருளைத் தேடுதற்கும் தேடிய பொருளைப் பயன்படுத்துதற்கும் கல்வி காரணமாதலின் இது பொருட்பாலின்கண் அமைந்தது.

**131.** குஞ்சி யழகும் கொடுந்தானைக் கோட்டழகும்
மஞ்சள் அழகும் அழகல்ல—நெஞ்சத்து
நல்லம்யாம் என்னும் நடுவு நிலைமையால்
கல்வி அழகே அழகு.

(பொ - ள்) குஞ்சி அழகும் கொடு தானைக் கோடு அழகும் மஞ்சள் அழகும் அழகு அல்ல - மயிர்முடியின் அழகும் வளைத்து உடுக்கப்படும் ஆடையின் கரையழகும மஞ்சட் பூச்சின் அழகும் மக்கட்கு முடிந்த அழகுகள் அல்ல; நெஞ்சத்து நல்லம் யாம் என்னும் நடுவுநிலைமையால் கல்வி அழகே அழகு - நாம் நல்லமாக ஒழுகுகின்றோம் என்று தம் மனம அறிய உண்மையாக உணரும் ஒழுக்கத்தைப் பயத்தலால் மக்கட்கு கல்வியழகே உயர்ந்த அழகாகும்.

(க - து) நல்லொழுக்கம் பயக்கும கல்வியே மக்கட்கு உயர்வான அழகாகும்.

(வி - ம்) குஞ்சி, ஆடவர் தலைமயிர் முடி; மஞ்சள், சிறப்பாக மகளிர் பூசிக்கொள்ளும் மஞ்சள்நிறமான மணப்பூச்சு; தானை, இருபாலார் ஆடைக்கும் ஒக்கும்; ஆதலின், இச்செய்யுள் பொதுவாக மக்கட்குரிய கல்வியழகை உணர்த்திற்றென்க. "நடைவனப்பும் நாணின் வனப்பும் வனப்பல்ல, எண்ணோ டெழுத்தின் வனப்பே வனப்பு"* எனப் பெண்பாலாரையும் உட்கொண்டு பிறரும்

* ஏலாதி. எரு.

அறிவுறுப்பர். 'குஞ்சி' முதலியன இலக்கணையால் பிற அழகு களையும் உட்கொண்டன. நெஞ்சத்து என்றார், மனமறிய என் றற்கு; நடுநிலைமையாலென்றார், உண்மையாக உணருமா என்றற்கு. 'யாம் நல்லம்' என்றது, தலைமைபற்றி வந்த தன்மைப்பன்மை. க

**132.** இம்மை பயக்குமால் ஈயக் குறைவின்றால்
தம்மை விளக்குமால் தாமுளராக் கேடின்றால்
எம்மை யுலகத்தும் யாங்காணேம் கல்விபோல்
மம்மர் அறுக்கும் மருந்து.

(பொ - ள்) இம்மை பயக்கும் - நல்வாழ்க்கையாகிய இம்மைப்பயனை விளைவிக்கும்; ஈயக் குறைவு இன்று - பிறர்க்குக் கற்பித்தலால் குறைவுபடுதல் இல்லை; தம்மை விளக்கும் - தம்மை அறிவாலும் புகழாலும் விளங்கச் செய்யும்; தாம் உளராக் கேடு இன்று ஆல் - தாம் இருக்க அது கெடுதல் இல்லை ஆதலால், எம்மை உலகத்தும் யாம் காணேம் கல்விபோல் மம்மர் அறுக்கும மருந்து - எப பிறவியின் உலகத்திலும் கல்விபோல் அறியாமை மயக்கத் தைத் தீர்க்கும் மருந்தை யாம் காண்கின்றிலேம்.

(க - து) கல்வியே, எல்லா வாழ்க்கை யின்னல்கட்குங் காரணமான அறியாமையாகிய மயக்கத்தைத் தீர்க்கும்.

(வி - ம்) ஆல் காரணப்பொருட்டால் ஒவ்வொன்றனோடும் வந்தது. ஈதல் ஈண்டுக் கற்பித்தல். மக்கள் பலநாள் உள்ளவராகச செல்வம் அதற்கு முன்னரே கெட்டொழிதலும் உண்டாதல் போலக் கல்வி கெடுதல் இல்லை யென்றற்குத் 'தாம் உளராக் கேடு இன்று,' எனப்பட்டது. தேவருலகத்து அமிழ்தமும் உடற்பிணியை நீக்கு மன்றி உயிர்ப்பிணியாகிய மருட்சியைத் தீர்க்காதாதலின் 'எம்மை யுலகத்துங் காணேம்,' என்றார். அறத்தீர்க்கும் என்றற்கு அறுக்கும் என வந்தது; 'துயரங்கள் அண்டாவண்ணம் அறுப் பான்'* என்புழிப்போல. உ

**133.** களர்நிலத் துப்பிறந்த உப்பினைச் சான்றோர்
விளைநிலத்து நெல்லின் விழுமிதாக் கொள்வர்;
கடைநிலத்தோ ராயினுங் கற்றறிந் தோரைத்
தலைநிலத்து வைக்கப் படும்.

* தேவா. குப : க.

(பொ - ள்) களர் நிலத்துப் பிறந்த உப்பினைச் சான்றோர் விளைநிலத்து நெல்லின் விழுமிதாக் கொள்வர் - உவர் நிலத்தில் தோன்றிய உப்பைப் பெரியோர் விளைநிலத்தில் உண்டாகும் நெல்லினும் மிக்க பயனுடையதாகப் பயன் படுத்துவர்; கடைநிலத்தோராயினும் கற்றறிந்தோரைத் தலைநிலத்து வைக்கப்படும் - ஆதலால், கீழ்க்குடியிற் பிறந்தோராயினும் கற்றறிந்தோரை மேற்குடியாரினும் மேலிடத்து வைத்து மதித்தல் உண்டாகும்.

(க - து) கல்வி, மாந்தரை உயர்வகுப்பாரினும் மேலவராக மதிக்கவைக்கும்.

(வி - ம்) "கீழ்ப்பாலொருவன் கற்பின் மேற்பாலொருவனும் அவன்கட் படுமே,"* என்றார் பிறரும். தேவராகக் கருதச்செய்யும் என்றபடி: தேவர்க்குப் புலவரென ஒரு பெயருண்மையானும், "தேவரனையர் கயவர்" † என்னுங் குறிப்பால் 'தேவரனையர் புலவர்' ‡ என்னும் அதன் மறை புலப்படுதலானும் இவ்வுண்மை தேறப்படும். பயன் தெரிவோர் என்னுங் கருத்தால் 'சான்றோர்' என உயர்த்துக் கூறப்பட்டது. கடைநிலம் என்றவிடத்து, நிலம், பிறந்தவிடத்தை உணர்த்திற்று. 'கற்றறிந்தோரை வைக்கப்படும்' என்னும் முடிவு "வஞ்சரை அஞ்சப்படும்"$ என்றாற்போல நின்றது. க

134. வைப்புழிக் கோட்படா; வாய்த்தீயிற் கேடில்லை;
மிக்க சிறப்பின் அரசர் செறின்வவ்வார்;
எச்சம் எனவொருவன் மக்கட்குச் செய்வன
விச்சைமற் றல்ல பிற.

(பொ - ள்) வைப்புழிக் கோட்படா - வைத்த இடத்திலிருந்து பிறரால் கரவிற்கொள்ளப்படாது; வாய்த்து ஈயின் கேடு இல்லை - நன்மாணாக்கர் வாய்த்து அவர்க்குக் கற்பிக்க நேருமானால் அதனால் அழிதல் இல்லை; மிக்க சிறப்பின் அரசர் செறின் வவ்வார் - தம்மினும் மிக்க செல்வாக்கினால் அரசர் வெகுளல் நேரினும் கவர இயலாதவராவர்; எச்சம் என ஒருவன் மக்கட்குச் செய்வன

* புறம். கஅங. † குறள், கOஅ: க. ‡ நான்மணிக். எ௫.
$ குறள், அங; ச.

விச்சை மற்று அல்ல பிற - ஆதலால், வைப்பு என ஒருவன் தன் மக்கட்குத் தேடி வைக்கத்தக்கவை கல்வி களே பிற அல்ல.

(க - து) கல்வியே மக்கட்குத் தேடி வைக்கத்தக்க அழியாத செல்வம்.

(வி - ம்) "கேடில் விழுச்செல்வம் கல்வி"* யாதலின் இங்ஙனங் கூறினர். வாய்த்து என்றார், வாய்ப்பது அருமையாதலாலும், தக்கோர்க்கு ஈயின் அவா வாயிலாகத் தமக்கும் வேறு பிறர்க்கும் பெருகுதலுண்டாதலாலு மென்க. மற்று - அசை; பிற என்னுங் குறிப்புச் செல்வத்தின்மேற்று. ச

135. கல்வி கரையில; கற்பவர் நாள்சில;
மெல்ல நினைக்கின் பிணிபல;—தெள்ளிதின்
ஆராய்ந் தமைவுடைய கற்பவே நீரொழியப்
பாலுண் குருகின் தெரிந்து.

(பொ - ள்) கல்வி கரை இல - கல்விகள் அளவில்லாதன; கற்பவர் நாள் சில - ஆனால், கற்பவர் வாழ்நாட்களோ சிலவாகும்; மெல்ல நினைக்கின் பிணி பல - சற்று அமைதியாக நினைத்துப்பார்த்தால் அச் சில வாழ்நாட்களில் பிணிகள் பலவாயிருக்கின்றன; தெள்ளிதின் ஆராய்ந்து அமைவுடைய கற்ப நீர் ஒழியப் பால் உண் குருகின் தெரிந்து - நீர் நீங்கப் பாலை உண்ணும் பறவையைப்போல அறிஞர்கள் பொருத்தமுடைய நூல்களைத் தெரிந்து அவற்றைத் தெளிவுகொள்ள ஆராய்ந்து கற்பார்கள்.

(க - து) தக்க மெய்ந்நூல்களையே தெரிந்து தெளிவாகக் கற்றல்வேண்டும்

(வி - ம்) மேலும் † இக் கருத்து வரும். கல்வியென்றது ஈண்டுக் கலைநூல்களும் பல தலையான சமய நூல்களுமாகும். பாலுண் குருகு, நீரை உண்ணுதலோடு அமைதியடையும் பல பறவைகள் போலன்றிப், பாலுண்ணுதலில் மகிழ்வு மிகுதியுமுடைய பறவை

* குறள். ௪0 : ௧0. † நாலடி. ௧௪ : ௧0

யாகும்; அதனை 'அன்னப் புள் என்பது வழக்கு. அமைவென்றது, ஈண்டுத் தகுதி; அது மெய்யுணர்வை உணர்த்தும். தெரிந்து ஆராய்ந்து கற்ப என்க. ௫

136. தோணி யியக்குவான் தொல்லை வருணத்துக்
காணிற் கடைப்பட்டான் என்றிகழார்—காணாய்
அவன்துணையா ஆறுபோ யற்றேநூல் கற்ற
மகன்துணையா நல்ல கொளல்

(பொ - ள்) தோணி இயக்குவான் தொல்லை வருணத்துக் காணின் கடைப்பட்டான் என்று இகழார் அவன் துணையா ஆறுபோயற்று - படகு செலுத்துவோன் பழைமையான சாதிகளில், நினைக்குமிடத்துக், கடைப்பட்ட சாதியைச் சேர்ந்தவனென்று புறக்கணியாராய் அவன் துணையாக ஆற்றைக் கடந்துபோன தன்மையை ஒக்கும்; நூல்கற்ற மகன் துணையா நல்ல கொளல் - அறிவுநூல்கள் கற்ற பெருமகனொருவன் துணையாக மெய்ப்பொருள்களை அறிந்துகொள்ளுதல் என்க.

(க - து) கல்விக்குமுன் பிறப்பின் உயர்வுதாழ்வு கருதத்தக்கன அல்ல.

(வி - ம்) 'நல்ல கொளல் ஆறுபோ யற்று' என்க. தோணி யியக்குந்தொழில் இந்நாட்டிற் பழமையானதென்பது தோன்றத் 'தொல்லை வருணத்து' எனவும், பிறப்பின் உயர்வு தாழ்வு கருது தல் இயல்பன்று.* என்பது தோன்றக் 'காணின்' எனவும், எக்குடி பிறப்பினும் கல்விகேள்விகளுடையோரே மக்கள் என மதிக்கற்பாலரென்பது தோன்ற 'மகன்' எனவுங் கூறப்பட்டன. இகழார், முற்றெச்சம்; காணாய், முன்னிலை அசை. ஆறு கடத்தலென்னுங் குறிப்பால், வாழ்க்கையாற்றைக் கடந்து கரைசேர்தற்குக் கற்றோர் துணை இன்றியமையாததென்பது பெறப்படும். ௬

137. தவலருந் தொல்கேள்வித் தன்மை யுடையார்
இகலிலர் எஃகுடையார் தம்முட் குழீஇ
நகலின் இனிதாயிற் காண்பாம் அகல்வானத்(து)
உம்ப ருறைவார் பதி.

* புறம், 183.

(பொ - ள்) தவல் அரு தொல் கேள்வித் தன்மை யுடையார் இகல் இலர் எஃகு உடையார் தம்முள் குழீஇ நகலின் இனிதாயின் - அழிதலில்லாத பழைமையான நூற் கேள்விப் பேறுடையராய் முரணிலராய்க் கூரறிவுடைய ராய் விளங்குங் கற்றோருடன் சேர்ந்து அளவளாவி மகிழ்தலி னும் இனிமையுடையதாயின், காண்பாம் அகல்வானத்து உம்பர் உறைவார் பதி - அகன்ற விண்ணின் மேலிடத்தில் உறையுந் தேவர்களின் திருநகரைக் காண முயல்வோம்.

(க - து) துறக்க வின்பத்திலுங் கல்வியின்பமே உயர்ந்தது.

(வி - ம்) இஃது, அறிவு பொருளாகத் தோன்றும் உவகை.* தொன்றுதொட்டு ஆசிரிய மரபினரால் கேட்கப்பட்டு வரும் நூற் கேள்வியென அதன் சிறப்பியல்பு தோன்றும் பொருட்டுத் 'தொல் கேள்வி' யென்றதோடு, அவ்வகைத் தன்மையுடையாரெனவுங் கிளந்தோதப்பட்டது. இகலென்றது ஈண்டு, நூல்நெறி உலக நெறி யென்னும் இருவகை வழக்கோடும் முரண் என்க. இனி தாகாதென்றற்கு இனிதாயிற் காண்பாம் எனப்பட்டது. காண்பா மென்றது, பராமுகமான சொல். மேலிடம் என்றது, துறக்க வுலகை. பதி, அமராவதி யென்ப. கல்வியைப் போலத் துறக்க வுலகம் பேதைமை கெடுத்து நிலையான அறிவொளியின்பம் நல்காதாக லின், இவ்வாறு நுவலப்பட்டது. எ

138. கனைகடல் தண்சேர்ப்ப! கற்றறிந்தார் கேண்மை
நுனியின் கரும்புதின் றற்றே†—நுனிநீக்கித்
தூரின்தின் றன்ன தகைத்தரோ பண்பிலா
ஈரமி லாளர் தொடர்பு.

(பொ - ள்) கனைகடல் தண்சேர்ப்ப - ஒலிக்குங் கடலின் குளிர்ந்த துறைவ! கற்றறிந்தார் கேண்மை நுனியின் கரும்பு தின்றற்று - கற்று மெய்ப்பொருள் அறிந்தொழுகு வாரது நேயம் கரும்பை அதன் நுனியிலிருந்து தின்று சுவைப்பதைப் போன்றது; நுனி நீக்கித் தூரின் தின்றன்ன தகைத்து பண்பு இலா ஈரம் இலாளர் தொடர்பு - நுனியை விடுத்து அடிப்பகுதியிலிருந்து அதனைத் தின்றாற் போன்ற

* தொல். மெய்ப். கக. † நாலடி. உஉ. க.

தன்மையையுடையது அக் கல்விப்பண்பும் அன்பும் இல்லாதவரது நேயம்.

(க - து) கற்றோர் தொடர்பு வரவர வளர்ந்து இனிக்குந் தன்மையது.

(வி - ம்) கல்வியறிவு ஈண்டுப் பண்பு எனப்பட்டது, அதனால் இயற்கையறிவு செம்மைப்படுதலின். கல்வி பெறாதோரது நிலையை நன்கு விளக்குவார், 'பண்பு இலா ஈரம் இலாளா,' என்றார். கரும்பை நுனியிலிருந்து தின்னல் மேன்மேற் சுவைத்தற்கு உவமை; தூரென்றது, "வேருந் தூரும காயும்"* என்புழிப்போல ஈண்டுக் கரும்பின் அடிப்பகுதியை யுணாத்தும. அ

**139.** கல்லாரே யாயினுங் கற்றுரைச் சேர்ந்தொழுகின்
நல்லறிவு நாளுந் தலைப்படுவர்—தொல்சிறப்பின்
ஒண்ணிறப் பாதிரிப்பூச் சேர்தலாற் புத்தோடு
தண்ணீர்க்குத் தான்பயந் தாங்கு.

(பொ - ள்) கல்லாரேயாயினும் கற்றுரைச் சேர்ந்தொழுகின் நல்லறிவு நாளும் தலைபபடுவர் - தாம் கல்லாதவரே யாயினும கற்றுரைச் சேர்ந்து பழகினால் பண்பட்ட மெய்யறிவு வரவர உண்டாகப்பெறுவர் ; தொல் சிறப்பின் ஒள்நிறப் பாதிரிப்பூச் சேர்தலால் புது ஓடு தண்ணீர்க்குத் தான் பயந்தாங்கு - இயற்கைமணச் சிறப்பினையுடைய விளக்கமான நிறம் அமைந்த பாதிரிமலரைச் சேர்தலால் புதிய மட்பாண்டம் தன்கண் உள்ள தண்ணீர்க்குத் தான் அம் மணத்தைத் தந்தாற்போலவென்க.

(க - து) கல்வி பயிலும் பேறில்லாதார் கற்றோரோடு சேர்ந்து பழகுதலாவது மேற்கொள்ளவேண்டும்.

(வி - ம்) முறைமுறையே என்றற்கு 'நாளும்' எனவும், இயற்கை மணச்சிறப்பென்றற்குத் 'தொல்சிறப்' பெனவும் வந்தன. ஓடு-ஆகுபெயா; புதிய மட்பாண்டத்தில் முதலில் பாதிரி மலர்களைப் பெய்துவைத்துப் பின்பு அதில் நீரூற்றி நீர்க்கு நறுமணம கூட்டுதல் மரபாதலின், பாண்டம் மணத்தை ஏற்றுப் பின் நீர்க்குத் தரும் என்றற்குத் 'தான் பயந்தாங்கு' எனப்பட்டது. ஈண்டுத் 'தான்' என்பது பொருள் பயந்து நின்றது. கூ

* பரிபாடல், சு: சஎ.

140. அல்குசால் கற்பின் அறிவுநூல் கல்லா(து)
உலகநூ லோதுவ தெல்லாங்—கலகல
கூஉந் துணையல்லாற் கொண்டு தடுமாற்றம்
போஒந் துணையறிவா ரில்.

(பொ - ள்) அல்குசால் கற்பின் அறிவுநூல் கல்லாது உலகநூல் ஓதுவதெல்லாம - அளவமைந்த கருவிக்கல்வியினால் ஞானநூல்களைக் கற்று மெய்ப்பயன் பெறாமல் உலக வாழ்வுக்குரிய வாழ்க்கை நூல்களையே எப்போதும் ஓதிக்கொண்டிருப்பது, கலகல கூஉம துணையல்லால் - கலகல என்று இரையும அவ்வளவேயல்லால், கொண்டு தடுமாற்றம் போம துணை அறிவார் இல் - அவ் வுலகநூலறிவு கொண்டு பிறவித் தடுமாற்றம் நீங்கு முறைமையை அறிகின்றவர் யாண்டும் இல்லை

(க - து) கருவிக் கல்வி கொண்டு மெய்யுணர்வுக் கல்வி பெறுதலே, நோக்கமாதல் வேண்டும்.

(வி - ம்) உலகநூ லென்றது முன், "சத்தமும் சோதிடமும் என்றாங்கிவை"* எனப்பட்டவை. கலகலவென்பது இரட்டைக் கிளவி; பிரிந்திசையா.† எல்லாம் என்றது, என்றும் அவற்றையே ஓதுதல் குறிப்பின்மேற்று. கூவும் போவும் என்பன கூஉம் போஉம் என நின்றன. ௧0

---

## கரு. குடிப்பிறப்பு

குணத்தால் உயர்குலத்திற் பிறத்தலின் மேன்மை; ஈண்டுக் 'குலம்' என்றது சாதியன்று; ஒவ்வொரு சாதியிலும் உயர்ந்த குலங்கள் உண்டு. திருக்குறளுரையில் உரையாசிரியர் பரிமேலழகர் "உயர்ந்த குடிப்பிறப்பு நால்வகை வருணத்தார்க்கும் இன்றியமையாதாகலின்"‡ என உரையெழுதிச் செல்லுதல் கருத்திற் பதிக்கற்பாலது.

141. உடுக்கை யுலறி உடம்பழிந்தக் கண்ணும்
குடிப்பிறப் பாளர்தங் கொள்கையிற் குன்றார்;
இடுக்கண் தலைவந்தக் கண்ணும் அரிமா
கொடிப்புற் கறிக்குமோ மற்று.

---

* நாலடி. ௬: ௨. † தொல். கிளவி. ௪௮.
‡ குறள், ௯௬-ம் அதி. உரை.

(பொ - ள்) இடுக்கண் தலைவந்தக் கண்ணும் அரிமா கொடிப் புல் கறிக்குமோ - பசித்துன்பம் மிகுந்து நின்ற போதும் சிங்கம் படர்புல்லைத் தின்னுமோ? அதுபோல்; உடுக்கை உலறி உடம்பழிந்தக்கண்ணும் குடிப்பிறப்பாளர் தம் கொள்கையின் குன்றார் - உடை பொலிவழிந்து உடல் மெலிவடைந்த காலத்திலும உயர்குடிப் பிறந்தோர் தமக் குரிய ஒழுகலாற்றிற் குறைவுபடார்.

(க - து) உயர்குடிப் பிறந்தோராயின், இயல்பாகவே நல்லொழுக்கத்தினின்றும் வழுவார்.

(வி - ம்) உலறுதல் செழுமை கெடுதலாதலின் பொலிவழிந் தெனப்பட்டது; உடம்பழிந்தக்கண்ணு மென்பதில் உணவில்லாத காலத்தும் என்னும் பொருள் குறிப்பிற் புலப்படும். கொள்கை யென்றது, நல்லுணர்வு நல்லொழுக்கங்கள். தலைவருதல் ஈண்டு மிகுதிமேற்று. கொடியோடிப் படரும் புல் கூறினார் வளம் உணர்த் தற்கு. "பசி பெரிதாயினும் புல் மேயாதாகும் புலி"* என்பர் பிறரும். மற்று - அசை. க

**142.** சான்றாண்மை சாயல் ஒழுக்கம் இவைமூன்றும்
வான்றோய் குடிப்பிறந்தார்க் கல்லது—வான்றோயும்
மைதவழ் வெற்ப! படாஅ பெருஞ்செல்வம்
எய்தியக் கண்ணும் பிறர்க்கு.

(பொ - ள்) வான் தோயும் மைதவழ் வெற்ப - மேகங் கள் தவழ்கின்ற வானளாவிய மலைகளையுடைய நாடனே! சான்றாண்மை சாயல் ஒழுக்கம் இவை மூன்றும் வான் தோய் குடிப்பிறந்தார்க்கல்லது படா பெருஞ் செல்வம் எய்தியக்கண்ணும் பிறர்க்கு - பெருந்தன்மை, மென்மை, கடைப்பிடி என்னும் இவை மூன்றும உயர்வு பொருந்திய குடியிற் பிறந்தவர்க்கல்லது மிக்க செல்வம் உண்டான காலத்தும் பிறர்க்கு உண்டாகமாட்டா.

(க - து) நல்லொழுக்கங்கள் உயர்குடிப்பிறந்தார்க்கு இயல்பாகவே மலரும்.

---

* பழமொழி, ௭0.

(வி-ம்) "சான்றாண்மை தீயினம் சேரக் கெடும்"* என்புழிப்போல ஈண்டும் அச்சொல் பெருந்தன்மை மேற்று. "சாயல் மென்மை"† யென்பர் ஆசிரியர் தொல்காப்பியர். ஒழுகுதலாவது ஒன்றைத் தொடர்புறச் செய்தலாதலின், அது கடைப்பிடி யென்றறியற்பாற்று. திருவள்ளுவரில் அன்புடைமை, விருந்தோம்பல், இனியவை கூறல் முதலியவாக நல்லொழுக்கங்கள் பலவுங் கூறி வரும் ஆசிரியர், இடையே 'ஒழுக்கமுடைமை' எனத் தனியதிகாரம் ஒன்று நிறீஇயதும் இக் கருத்தின்கண்ணதென்க. பெருஞ்செல்வம் எய்தியக்கண்ணும் பிறர்க்குப் படா வெனவே, அஃதெய்தியக்கண் உயர்குடிப்பிறந்தார்க்கு இன்னும் அவ்வியல்புகள் சிறந்து தோன்றுமென்பது பெறப்பட்டது. உ

143. இருக்கை யெழலும் எதிர்செலவும் ஏனை
விடுப்ப ஒழிதலோ டின்ன—குடிப்பிறந்தார்
குன்றா வொழுக்கமாக் கொண்டார் கயவரோ
டொன்றா வுணரற்பாற் றன்று.

(பொ-ள்) இருக்கை எழலும் எதிர்செலவும் ஏனை விடுப்ப ஒழிதலோடு இன்ன - பெரியோரைக் கண்டால் தன் இருக்கையிலிருந்து எழுதலும், சற்று எதிர்சென்று வரவேற்றலும், அவர் பிரியும்போது சற்றுப் பின்சென்று அவர் விடைதர ஏனைப் பிரிந்து வருதலுமாக இத்தகைய பணிவுக் குணங்களை, குடிப்பிறந்தார் குன்றா ஒழுக்கமாக் கொண்டார் - உயர்குடிப் பிறந்தார் கைவிடா நல்லொழுக்கமாக மேற்கொண்டொழுகுவர்; கயவரோடு ஒன்றா உணரற்பாற்றன்று - இத் தகுதி, கீழ்மக்களாற் சிறந்ததொன்றாக உணர்ந்துகொள்ளுதற்குரியதன்று.

(க-து) 'உயர்குடிப் பிறந்தாரே பணிவின் உயர்வை அறிந்துகொள்ளுந் தகுதியுடையர்.

(வி-ம்) கயவரோடு என்னும் உருபு, "ஊசியொடு குயின்ற தூசும் பட்டும்"‡ என்புழிப்போல நின்றது. ௩

144. நல்லவை செய்யின் இயல்பாகும், தீயவை
பல்லவர் தூற்றும் பழியாகும்;—எல்லாம்
உணருங் குடிப்பிறப்பின் ஊதிய மென்னோ,
புணரும் ஒருவர்க் கெனின்?

---

* நாலடி. கஅ: கூ. † தொல். உரி. உஎ.
‡ தொல். வேற். கஉ - உரை.

(பொ - ள்) நல்லவை செய்யின் இயல்பாகும் தீயவை பல்லவர் தூற்றும் பழியாகும் - உயர்குடிப் பிறந்தார் நற்காரியங்கள் செய்தால் அஃதவர்க்கு இயல்பென்று கொள்ளப்படும், தீயவை செய்தால் பலருந் தூற்றும் பழியாக முடியும்; எல்லாம் உணரும் குடிப்பிறப்பின் ஊதியம் என்னோ புணருமா ஒருவர்க்கெனின் - அவ்வாறானால், உயர்குடிப் பிறப்பு ஒருவர்க்கு வாய்க்குமாயின் எல்லா நன்மைகளும் இயல்பாகவே உணர்ந்தொழுகுதற்குரிய தகுதி வாய்ந்த அக் குடிப்பிறப்பினால் அவர் அடையும் ஊதியந்தான் யாதோ!

(க - து) நல்லவை செய்தலை இயல்பாக உடையது உயர்குடிப்பிறப்பெனின் அந்நிலையே ஆக்கம் என்பது.

(வி - ம்) பல்லவா என்னும் மிகுதிப்பாடு, தீயவை சிறிது செய்யினும் என்னும் பொருட்குறிப்பு உணர்த்திற்று. இதுபோல்வன "குறிப்பிற் றோன்றலும"* என்பதனால் உணரப்படும். எல்லாம் உணரும் என்றது, குடிப்பிறப்பின் சிறப்பியல்பு உணர்த்திற்று. ஊதியமென்னோ என்றது, அதனினும் ஊதியம் மற்றென்னோ என்னும் உட்கோளுடையது. புணரும் ஒருவர்க்கெனின் என்றது, அதன் அருமை தோன்ற நின்றது. இச் செய்யுள், பழித்தது போலப் புகழ்தலாயக குடிப்பிறப்பின் உயர்வை விளக்கிற்று. மேல் வருஞ் செய்யுளும் இத்தகைத்து. ௪

**145.** கல்லாமை அச்சம், கயவர் தொழிலச்சம்,
சொல்லாமை யுள்ளுமோர் சோர்வச்சம்,—எல்லாம்
இரப்பார்க்கொன் றீயாமை அச்சம்; மரத்தாரிம்
மாணக் குடிப்பிறந் தார்.

(பொ - ள்) கல்லாமை அச்சம், கயவர் தொழில் அச்சம், சொல்லாமை யுள்ளும் ஓர் சோர்வு அச்சம், எல்லாம் இரப்பார்க்கு ஒன்று ஈயாமை அச்சம் - உயர்குடிப் பிறந்தார்க்குப், படியாமை ஓர் அச்சம், கீழோர் தொழிலொன்று செய்தலும் அச்சம, சொல்லத் தகாதவற்றுள் தவறிச் சொல்லிவிடுதலொன்றும அச்சம், இரப்பார்க்கு ஒன்று ஈயாமை முழுதும் அச்சம்; இம் மாணக் குடிப்

* தொல். பெய. ௩.

பிறந்தார் மரத்தார் - இவ்வாறு மாட்சிமைமயில்லா உயர் குடியிற் பிறந்தார், நடுக்கடலில் மரக்கலத்திற் செல்வாரை ஒத்தவராவர்.

(க - து) தீயவற்றிற்கு அஞ்சி வாழ்தற்குரிய உயர் குடிப் பிறப்பே சிறந்தது.

(வி - ம்) எல்லாம் என்றது முழுமையும் என்னும் பொருட்டு, ஈதல் இல்லொழுக்கங்களுள் தலையானதாதலின், அதற்கு இயலாமை நேரின் அது முற்றும் அஞ்சுதற்குரிய* தென்பது கருத்து. மரக் கலம் என்னும் பெயர், கலம் என்னுஞ் சொல்லால் வழங்குமாப் போல் மரம் என்னும் பெயராலும் வழங்குவதாயிற்று. முற்செய் யுளைப்போல் இதுவும் பழித்ததுபோலப் புகழ்தலாதலின், 'மாணுக் குடி' எனப்பட்டது. ரு

146. இனநன்மை இன்சொல்ஒன் றீதல்மற் றேனை
மனநன்மை என்றிவை யெல்லாம்—கனமணி
முத்தோ டிமைக்கு முழங்குவரித் தண்சேர்ப்ப!
இற்பிறந்தார் கண்ணே யுள.

(பொ - ள்) கனமணி முத்தோடு இமைக்கும் முழங்கு உவரித் தண் சேர்ப்ப - சிறப்புடைய மாணிக்க முதலிய மணிகள் முத்துக்களுடன் கிடந்து ஒளிர்கின்ற ஒலிக்குங் கடலின் குளிர்ச்சியான துறைவனே! இனநன்மை, இன் சொல், ஈதல், ஏனை மனநன்மை என்று இவையெல்லாம் இல்பிறந்தார் கண்ணே உள - நல்லார் கூட்டுறவு, இன்சொல் லுடைமை, வறியார்க்கு ஒன்று ஈதல், ஏனை மனத்தூய்மை என இந் நற்பண்புகளெல்லாம் உயர்குடிப் பிறந்தாரிடமே அமைந்திருக்கின்றன.

(க - து) உயர்குடிப் பிறப்பு நற்பண்புகட்கு இட மானது.

(வி - ம்) எல்லாவற்றிற்கும் அடிப்படையாகிய மனநன் மையை வேறு பிரித்தற்கு 'ஏனை' யென்றார். மற்று ஏனை என்னும் இரண்டும் ஈண்டுப் பிறிதென்னும் ஒரு பொருட்கண் வந்தன. கடலுக்கு முத்துச் சிறப்பாதலின், வேறு பிரித்துக் கூறினர். இமைக்கும் சேர்ப்ப என்க. ஏகாரம் பிரிநிலை. சு

* குறுந். கருஎ.

**147.** செய்கை யழிந்து சிதல்மண்டிற் றாயினும்
பெய்யா ஒருசிறை பேரில் உடைத்தாகும்;
எவ்வ முழந்தக் கடைத்துங் குடிப்பிறந்தார்
செய்வர் செயற்பா லவை.

(பொ - ள்) *செய்கை யழிந்து சிதல்மண்டிற்றாயினும் பெய்யா ஒரு சிறை பேர் இல் உடைத்தாகும் - வளமான பெரிய வீடு வளங்குறைந்த காலத்திற் கட்டுக்குலைந்து கறையான் கவ்விற்றாயினும் அது மழை ஒழுக்கில்லாத ஒரு பக்கத்தை உடையதாயிருக்கும், அதுபோல; எவ்வம் உழந்தக்கடைத்தும் குடிப்பிறந்தார் செய்வர் செயற்பாலவை - வறுமையினால் மிக்க துன்பத்திற் சிக்கி அலைப் புண்ட காலத்தும் உயர்குடியிற் பிறந்த நல்லோர் தாம் செய்தற்குரிய நற்செயல்களைச் செய்துகொண்டே யிருப்பர்..*

(க - து) *வறுமையினுங் குடிப்பிறந்தார் தம் கடமைகள் செய்தலில் வழுவார்.*

(வி - ம்) *செய்கை - செய்த அமைப்பு; என்றது, கட்டுக் கோப்பு; செயற்பாலவை என்பன, "அறவோர்க் களித்தல், அந்தணரோம்பல்"* முதலிய கடமைகள்.* எ

**148.** ஒருபுடை பாம்பு கொளினும் ஒருபுடை
அங்கண்மா ஞாலம் விளக்குறூஉந்—திங்கள்போல்
செல்லாமை செவ்வனேர் நிற்பினும் ஒப்புரவிற்
கொல்கார் குடிப்பிறந் தார்.

(பொ - ள்) *ஒரு புடை பாம்பு கொளினும் ஒரு புடை அங்கண்மா ஞாலம் விளக்குறாஉம் திங்கள்போல் - ஒரு பக்கம் இராகுவென்னும் பாம்பு பற்றிக்கொண்டாலும் தனது மற்றொரு பக்கத்தால் அழகிய இடமகன்ற பெரிய உலகத்தை ஒளிவிளங்கச் செய்யுந் திங்களைப்போல, செல்லாமை செவ்வன் நேர் நிற்பினும் ஒப்புரவிற்கு ஒல்கார் குடிப்பிறந்தார் - வறுமையினால் மாட்டாமைநிலை நன்றாக*

* சிலப். கங : எக - ரு.

முன்நிற்பினும் உயர்குடிப் பிறந்தார் பிறர்க்கு உதவி செய்யும் வகைக்குத் தளரமாட்டார்.

(க - து) பிறர்க்கு உதவும் வகையில் வறுமையினும் குடிப்பிறந்தார் தளரார்.

(வி - ம்) "இடனில் பருவத்தும் ஒப்புரவிற்கு ஒல்கார"* என்றார் திருவள்ளுவரும். பாம்பு கொளல் என்பது, திங்களைக் கோள் பிடித்து அதனொரு பகுதியை மறைத்தல். வறுமையுடையார் சொல்லுஞ் செயலும் உலகில் செல்லாமை நினைந்து, அவ் வறுமை நிலையை ஆசிரியர் 'செல்லாமை' யென்றே விதந்தார். அ

**149.** செல்லா விடத்துங் குடிப்பிறந்தார் செய்வன
செல்லிடத்துஞ் செய்யார் சிறியவர்;—புல்வாய்
பருமம் பொறுப்பினும் பாய்பரி மாபோல்
பொருமுரண் ஆற்றுதல் இன்று.

(பொ - ள்) செல்லாவிடத்தும் குடிப் பிறந்தார் செய்வன செல்லிடததும் செய்யார் சிறியவர் - வறுமையினால் மாட்டா நிலையிலும் உயர்குடிப் பிறந்தார் செய்யுங் கடமைகளைச் செல்வாக்கு நிலையிலுங் கீழ்குடிப் பிறந்தார் செய்யமாட்டார்; புல்வாய் பருமம் பொறுப்பினும் பாய் பரிமா போல பொரும் முரண் ஆற்றுதல் இன்று - மான், சேணந் தாங்கினாலும பாயும் இயல்பினையுடைய குதிரையைப்போற் போர் செய்யும் மாறுபாட்டுச் செருக்கினைச் செய்தல் இல்லை.

(க - து.) வறுமையினும் குடிப்பிறந்தார் தங் கடமைகளைச் செய்யும் ஆற்றலுடையராவர்.

(வி - ம்) பருமம், சேணம் என்னும் பொருட்டு; "பருமம் களையாப் பாய்பரிக் கலிமா" † என்னும் நெடுநல்வாடையினும் இப் பொருள் காண்க. பொருதற்குரிய சேணந் தாங்கினும் பொருகின்ற முரணுள்ளம் மானுக்கு இல்லாமைபோல, உதவுதற்குரிய செல்வம் பெறினும் உதவுகின்ற வண்மையுள்ளம் கீழோர்க்கில்லை யெனக் கொள்க. மேல், 'கயமை' யென்னும் அதிகாரத்தில் வரும் 'எட்டைப் பருவத்தும்'‡ என்னுஞ் செய்யுளூங் கருதற்பாலது. க

* குறள், உஉ : அ. † நெடுநல். கஎக. ‡ நாலடி. கஞ : அ.

**150.** **எற்றொன்றும் இல்லா இடத்துங் குடிப்பிறந்தார்**
**அற்றுத்தற் சேர்ந்தார்க் கசைவிடத் தூற்றுவர் ;**
**அற்றக் கடைத்தும் அகல்யா றகழ்ந்தக்கால்**
**தெற்றெனத் தெண்ணீர் படும்.**

(பொ - ள்.) *எற்று ஒன்றும் இல்லாவிடத்தும் குடிப் பிறந்தார் அற்றுத் தன் சேர்ந்தார்க்கு அசைவிடத்து ஊற்று ஆவர் - கையில் எத்தகையதொரு பொருளும் இல்லாத காலத்தும் உயர்குடிப் பிறந்தார், ஆதரவற்றுத் தம்மை யடைந்தவர்க்கு அவரது தளர்ச்சிக் காலத்தில் ஊன்றுகோல்போல் உதவுவர் ; அற்றக் கடைத்தும் அகல் யாறு அகழ்ந்தக்கால் தெற்றெனத் தெள்நீர் படும் - நீரற்ற காலத்தும், அகன்ற ஆறு சற்றுக் குழி தோண்டிய காலத்தில் விரைவாகத் தெளிநீர் ஊறி உதவும்.*

(க - து.) *குடிபபிறந்தார் எநநிலையிலும தமமை அண்டியவரின் தளர்ச்சிக் காலத்தில் ஊன்றுகோல்போல் உதவுவர்.*

(வி - ம்) *எற்றொன்று மென்றார், சிறிது மென்றற்கு. ஊன்று கோல் ஊன்றென நின்று பின் ஊற்று என வலிததது. "உடம் புயிர்க்கு ஊற்றாக"* என்றார் பிறரும். மேல், 'பெருமை' யென் னும் அதிகாரத்தில் வரும் 'உறைப்பருங காலத்தும்'† என்னுஞ் செய்யுளையும கருதுக.* ௧0

---

## ௧௬. மேன்மக்கள்

*மேன்மக்களின் இயல்புகள் இன்னவென்பது, மேன்மக்க ளாவார், குணத்தான் மேம்பட்ட நன்மக்கள்.*

**151.** **அங்கண் விசும்பின் அகனிலாப் பாரிக்குந்**
**திங்களுஞ் சான்றோரும் ஒப்பர்மன்;—திங்கள்**
**மறுவாற்றும், சான்றோரஃ தாற்றார் தெருமந்து**
**தேய்வர் ஒருமா சுறின்.**

---

* *கலி. செய். ௨௧.* † *நாலடி. ௧௧ : ௪.*

(பொ - ள்.) அங்கண் விசும்பின் அகல் நிலாப் பாரிக்கும் திங்களும் சான்றோரும் ஒப்பர் மன் - அழகிய இடமகன்ற வானத்தில் விரிந்த நிலவொளியைப் பரவச்செய்யும் திங்களும் மேன்மக்களும் தம்மிற் பெரும்பாலும் ஒத்த பெருமையுடையவராவர். திங்கள் மறு ஆற்றும் சான்றோர் அஃது ஆற்றார் தெருமந்து தேய்வர் ஒரு மாசு உறின் - ஆனால், திங்கள் களங்கத்தைத் தாங்கும்; மேன்மக்கள் தமதொழுக்கத்திற் சிறிது கறையுண்டானால் அது பொறாராய் உள்ளங் குழம்பி அழிவர்.

(க - து) திங்களைப்போற் சான்றோர் மறுவாற்றாராதலின், அவர் அதனினுஞ் சிறந்தவராவர்.*

(வி - ம்) ஒப்பரென்னும் முடிபு திணைவழுவமைதி; "மூத்தோர் குழவி எனுமிவரை"* என்புழிப்போல. ஒப்பு இருள்நீக்கித் தண்ணொளி வழங்குதலிற் கொள்க. மன், மிகுதிக்கண் வந்து ஈண்டுப் பெரும்பாலுமென்னும் பொருட்டாயிற்று; ஆதலால், அதனாற் பெறப்படுகின்ற சிறுபான்மை வேறுபாடு, பின் இரண்டடிகளில் விளக்கப்பட்டது. ஆற்றார், முற்றெச்சம். க

**152.** இசையும் எனினும் இசையா தெனினும்
வசைதீர எண்ணுவர் சான்றோர்;—விசையின்
நரிமா உளங்கிழித்த அம்பினின் தீதோ,
அரிமாப் பிழைப்பெய்த கோல்?

(பொ - ள்.) இசையும் எனினும் இசையா தெனினும் வசை தீர எண்ணுவர் சான்றோர் - கைகூடுமெனினும் கைகூடாதெனினும் பழித்தலில்லாத வகையில் அரிய காரியங்களையே மேன்மக்கள் எண்ணிச் செய்வர்; விசையின் நரிமா உளம் கிழித்த அம்பினின் தீதோ அரிமாப் பிழைப்பு எய்தகோல் - விரைவோடு நரி என்னும் விலங்கின் நெஞ்சைக் கிழித்துச் சென்ற அம்பைவிடப் பழிப்புடையதோ, சிங்கத்தினிடம் தவறுதலைப் பொருந்திய அம்பு?

(க - து.) அரிய காரியங்களையே எண்ணிச்செய்வது மேன்மக்கள் இயல்பு.

---

* சிலப். உக: ருச.

(வி - ம்) வசையாவது, 'சிறியர் செயற்கரிய செய்கலாதார்' * என்பது. 'அரிமாப் பிழைப்பெய்த' என்பதற்கு, அரிமா தவறிப் போதலுக்கு ஏதுவான நிலையையடைந்த கோல் என்பது கருத்து. "கான முயலெய்த அம்பினில் யானை, பிழைத்தவேல் ஏந்தல் இனிது" என்னுந் திருக்குறளை † ஈண்டு நினைவுகூர்க. உ

**153.** நரம்பெழுந்து நல்கூர்ந்தா ராயினுஞ் சான்றோர்
குரம்பெழுந்து குற்றங்கொண் டேறார்;—உரங்கவரு
உள்ளமெனும் நாரினற் கட்டி உளவரையாற்
செய்வர் செயற்பா லவை.

(பொ -ள்.) நரம்பெழுந்து நல்கூர்ந்தா ராயினும் சான்றோர் குரம்பெழுந்து குற்றங்கொண்டு ஏறார் - உடம்பில் நரம்பு மேலே தோன்றும்படி ‡ வறுமையெய்தினாராயினும் மேன்மக்கள் தமது நல்லொழுக்கத்தின் வரம்பு கடந்து பிழையான வழிகளை மேற்கொண்டு அவற்றில் தொடர்ந்து செல்லமாட்டார்; உரம் கவரு உள்ளமெனும் நாரினல் கட்டி - அறிவு பலவிட்டமாக முயற்சியென்னும் நாரினல் அத் தீய நினைவைக் கட்டுப்படுத்தி, உளவரையால் செய்வர் செயற்பாலவை - செய்தற்குரிய நற்செயல்களைத் தமக்குள்ள பொருளளவினல் செய்துவருவர்.

(க - து.) வறுமையினல் மேன்மக்கள், தவறிய வழிகளிற் செல்லார்

(வி - ம்) குரம்பென்னுஞ் சொல் வரம்பென்னும் பொருட்டு; "குரம்புகொண் டேறி" § எனறார் பிறரும். நார் என்று வந்தமையாற் கவறு என்பது பலவிட்டதுக்காயிற்று; பிளவுள்ள பனம்பட்டை கவறெனப்படும்; கவர் என்னுஞ் சொல் ரகர றகர வேற்றுமையின்றிக் கவறு என வந்தது. ௩

**154.** செல்வுழிக் கண்ணொருநாட் காணினுஞ் சான்றவர்
தொல்வழிக் கேண்மையிற் றேன்றப் புரிந்தியாப்பர்;
நல்வரை நாட! சில்நாள் அடிப்படின்
கல்வரையும் உண்டாம் நெறி.

---

* குறள், ௩ : ௬. † குறள், ௭௮ : உ. ‡ திருமுருகாற். ௧௩௦.
§ மணிமே. ௧௮ : ௩.

(பொ - ள்) செல்வுழிக்கண் ஒருநாள் காணினும் சான்றவர் தொல்வழிக் கேண்மையின் தோன்றப் புரிந்து யாப்பர் - வழிச்செல்லுங் காலத்தில் ஒருவரை ஒரு நாள் கண்டாலும் மேன்மக்கள், பழைமைவழியான நேயம் போல் தோன்ற அன்புசெய்து அவரைப் பிணிப்பர்; நல்வரை நாட - உயர்ந்த மலைகளையுடைய நாடனே! சில நாள் அடிபபடின் கல் வரையும் உண்டாம் நெறி - சில நாள் நடந்து பழகியதாயின் கல்லுள்ள மலையும் வழி உண்டாகப் பெறும்.

(க - து) ஒரு நாள் பழகினும் சான்றோர் பிறருள்ளத்தைக் கவர்ந்துவிடுவர்.

(வி - ம்) பலகாற் பழகிய நேயம்போல் என்றற்குத் 'தொல்வழிக் கேண்மையின்' எனப்பட்டது. அடிப்படின் - பயின்றால்; கால் பட்டுப் பயின்றாலென்க. பலகாட் பழகிய காரணத்தால் நட்புண்டாகப் பெறுதலில் வியப்பொன்றுமில்லையே என்றற்கு, 'அடிப்படின் நெறியுண்டாம்' என்றார். தூய உணர்ச்சிச சிறப்பே நட்புக்கு ஏதுவென்பது இச்செய்யுட் கருத்து; "உணர்ச்சிதான் நட்பாங் கிழமை தரும்"* என்றதுங் காண்க. ௪

155. புல்லா வெழுத்திற் பொருளில் வறுங்கோட்டி
கல்லா ஒருவன் உரைப்பவுங் கண்ணோடி
நல்லார் வருந்தியுங் கேட்பரே, மற்றவன்
பல்லாருள் நாணல் பரிந்து.

(பொ - ள்) புல்லா எழுத்தின் பொருளில் வறுங்கோட்டி கல்லா ஒருவன் உரைப்பவும் - பொருந்தாக் கல்வியையுடைய மெய்யுணர்வில்லாத வீணரவையில் கல்வியறிவு நிரம்பப்பெறாத ஒருவன் உரையாடவும், கண்ணோடி நல்லார் வருந்தியும் கேட்பர் அவன் பல்லாருள் நாணல் பரிந்து - மேன்மக்கள் கண்ணோட்டமுற்று, உள்ளம் வருந்தியுங் கேட்டுக்கொண்டிருப்பர், தாம் கேளாதொழியின் அவன் பலரிடையில் நாணங்கொள்ள நேர்தற்கு இரங்கியென்க.

---

* குறள், எ௮ : ௬.

(க - து) மேன்மக்கள் கல்வியறிவும் மெய்யுணர்வும் வாய்ந்து அவையில் அடக்கமுங் கண்ணோட்டமு முடைய ராயிருப்பர்.

(வி - ம்) எழுத்து, ஈண்டுக் கல்வியென்னும் பொருட்டு; "மயங்கா மரபின் எழுத்துமுறை காட்டி"* என்பதும் ஈண்டு நினைவுகூர்தற்குரியது. 'பொருள்' என்றது மெய்ம்மை; "பொய் யுரையே யன்று பொருளுரையே"† என்றா பிறரும்; இங்கு மெய்யுணர்வு என்னும் பொருட்டு. 'வறுங்கோட்டி' என்னு மிடத்து வறுமை பயனின்மை; "வெள்ளைக் கோட்டியும் விரகினில் ஒழிமின்"‡ என்புழிப்போல. உம்மை இரண்டனுள் முன்னது எச்ச மெனவும் பின்னது இழிவுசிறப்பெனவும் கொள்க. மற்று, அசை. ரு

156. கடித்துக் கரும்பினைக் கண்தகர நூறி
இடித்துநீர் கொள்ளினும் இன்சுவைத்தே யாகும்;
வடுப்பட வைதிறந்தக் கண்ணுங் குடிப்பிறந்தார்
கூறார்தம் வாயிற் சிதைந்து.

(பொ - ள்) கடித்துக் கரும்பினைக் கண் தகர நூறி இடித்து நீர் கொள்ளினும் இன்சுவைத்தேயாகும் - கரும் பினைப் பல்லினாற் கடித்தும், கணுக்கள் உடையும்படி ஆலையி லிட்டுச் சிதைத்தும் பிற கருவிகளால் இடித்தும் அதன் சாற்றைக் கொண்டாலும், அச் சாறு இனிய சுவையுடை யதேயாகும்; வடுப்பட வைது இறந்தக்கண்ணும் குடிப்பிறந் தார் கூறார் தம் வாயின் சிதைந்து - பழியுண்டாகும்படி தம்மைப் பிறர் பழித்து வரம்பு கடந்தபோதும்§ மேன் மக்கள் தமது பெருந்தன்மையிற் குறைந்து வாயினால் தீயன கூறார். (ஆண்டும், இனியரேயாவர் என்றபடி.)

(க - து) பிறரால் இடுக்கணுற்ற விடத்தும் சான் றோர் இனியராகவே ஒழுகுவர்.

(வி - ம்) கடித்தும் நூறியும் இடித்தும் என்று கொள்க. தம் வாயின் சிதைந்து, தமது உண்மை நிலையினின்றும் மாறி எனினுமாம்; ஆவது, தம் பெருந்தன்மையினின்றுங் குறைந்து என்க. சு

* தொல். சிறப்புப்பா. கஉ. † சிலப். கூ: கஅ.
‡ சிலப். ௩0 : ககூஅ. § நாலடி. எ ; க.

**157.** கள்ளார்,கள் ளுண்ணார், கடிவ கடிந்தொரீஇ,
எள்ளிப் பிறரை இகழ்ந்துரையார்,—தள்ளியும்
வாயிற்பொய் கூறார், வடுவறு காட்சியார்,
சாயிற் பரிவ திலர்.

(பொ - ள்) *வடு அறு காட்சியார் - மாசு நீங்கிய தெளிவினையுடையார், கள்ளார் - பிறர் பொருளைக் கவரார்; கள் உண்ணார் - கள் அருந்தார்; கடிவ கடிந்து ஒரீஇ - விலக்கத்தகுந்த தீயவற்றை விலக்கி அவற்றின் நீங்கித் தூயராகி, எள்ளிப பிறரை இகழ்ந்து உரையார் - பிறரை அவமதித்து இகழ்ந்து உரையாடாமல் விளங்குவர்; தள்ளியும வாயின் பொய் கூறார் - சோர்ந்தும் தம் வாயினாற் பொய் சொல்லார்; சாயின் பரிவது இலர் - வினைவயத்தால் தம் செல்வாக்குக் குறையின், அதற்காக வருந்துவதும் இலராவர்.*

(க - து) *சான்றோர்பால் இயல்பாகவே தீய குணங்கள் இல்லை.*

(வி - ம்) *ஒரீஇ என்னும் எசசத்தை ஓரீஇநிற்பர் என ஒரு தனிக் கருத்தாகக் கொள்ளலும், தள்ளியும் என்பதற்குப் பிறர் தம்மை அவமதித்து ஒதுக்கியும் எனலும் ஆம். காட்சியார், பெயர்.* எ

**158.** பிறர்மறை யின்கட் செவிடாய்த் திறனறிந்
தேதிலா ரிற்கட் குருட்னாய்த் தீய
புறங்கூற்றின் மூகையாய் நிற்பானேல், யாதும்
அறங்கூற வேண்டா அவற்கு.

(பொ - ள்) *பிறர் மறையின்கண் செவிடாய் - பிறருடைய மறைந்த கருத்துக்களைக் கேட்டலிற் செவிடுடையனாய், ஏதிலார் இல்கண் குருடனாய் - அயலார் மனைவியரைக் காமக் கருத்துடன் நோக்குதலிற் குருடுடையனாய், தீய புறங்கூற்றின் மூகையாய் - தீயவான புறங்கூற்று மொழிகளைக் கூறுதலில் ஊமையுடையனாய், திறன் அறிந்து நிற்பானேல் - வாழ்க்கையில் துன்பம் உண்டாகும் கூறு*

கள் இவையென்றறிந்து ஒருவன் ஒழுகுவனாயின், யாதும் அறம் கூறவேண்டா அவற்கு - அவனுக்குப் பிறர் வேறு யாதும் அறம் அறிவுறுக்கவேண்டா.

(க - து) வாழ்க்கையில் துன்பம் உண்டாக்குங் கூறுகள் இவையென்றறிந்து மேன்மக்கள் அவற்றின் நீங்கி யொழுகுவர்.

(வி - ம்) நிறனறிந்து நிற்பானேல் என்க. காதிருந்தும் கண்ணிருந்தும் வாயிருந்தும் ஒருவன் செவிடாய்க் குருடாய் ஊமை யாய் நிற்கவேண்டுமிடம் இன்னவென்றது, இச்செய்யுளில் நய முடையது. "சொல்லும் மறையிற் செவியிலன் தீச்சொற்கள் மூங்கை"* முதலிய பிறர் வாய்மொழிகளும் நினைவுகூர்க. இம் மூவகை யறமே போதுமென்பார் 'யாதும் அறங் கூற வேண்டா,' என்றார். அ

**159.** பன்னாளுஞ் சென்றக்கால் பண்பிலார் தம்முழை
என்னானும் வேண்டுப என்றிகழ்ப ;—என்னானும்
வேண்டினும் நன்றுமற் றென்று விழுமியோர்
காண்டொறுஞ் செய்வர் சிறப்பு.

(பொ - ள்) பல் நாளும் சென்றக்கால் - பலமுறையும் ஒருவர் சென்றால், பண்பிலார் - நற்பண்பில்லாத கீழ்மக்கள், தம் உழை என்னானும் வேண்டுப என்று இகழ்ப - தம்மிடம் ஏதாவது உதவி வேண்டுவார் என்று அவரை அவமதிப்பர் ; விழுமியோர் - ஆனால் மேன்மக்கள், என்னா னும் வேண்டினும் நன்று என்று - அவர் ஏதாவது உதவி விரும்பினாலும் நல்லது என்று கருதி, காண்டொறும் செய்வர் சிறப்பு - அவரைப் பார்க்கும்போதெல்லாம் பெருமை செய்வர்.

(க - து) மேன்மக்கள் பிறர்க்கு உதவி செய்தலில் விருப்பமுடையவராயிருப்பர்.

(வி - ம்) பன்னாளென்றது, பலமுறை யென்னும்பொருட்டு, 'பண்பிலார்' என்னுஞ் சொல் படர்க்கையாதலின், 'சென்றக் கால்' என்னும் படர்க்கையிடத்திற்குரிய வினை வந்தது † என்ன

* ஏலாதி. கக. † தொல். கிளவி. ௩0.

னும் வேண்டினும் என்றற்கு எது வேண்டினும் என்றுரைத்தலும் ஒன்று. கூ

**160.** உடையா ரிவரென் றொருதலையாப் பற்றிக்
கடையாயார் பின்சென்று வாழ்வர்;—உடைய
பிலந்தலைப் பட்டது போலாதே, நல்ல
குலந்தலைப் பட்ட விடத்து.

(பொ - ள்) உடையார் இவர் என்று ஒருதலையாப் பற்றிக் கடையாயார் பின் சென்று வாழ்வர் - பொருளுடையார் இவர் என்று உறுதியாகப் பற்றி மக்களிற் பெரும்பாலார் கீழ்மக்கள் பின்சென்று உயிர் வாழ்வர்; உடைய பிலம் தலைப்பட்டது போலாதே நல்ல குலம் தலைப்பட்ட விடத்து - சிறந்த மேன்மக்களினத்தைச் சேரப்பெற்ற போது, அது உரிமையுடைய ஒரு பொருட்சுரங்கத்தைத் தலைப்படடதுபோ லாகாதோ?

(க -.து.) மேன்மக்கள் சேர்க்கையே எல்லா நலங்களுமே பெருக அடைவதற்குரியது

(வி - ம்) பொருளொன்றே கருதி யென்றற்கு 'உடையார் இவர் என்றும், பொருளுடையராயினும குணநல மில்லாதார் கீழ்ப்பட்டவரே யென்றற்குக் 'கடையாயார்' என்றும கூறினர். பற்றி - ஆதரவாகக் கொண்டு. தொங்கித் தொடரும் எளிமை தோன்றப் 'பின்சென்று வாழ்வர்' என்றார். மேன்மக்கள் என்ஞான்றும் பிறர்க்குரியராதலின், உரிமையுடைய பிலம் என்றற்கு 'உடையபிலம்' எனப்பட்டது. தமக்குடைமையான பிலம் எனப் பொருள் விரித்தலுமாம். "உடைப்பெருஞ் செல்வர்"* என்றார் பிறரும். ஏகாரம் வினா. கo

---

## கள. பெரியாரைப் பிழையாமை

*பெரியோரை அவமதித்து நடவாமை.*

**161.** பொறுப்பரென் றெண்ணிப் புரைதீர்ந்தார் மாட்டும்
வெறுப்பன செய்யாமை வேண்டும்;—வெறுத்தபின்
ஆர்க்கும் அருவி யணிமலை நன்னாட!
பேர்க்குதல் யார்க்கும் அரிது.

---

* புறம், கஅஅ.

(பொ - ள்) பொறுப்பர் என்று எண்ணிப் புரைதீர்ந்தார் மாட்டும் வெறுப்பன செய்யாமை வேண்டும் - பொறுத்துக்கொள்வர் என்று நினைத்து மாசு நீங்கிய பெரியோரிடத்திலும் அவர் வருந்தத்தக்க பிழைகளைச் செய்யாதிருத்தல் வேண்டும்; வெறுத்தபின் - அவர் உள்ளம் அதனால் வருந்தியபின், ஆர்க்கும் அருவி அணி மலை நல் நாட - ஆரவாரித்தொலிக்கும் அருவிகளையுடைய அழகிய மலைகள் பொருந்திய சிறந்த நாடனே! பேர்க்குதல் யார்க்கும் அரிது - அவ் வருத்தத்தால் உண்டாகுந் தீங்கை நீக்கிக் கொள்ளுதல் எத்தகையவர்க்கும் இயலாது.

(க - து) பெரியோரை அவமதித்தொழுகினால் தீர்வில்லாத தீங்குண்டாகும்.

(வி - ம்) பெரியோர் பொறுத்தற்குரியோராயினும் அவர் உள்ளத்துக்கு ஆகாதன அவரொழுகலாற்றிற்கு ஊறு பயக்குமாதலின் 'வெறுப்பன செய்யாமை வேண்டும்' எனவும், இவை பொருந்தாதன என்று அவர் கருதுதலே ஈண்டுவருந்தியதாகுமாதலின் 'வெறுத்தபின்' எனவும், எத்தகைய ஆற்றல் படைத்தவர்க்கும் அதனால் விளையுந் தீங்குகளை நீக்கிக்கொள்ளுதல் அரிதாகுமாதலின் 'யார்க்கும்' எனவுங் கூறினார். "பூவுட்கும் கண்ணாய் பொறுப்பரெனக்கருதி யாவார்க்கே யாயினும் இன்னா செயல்வேண்டா,"* என்றார் பிறரும். புரைதீர்ந்தார் மாட்டும் என்னும் உம்மை உயர்வொடு எச்சம். க

**162.** பொன்னே கொடுத்தும் புணர்தற் கரியாரைக்
கொன்னே தலைக்கூடப் பெற்றிருந்தும்—அன்னோ
பயனில் பொழுதாக் கழிப்பரே, நல்ல
நயமில் அறிவி னவர்.

(பொ - ள்) பொன்னே கொடுத்தும் புணர்தற்கு அரியாரை - பொன்னையே விலையாகக் கொடுத்தும் நட்புச் செய்தற்கு அரியரான பெரியோர்களை, கொன்னே தலைக்கூடப் பெற்றிருந்தும் - பொருட்செலவில்லாமலே அவரை நட்புச்செய்துகொள்ளும் நிலை பெற்றிருந்தும், நல்ல நயம் இல் அறிவினவர் அன்னோ பயனில் பொழுதாக் கழிப்பரே-

* பழமொழி. சஙு.

சிறந்த பண்புடைமையிலலாத அறிவினையுடைய பேதையர் ஆ, தம்முடைய வாழ்நாட்களைப் பயன் இல்லாத வீண் காலமாகக கழிக்கின்றனரே!

(க - து) பெரியார் இணக்கம் வாழ்க்கையின்பம் மிகுத்து அதனைப் பயனுடையதாக்கும்.

(வி - ம்) பொன்னே என்பதன் ஏகாரம் தேற்றமும் கழிப்பரே என்பதன் ஏகாரம ஈற்றசையுமாம். அன்றே வென்னும் இடைச்சொல் இரக்கப்பொருள குறித்தது. சான்றவர் மேன்மையில் மரீஇ இன்புறும் நயமின்மை கருதி; 'நயமில் அறிவினவ,' ரென்றார்; பயனில் பொழுது கழிக்கும் வீணரை நயமில் அறிவினவரென விதந்தது, மிக்க நயமுடைத்து. "நயனில னென்பது சொல்லும் பயனில, பாரித் துரைக்கும் உரை"* என்பது திருக்குறள். உ

**163.** **அவமதிப்பும் ஆன்ற மதிப்பும் இரண்டும்**
**மிகைமக்க ளான்மதிக்கற் பால;—நயமுணராக்**
**கையறியா மாக்கள் இழிப்பும் எடுத்தேத்தும்**
**வையார் வடிந்தநூ லார்.**

(பொ - ள்) அவமதிப்பும் ஆன்ற மதிப்பும இரண்டும் மிகைமக்களான் மதிக்கற்பால - மதிப்பின்மையும் மிக்க மதிப்புமாகிய இரண்டும மேன்மக்களாகிய பெரியோர்களால் மதித்தற்குரியனவாகும்; நயம் உணராக் கையறியா மாக்கள் இழிப்பும எடுத்தேத்தும் - நன்மையை உணர்தலில்லாத ஒழுக்கமறியாக் கீழ்மக்களின் இழிப்புரையும் உயர்த்தும் ஏத்துரையும, வடித்த நூலார் வையார் - தெளிந்த நூலறிவினையுடையோர் ஒரு பொருளாக மனத்துட் கொள்ளமாட்டார்கள்.

(க - து) மேன்மக்கள்பால் மதிப்புப்பெற முயலுதல் வேண்டும்.

(வி - ம்) ஆன்ற மதிப்பென்றது, நன்கு மதித்தலை உட்கொண்டு நின்றது. மிகைமக்கள் - மக்களில் மேம்பட்ட நன்மக்கள்; பொதுமக்களினும் மேம்பட்டோரென்று கொள்க. மாக்களென்போர் அப் பொதுமக்களினுங் கீழ்ப்பட்டோர். கை, ஈண்டு ஒழுக்கமென்னும் பொருட்டு. உணரா அறியா மாக்கள் என்க,

* குறள், ௨0 : ௩.

"மூவா முதலா வுலகம்"* என்புழிப்போல. சான்றோராயின், உலகில் நிகழுந் தகுதிகளைத் தம் உள்ளத்து மதித்து மகிழ்வர்; நிகழ்வன தகுதியற்றனவாயின் அவற்றை மதியாமல் வாளாவிருப்பரல்லது தூற்றார். நயமுணராக் கையறியா மாக்களாயின், இழித்தலாயினும் அன்றி ஏத்துதலாயினும் தம் வாய்விட்டுக் கூறுவர். இவ்வியல்பு புலப்படுத்துவார், 'இழிப்பும் எடுத்தேத்து' மென்று அவரது வாயுரைக்கண் வைத்து ஆசிரியர் விளக்கின ரென்க. ௩

**164.** விரிநிற நாகம் விடருள தேனும்
உருமின் கடுஞ்சினஞ் சேணின்றும் உட்கும்;
அருமை யுடைய அரண்சேர்ந்தும் உய்யார்
பெருமை யுடையார் செறின்.

(பொ - ள்) விரிநிற நாகம் விடர் உளதேனும் உருமின் கடு சினம் சேண் நின்றும் உட்கும் - படம் விரித்தலையுடைய நாகப்பாம்பு நிலத்தின் வெடிப்பினுள்ளே உள்ளதானாலும் இடியின் கொடிய ஒலிச் சீற்றமானது தொலைவில் இருந்தும அதற்கு அஞ்சும், அதுபோல; அருமையுடைய அரண் சேர்ந்தும் பெருமையுடையார் செறின் உய்யார் - அருமைப்பாடுடைய பாதுகாப்பிடத்தைச் சேர்ந்திருந்தாலும், மேன்மையுடைய பெரியோர் சீறுவராயின், ஏனைச் சிறியோர் அதற்குத தப்பமாட்டார்.

(க - து) பெரியோர்க்குப பிழைசெய்து பின் அதிலிருந்து தப்புதல் இயலாது.

(வி - ம்) விடரென்பது பிளப்பு; "விடர்முகை யடுக்கம்"† என்பது அகநானூறு. இடி முழக்கத்தின் மேன்மேற் கடுமை சினமெனப்பட்டது. 'அரண் சேர்ந்தும்' என்றதனால், பெருமையுடையாரது சினம் அவ்வரண் முதலியவற்றையுங் கெடுக்குமென்பது பெறுதும். பெருமையுடையார செறின் என்றமையின் ஏனைச் சிறியோர் உய்யார் என, வினைமுதல் தானே பெறப்பட்டது. ௪

**165.** எம்மை யறிந்திலிர் எம்போல்வார் இல்லென்று
தம்மைத்தாம் கொள்வது கோளன்று;—தம்மை
அரியரா நோக்கி அறனறியுஞ் சான்றோர்
பெரியராக் கொள்வது கோள்.

* சிந். க. † அகநா. சஎ.

(பொ - ள்) எம்மை அறிந்திலிர் எம்போல்வார் இல் என்று தம்மைத்தாம் கொள்வது கோள் அன்று - 'எமது தகுதியை நீவிர் அறிந்தீரில்லை, எம்மைப்போன்ற தகுதி யுடையார் பிறர் ஈண்டு இல்லை' என்று தம்மைத்தாமே பெருமைப்படுத்திக்கொள்வது சிறந்த மதிப்பாகாது; தம்மை அரியரா நோக்கி அறன் அறியுஞ் சான்றோர் பெரியராக் கொள்வது கோள் - தம்மை அருமையுடைய ராகக் கருதி, அறமுணருஞ் சான்றோர் பெரியரென்று மதித் தேற்றுக்கொள்ளுதலே பெருமையாகும்.

(க - து) தம்மைச் சான்றோர் பெரியரென மதித் தேற்குமாறு தாம் செய்கையில் ஒழுகுதலன்றித், தம்மைத் தாமே பெரியரென வாயுரையாற் புலப்படுத்திக்கொள்ளு தல் மதிப்புடைமையாகாது.

(வி - ம்) "வியவற்க எஞ்ஞான்றுந் தன்னை,"* என்றார் பிறரும். 'அரியரா, பெரியரா, ஈறு தொகுத்தல். தக்கோ ரென்னும் பொருட்டு, அறனறியுஞ் சான்றோரென்றார். அறிதலாவது ஈண்டு அறிந்தொழுகுதல். ௫

**166.** நளிகடல் தண்சேர்ப்ப! நாணிழற் போல
விளியுஞ் சிறியவர் கேண்மை;—விளிவின்றி
அல்கு நிழற்போல் அகன்றகன் றோடுமே
தொல்புக ழாளர் தொடர்பு

(பொ - ள்) நளி கடல் தண் சேர்ப்ப - பெரிய † கடலின் குளிர்ந்த துறையையுடையவனே! சிறியவர் கேண்மை நாள் நிழல்போல விளியும் - சிறியோர் நட்புக் காலைநேரத்தின் நிழல்போலக் குறைந்து கெடும்; விளிவு இன்றி - அவ்வாறு குறைந்து கெடுதலில்லாமல், அல்கு நிழல்போல் - மாலை நேரத்தின் நிழல்போல, தொல் புக ழாளர் தொடர்பு அகன்று அகன்று ஓடும் - பழமை தொட்டு வரும் புகழினையுடையரான பெரியோர் நட்பு வளர்ந்து வளர்ந்து பெருகும்.

---

* குறள். ௪௪ : ௯.   † தொல். உரி. ௨௨.

(க - து) இருக்க இருக்கப் பெருகும் நேயமாட்சிக் குரிய பெரியோரிடம், பிழைத்தலின்றி யொழுகி நலம் பெறல் வேண்டும்.

(வி - ம்) நாள், நாளின் தோற்ற நேரமாகிய காலைப் பொழுதை யுணர்த்திற்று. அல்கு என்பது முதனிலைத் தொழிற் பெயர்: சுருங்குதல் என்பது பொருள்; பொழுது சுருங்குதலை யுடைய நேரம் என்னும் கருத்தில் ஆகுபெயராய் இங்கு அது மாலைக் காலத்தை உணர்த்திநின்றது. மாலையென்றது ஈண்டுப் பிற்பகல். அடுக்கு மிகுதிப்பொருளது. தொல் புகழாளர் என்றார், புகழுக்குரிய நல்லியல்பும் பழக்கமும் இயற்கையாகவும் செயற்கை யாகவும் நெடுங்காலமாக உடையரென்னும் பொருட்டு. சு

**167.** மன்னர் திருவும் மகளிர் எழினலமும்
துன்னியார் துய்ப்பர் தகல்வேண்டா;—துன்னிக்
குழைகொண்டு தாழ்ந்த குளிர்மர மெல்லாம்
உழைதங்கட் சென்றார்க் கொருங்கு.

(பொ - ள்) மன்னர் திருவும் மகளிர் எழில் நலமும்- அரசர் வளமும் மகளிரின் எழுச்சியழகும், துன்னியார் துய்ப்பர் - அவர்களுடன் நெருங்கிக் கலந்திருப்பவர் நுகா வர்; தகல் வேண்டா - நேயம் என்னும் அந் நெருக்க மல்லது அதற்குத் தகுதியுடைமை வேண்டா; துன்னிக் குழைகொண்டு தாழ்ந்த குளிர்மரமெல்லாம் - நெருங்கத் தழைகள் பொருந்தித் தாழ்ந்துள்ள குளிர்ச்சியான மரங்க ளெல்லாம், உழை தங்கட் சென்றார்க்கு ஒருங்கு - தம் மிடம் வந்தடைந்தா ரனைவர்க்கும் வேறுபாடின்றி நிழலிட மாகும்.

(க - து) ஆதலால், நேயத்தால் தம்மை அடைந்தவ ரிடம் தகுதி வேறுபாடுகள் கருதாமல், பெரியோர் அளவ ளாவியிருந்து அவரை மகிழ்விப்பரென்க.

(வி - ம்) உவமைகள் மூன்றும் இருவகையாகப் பெரியோர் மாட்சிமை யுணர்த்தின. சிறப்பாக நேய நெருக்கமுடையார் துய்த்தற்கு முதலிரண்டு உவமைகளும், தகுதி வேறுபாடு கருதாமைக்குப் பின் ஓர் உவமையும் வந்தனவென்க. இதனாற் பெரியோரது திருநலம் விளங்கிற்று. தகல், தொழிற்பெயர். துன்னி

யென்பதற்குக் கிளைகள் நெருங்கியென உரைத்தலுமாம். குளிர் மரமாதலின் குழை கொண்டு தாழ்ந்தவெனக் கூறப்பட்டது. உழை - இடம்; ஈண்டு நிழல் பயக்கும் இடமென்க. ஒருங்கு என்றார், வேறுபாடு கருதாமைப் பொருட்டு. எ

**168.** தெரியத் தெரியுந் தெரிவிலார் கண்ணும்
பிரியப் பெரும்படர்நோய் செய்யும்;—பெரிய
உலவா இருங்கழிச் சேர்ப்ப!யார் மாட்டும்
கலவாமை கோடி யுறும்.

(பொ - ள்) தெரியத்தெரியும் தெரிவிலார்கண்ணும்- நூற்பொருள்களை விளங்கத் தெளியும் தெளிவில்லாதவரிடத்தும், பிரியப் பெரும்படர் நோய் செய்யும் - அவரைப் பிரிய அப் பிரிவு பெரிய நினைவுத்துன்பம் உண்டாக்கும்; பெரிய உலவா இரு கழிச் சேர்ப்ப - வளங்கெடாத கருநிறமான பெரிய கழிக்கரையை யுடையோனே, யார் மாட்டும் கலவாமை கோடி உறும் - ஆதலால், பெரியோரிடத்தன்றிப் பிறர் யாரிடத்திலும் நேயங்கொள்ளாமை கோடிப்பங்கு நன்மையாகும்.

(க - து) ஆராய்ந்து பெரியோரிடமே நேயங் கொள்ளுதல் வேண்டும்.

(வி - ம்) பிரிய அப் பிரிவு நோய் செய்யும் என்று கொள்க. படர் - நினைவு; "படரே உள்ளல்"* என்பது தொல்காப்பியம்; படர்நோய் - நினைதலாலுண்டாகும் வருத்தம். நெய்தல் நிலம் கார் காலத்தில் நெல் விளைத்தும் வேனிற் காலத்தில் உப்பு விளைத்தும் என்றும் வளங்கெடாதிருத்தலின், "உலவாக் கழி" யெனப் பட்டது; "வானம் வேண்டா உழவின் எம் கானலஞ் சிறுகுடி"† என்பதும் நினைவுகூர்க. அ

**169.** கல்லாது போகிய நாளும், பெரியவர்கண்
செல்லாது வைகிய வைகலும்,—ஒல்வ
கொடாஅ தொழிந்த பகலும், உரைப்பின்
படாஅவாம் பண்புடையார் கண்.

---

* தொல். உரி. சஉ.   † நற். உகச.

(பொ - ள்) கல்லாது போகிய நாளும் - கற்றற்குரிய நூல்களைக் கல்லாமற் கழிந்த நாட்களும், பெரியவர்கண் செல்லாது வைகிய வைகலும் - கேள்வியின் பொருட்டுப் பெரியோர்பாற் செல்லாது நின்ற நாட்களும், ஒல்வ கொடாது ஒழிந்த பகலும் - இயன்ற பொருள்களை உரிய வர்களுக்கு உதவாமல் நீங்கிய நாட்களும், உரைப்பின் - சொல்லுமிடத்து, பண்புடையார்கண் படா - நல்லியல் புடைய பெரியோர்களிடம் உண்டாகமாட்டா.

(க - து) கல்வி கேள்விகளும் ஒப்புரவும் என்றும் பெரியோர் உடையராயிருப்பர்.

(வி - ம்) சாந்துணையுங் கற்றலும்,* செவிக்குண வில்லாத போழ்து சிறிது வயிற்றுக்கு ஈதலும்,† 'இரவலர்க்கு அருங்கலம் வீசி வாழ்தல் வேண்டும் இவண் வரைந்த வைக'லெனக் கருத லும் ‡ நல்லோர் இயல்பாகலின், இங்ஙனங் கூறினர். ஒல்வ - வினை யாலணையும் பெயர். அளபெடைகள் செய்யுளோசை நிறைத்து நின்றன. ஆம், அசை. கூ

170. பெரியார் பெருமை சிறுதகைமை ; ஒன்றிற்
குரியா ருரிமை யடக்கம் ;—தெரியுங்கால்,
செல்வ முடையாருஞ் செல்வரே, தற்சேர்ந்தார்
அல்லல் களைப வெனின்.

(பொ - ள்) பெரியார் பெருமை சிறுதகைமை-கல்வி கேள்விகளிற் பெரியாருடைய பெருமைக் குணமாவது யாண்டுந் தாழ்வுடைமையாயிருத்தல்; ஒன்றிற்கு உரி யார் உரிமை அடக்கம் - வீடுபேற்றிற்கு உரியரான மெய் யுணர்வாளர்க்கு உரிமையான பண்பாவது மனமொழி மெய்கள் அடக்கமாயிருத்தல்; தெரியுங்கால் - ஆராயு மிடத்து, செல்வமுடையாரும் செல்வரே தற் சேர்ந்தார் அல்லல் களைப எனின் - தம்மை அடைந்தவர்களுடைய வறுமைத் துன்பங்களை நீக்குவார்களாயின் செல்வம் படைத்தவர்களும் செல்வரேயாவர்.

* குறள், ௪0 ; எ. † குறள், ௪உ : உ. ‡ புறம். ௧௬௭.

(க - து) செல்வமும் கல்வியும் மெய்யுணர்வுமுடைய பெரியோர், யாண்டும் உதவியும் பணிவும் அடக்கமுமுடையராயிருப்பர்.

(வி - ம்) சிறிய தன்மையுடையாரபோல் தாழ்வுடையராயிருத்தலின் அப் பணிவுடைமையை ஈண்டுச் சிறுதகைமையென்றார். சிறப்பு நோக்கி வீடுபேறு, ஒன்றெனப்பட்டது. தற்சேர்ந்தார், ஒருமை பன்மை மயக்கம். "தற்சேர்ந்தார் ஒற்கம் கடைப்பிடியாதார்" * என்றார் பிறரும். பெரியராயினார் இத்தகையினராதலின் இது தெரிந்து இந் நிலைகட்கேற்ப அவாபாற் பிழைபடா தொழுகிக்கொள்க வென்பது கருத்து. இவ்வதிகாரத்தில் பெரியாரியல்புரைப்பனவாய் வந்திருக்கும் இதுபோன்ற செய்யுள்கட்கும் இவ்வாறுரைத்துக்கொள்க. ௧0

---

## கஅ. நல்லினம் சேர்தல்

உயர்ந்த பண்புடையார் கூட்டத்திற் சேர்ந்து பழகுதல்.

171. அறியாப் பருவத் தடங்காரோ டொன்றி
நெறியல்ல செய்தொழுகி யவ்வும்—நெறியறிந்த
நற்சார்வு சாரக் கெடுமே வெயின்முறுகப்
புற்பனிப் பற்றுவிட் டாங்கு.

(பொ - ள்) அறியாப் பருவத்து அடங்காரோடு ஒன்றி நெறியல்ல செய்தொழுகியவும - அறியவேண்டுவன அறியாத சிறுபருவத்தில், அடங்கியொழுகாத தீயோருடன் சேர்ந்து முறையல்லாதவற்றைச் செய்தொழுகிய தீயகுணங்களும், வெயில் முறுகப் புல் பனிப் பற்று விட்டாங்கு - வெயில் கடுகுதலால் புல்நுனியைப் பனியின் பற்றுதல் விட்டாற்போல, நெறியறிந்த நற்சார்வு சாரக் கெடும் - நன்னெறி தெரிந்தொழுகும் உயர்ந்த பெரியோர சார்பைச் சார்ந்து பழகுதலாற் கெடும்.

(க - து) தீய குணங்கள் நீங்கும்பொருட்டு நல்லாரினத்திற் சார்ந்து பழகுதல்வேண்டும்.

---

* ஐந். ஐம். சஅ.

(வி - ம்) அடங்கார், வினையாலணையும் பெயர். செய்தொழுகி யவ்வும் என்பதில் வகரம் விரிந்தது. உம்மை நல்லோர் சேர்க்கையால் நல்லன பெறுதலோடு என்னுங் கருத்துணர்த்துதலின் எச்சம். க

**172.** அறிமின் அறநெறி; அஞ்சுமின் கூற்றம்;
பொறுமின் பிறர்கடுஞ்சொல்; போற்றுமின் வஞ்சம்;
வெறுமின் வினைதீயார் கேண்மை; எஞ்ஞான்றும்
பெறுமின் பெரியார்வாய்ச் சொல்.

(பொ - ள்) அறிமின் அறநெறி-கடமையொழுங்கை அறிந்தொழுகுங்கள்; அஞ்சுமின் கூற்றம் - நமன் வருதற்கு அஞ்சி யொழுகுங்கள்; பொறுமின் பிறர் கடுசொல்-பிறர் கூறும் வன்சொற்களைப் பொறுத்துக்கொள்ளுங்கள்; போற்றுமின் வஞ்சம் - வஞ்சித்தொழுகுதலைக் காத்துக் கொள்ளுங்கள்; வெறுமின் வினை தீயார் கேண்மை - செய்கை தீயவரது நட்பை வெறுத்தொதுக்குங்கள்; எஞ்ஞான்றும் பெறுமின் பெரியார்வாய்ச் சொல் - எக்காலத்திலும் பெரியார் வாயிலிருந்து வரும நன்மொழிகளை ஏற்று ஒழுகுங்கள்.

(க - து) நல்லாரினத்தைச் சார்ந்து பழகி அதனால் அறநெறியறிதல் முதலிய நலன்களைப் பெறுதல் வேண்டும.

(வி - ம்) இச்செய்யுள் நல்லினம் சார்தற்குரியாரை நோக்கிற்று. அறிமின் முதலியன, அறிந்து அந்நெறி நிற்றலை யுணர்த்தா நின்றன. கூற்றம் அஞ்சுதலாவது அருள்வழிநின்றொழுகுதல். 'வஞ்சம் போற்றுமின்' என்றது, தம்மைச சாராதவாறு காத்துக் கொள்ளுதலென்க. "புறஞ்சொற் போற்றுமின்"* என்றார் பிறரும். வினை தீயார் - தீயசெயலுடையார். பெரியார் வாய்ச்சொல் பெறுதற்கு அறநெறி யறிந்தொழுகுதல் முதலியன இன்றியமையாதன வாதலின், அவற்றை முறையே முற்கூறினார். ஒரோவொருகாற் பிற நெறிகள் தவறினும் பெரியார் வாய்ச்சொல் பெறுதல் ஒரு போதுந் தவறலாகா தென்றற்கு, எஞ்ஞான்றும் என்னுஞ் சொல் அதனை யடுத்து நின்றது. உ

* சிலப். ௯௦: கஅஅ.

**173.** அடைந்தார்ப் பிரிவும் அரும்பிணியும் கேடும்
உடங்குடம்பு கொண்டார்க் குறலால்—தொடங்கிப்
பிறப்பின்னா தென்றுணரும் பேரறிவி னாரை
உறப்புணர்க அம்மாஎன் நெஞ்சு.

(பொ - ள்) *அடைந்தார்ப் பிரிவும் அரு பிணியும் கேடும்* - இயற்கையாகவும் செயற்கையாகவுஞ் சார்ந்தவரான உறவினர் நண்பர் முதலியோரைப் பிரிந்து நிற்றலும், தீர்தற்கரிய நோயும், இறப்பும், *உடங்கு உடம்பு கொண்டார்க்கு உறலால்* - பிறவியெடுத்தவர்க்கு ஒருங்கே பொருந்துதலால், *தொடங்கி* - ஆராயத் தொடங்கி, *பிறப்பு இன்னாது என்று உணரும் பேரறிவினாரை* - பிறப்புத் துன்பந் தருவது என்றுணர்ந்து பற்றற்றொழுகும் பெரிய அறிவினரான ஞானியரை, *உறப் புணர்க என் நெஞ்சு* - என் உள்ளம் மிகக் கூடுக.

(க - து) துன்பந் தரும் பிறப்பை அதன் இயல்பறிந்து பற்று நீங்கி யொழுகும் ஞானியரான நல்லாரினத்தைச் சார்ந்தொழுகுதல் வேண்டும்.

(வி - ம்) உற்றார் முதலியோரைப் பிரிந்துநிற்க நேர்ந்தால், அப்போது இவ்வுடம்புக்குப் பற்பல வசதிகள் குறைந்து துன்பம் விளைத்தலால் அவையெலாம் 'அடைந்தார்ப் பிரிவும்' என்பதில் அடங்கும். உடங்கு உறலால் என்க. உடம்பு இலக்கணையாற் பிறவியை உணர்த்திற்று. இத் துன்பப் பிறவியை மகிழ்தல் அறிவுடைமையாகாமையின் இன்னாதென் றுணர்தல் பேரறிவுடைமையாயிற்று. "இளமை மகிழ்ந்தாரே.........இன்னாத கெழுந்திருப்பார்,"* என்றார் முன்னும். அம்மா, அசை. நல்லினம் என்பது சிறப்பாக ஞானியரினம் என்பது இச்செய்யுட் கருத்து. ௩

**174.** இறப்ப நினையுங்கால் இன்னா தெனினும்
பிறப்பினை யாரும் முனியார்;—பிறப்பினுள்
பண்பாற்றும் நெஞ்சத் தவர்களோ டெஞ்ஞான்றும்
நண்பாற்றி நட்கப் பெறின்.

---

* நாலடி, ௨ : க.

(பொ - ள்) பிறப்பினுள் - தாம் பிறந்த பிறப்பில், பண்பு ஆற்றும் நெஞ்சத்தவர்களோடு எஞ்ஞான்றும் நண்பு ஆற்றி நட்கப்பெறின் - பிறர்க்கு உதவிசெய்யும் நெஞ்சமுடையவர்களான பெரியார்களோடு எப்போதும் நேயஞ்செய்து அணுகியிருக்கப்பெற்றால், இறப்ப நினையுங்கால் இன்னாது எனினும் பிறப்பினை யாரும் முனியார் - மிக ஆராயுமிடத்துத் துன்பந் தருவதென்றாலும் அப்பிறபபினை யாரும் வெறுக்கமாட்டார்கள்.

(க - து) பிறவி துன்பந் தருவதாயினும் நல்லாரினத்தோடு நேயங்கொண்டிருக்கப் பெறின் அதனை யாரும் வெறார்.

(வி - ம்) பிறவி நன்முறையிற் செல்லுதலின் வெறுக்கப் படாதாயிற்று. பிறப்பினுள் நட்கப்பெறின் அப் பிறப்பினை, இன்னாதெனினும் யாரும் முனியாரென்று கொள்க. பண்பென்பது பாடறிந்தொழுக*லாதலின், ஈண்டு உதவி யெனப்பட்டது. அது, நல்லார் இலக்கணம் இன்னதென்பதுணர்த்தும் பொருட்டு நின்றது. ௪

**175.** ஊரங் கணநீர் உரவுநீர் சேர்ந்தக்கால்
பேரும் பிறிதாகித் தீர்த்தமாம் ;—ஓருங்
குலமாட்சி யில்லாரும் குன்றுபோல் நிற்பர்
நலமாட்சி நல்லாரைச் சார்ந்து.

(பொ - ள்) ஊர் அங்கண நீர் உரவுநீர் சேர்ந்தக்கால் - ஊரின் சாக்கடை நீர் கடலைச் சேர்ந்தால், பேரும் பிறிதாகித் தீர்த்தம் ஆம் - பேரும் கடல் நீர் என்று வேறாகி அருள்நீராகும; ஓரும் குலமாட்சி இல்லாரும் - மதிக்கத்தக்க நற்குலப் பெருமையில்லாத கீழோரும், குன்றுபோல் நிற்பர் நலமாட்சி நல்லாரைச் சார்நது குணப்பெருமை வாய்ந்த நல்லாரைச் சார்ந்து அவர் நற்றன்மையில் மலைபோல் அசைதலின்றி நிலைத்து விளங்குவர்.

(க - து) கீழோரும் மேலோரைச் சேர்ந்தால், மேலோரேயாவர்.

---

* கலித். கந௩: அ.

(வி - ம்) உரவுநீர், வலிமையுடைய நீரென்னுங் கருத்திற் கடல்நீருக்கு வந்தது. தீவினைகளைத் தீர்க்கும் அருளியல்பு வாய்ந்த நீர் தீர்த்தம் எனப்படுவதாயிற்று. குலம் - நல்லோர் சூழல். நலம், ஈண்டுப் பண்பு. குன்றுபோல் நிற்பரென்றுரா, பின் அந்நிலையினின் றும் வழாரென்றற்கு. ௫

**176.** ஒண்கதிர் வாள்மதியம் சேர்தலால் ஓங்கிய
அங்கண் விசும்பின் முயலும் தொழப்படூஉம்;
குன்றிய சீர்மைய ராயினும் சீர்பெறுவர்,
குன்றன்னார் கேண்மை கொளின்.

(பொ - ள்) ஒள் கதிர் வாள் மதியம் சேர்தலால் ஓங்கிய அங்கண் விசும்பின் முயலும் தொழப்படும் - இனிய கதிர்களையுடைய ஒள்ளிய திங்களைச் சேர்தலால் அழகிய இடமகன்ற வானத்தின்கண் முயலும் மாந்தரால் வணங்கப்படும்; குன்றிய சீர்மையராயினும் சீர்பெறுவர் குன்றன்னார் கேண்மை கொளின் - ஆதலால், குறைந்த நிலைமையுடையராயினும மக்கள் மலைபோன்ற பெருமை யுடைய நல்லாரது நேயத்தை யடைந்தால் நிறைந்த சிறப் பினைப் பெறுவர்.

(க - து) மக்கள், நல்லார் நேயத்தராயிருப்பின் சிறப் புறுவர்.

(வி - ம்) வாண்மதியம் என அடுத்து வருதலின் கதிர்க்கு ஒண்மையாவது இனிமையென்று கொள்க. ஒண்மைக்கு இந் நன் மைப் பொருளுண்மை பிங்கலந்தையிற்* காணப்படும். முயல், திங்களின்கட் காணப்படும் மறு. பிறைதொழுதல் வழக்கமாதலின்,† அதன்கண உள்ள மறுவும் தொழப்படுவதாயிற்று. சீர்மை, பொது வாக ஈண்டு நிலைமையென்னும் பொருட்டு. நிலை வழுவாதவராக லின், நல்லோர் குன்றன்னாரெனப்பட்டனர். அவரோடு கேண்மை கொள்ளுதலாவது அவர் அன்புக்குரியவராய் அவர் இனத்தவராய் இருத்தலென்க. ௬

**177.** பாலோ டளாயநீர் பாலாகு மல்லது
நீராய் நிறந்தெரிந்து தோன்றாதாம்;—தேரின்,
சிறியார் சிறுமையும் தோன்றாதாம், நல்ல
பெரியார் பெருமையைச் சார்ந்து.

* பிங். க௦: உக௦. † குறுந். ௩௦௭.

(பொ-ள்) பாலோடு அளாய நீர் பாலாகுமல்லது நீராய் நிறம் தெரிந்து தோன்ருது - பாலோடு கலந்த நீர் பாலாகித் தோன்றுமல்லது நீராய்த் தன் நிறம் விளங்கித் தோன்ருது; தேரின் - ஆராய்ந்தால், சிறியார் சிறுமையும் தோன்ருது நல்ல பெரியார் பெருமையைச் சார்ந்து - உயர்ந்த பெரியாருடைய பெருந்தன்மையைச் சார்தலால் சிறியார் குறைபாடுந் தோன்ருமற் பெருமையேயாகும்.

(க - து) மக்கள் பெரியாரோடு சேர்ந்திருந்து தம் குறை நீங்கிப் பெருமையடைதல்வேண்டும்.

(வி - ம்) உவமையில் நீராய்த் தெரியாமையும் பாலாய் நிறமாதலுங் கூறப்பட்டமையின், பொருளிலும் சிறுமை தோன்ருமையோடு பெருமை உருவாதலும் உரைத்துக்கொள்க. நீர் தன் நிறந்தெரிந்து தோன்ருதென்றமையின் பால் நிறந்தெரிந்து தோன்றுமென்பது பெறப்பட்டமையால் அவ்வாறே சிறியோர்க்குங் கொள்க. "உவமப் பொருளின் உற்ற துணருந் தெளிமருங் குளவே திறத்தியலான"* என்பதனுன் இங்ஙனங் கொள்ளப்படும். ஆம் இரண்டனுள் முன்னது அசை. நல்ல என்னும் அடைமொழி இயல்புணர்த்தியபடி. எ

**178.** **கொல்லை யிரும்புனத்துக் குற்றி யடைந்தபுல்**
**ஒல்காவே யாகும் உழுவ ருழுபடைக்கு;**
**மெல்லியரே யாயினும் நற்சார்வு சார்ந்தார்மேற்**
**செல்லாவாம் செற்ருர் சினம்.**

(பொ-ள்) கொல்லை இரு புனத்துக் குற்றியடைந்த புல் - கொல்லையாகிய பெரிய நிலத்திலுள்ள மரக்கட்டையைச் சேர்ந்து வளர்ந்த புல், ஒல்கா ஆகும் உழவர் உழுபடைக்கு - உழவரது உழுகின்ற படையாகிய கலப்பைக்குக் கெடாதனவாகும்; மெல்லியரேயாயினும் நற்சார்வு சார்ந்தார் மேல் செல்லா செற்ருர் சினம் - வலிமையில்லாதவரே யாயினும் நல்லினத்தாரென்னும் வலிய சார்பினைச் சார்ந்தவர்மேல் பகைவரது சினம் பயன்படாமற்போம்.

(க - து) நல்லாரினத்திற் சேர்ந்திருப்பார்மேற் பகைவர் சினம் செல்லாது.

---

* தொல். உவம. உ0.

(வி - ம்) குற்றி - சிறுகட்டை; ஈண்டுக், கொல்லையில் வளர்ந்து தரையளவாக வெட்டப்பட்டுவிட்ட வேர்க்கட்டை. ஒல்காமைக்கு இங்குக் கெடாமைப்பொருளுரைக்க. "ஒல்கிய எழில்"* என்ற விடத்துக் "கெட்ட அழகு" என்று நச்சினார்க்கினியர் உரைகூறி னமை காண்க. மெல்லியரென்றது அறிவு, ஆற்றல், பொருள், நிலை முதலியவற்றிற் சிறியர் என்னும் பொருட்டு. நற்சார்வு, இந்நிலை களிற் பெரியராயினாரது துணை. சினம், பகையின்மேற்று. செல் லாது என்பது கடைகுறைந்து நின்றது. "தக்கா ரினத்தனாய்த் தானொழுக வல்லானைச், செற்றார் செயக்கிடந்த தில்,"† என்றார் நாயனார். அ

179. நிலநலத்தால் நந்திய நெல்லேபோல் தத்தங்
குலநலத்தால் ஆகுவர் சான்றோர்;—கலநலத்தைத்
தீவளி சென்று சிதைத்தாங்குச் சான்றாண்மை
தீயினஞ் சேரக் கெடும்.

(பொ - ள்) நிலநலத்தால் நந்திய நெல்லேபோல் தத் தம் குலநலத்தால் ஆகுவர் சான்றோர் - நிலத்தின் வளத் தினாற் செழித்து வளர்ந்த நெற்பயிரைப்போல் தத்தம் இன நலத்தால் நல்லோர் மேன்மேலும் சான்றாண்மையுடை யோராவர்; கலநலத்தைத் தீவளி சென்று சிதைத்தாங்கு - மரக்கலத்தின் வலிமையைக் கொடிய புயற்காற்றுச் சென்று கெடுத்தாற்போல, சான்றாண்மை தீ இனம் சேரக் கெடும் - தீய இனத்தவரைச் சேர அதனால் அச் சான் றாண்மை அழியும்.

(க - து) இயல்பாகவே நல்லோராயிருப்பவர்க்கும் நல்லினச் சேர்க்கை நன்மையையும் தீயினச் சேர்க்கை தீமையையும் உண்டாக்கும்.

(வி - ம்) நிலத்துக்கு நலமாவது வளம். குலம் - கலந்து பழகு வோர் இனம். இச்செய்யுள் சான்றோரைக் கருதிற்றாதலின், அவர் மேலுமேலுஞ் சான்றோராகுவரென்று முதற்பகுதிக்கு உரைக்கப் பட்டது. கலத்துக்கு நலமாவது அலைகளாற் றாக்குறாது செல்லும் உறுதி. உவமைக்கேற்றபடி பொருளின் எழுவாய் தீயினம் ஆக வேண்டுமாயினும், அதனாற் கருத்துக்கு இழுக்கின்றென்க. இது, "உவமப் பொருளை யுணருங் காலை மரீஇய மரபின் வழக்கொடு படுமே"‡ என்பதனாற் றெளியப்படும். கூ

* கலித். அ: ச. † குறள், சகு: கூ. ‡ தொல். உவமம். உக.

**180.** மனத்தான் மறுவில ரேனுந்தாஞ் சேர்ந்த
இனத்தால் இகழப் படுவர்;—புனத்து
வெறிகமழ் சந்தனமும் வேங்கையும் வேமே,
எறிபுனந் தீப்பட்டக் கால்.

(பொ - ள்) புனத்து வெறி கமழ் சந்தனமும் வேங்கையும் வேம் எறிபுனம் தீப் பட்டக்கால் - காட்டிலுள்ள மணங் கமழ்கின்ற சந்தனமரமும் வேங்கைமரமும் பெருங் காற்று வீசுகின்ற அக்காடு தீப்பிடித்தால் வெந்து அழிந்து விடும்; மனத்தால் மறு இலரேனும் தாம் சேர்ந்த இனத் தால் இகழப்படுவர் - ஆதலால், சான்றோர் தம் மனநலத் தால் மாசிலராயினும் தாம் சேர்ந்த தீய இனத்தினால் பெருமை குன்றிப் பழிக்கப்படுவர்.

(க - து) சான்றோர் மனநலம் நன்குடையராயினும் தீயினச் சேர்க்கையால் பெருமை குறைந்து கெடுவர்.

(வி - ம்) இகழப்படுவா சான்றோரென்று கொள்க. இகழப் படுவரென்னுங் குறிப்பால் இனம் தீயினத்துக்காயிற்று. மணங் கமழ்தல் வேங்கைக்குங் கொள்க. "வேங்கை கமழுமெஞ் சிறுகுடி"* என்றார் பிறரும். வேமே என்னும் ஏகாரம் இரக்கம் புலப்படுத்திற்று. எறிதலென்னும் ஆற்றலாற் பெருங்காற்றெனப்பட்டது. காடுகளிற் காற்றினால் மரங்கள் உராய்ந்து தீப்பற்றுதல் இயல்பாகலின் எறிதல் என்பது இப்பொருட்டாயிற்று. புனத்துச சந்தனமும் வேங்கையும் அப் புனம எறிபுனமாய்த் தீப்பட்டக்கால் வேமென்னும் பொருட் டுப் புனம் மறித்துங் கூறப்பட்டது. உம்மைகள் எண்ணொடு உயர்வு சிறப்பும் ஆம். ௧0

---

## ௧௧. பெருமை

நல்லினத்தாரது பெருந்தன்மை உணர்த்துவது.

**181.** ஈத லிசையா திளமைசே ணீங்குதலால்
காத லவருங் கருத்தல்லர்;—காதலித்து
ஆதுநா மென்னு மவாவினைக் கைவிட்டுப்
போவதே போலும் பொருள்.

* குறுங். ௩௯௰.

(பொ - ள்) ஈதல் இசையாது - உலக வாழ்க்கை யானது வறியவர்க்கு ஒன்று விரும்பியபடி கொடுத்தல் இயலாததாயிருக்கின்றது; இளமை சேண் நீங்குதலால் காதலவரும் கருத்தல்லர் - இளமை நிலையும் நெடுந்தொலை வில் நீங்கிப் போதலால் காதலன்புடைய மனைவியரும் வரவர விருப்புடையரல்லர்; காதலித்து ஆதும் நாம் என் னும் அவாவினைக் கைவிட்டுப் போவதே போலும் பொருள் - ஆதலின் உலகவாழ்க்கையிற் பற்றுக்கொண்டு நாம் ஆக்கமுறுவோம் என்னும் அவாவினைக் கைவிட்டுத் துறவு நெறியில் ஒழுகுவதே பயன்தருவதாகும்.

(க - து) பற்றில்லாமலிருத்தலே பெருந்தன்மை யாகும.

(வி - ம்) சேண் நீஙகுதல் மீண்டும் பெறற்கருமை தேற்றி நின்றது. காதலவர், ஒருசொல்; 'இளமை நீங்குதலால்' என்னும் குறிப்பால், சிறப்பாக அது மனைவியர்மேல் நின்றது. உம்மை, இறந்ததுதழீஇயது. கருத்தென்றது ஈண்டு விருப்பம். போலும் என்பது ஒப்பில் போலி.* க

**182.** இற்சார்வின் ஏமாந்தேம் ஈங்கமைந்தேம் என்றெண்ணிப்
　　பொச்சாந் தொழுகுவர் பேதையார்;—அச்சார்வு
　　நின்றன போன்று நிலையா எனவுணர்ந்தார்
　　என்றும் பரிவ திலர்.

(பொ - ள்) இல் சார்வின் ஏமாந்தேம் - மனைவாழ்க் கைச் சார்பினால் களித்திருக்கின்றேம்; ஈங்கு அமைந் தேம் - உலகத்தில் அதற்கு வேண்டிய பொன் முதலிய எல்லா நலங்களிலும் நிறைந்திருக்கின்றேம்; என்று எண்ணிப் பொச்சாந்து ஒழுகுவர் பேதையர் - என்று கருதி அறிவிலா மாந்தர் அவற்றின் பொய்ம்மையை மறந்து ஒழுகுவர்; அச் சார்வு நின்றனபோன்று நிலையா என உணர்ந்தார் என்றும் பரிவது இலர் - ஆனால், அச்சார்புகள் நிலைத்திருப்பனபோற் காணப்பட்டுப் பின் நிலையாமற் போம் என்று உணர்ந்த மேலோர் எக்காலத்திலும் அவற்றை விரும்புதலின்றி யொழுகுவர்.

---

* தொல். இடை. ௩0.

(க - து) எல்லா உலக நலங்களும் ஒருங்கமைந்த காலத்தும் அவற்றிற் பற்றின்றி நிற்றலே பெருந்தன்மை யாகும்.

(வி - ம்) ஏமாத்தல் - மிக இன்புறுதல்; அமைதல் - குறை வின்றி யிருத்தல். இரண்டும் தெளிவின்பொருட்டு இறந்தகாலத் தில் வந்தன. "இயற்கையுந் தெளிவுங் கிளக்குங் காலை"* என்பத னால் இது முடிக்கப்படும். பேதையாரென்றதனானும் உணர்ந்தார் என்றதனானும் அவ்வவற்றின் உயர்வு தாழ்வுகள் விளங்கின. என்றும் என்றார், தம் இளமைப் பருவத்தும் அனைத்து நலங்களும் வாய்ந்த காலத்தும் பரிவிலரென்றற்கு. உ

**183.** மறுமைக்கு வித்து மயலின்றிச் செய்து
சிறுமைப் படாதேநீர் வாழ்மின்—அறிஞராய
நின்றுழி நின்றே நிறம்வேறும் காரணம்
இன்றிப் பலவு முள.

(பொ - ள்) மறுமைக்கு வித்து மயலின்றிச் செய்து சிறுமைப் படாதே நீர் வாழ்மின் அறிஞராய் - மறுமைக்கு வித்தாகிய அறச்செயலை வாழ்க்கையில் மயங்குதலில்லாமற் செய்து எஞ்ஞான்றுந் துன்புறாமல் நீவிர் அறிஞராய் வாழுங் கள்; ஏனென்றால், நின்றுழி நின்றே நிறம் வேறும் - நின்ற நிலையில் நின்றே உடம்பின் இளமையொளி வேறாய் மாறும்; காரணமின்றிப் பலவும் உள - அன்றியுங் காரண மில்லாமலே பல இடையூறுகளும் வாழ்க்கையில் உள்ளன.

(க - து) மறுமை நினைவோடு ஒழுகுதலே பெருந் தன்மையாகும்.

(வி - ம்) வித்தென்றது, வித்துப் போன்றதை; அறிஞராய் வாழ்மின் என்க. நம்மை யறியாமலே நிறம் வேறும் என்றற்கு 'நின்றுழி நின்றே' யென்றும், இம்மைச் செய் காரணம் இன்றாயி னும் என்றற்குக் 'காரணமின்றி' யென்றுங் கூறினார், மற்று, உளவாதல் உம்மைச் செய் காரணத்தாலென்று கொள்க. பலவும் என்றது, "அடைந்தார்ப் பிரிவும் அரும்பிணியும் கேடும்."† ங

* தொல். வினை. ௪௮. † நாலடி: ௧௮: ௩.

184. உறைப்பருங் காலத்தும் ஊற்றுநீர்க் கேணி
இறைத்துணினும் ஊராற்றும் என்பர் ;—கொடைக்கடனும்
சாஅயக் கண்ணும் பெரியார்போல் மற்றையார்
ஆஅயக் கண்ணும் அரிது.

(பொ - ள்) உறைப்பு அரு காலத்தும் ஊற்றுநீர்க் கேணி இறைத்து உணினும் ஊர் ஆற்றும் என்பர் - மழை துளித்தலில்லாத காலத்திலும் ஊற்று நீரையுடைய சிறிய நீர்நிலை இறைத்து உண்ணுவதாயினும் ஊரிலுள்ளாரனை வர்க்கும் உதவும் என்று பெரியோர் கூறுவர் ; கொடைக் கடனும் - அதுபோல வறியோர்க்கு ஒன்று கொடுத்தலாகிய கடமையும், சாயக்கண்ணும் பெரியார்போல் மற்றையார் ஆயக்கண்ணும் அரிது - தமது நிலைமை குறைவான காலத் தும் பெரியோர் மேற்கொள்ளுதல்போலப் பெரியரல்லா தார் தமது நிலைமை நிறைவடைந்த காலத்தும் மேற் கொள்ளுதல் அரிதாகும்.

(க - து) நிலைமை குறைந்த காலத்தும் பிறர்க்கு இயன்றது உதவ முற்படுதலே பெருந்தன்மையாகும்.

(வி - ம்) அருமை இரண்டிடத்தும் இன்மைமேற்று. கேணி என்பது மணற்பரப்பில் இயல்பாக அமையும் ஊற்றுடைய சிறிய நீர்நிலை. தொல்காப்பிய வுரையிற் "சிறுகுளம்"* எனப்பட்டது. கொடைக்கடனும் அரிது என்க. பெரியாரியல்பை உவமையுடன் உரைக்குங்கால் மற்றையாரியல்பும் உடனுரைக்கப்பட்டது. ச

185. உறுபுனல் தந்துல கூட்டி அறுமிடத்தும்
கல்லூற் றுழியூறும் ஆறேபோல்,—செல்வம்
பலர்க்காற்றிக் கெட்டுலந்தக் கண்ணும் சிலர்க்காற்றிச்
†செய்வர் செயற்பா லவை.

(பொ - ள்) உறுபுனல் தந்து உலகு ஊட்டி-நீருள்ள காலத்தில் மிக்க நீர் தந்து உலகுயிர்களை உண்பித்து, அறு மிடத்தும் கல் ஊற்றுழி ஊறும் ஆறேபோல் - நீர் வறளுங் காலத்தும் தோண்டுகின்ற ஊற்றினிடத்தில் ஊறியுதவும்

* தொல். எச். ௪. நச். † நாலடி. கடு : எ, கக : ௩.

ஆறேபோல், செல்வம் பலர்க்கு ஆற்றி - உள்ள காலத்திற் பொருளைப் பலர்க்கும் உதவிசெய்து, கெட்டு உலந்தக் கண்ணும் சிலர்க்கு ஆற்றிச் செய்வர் செயற்பாலவை - அப் பொருள் கெட்டு நிலையழிந்த காலத்தும் மேன்மக்கள், சிலர்க்கேனும் உதவிகள் செய்து தாம் செய்தற்குரிய கடமைகளைச் செய்துகொண்டிருப்பர்.

(க - து) எந் நிலையினுந் தங் கடமைகளைச் செய்தலே பெரியோர் தன்மையாகும்.

(வி - ம்) கல்லும் ஊற்றென வினைத்தொகையாகக் கொள்க. பலர்க்குமெனவும், சிலர்க்கேனுமெனவுந் தந்துரைக்க. யாண்டுஞ் செயற்பாலவை செய்தலே பெரியோரியல்பாதலின், பலர்க்காற்றி, சிலர்க்காற்றி என்ற பின்னும் 'செய்வர் செயற்பாலவை' என ஆசிரியர் முடித்துக்காட்டினர். இதனால், உதவுதலென்பது எந் நிலையினுஞ் செயற்பாலதாய கடமையாதலும் பெறப்பட்டது. ௫

**186.** பெருவரை நாட! பெரியோர்கட் டீமை
கருநரைமேற் சூடேபோற் றோன்றும் ;—கருநரையைக்
கொன்றன்ன இன்னா செயினும் சிறியார்மேல்
ஒன்றானுந் தோன்றாக் கெடும்.

(பொ - ள்) பெரு வரை நாட - பெரிய மலைகளையுடைய நாடனே! பெரியோர்கண் தீமை கருநரைமேல் சூடேபோல் தோன்றும் - மேன்மக்களிடத்தில் உண்டான குற்றம் சிறந்த வெள்ளையெருதின்மேல் இட்ட சூடு போல் விளங்கித் தெரியும்; கரு நரையைக் கொன்றன்ன இன்னா செயினும் - அச் சிறந்த வெள்ளை யெருதினைச் சூடிடுதலேயன்றிக் கொன்றாற்போன்ற துன்பங்களைச் செய்தாலும், சிறியார்மேல் ஒன்றானும் தோன்றாக் கெடும்- கீழ்மக்களிடத்தில் ஒரு குற்றமாவது அவ்வாறு விளங்கித் தெரியாமல் மறைந்துவிடும்.

(க - து) மேன்மக்களிடம் சிறு குற்றமும் உண்டாகாமலிருத்தல் நல்லது.

(வி - ம்) சூட்டின் வடுநன்கு தெரிதல் வேண்டி நரையெருது கூறப்பட்டது. நரை, ஆகுபெயர். கருவென்னும் அடைமொழி

முதன்மைப் பொருட்டாய்ச் சிறந்தவென்னுங் கருத்தில் நின்றது. சிறியோர் மிக்க கொடுமை செய்தாராயினுமென்றற்குக் 'கரு நரையைக் கொன்றன்ன' வென்றது, 'கருநரைமேற் சூடு' என்று முற்கூறியதையே தந்தெடுத்துக் கொண்டபடி யென்க. பெரியோரை அனைவரும் விளக்கமாகத் தெரிந்திருப்பாராதலின், அவர் பாற் றோன்றுஞ் சிறுகுற்றமும் விளக்கமாகத் தோன்றுவதாயிற்று. "உயர்ந்தார்ப் படுங்குற்றமும் குன்றின்மேல் இட்ட விளக்கு"* என்றார் பிறரும். சு

187. இசைந்த சிறுமை யியல்பிலா தார்கட்
பசைந்த துணையும் பரிவாம்—அசைந்த
நகையேயும் வேண்டாத நல்லறிவி னார்கண்
பகையேயும் பாடு பெறும்.

(பொ-ள்) இசைந்த சிறுமை இயல்பிலாதார்கண் பசைந்த துணையும் பரிவாம் - தமக்குப் பொருந்திய சிறுமைச் செயல்களையுடைய பண்பிலாதாரிடத்தில் நேயங் கொண்ட அளவுந் துன்பமேயாம்; அசைந்த நகையேயும் வேண்டாத நல்லறிவினார்கண் - மாறிய செயல்களை விளையாட்டாகவும் விரும்பாத சிறந்த அறிஞர்களிடத்தில், பகையேயும் பாடு பெறும் - பகை கொள்ளுதலுங்கூட மாட்சிமைப்படும்.

(க-து) பெரியோரிடத்துப் பகை செய்தலினுஞ் சிறியோரிடத்து நட்புச் செய்தல் பெருந்தீங்கு பயக்கும்.

(வி-ம்) இயல்பென்றார், உலகியல்புக்கேற்ப வொழுகும் பெருந்தன்மையாகிய பண்பை.† பசைதல், உள்ளம் நெகிழ்ந்து சென்று பற்றுதல். அசைந்த, வினையாலணையும் பெயர். நகையேயும் பகையேயும் என்னும் உம்மைகள் இழிவு சிறப்பு. எ

188. மெல்லிய நல்லாருள் மென்மை; அதுவிறந்(து)
ஒன்றுருட் கூற்றுட்கும் உட்குடைமை; எல்லாம்
சலவருட் சாலச் சலமே; நலவருள்
நன்மை வரம்பாய் விடல்.

---

* பழமொழி அ0. † கலித். கடுகூ.

(பொ - ள்.) மெல்லிய நல்லாருள் மென்மை - மென்றன்மையுடைய மகளிரிடம் மென்றன்மையாகவும், அது இறந்து ஒன்னாருள் கூற்று உட்கும் உட்கு உடைமை - பகைவரிடத்தில் அம்மென்றன்மை நீங்கிக் கூற்றுவனும் அஞ்சும் மிடுக்குடைமையாகவும், எல்லாம் சலவருள் சாலச்சலமே - முழுதும் பொய்யரானரிடத்து மிக்க பொய்ம்மையாகவும், நலவருள் நன்மை-மெய்யியல்புடைய மேலோரிடம் மெய்ம்மையாகவும், வரம்பாய்விடல் - அவ்வவற்றின் எல்லையாய் நடந்துகொள்க.

(க - து) மாந்தரின் பல்வேறு நிலைக்கு ஏற்பப் பல்வேறு வகையாக உலகத்தில் நடந்துகொள்ளவேண்டும்.

(வி - ம்) முன்னிரு வரிகள் மென்மைக்கும் ஆண்மைக்கும் பின்னிரு வரிகள் பொய்ம்மைக்கும் மெய்ம்மைக்கும் வந்தன. 'நல்லார' என்றது, ஈண்டுச் சிறப்பாய் மகளிரை யுணாத்திற்று. "மகளிர் சாயல் மைந்தர்க்கு மைந்து"* எனப் பிறரும் இக கருத்தினைபு கூறுமிடத்தான் அறிக. உட்கு, ஈண்டு மிடுக்கு ; எல்லாம், முழுமையென்னும் பொருட்டு. நன்மை, சலம் என்பதன் மறையாக வந்தமையின் மெய்ம்மையென் றுரைக்கப்பட்டது. 'வரம்பாய்விடல்' என்றார், அவ்வக்குணங்களின் மேனிலையுடையீராய் நடந்துகொள்க என்றற்கு பொய்யர்க்குப் பொய்யரா யொழுகுதல், அவர் திருந்தும்பொருட்டும் அவரால் தாம் எதமுறுமைக்கும் என்க. அ

**189.** **கடுக்கி யொருவன் கடுங்குறளை பேசி**
**மயக்கி விடினும் மனப்பிரிப்பொன் றின்றித்**
**துளக்க மிலாதவர் தூய மனத்தார்;**
**விளக்கினுள் ஒண்சுடரே போன்று.**

(பொ - ள்) கடுக்கி ஒருவன் கடுங்குறளை பேசி மயக்கி விடினும் - ஒருவன் முகஞ்சுளித்துப் பிறரைப்பற்றிக் கொடிய கோளுரை கூறித் தம்மை மயக்கினாலும், மனப்பிரிப்பு ஒன்று இன்றித் துளக்கம் இலாதவர் - அப் பிறர்பால் மனவேறுபாடு சிறிதுமின்றி முற்கொண்ட கருத்துறுதியினின்று அசைதலில்லாதவரே, தூய மனத்தார்

* புறம. உஉக: ௫.

விளக்கினுள் ஒண் சுடர் போன்று - விளக்கினில் எரியும் ஒள்ளிய தீப் பிழம்புபோன்று அழுக்கற்ற நெஞ்சுடையவ ராவர்.

(க - து) பிறர் சொல்லுங் கோளுரைகட்குச் செவி கொடாமை பெருந்தன்மையாகும்.

(வி - ம்) முகத்தின் கடுமை புலப்படுத்துதற்குக் 'கடுக்கி' என்றார்; "மடித்த செவ்வாய்க் கடுத்த நோக்கின்"† என்றார் மணிமேகலையினும். மயக்கிவிடினும் என்றமையாற் சான்றோர் மயங்கினமை பெறப்படாது; ஒருவன் தான் மயங்குஞ் செயலைத் தீர நிகழ்த்தினமையே பெறப்படும். அச்செயல் முற்றினமை தெரித்தற்கு 'விடு' என்னுந் துணிவுப்பொருள் விகுதி நின்றது. துளக்கமின்மை தூய்மையைக் காட்டுமாகலின், தூய மனத்தாரென்று மேன்மக்களின் பெருமை கூறப்பட்டது. சுடர், தூய்மைக்கு உவமம். சுடரின் ஒண்மை மனத்தின் தூய்மைக்குக்கொள்க. ௯

**190.** முற்றுற்றுந் துற்றினை நாளும் அறஞ்செய்து
பிற்றுற்றுத் துற்றுவர் சான்றவர்;—அத்துற்று
முக்குற்றம் நீக்கி முடியும் அளவெல்லாம்
துக்கத்துள் நீக்கி விடும்.

(பொ - ள்) முன் துற்றும் துற்றினை நாளும் அறம் செய்து பின் துற்றுத் துற்றுவர் சான்றவர் - முதலில் உண்ண எடுக்குங் கவளத்தை நாடோறும் பிறர்க்கு உதவி செய்து அடுத்த கவளத்தைப் பெரியோர் உண்ணுவர்; அத் துற்று - பிறர்க்கு உதவிசெய்த அந்தக் கவளம், முக்குற்றம் நீக்கி முடியுமளவெல்லாம் துக்கத்துள் நீக்கிவிடும்- அப் பெரியோருடைய காம வெகுளி மயக்கமென்னும் மூன்று குற்றங்களையுங் கெடுத்துப் பிறவி தீருங் கால முழுமையும் அவரைத் துன்பத்தினின்று நீக்கிவிடும்.

(க - து) முதலிற் பிறரை உண்பித்துப் பின்பு தாம் உண்டு துயர் தீர்தலே பெருந்தன்மையாகும்.

(வி - ம்) துற்றுதல் - உண்ணுதல்; ஆதலின் துற்று, ஒரு வாய் அளவு உணவுக்காயிற்று; "இகலன்வாய்த் துற்றிய தோற்

* மணிமே. ௬: ௪௫.

றம்."* என்றார் பிறரும். முக்குற்றம் நீக்கி அதனால் துக்கத்துள் நீக்கிவிடும் என்க. முக்குற்றம் நீக்கியவளவே பிறவி தீர்தலின்றி எடுத்த வினை தீருமளவும் அஃதிருக்குமாகலின். அவ்வாறிருக்குங் கால முழுமையும் துக்கத்துள் நீக்கிவிடுமென்றார். "உதவிவரைத் தன்றுதவி" †. யாகலின், உதவியது ஒரு கவளமாயினும் அது பெரும் பயன் றந்தது. ௧0

---

## ௨0. தாளாண்மை

முயற்சியுடைமை உணர்த்துவது.

**191.** கோளாற்றக் கொள்ளாக் குளத்தின்கீழ்ப் பைங்கூழ்போற்
கேளீவ துண்டு கிளைகளோ துஞ்சுப;
வாளாடு கூத்தியர் கண்போற் றடுமாறுந்
தாளாளர்க் குண்டோ தவறு.

(பொ - ள்) கோள் ஆற்றக் கொள்ளாக் குளத்தின் கீழ்ப் பைங்கூழ்போல் - நீர்கொள்ளுதலை நிரம்பக் கொள்ளாத ஏரியின் கீழுள்ள பயிரைப்போல், கேள் ஈவது உண்டு கிளைகளோ துஞ்சுப - தமக்கு உறவினர் கொடுப்பதை உண்டு சுற்றங்கள் சோம்பிக் கிடந்து பின் அவர் வறுமைப்பட்டபோது தாமும் வருந்தியிறப்பர்; வாள் ஆடு கூத்தியர் கண்போல் தடுமாறும் தாளாளர்க்கு உண்டோ தவறு - வாட்கூத்து ஆடுகின்ற கூத்துப்பெண்டிருடைய கண்களைப்போல் உழலும் முயற்சியுடையார்க்கு இப் பிழைபட்ட வாழ்வு உண்டோ?

(க - து) ஒவ்வொருவரும் தம் வாழ்க்கையில் முயற்சி யுடையரா யிருக்கவேண்டும்.

(வி - ம்) உவமங்களின் கருத்துக்கள் பொருள்களின் விளக்கங் களில் வந்திருக்கின்றன. நீரை மிகுதியாகக் கொள்ளாத குளம் முயற்சியுடைய கேளிர்க்கு உவமமாக வந்தது, அக் கேளிரின் சுற்றங் கள் சோம்பிக் கிடத்தலால் அவர்க்கு வருவாய் மிகுதியாக அமை யாமையின் என்க. துஞ்சுப, தொழிலின்றியிருந்து பின் இறப்ப ரென்னும் பொருட்டு. "உலகு தொழிலுவந்து நாஞ்சில் துஞ்சி" ‡

---

* களவழி நாற். ௨அ. † குறள், ௧௧ ௫. ‡ அகம், ௧௪௧.

"நிலமிசைத் துஞ்சினார்"* என்பன காண்க. வாளாடு கூத்தியர் - வாட்களை இரு கைகளிலும் பிடித்து விரையச் சுழற்றித் தாமுஞ் சுழன்று கூத்தாடும் இளமகளிர்; ஆடுமகளிருள் இவர் ஒரு வகையார்: இவர் கண்கள் அஞ்ஞான்று மிக முயற்சியுடையனவாய் வாள் முனைகள்மேல விரையத் திரிந்து திரிந்து பிறழ்ந்துழலும்; அவ்வாறு கருமமே கண்ணாயிருக்கும் பேரூக்கமாகிய முயற்சி யுடைமைக்கு அவர் கண்கள் உவமமாகக் கூறப்பட்டன. தடுமாறுதல், ஈண்டு, உழன்று முயலுதல். க

**192.** ஆடுகோ டாகி அதரிடை நின்றதூஉம்
காழ்கொண்ட கண்ணே களிறணைக்குங் கந்தாகும்;
வாழ்தலும் அன்ன தகைத்தே ஒருவன்றான்
தாழ்வின்றித் தன்னைச் செயின்.

(பொ - ள்) ஆடு கோடு ஆகி அதரிடை நின்றதும் காழ் கொண்டகண்ணே களிறு அணைக்கும் கந்து ஆகும் - துவள்கின்ற இளங்கொம்பாகி வழியிடையே நின்ற சிறு மரமும் உள் வயிரங் கொண்டு முற்றிய காலத்தில் ஆண் யானைகளைக் கட்டுதற்குரிய கட்டுத்தறியாக உதவும்; வாழ்தலும் அன்ன தகைத்தே ஒருவன் தாழ்வின்றித் தன்னைச் செயின் - ஒருவன், முயற்சியால் தன்னை ஆற்றலிற் குறை வில்லாமற் செய்துகொள்வானாயின் அவன் தனது வாழ்க்கையிற் பெருமை கொள்ளுதலும் அதுபோன்ற தன்மை யதேயாம்.

(க - து) எளிய நிலையிலுள்ளோரும் முயற்சியால் தம்மை ஆற்றலுடையவராகச் செய்துகொள்ளல்வேண்டும்.

(வி - ம்) வழியில் வரும் யானையைப் பாகர் அங்கே வலிய தாய் நிற்பதொரு மரத்திற் கட்டுவராதலின், 'அதரிடை' யென்றார், 'அதரிடை ஆடு கோடாகி நின்றதும்' என்று கொள்க. இழிவு சிறப்பும்மை ஆடு கோடாகி நின்றதற்கு வந்தது. கண்ணென்றது ஈண்டுக் காலப்பொருட்டு. அணைக்கும் என்றார், அதனாற் கந்து பெருமைப்படுதலின். தாழ்வின்றித் தன்னைச் செய்துகொள்ள லாவது, "தொல் சிறப்பின் ஒண்பொருள் ஒன்றோ, தவம் கல்வி ஆள்வினை"† யென மேற் கூறப்படுமவற்றில் தன்னைக் குறைவில னாகச் செய்துகொள்ளலென்க. உ

* நாலடி. உக. † நாலடி, உ௦ : ௫.

**193.** உறுபுலி ஊனிரை யின்றி ஒருநாள்
சிறுதேரை பற்றியுந் தின்னும் ;—அறிவினால்
காற்றொழில் என்று கருதற்க கையினால்
மேற்றொழிலும் ஆங்கே மிகும்.

(பொ - ள்) உறுபுலி ஊன்இரை இன்றி ஒருநாள் சிறு தேரை பற்றியும் தின்னும் - வலிமை மிக்க புலி தனக் கேற்ற இறைச்சியுணவில்லாமல் ஒரோவொருகால் சிறிய தவளையைப் பிடித்துந் தின்னும்; அறிவினால் கால் தொழில் என்று கருதற்க - ஆதலால், தமக்குரிய அறிவு மேம்பாட்டி னால், எதனையும் காலால் செய்தற்குரிய சிறு தொழிலென்று யாருங் கருதாதிருப்பாராக ; கையினால் மேல் தொழிலும் ஆங்கே மிகும் - அச் சிறு தொழிலையும் பொருள் செய் தொழுகும் முயற்சியினால் உயர்ந்த தொழிலும் அதி லிருந்தே பெருகிவரும்.

(க - து) சிறு தொழிலையும் முயற்சியோடு திருத்த மாகச் செய்யவேண்டும்.

(வி - ம்) உவமத்திற் புலிக்கு உடம்பு வலிமை கூறப்பட் டமையின், பொருளிலும் அறிவு வலிமை காட்டுதற்கு 'அறிவினால்' என்றார். ஊனிரையின்றி யென்றமையின், தேரையின் ஊன் சிறுமை பெறப்பட்டது. தேரை தின்று பசியாறிய ஒரு சிறு தணிவிலிருந்து பேரிரை பற்றும் வன்மை புலிக்குண்டாதலின், சிறு தொழிலையும் பொருள் செய்தொழுகும் முயற்சியிலிருந்தே மக்கட்கு உயர்தொழிலும் பெருகிவருமெனபது கருத்து. கையினால் முயற்சி யொழுக்கத்தாலென்க. ௩

**194.** இசையா தெனினும் இயற்றியோ ராற்றால்
அசையாது நிற்பதாம் ஆண்மை—இசையுங்கால்
கண்டல் திரையலைக்குங் கானலந் தண்சேர்ப்ப !
பெண்டிரும் வாழாரோ மற்று.

(பொ - ள்) கண்டல் திரை அலைக்கும் கானல் தண் சேர்ப்ப - தாழையை அலைகள் சிதைக்கின்ற கடற்கரைச் சோலையையுடைய குளிர்ந்த துறைவனே ! இசையாது எனினும் - மேற்கொண்ட காரியம் ஊழ்வினையினால்

எளிதிற் கூடிவாராதாயினும், இயற்றிய ஓர் ஆற்றால் - அவ்வூழ் இப்பிறவியில் வழிசெய்துவிட்ட ஓர் வகையினால், அசையாது நிற்பதாம் ஆண்மை - தளராமல் நின்று முயல்வதே ஆடவர்க்குரிய ஆண்மைப் பண்பாகும்; இசையுங்கால் பெண்டிரும் வாழாரோ மற்று - மற்று, ஊழ் கூட்டுதலால் ஒன்று எளிதிற் கூடிவருமாயின் பெண்மக்களும் அதனை முடித்துப் பெருமையடையாரோ!

(க - து) 'ஊழ் கூட்டாதவிடத்தும், அரிய காரியங்களைச் செய்தலில் தளர்வின்றியிருந்து முயலும் ஆண்மையே தாளாண்மையாகும்

(வி - ம்) இயற்றிய வென்னும் அகரம் தொக்கது; ஊழ் இயற்றித் தந்த என்பது பொருள்; இயன்ற ஓர் வகையினால் என்பதன் கருத்தும் இது. நிற்பது - நின்று முயல்வது. இசையுங்கால், வினையெச்சம். வாழாரோ என்பது ஈண்டு, முயன்று பெருமையடையாரோ வென்னுங் கருத்தினின்றது; இஃது அறிபொருள் வினா.* ஊழ்கூட்டுங்காற் சிறிது முயன்று ஒன்று நிறைவேறப்பெறுதல் பெண்டிர்க்கும் இயலுமென்றமையின். அஃதன்று தாளாண்மை யென்னும் ஆடவர் பண்பு என்பது இவ்வாற்றாற் பெறப்படும். மற்று, வினைமாற்றென்க. ௬

195 நல்ல குலமென்றும் தீய குலமென்றும்
சொல்லள வல்லாற் பொருளில்லை ;—தொல்சிறப்பின்
ஒண்பொரு ளொன்றோ தவங்கல்வி யாள்வினை
என்றிவற்றான் ஆகும் குலம்.

(பொ - ள்) நல்ல குலமென்றும் தீய குலமென்றும் சொல் அளவு அல்லால் பொருள் இல்லை - நல்ல குலமென்றும் கெட்ட குலமென்றும் உலகத்திற் பிறப்பின்மேலேற்றிச் சொல்வது வெறுஞ் சொல்லளவே யல்லால் அதற்குப் பொருளில்லை; தொல் சிறப்பின் ஒண்பொருள் ஒன்றோ தவம் கல்வி ஆள்வினை என்று இவற்றான் ஆகும் குலம் - குலம் என்பது, தொன்றுதொட்டுவரும் மேன்மையினையுடைய செல்வத்தால் மட்டுமன்று, தவம், கல்வி, முயற்சி என இவை தம்மாலெல்லாம் உண்டாவதாகும்.

* தொல். கிளவி. கந.

(க - து) தவம் கல்வி ஆள்வினை முதலியவற்றில் முயற்சியுடையாரே, பிறரால் நேயங்கொள்ளுதற்குரிய உயர்குலத்தோராவர்.

(வி - ம்) சொல்வது என ஒரு சொல் வருவிக்க. தொல் சிறப்பின் என்பதைத் தவம் முதலியவற்றிற்குங் கொள்க. பிறப்புப்பற்றிய குடியினும், தவவுணர்வு கல்வியறிவு ஆள்வினை யியல்பு பொருளாக்கம் என்பன நெடுங்காலமாக விளங்கி உரை பயின்றுவரும் பழம் பெருஞ் சிறப்பினவாகலின், தொல் சிறப் பின் என்னும் அடையடுத்துவந்தன. பொருளுக்கு ஒண்மை, நல் வழியான் ஈட்டப்பட்டமை. உயர்குலத்துக்கு முதன்மையான காரணங்கள் தவமுங் கல்வியும் ஆள்வினையுமாகலின், 'இவற்றான் ஆகுங் குலம்' என்று உம்மை கொடாது முடித்ததுமன்றிப் பொருளை ஒன்றேயென்னும இடைச்சொற் கொடுத்தும் வேறு பிரித்தார். "தத்தங் குறிப்பிற் பொருள்செய்குநவும்" என்பதனால் ஈதுணரப்படும். குலம் என்றது, குழு; உள்ள மேம்பாடுடை யோர் குழுவென்க. ரு

196. ஆற்றுந் துணையும் அறிவினை உள்ளடக்கி
ஊக்கம் உரையார் உணர்வுடையார்—ஊக்கம்
உறுப்பினால் ஆராயும் ஒண்மை யுடையார்
குறிப்பின்கீழ்ப் பட்ட துலகு.

(பொ - ள்) ஆற்றுந் துணையும் அறிவினை உள் அடக்கி ஊக்கம் உரையார் உணர்வுடையார் - நுண்ணுணர்வுடை யோர் ஓர் அருஞ்செயலைச்செய்து முடிக்குமளவும் தமது அறிவின்றிறத்தை மனத்தில் அடக்கித் தம முயற்சிகளைப் பிறர்க்குச் சொல்லார்; ஊக்கம் உறுபபினால் ஆராயும் ஒண்மை யுடையார் - மேலும் அவர், தமது ஆற்றலைத் தம் கண் முதலிய உறுப்புக்களாற் பிறர் ஆராய்ந்து தெரிந்து கொள்ளுதற்கேற்ற அறிவு விளக்கமுடையவர்; குறிப்பின் கீழ்ப்பட்டது உலகு - உலகம் அத்தகைய திறமையான தாளாண்மை யுடையோரின் குறிப்பின் வழிப்பட்டது.

(க - து) முயற்சிகள் உள்ளுணர்வோடும் அறிவு விளக்கத்தோடும் நடைபெறுதல் வேண்டும்.

* தொல். இடை. உ.

(வி - ம்) அறிவென்றது, திறமைப் பொருட்டு. "வழிபடு வோரை வல்லறி தீயே" * என்றதும் அது. ஊக்கம் இரண்டனுள், முன்னது முயற்சியையும் பின்னது அம் முயற்சியின் வீற்றினை யும் உணர்த்தும். எடுத்த காரியத்தில் வேறின்றி நிற்பவரென் றற்கு 'உணாவுடையார்' ரென்றார். 'ஊக்கம் உறுப்பினுல் ஆராயும் ஒண்மையுடையார்' என்றற்குப் பிறா முயற்சிகளைமட்டும் அவர் தம் செய்கைக் கூறுகளாலும் முகத்தின் உறுப்புக்களாலும் ஆராய்ந்து தெரிந்துகொள்ளும் அறிவுமாட்சிமை யுடையாரெனவும் பொருளுரைத்து அதனை இரட்டுற மொழிதலாகக் கொள்க. உலகம் அத்தகையோர் கருத்தின்வழி இயங்கிக் காரியம் எளிதில் நிறை வேறப்பெறுதலின், அவ் வொண்மையுடையார் குறிப்பின் கீழ்ப் பட்டது உலகு என்றார் சு

197. சிதலை தினப்பட்ட ஆல் மரத்தை
மதலையாய் மற்றதன் வீழூன்றி யாங்குக்
குதலைமை தந்தைகட் டோன்றிற்றான் பெற்ற
புதல்வன் மறைப்பக் கெடும்.

(பொ - ள்) சிதலை தினப்பட்ட ஆலமரத்தை - கறை யானல் அரிக்கப்பட்ட ஆலமரத்தை, மதலையாய் அதன் வீழ் ஊன்றியாங்கு - அதன் விழுது அதனைத் தாங்கும் வன்மையுடையதாய் ஊன்றி நின்றாற்போல, குதலைமை தந்தை கண் தோன்றில் - தன் தந்தையினிடத்தில் தளர்ச்சி தோன்றினுல், தான் பெற்ற புதல்வன் மறைப்பக் கெடும் - அவன் பெற்றெடுத்த புதல்வன் பாதுகாக்க அது நீங்கும்.

(க - து) தந்தையின் தளர்ச்சியைக் காத்தற்கு மைந்தன் முயற்சியுடையனு யிருத்தல்வேண்டும்.

(வி - ம்) சிதலை யென்பதற்கு உருபு விரித்துக்கொள்க. மதலை - வன்மையுடையதென்னும் பொருளது. மற்று, அசை. மறைப்ப என்றா, முயற்சியாலுண்டாகும் நன்மைகள், தந்தை யின் தளர்சசியை அவர்க்குத் தோன்றாதபடி செய்து மகிழ்வித்த லின், "தூஙகுசிறை வாவலுறை தொன்மரங்க ளென்ன, ஓஙகு குலம் நையஅத னுட்பிறந்த வீரர், தாங்கல்கட னாகும்"† என்றார் பிறரும். எ

* புறம். ௯௦. † சிந். காந்தரு. சு.

**198.** ஈனமாய் இல்லிருந் தின்றி விளியினும்
மானந் தலைவருவ செய்பவோ?—யானை
வரிமுகம் புண்படுக்கும் வள்ளுகிர் நோன்றாள்
அரிமா மதுகை யவர்.

(பொ - ள்) *யானை வரிமுகம் புண்படுக்கும் வள் உகிர் நோன் தாள் அரிமா மதுகையவர் - யானையினது புள்ளிகளையுடைய முகத்தைப் புண்படுத்தவல்ல கூரிய நகங்கள் பொருந்திய வலிய கால்களையுடைய சிங்கத்தைப்போன்ற முயற்சி வலிமை யுடையோர், ஈனமாய் இல் இருந்து இன்றி விளியினும் - நிலை குறைவாகி வீட்டில் அலுவலில்லாது தங்கி வருவாயின்றி இறக்கநேரினும், மானம் தலைவருவ செய்பவோ - குற்றம் உண்டாகக்கூடிய செயல்களைச் செய்வார்களோ?*

(க - து) *முயற்சியுடையார்க்கு எந்நிலையிலும் பழிப்புக்குரிய தீச்செயல்கள் செய்யும்படி நேராது.*

(வி - ம்) *தலைவருவ, பெயர். மதுகை, ஈண்டு முயற்சி வலிமை. 'வள்ளுகிர் நோன்றாள்' என்னும் உவமைக்கேற்பப் பொருளிற் கூறிவும் தக்க செயல்வாய்ப்புமுடைய மதுகையவர் எனவும், பொருளில் , இல்லிருந்து இன்றி விளியினும்' என்றதற் கேற்ப உவமையிற் குகையில் தங்கி உணவின்றி இறக்கினும் எனவும் உரைத்துக்கொள்க. "தோல்வற்றிச் சாயினும் சான்றாண்மை குன்றாமை"* பெறப்பட்டது.* அ

**199.** தீங்கரும் பீன்ற திரள்கால் உளையலரி
தேங்கமழ் நாற்றம் இழந்தாஅங்கு—ஓங்கும்
உயர்குடி யுட்பிறப்பின் என்னும் பெயர்பொறிக்கும்
பேராண்மை இல்லாக் கடை.

(பொ - ள்) *தீம் கரும்பு ஈன்ற திரள்கால் உளை அலரி தேன் கமழ் நாற்றம் இழந்தாங்கு - இனிப்பாகிய கரும்பங் கழி தோற்றிய திரண்ட தாளையுடைய பிடரிமயிர்போன்ற மலர் தேனோடுகூடி மணக்கும் நறுமணத்தை இழந்தாற்*

---
* *திரிகடு. உஎ.*

போல், பெயர் பொறிக்கும் பேராண்மை இல்லாக்கடை - தன் புகழைச் சான்றோர் எழுதி நிலைநிறுத்துதற்குரிய அரிய முயற்சித்திறம் இல்லாவிட்டால், ஓங்கும் உயர்குடியுட்பிறப்பின் என் ஆம் - மிக்க உயர்குடியுட் பிறத்தலால் மட்டும் யாது பயனுண்டு?

(க - து) அரிய முயற்சித்திறம் இல்லாதபோது உயர் குடிப் பிறப்பும் இனிய தோற்றமும் இருத்தலால்மட்டும் பயனில்லை.

(வி - ம்) உளையென்றது ஈண்டுக், குதிரை சிங்கம் முதலிய வற்றின் பிடரிமயிர்போல் மென்மையும் செறிவுமுடைய குஞ்சம் என்றற்கு. இதனாற் சாயலுடைய தோற்றம் பெறப்பட்டது. அலரி - "முல்லை அரும்பவிழ் அலரி"* என்புழிப்போலப் பொது வாக மலரென்னும் பொருட்டு. 'தேங்கமழ் நாற்றம்' என்பதில் தேன் பெயர்க்கும் நாற்றம் ஆண்மைக்கும் ஒக்கும். 'கரும்பு ஈன்ற' என்றார், உயர்குடியுட் பிறந்தும் என்றற்கு. 'நாற்றம் இழந்தாங்கு ஆண்மையில்லாக்கடை' யென்க. பொறித்தல், நூலிலும் கல்லிலு மாம். க

200. பெருமுத் தரையர் பெரிதுவந் தீயுங்
கருனைச்சோ றார்வர் கயவர்;—கருனையைப்
பேரும் அறியார் நனிவிரும்பு தாளாண்மை
நீரும் அமிழ்தாய் விடும்.

(பொ - ள்) பெருமுத்தரையர் பெரிது உவந்து ஈயும் கருனைச் சோறு ஆர்வர் கயவர் - முயற்சியில்லாத கீழ் மக்கள், பெருமுத்தரையர் என்பார் மிக மகிழ்ந்து அளிக் குங் கறிகளோடு கூடிய உணவை உண்டு வாழ்நாட் கழிப்பர்; கருனையைப் பேரும் அறியார் நனிவிரும்பும் - கறிகளைப் பேர்தானும் அறியாத முயற்சியாளர்கள் மிகவும் விரும்புகின்ற, தாளாண்மை நீரும் - தம் முயற்சி யுடைமை யாற் கிடைத்த நீருணவும், அமிழ்தாய் விடும் - அவர்க்குத் தேவருணவாக மாறி மெய்யின்பந் தருதல் உறுதி.

(க - து) தன்முயற்சியால் உண்டானது நீருணவே

* முல்லைப். க - கO.

யாயினும், அஃது அமிழ்த ஆற்றல் உடையதாய் நலம் பயக்கும்.

(வி - ம்) பெருமுத்தரைய ரென்போர், இச் சிறப்புப் பெயருடன் இச் செய்யுளியற்றிய ஆசிரியர் காலத்தில் ஈகையும் செல்வமும் வாய்ந்து புகழுற்று விளங்கிய ஒருசார் உயர் குடும்பத்தினராவர். "நல்கூர்ந்தக்கண்ணும் பெருமுத் தரையரே செல்வரைச் சென்றிரவாதவர்" என்று இந்நூலில் மேலும் * இவரது மாட்சி கூறப்படுகின்றது. பிறர் தரும் சோறு ஆர்வார் கயவர் என்றபடி, இடைவிடாத முயற்சியினால் நல்ல உணவும் உண்பதற்கு நேரம் வாயாதவ ரென்றும், கருமமே கண்ணாயினார் உயர் உணவிற் கருத்திருத்தா ரென்றும் உணர்த்துதற்குக் 'கருமையைப் பேரும் அறியார்' என்று முயற்சியாளரைக் குறித்தார். அவர் நனி விரும்பும் தாளாண்மை நீரும் என்க. உம்மை, இழிவு சிறப்பு. நீரென்றது புல்லரிசிச் சோற்றில் ஊறிய நீர். விடும், துணிவுப் பொருளுணர்த்திற்று. ௨0

---

## உக. சுற்றந்தழால்

உறவினர் நீங்கிவிடாதபடி அவரைத் தழுவி யொழுகுதல்.

201 வயாவும் வருத்தமும் ஈன்றக்கால் நோவும்
கவாஅன் மகற்கண்டு தாய்மறந் தாஅங்கு
அசாஅத்தான் உற்ற வருத்தம் உசாஅத்தன்
கேளிரைக் காணக் கெடும்.

(பொ - ள்) வயாவும் வருத்தமும் ஈன்றக்கால் நோவும் கவாஅன் மகன் கண்டு தாய் மறந்தாங்கு-கருவுற்ற போது தோன்றிய வேட்கைத் துன்பமும், இடையிற் கரு சுமந்துவந்த வருத்தமும், கருவுயிர்த்த அக்காலத்தில் உண்டான இன்னலும் தாய் தன் தொடையில் மகனைக் கண்டு மறந்துவிட்டாற்போல, அசா தான் உற்ற வருத்தம்-முயற்சிகளினிடையே தளர்ச்சியால் ஒருவன் அடைந்த துன்பம், உசா தன் கேளிரைக் காணக் கெடும் - ஆய்ந்து சூழ்தற்குரிய தன் சுற்றத்தாரைக் கண்டவளவில் நீங்கும்.

---

* நாலடி. ௩0 : ௬.

(க - து) முயற்சிகளினிடையே தோன்றுந் தளர்ச்சியை நீக்குதற்கு அவ்வப்போதும் ஆராய்ந்து சூழ்தற்குரிய சுற்றத்தார் இன்றியமையாது வேண்டியிருத்தலின், அவரை என்ஞான்றும் தழுவி யொழுகுதல்வேண்டும்.

(வி - ம்) 'வயா' வென்பதைத் தொல்காப்பிய வுரையில்* "கருப்பந்தாங்கி வருத்தமுற்று, நுகரப்படும் பொருண்மேற் செல்லும் வேட்கை" என்பர் நச்சினார்க்கினியர். ஈன்றக்கால் என்பதை ஈண்டு, ஈன்ற அக்கால் என்று பிரிக்க. மகனென வழக்கு நோக்கி ஆண்பாலாகக் கூறினாரேனும் ஏனைப் பாலுக்கும் ஒக்கும். தான் அசாவினாலுற்ற வருத்த மெனவும், தன் உசாக் கேளி ரெனவுங் கொள்க. க

**202.** அழன்மண்டு போழ்தின் அடைந்தவர்கட் கெல்லாம்
நிழன்மரம்போல் நேரொப்பத் தாங்கிப்—பழுமரம்போல்
பல்லார் பயன்றுய்ப்பத் தான்வருந்தி வாழ்வதே
நல்லாண் மகற்குக் கடன்.

(பொ - ள்) அழல் மண்டு போழ்தின் அடைந்தவர்கட் கெல்லாம் நிழல்மரம் போல்-வெயிலின் அழல் மிகுந்த காலத்தில் தன்னை அடைந்தவர்கட் கெல்லாம் ஒப்ப உதவும் நிழல்மரத்தைப்போல், நேர் ஒப்பத் தாங்கி-வறுமையின் அழல் மிகுந்த காலத்தில் தன்னை அடைந்தவர்கட் கெல்லாம் சமம் பொருந்தக் காத்து, பழுமரம்போல் பல்லார் பயன் துய்ப்ப-பழுத்துள்ள மரம் பலரும் நுகரப் பழங்கள் உதவுதல்போல்† பலரும் பயன் நுகரப் பொருள் உதவி, தான் வருந்தி வாழ்வதே நல் ஆண்மகற்குக் கடன்-தான் மேன்மேலும் பொருளீட்டும் முயற்சியால் உழைப்புடையனாய் வாழ்வதே உயர்ந்த தாளாண்மை மிக்க மகனுக்குக் கடமையாகும்.

(க - து) மிக்க உழைப்பெடுத்துச் சுற்றந் தழுவி வாழ்தலே சிறந்த ஆண்மகனது கடமையாகும்.

(வி - ம்) உவமைக்கும் பொருளுக்கும் ஏற்பன வருவித்துக் கொள்க. நேரொப்ப என்றார், பயனும் வேறுபாடுங் கருதாது இடரொன்றே கருதித் தாங்கி யென்றற்கு. துய்ப்ப எனப் பிறர்

* தொல். உரி. எங. † குறள், உஉ : சு.

வினையாற் கூறினர், அவர் அத்துணை உரிமையாய் நுகருமாறு பிறாக்குரியனாய் வாழ்தல் வேண்டுமென்பது கருதி. "என்பும் உரியர் பிறர்க்கு*" என்றார் பெருநாவலரும். வருந்தி வாழ்தலாவது முயற்சியின் உழைப்போடு வாழ்தல், உ

**203.** அடுக்கன் மலைநாட! தற்சேர்ந் தவரை
எடுக்கல மென்னார் பெரியோர்;—அடுத்தடுத்து
வன்காய் பலபல காய்ப்பினும் இல்லையே,
தன்காய் பொறுக்கலாக் கொம்பு.

(பொ - ள்) *அடுக்கல் மலை நாட - ஒன்றன்மேலொன்றடுக்கிய மலைகளையுடைய நாடனே, தன் சோந்தவரை எடுக்கலம் என்னார் பெரியோர் - தமைச் சேர்ந்த சுற்றத்தவரை ஆதரியோம் என்று கூறார் பெரியோர். அடுத்தடுத்து வன்காய் பல பல காய்ப்பினும் இல்லையே தன் காய் பொறுக்கலாக் கொம்பு - மேலுமேலும் வலிமை மிக்க காய்கள் பலபல காய்த்தாலும் தன் காய்களைத் தாங்கிக் கொள்ளாத கிளைகள் உலகத்தில் இல்லையே.*

(க - து) *தம்மைச் சேர்ந்தவரை ஆதரித்து நிற்றலே பெருமையும் இயல்புமாகும.*

(வி - ம்) *அடுக்கலாகிய மலை யென்க. 'பெரியோர் தற்சேர்ந்தவரை' என்பது, ஒருமை பன்மை மயக்கம். எடுக்கலம் என்பதற்கு நிலையுயர்த்தோம் என்பது பொருள். என்னாரென்பது என்று கைவிடார் என்னுங் கருத்துடையது. வலிய காய் என்றமையாற் பெரிய காய் என்பதும் பெறப்படும். உவமையிற் காய்க்கு வலிமை கூறியது. பொருளில் தற் சேர்ந்தவரின் இன்னல் மிகுதி யுணர்த்தும். பல பல என்னும் அடுக்கு மிகுதி மேற்று.* ந

**204.** உலகறியத் தீரக் கலப்பினும் நில்லா
சிலபகலாம் சிற்றினத்தார் கேண்மை;—நிலைதிரியா
நிற்கும் பெரியோர் நெறியடைய நின்றனைத்தால்
ஒற்கமி லாளர் தொடர்பு.

(பொ - ள்) *உலகு அறியத் தீரக் கலப்பினும் - யாவரும் அறியும்படி முழுதும் இணங்கி நேசங் கொண்டாலும்,*

---

* *குறள், அ : உ.*

நில்லா சில பகல் ஆம் சிற்றினத்தார் கேண்மை - கீழோர் தொடர்புகள் நிலைபெறுதலில்லாதனவாய்ச் சில நாட்களே நிற்கும்; ஒற்கம் இலாளர் தொடர்பு-பிறரைத் தாங்குதலில் தளர்ச்சியில்லாதவரது தொடர்பு, நிலைதிரியா நிற்கும் பெரியோர் நெறியடைய நின்றனைத்து - இயல்பாகவே தமது பெருந்தன்மையான நிலையில் திரியாமல் நிற்கும் பெரியோர் தமக்கோர் வீடுபேற்று நெறிவந்து பொருந்த அதன்கண் அழுந்த நின்றொழுகினாற்போன்ற தன்மை யுடையது.

(க - து) சுற்றத்தாரைத் தாங்குவோர் தொடர்பே, உலகுக்கு இனிதாவது.

(வி - ம்) நில்லா, முற்றெச்சம். சிற்றினத்தா ரென்றது ஈண்டு, அண்டினாரை ஆதரிக்கும் பெருந்தன்மையில்லாத கீழோ ரென்க. உலகில் அவரே பலராதலின் அவரது கேண்மையும் நில்லா வெனப் பன்மையாற் கூறப்பட்டது. பிறரை ஆதரிக்கும் வாய்ப்பு நேர்தலைப் பெரியோர் ஒரு நற்பேறாகக் கருதி மகிழ்வாராதலின், நெறியடைய நின்றனைத்து என உவமிக்கப்பட்டது; இது 'சிறப்பின்' தீராக் குறிப்பின்'* வந்தது. ஆல். அசை. ௪

205 இன்னர் இனையர் எமர்பிறர் என்னுஞ்சொல்
என்னும் இலராம் இயல்பினால்—துன்னித்
தொலைமக்கள் துன்பந்தீர்ப் பாரே, யார் மாட்டும்
தலைமக்க ளாகற்பா லார்.

(பொ - ள்) இன்னர் - இவர் இத்தகையவர், இனையர் - இவர் இவ்வளவினர், எமர் - இவர் எம்மைச் சேர்ந்தவர், பிறர் - இவர் பிறரைச் சேர்ந்தவர், என்னும் சொல் என்னும் இலராம் இயல்பினால் - என்னுஞ் சொல் சிறிதும் இலராகிய தன்மையினால், துன்னித் தொலைமக்கள் துன்பம் தீர்ப்பாரே - நிலையிழந்த மக்களின் இன்னலைத் தாமே அவரையடைந்து தீர்த்து வைப்பவரே, யார் மாட்டும் தலை மக்க ளாகற்பாலார் - அனைவரிடத்தும் மேன்மக்களாகக் கருதப்படும் இயல்புடையவராவர்.

* தொல். உவம. ௧௦.

(க - து) அனைவர்க்கும் ஒப்ப இடுக்கண் தீர்த்து ஆதரிப்பவரே அனைவர்க்குந் தலைவராதற்குரியர்.

(வி - ம்) அடைந்தாரது இடர் தீர்த்தலொன்றே கருதுவா ரென்பது முதலிரண்டு அடிகளின் கருத்து. 'என்னும்' என்பது சிறிதும் என்னும் பொருட்டாதல், "என்னும் பனியாய்" *என்பத னுலுங் காண்க. தொலை மக்கள் - நிலைதொலைந்த மக்கள்; என்றது ஆதரவில்லாதவ ரென்றற்கு. 'தீர்ப்பாரே' யென்னும் ஏகாரம் பிரிநிலை. தலைமக்கள் - தலைமையுடைய மக்கள்; அயலாரும் அவரைத் தமக்குத் தலைவராகக் கொள்வரென்றற்கு 'யாமாட்டு' மென்றார். ரு

206. பொற்கலத்துப் பெய்த புலியுகிர் வான்புழுக்கல்
அக்காரம் பாலோ டமரார்கைத் துண்டலின்
உப்பிலிப் புற்கை உயிர்போற் கிளைஞர்மாட்டு
எக்கலத் தானு மினிது.

(பொ - ள்) பொற்கலத்துப் பெய்தபுலி உகிர் வான் புழுக்கல் - பொன்னாலான உண் கலத்தில் இட்டுவைத்த புலியின் நகத்தைப்போன்ற சிறந்த சோற்றை, அக்காரம் பாலோடு-சர்க்கரையோடும் பாலோடும், அமரார் கைத்து-மனம் பொருந்ாதவ ரிடத்திலிருந்து, உண்டலின் - உண்ணுதலைவிட, உப்பு இலிபுற்கை - உப்பும இல்லாத தான புல்லரிசிக் கஞ்சியை, உயிர்போல் கிளைஞர்மாட்டு - உயிர்போன்ற சுற்றத்தாரிடமிருந்து, எக் காலத்தானும் இனிது - எந்தக் கலத்திலுைம உண்ணுதல் நன்று.

(க - து) உள்ளன்புடைய சுற்றத்தார் எளியவராயி னும் அவரே இன்பந் தருபவராவர்.

(வி - ம்) புழுக்கல், அவித்தெடுக்கப்பட்ட சோறு. அமரா ரென்பது உள்ளன்பில்லாதவரை. உப்பும் என இழிவு சிறப்பும்மை கொள்க. உயிர்போற் கிளைஞரென்றார், உள்ளன்புடையவரென்னும் பொருட்டு, உண்ணுதல் என்னுஞ் சொல் இசை யெச்சத்தால் தொக்கு நின்றது. உதவும் பொருளே நன்மை தருவதன்று, உதவு வோர் சால்பே நன்மை தருவதாமாகலின் இங்ஙனங் கூறினார். "உதவி வரைத்தன் றுதவி உதவி செயப்பட்டார் சால்பின் வரைத்து"† என்றார் நாயனாரும். மேல் வருஞ் செய்யுளும் இக் கருத்துடையது. சு

* பரிபா. சு : அக. † குறள், கக : ரு.

207. நாள்வாய்ப் பெறினுந்தந் நள்ளாதா ரில்லத்து
வேளாண்மை வெங்கருனை வேம்பாகும்;—கேளாய்,
அபராணப் போழ்தின் அடகிடுவ ரேனுந்
தமரராயார் மாட்டே இனிது.

(பொ - ள்) நாள்வாய்ப் பெறினும் தம் நள்ளாதார் இல்லத்து வேளாண்மை வெம் கருனை வேம்பாகும் - காலத்தில் பெற்றாலும் தம் உறவாகாதவர் வீட்டின் ஒப்புரவோடு கூடிய சூடான கறியுணவு வேப்பங்காயை ஒத்தது; கேளாய் - நீ கேள்; அபராணப் போழ்தின் அடகு இடுவரேனும் தமராயார் மாட்டே இனிது - பிற்பகற் போழ்தில் கீரையுணவு இடுவராயினும் உறவினராேனாரிடமே இனிமையா யிருக்கும்.

(க - து) சுற்றத்தா ருதவியே இன்பந் தரும்.

(வி - ம்) நாள் என்றது, நாளின முதற் காலம்; முற்பகல்.* நள்ளாதார் - நணுகாதவர்; அன்பினால் அணுக்கமில்லாதவ ரென்க. உதவும் எண்ணத்தோடு கூடியதாயினு மென்றற்கு 'வேளாண்மை' என்னுஞ் சொற்கொடுத்துக் கூறப்பட்டது. 'நாள்வாய்' என வந்தமையின் வெங்கருனை யென்னுமிடத்து 'வெம்' என்பது வெப்ப முணர்த்திற்று. கருனை - கறிகளோடு கூடிய உணவு. 'கருனை' யென்பதும் 'அடகு' என்பதும் முறையே உணவின் உயர்வு தாழ்வு குறித்தற்கு வந்தன. பெறினும் இடுவரேனும் என்னும் உம்மைகள் எதிர்மறைப் பொருளன. எ

208 முட்டிகை போல முனியாது வைகலுங்
கொட்டியுண் பாரும் குறடுபோற் கைவிடுவர்;
சுட்டுக்கோல் போல எரியும் புகுவரே,
நட்டா ரெனப்படு வார்.

(பொ - ள்) முட்டிகை போல முனியாது வைகலும் கொட்டியுண்பாரும் குறடுபோல் கைவிடுவர் - கம்மாளரின் சம்மட்டிபோல் நாடோறும் வெறுத்தலில்லாமல் தம்மை இடித்திடித்து வயிறு பிழைப்பாரும் நேரத்திற் குறடு போற் கைவிட்டு விடுவர்; சுட்டுக்கோல்போல எரியும்

* நாலடி. கஎ : சு.

புகுவர் நட்டாரெனப்படுவார் - ஆனால் உறவானவரெனப் படுவோர் அங்ஙனம் நேரத்திற் கைவிடாமல் உலையாணிக் கோல்போல் தம்முடன் எரியும் புகுந்து உடன் துன் புறுவர்.

(க - து) உறவினர் உற்ற நேரத்திற் கைவிடாதவ ராதலின் அவரைத் தாமும் என்றுந் தழுவிநிற்றல் வேண்டும்.

(வி - ம்) முட்டிகைபோல வென்றார், பிறரை இச்சகத்தால் வருத்தி, இடித்துண்ணுதலின். கொட்டி என முட்டிகையின் வினை யிலேயே கூறப்பட்டது. "கொட்டுவினைக் கொட்டிலும்"* என்றது காண்க. ஈண்டு உண்ணுதலென்பது, வயிறு பிழைக் கைக்கு வந்தது. உலைக்கூடத்தில் இரும்பு முதலிய பொருள் களைத் தீயில் இடும்போது குறடு அதனை விட்டுவிடும்; உலையாணி யென்னுஞ் சுட்டுக்கோல் உடன்புகும். ஆதலின், கைவிடுவோர்க் கும் கைவிடாதோர்க்கும் முறையே அவை இரண்டும் உவமமாக வந்தன. கம்மாளர் கருவிகளே இச் செய்யுளில் ஒரு சேர உவம மாக வந்தமை நயமுடைத்து. அ

209. நறுமலர்த் தண்கோதாய்! நட்டார்க்கு நட்டார்
மறுமையுஞ் செய்வதொன் றுண்டோ!—இறுமளவும்
இன்புறுவ இன்புற் றெழீஇ அவரோடு
துன்புறுவ துன்புறுக் கால்.

(பொ - ள்) நறு மலர்த் தண் கோதாய் - சிறந்த மலர்க ளாற் றொடுக்கப்பட்ட குளிர்ந்த மாலையையணிந்த மாதே, நட்டார்க்கு நட்டார மறுமையும் செய்வதொன்று உண்டோ - உறவினர்க்கு உறவினர் மறுமையிலும் செய்வ தொரு நன்மை உண்டோ? இறுமளவும் இன்புறுவது இன்புற் றெழீஇ அவரோடு துன்புறுவ துன்புறுக்கால் - இறக்கும் வரையிலும் அவ்வுறவினர் இன்புறுவன தாமும் இன்புற்று எழுச்சியோடிருந்து அவரோடு துன்புறுவன துன்புறுவிடின்.

(க - து) சுற்றந் தழுவுதலால் துன்பம் வரினும் அதுவே செய்யத்தக்கது.

* பெருங. மகத. ச, கக.

(வி - ம்) அவரோடு துன்புறுக்காலு மறுமையுஞ் செய்வ தொன்றுண்டோ வென்க. எழீஇ யென்றார், கிளர்ச்சியோடு தொடர்ந் தென்னும் பொருட்டு; "ஒள்வாள் தானை உருத்தெழுந் தன்று"* என்புழிப்போல. க

**210.** விருப்பிலா ரில்லத்து வேறிருந் துண்ணும்
வெருக்குக்கண் வெங்கருனை வேம்பாம்;—விருப்புடைத்
தன்போல்வா ரில்லுள் தயங்குநீர்த் தண்புற்கை
என்போ டியைந்த அமிழ்து.

(பொ - ள்) விருப்பு இலார் இல்லத்து வேறு இருந்து உண்ணும் வெருகு கண் வெம் கருனை வேம்பு ஆகும் - அன்பில்லாதவர் வீட்டில் தனியே இருந்து உண்ணுகின்ற, பூனைக்கண்போன்ற ஒளிமிக்க சூடான பொரிக்கறியுணவும் வேப்பங்காய்போல வெறுப்புத் தரும்; விருப்புடைத் தன் போல்வார் இல்லுள் தயங்குநீர்த் தண்புற்கை என்போடு இயைந்த அமிழ்து - அன்புடைய தன்னொத்தார் வீட்டில் உண்ணுகின்ற விளங்கும் நீரையுடைய குளிர்ந்த புல்லரிசிக் கஞ்சியும் உடம்போடு பொருந்திய அமிழ்தமாகும்.

(க - து) சுற்றத்தாரிற் சிலர் எளிய நிலையினரேனும் அவர் அன்புடையவராகலின் அவர் தழுவுதற்குரியர்.

(வி - ம்) 'வெருகு' உயிர்த்தொடர் மொழியாதலின் வல் லெழுத்து இரட்டிற்று†. உடனிருத்தி உணவிடாமையின் "வேறிருந்து" எனப்பட்டது. தன் போல்வா ரென்றார், தன்னை மதிப்பாரென்னும் பொருட்டு. நீர்க்குத் 'தயங்கும்' என்னும் அடை, புல்லரிசிதானும் போதியதின்றி வெறும் நீருணவாய் விளங்குதலை யும், புற்கைக்குத் 'தண்' என்னும் அடை, அக் கஞ்சிதானுஞ் சூடின்றி ஆறியிருத்தலையுங் குறிப்பாலுணர்த்தும். புற்கையும் என இழிவு சிறப்பும்மை கொள்க. என்பு, ஆகுபெயராய் உடம்புக் காயிற்று. "என்பும் உரியர் பிறர்க்கு"‡ என்புழிப்போல. எளிய உணவாயினும் அன்பென்னும் அமிழ்தோடு கூடியதாகலின் அதுவே உடம்புக்கு ஊட்டந் தருமென்றற்கு, 'என்போ டியைந்த அமிழ்' தென்றார். இச்செய்யுட் கருத்துக்கள் முன்னும் வந்தன.$ க0

---

* புறப். வெ. ௩எ. † தொல். குற்றிய. ௬. ‡ குறள், அ : உ.
$ நாலடி. உக : ௬, எ.

## உஉ. நட்பாராய்தல்

*நட்புச் செய்தற்குரியாரை அவர் கல்வி யறிவு ஒழுக்க முதலிய வற்றால் ஆராய்ந்து கொள்ளுதல்.*

**211.** கருத்துணர்ந்து கற்றறிந்தார் கேண்மையெஞ் ஞான்றுங்
குருத்திற் கரும்புதின் றற்றே ;—குருத்திற்
கெதிர்செலத்தின் றன்ன தகைத்தரோ, என்றும்
மதுரமி லாளர் தொடர்பு.

(பொ - ள்) *கருத்துணர்ந்து கற்றறிந்தார் கேண்மை எஞ்ஞான்றும் குருத்தின் கரும்பு தின்றற்று - கல்வியின் பயன் தெரிந்து உரிய நூல்களைக் கற்றுத் தெளிந்த மேலோருடைய நட்பு எஞ்ஞான்றும் குருத்திலிருநது கரும்பு தின்றாற்போன்றது; குருத்திற்கு எதிர்செலத் தின்றன்ன தகைத்து என்றும் மதுரம இலாளர் தொடர்பு - கல்வியின் இனிமையில்லாத கீழோருடைய தொடர்பு என்றும் கரும்பை அதன் குருத்திற்கு நேரே செல்லுமபடி அடியிலிருந்து தின்று சென்றாற்போன்ற தன்மையுடையது.**

(க - து) *கற்றார் நட்பு மேன்மேலும் இன்பம் தந்து செல்லும்.*

(வி - ம்) *குருத்தின் என்னும் ஐந்தனுருபு எல்லைப்பொருளது. குருத்திலிருந்து கரும்பு தின்னுதல மேன்மேலும் இன்பந்தந்து செல்லுதற்கும், அடியிலிருந்து கரும்பு தின்னுதல் வரவர இன்பங் குறைந்து செல்லுதற்கும் உவமம். 'எஞ்ஞான்றும்' 'என்னும்' என்பன, இடருற்ற நிலையிலும் என்பதனை குறிப்பாலுணர்த்தி நின்றன. ஏகாரமும் அரோ வென்பதும் அசை. கரும்புவமைக் கேற்பக் கல்வியறிவை ஆசிரியர் இறுதியில் மதுரமெனக் கூறி மகிழ்ந்தார்.* க

**212.** இற்பிறப் பெண்ணி இடைதிரியா ரென்பதோர்
நற்புடை கொண்டமை யல்லது,—பொற்கேழ்
புனலொழுகப் புள்ளிரியும் பூங்குன்ற நாட !
மனமறியப் பட்டதொன் றன்று.

---

* நாலடி. கஅ : அ.

(பொ - ள்) பொன் கேழ் புனல் ஒழுகப் புள் இரியும் பூ குன்ற நாட - பொன்னின் நிறம் அருவியிற் பொருந்தி வருதலால் பறவைகள் அஞ்சி நீங்குகின்ற பொலிவினையுடைய மலைநாடனே, இல்பிறப்பு எண்ணி இடைதிரியார் என்பதோர் நல்புடை கொண்டமையல்லது மனம் அறியப்பட்டதொன்றன்று - குடிப்பிறப்புக் கருதி இவர் இடையில் வேறுபடார் என்பதொரு சிறந்த வகையை உட்கொண்டு நட்புச் செய்ததல்லது மனம் அறிந்த உண்மை வேறொன்றனுல் அன்று

(க - து) நட்பாராய்தற்குக் குடிப்பிறப்பொன்றும் சிறந்த காரணமாகும்

(வி - ம்) உயர் குடியிற் பிறந்தார்க்கு இயல்பாகவே பெருந்தன்மை உண்டாகலின், 'இற்பிறப்பெண்ணி' யென்றார்; எண்ணி யென்றது, ஈண்டு நம்பியென்னுங் குறிப்புடையது. நற்புடை, நற்காரணம் என்னும் பொருட்டு. "உறுகுறை மருங்கின்"* என்புழிப்போல. நட்புச் செய்தமைக்கு இற்பிறப்பென்பதல்லது வேறு மனமறிந்த காரணம் ஒன்றின்று என்பது கருத்து. இவ்வாற்றால், இற்பிறப்பொன்றும் நட்புக்கு இலக்கணமாம் என்று அதன் மேன்மை உணர்த்தியவாறும். கேழ் ஒழுகவென்க. ஒழுகுதல், ஈண்டுத் தொடர்புற்று வருதல். பொற்றுகளுஞ் செந்தேனும் ஏற்றுவருதலால் அருவி பொன்னின் விளக்கம் பெற்றமையின், அவ்விளக்கங் கண்டு பறவைகள் அஞ்சி நீங்கினவென்பது. உ

**213.** யானை யனையவர் நண்பொரீஇ நாயனையார்
கேண்மை கெழீஇக் கொளல்வேண்டும்;—யானை
அறிந்தறிந்தும் பாகனையே கொல்லும், எறிந்தவேல்
மெய்யதா வால்குழைக்கும் நாய்.

(பொ - ள்) யானையனையவர் நண்பு ஒரீஇ - யானையை ஒத்த இயல்புடையாரது நேயத்தை நீக்கி, நாய் அனையார் கேண்மை கெழீஇக் கொளல்வேண்டும் - நாயை ஒத்த இயல்புடையாரது நேயத்தைத் தழுவிக்கொள்ளுதல்வேண்டும்; ஏனென்றால்; யானை அறிந்தறிந்தும் பாகனையே கொல்லும் - யானை பலநாள் பழகியிருந்தும் தன்னை வளர்த்த பாகனையே குற்றங்கண்டு கொல்லும்; எறிந்த

* முருகாற். ௧௭௬.

வேல் மெய்யதா வால் குழைக்கும் நாய் - ஆனல் நாயோ தன்னை வளர்த்தவன் சினத்தால் தன்மேல் விசிய வேல் தன் உடம்பில் உருவிநிற்க அன்பினுல் அவன்பால் வால் குழைத்து நிற்கும்.

(க - து) பிழை பாராட்டாத இயல்புடையாரை அறிந்து நட்புச் செய்தல்வேண்டும்.

(வி - ம்) அறிந்தறிந்தும் - நன்ருய் அறிந்திருந்தும்; பலகால் தனக்கு உதவிகள் செய்திருப்பதை நன்ருய்த் தெரிந்திருந்தும் என்க. மெய்யதா - உடம்பினதாக. வால் குழைத்தல் - வாலை வளைத்து ஆட்டுதல்; ஈது அன்பு பாராட்டுதற்கு அறிகுறி. நாய் உவமை அதன் உயர்ந்த பண்பினுல் ஈண்டு உயர்வுடையதாயிற்று. "பெருமையும் சிறுமையும்"* என்னும் நூற்பா உரையிற் கழியச் சிறியதாக உவமித்ததற்குப் பேராசிரியர் இதனை எடுத்துக் காட்டினர். ந

214. பலநாளும் பக்கத்தா ராயினும் நெஞ்சில்
சிலநாளும் ஒட்டாரோ டொட்டார்;—பலநாளும்
நீத்தா ரெனக்கை விடலுண்டோ, தந்நெஞ்சத்
தியாத்தாரோ டியாத்த தொடர்பு.

(பொ - ள்) பலநாளும் பக்கத்தாராயினும் நெஞ்சில் சிலநாளும் ஒட்டாரோடு ஒட்டார் - பலநாளும் அருகிலிருந்து பழகினராயினும் மனத்திற் சில நாளாயினும் நட்புப்பொருந்தாதவரோடு தெரிந்தோர் சேரமாட்டார்; பலநாளும் நீத்தார் எனக் கைவிடல் உண்டோ தம் நெஞ்சத்து யாத்தாரோடு யாத்த தொடர்பு - தமது நெஞ்சத்தில் நட்புப் பொருந்தியவரோடு பிணிப்புண்ட தொடர்பு அவர் பலநாட்கள் அருகில்லாமல் நீங்கினரென்று கைவிடப்படுதலுண்டோ?

(க - து) நெஞ்சப் பிணிப்பு உடையாரோடு நட்புச் செய்தல் வேண்டும்.

(வி - ம்) பலநாளும் சிலநாளும் என்னும் உம்மைகள் முறையே உயர்வு சிறப்பும் இழிவு சிறப்புமாம். பலநாளும் நீத்தா

* தொல். உவம. கக.

றென்னுமிடத்து அஃது அசை. சிறந்த நட்பு, அருகிற் பழகுதலாலேயே ஆவதன்று; நெஞ்சம் பொருந்துதல் முதன்மை என்றபடி, "புணர்ச்சி பழகுதல் வேண்டா, உணர்ச்சிதான் நட்பாங் கிழமை தரும்"* என்பது நாயனார் அருளுரை. ௯

**215.** கோட்டுப்பூப் போல மலர்ந்துபிற் கூம்பாது
வேட்டதே வேட்டதாம் நட்பாட்சி;—தோட்ட
கயப்பூப்போல் முன்மலர்ந்து பிற்கூம்பு வாரை
நயப்பாரும் நட்பாரும் இல்

(பொ - ள்) கோட்டுப்பூப் போல மலர்ந்து பின் கூம்பாது வேட்டதே வேட்டதாம் நட்பாட்சி - மரங்களிற் பூக்கும் பூக்கள் முதலில் மலர்ந்து பின் தாம் உதிரும்வரையிற் குவியாமைபோலத் தலைநாளில் உள்ளம் மலர்ந்து பின் தமது முடிவுவரையிற் சுருங்காமல் விரும்பியது விரும்பியதாயிருப்பதே நட்புடைமையாம்; தோட்ட கயப்பூப்போல் முன் மலர்ந்து பின் கூம்புவாரை - அவ்வாறின்றி அகழ்ந்தெடுத்த நீர்நிலைகளிற் பூக்கும் இதழ்மிக்க பூக்கள் போல் தலைநாளில் மகிழ்பூத்து நாளடைவில் மனஞ்சுருங்கும் இயல்பினரை, நயப்பாரும் நட்பாரும் இல் - விரும்புவாரும் நேசிப்பாரும் உலகில் இல்லை.

(க - து) கூடிப் பின் பிரியா இயல்பினரே நேசித்தற் குரியார்.

(வி - ம்) வேட்டது வேட்டதே நட்பாட்சியாம் என்று மாறுக. வேட்டதெனறது, ஈண்டு விரும்பி நேசித்ததென்னும் பொருட்டு. "உயர்ந்த வேட்டத்து உயர்ந்திசினோர்"† என்பது புறம். இதழ் மிக்க நீர்ப்பூ என்னுங் குறிப்பு, முதலில் தோற்றத்தால் நேயம் பெருகித் தோன்றுதல் உணர்த்தும். மலர்தலுங் குவிதலுமென்றற்கு, நேயத்தால் உள்ளம் மலர்தலுங் குவிதலும் என்று கொள்க. நயத்தல், விரும்பி மதித்தல்; நட்டல் - அணுகி நேசித்தல் என்க. ௰

**216.** கடையாயார் நட்பிற் கமுகனையர்; ஏனை
இடையாயார் தெங்கி னனையர்;—தலையாயார்
எண்ணரும் பெண்ணைபோன் றிட்டஞான் றிட்டதே,
தொன்மை யுடையார் தொடர்பு.

* குறள், எஅ : ௫. † புறநா. உகச : ௬.

(பொ - ள்) நட்பில் - நேயமுறைமையில், கடையாயார் கமுகு அனையர் - கீழோர் பாக்குமரத்தின் இயல்பை ஒத்தவர்; இடையாயார் தெங்கு அனையர் - இடைத்தரமானவர் தென்னை மரத்தின் இயல்பை ஒத்தவர்; ஏனைத் தலையாயார் தொன்மையுடையார் தொடர்பு - ஏனை உயர்ந்தோரெனப்படும் பழமை கருதுவாரது நட்பு, எண் அரு பெண்ணை போன்று இட்டஞான்று இட்டதே - மதிப்பு மிக்க பனைமரத்தின் இயல்புபோன்று நேயம் ஊன்றிய போது ஊன்றியதேயாம்

(க - து) மேன்மேல் உதவிகளில்லாத போதும் நட்புக் குறையாதவரிடமே நேயங்கொள்ளுதல்வேண்டும்

(வி - ம்) நெடுகக் கவனித்தலால் பாக்குமரமும், இடையிடையே கவனித்தலால் தென்னைமரமும், முதலில் விதையிட்ட அளவோடு பனைமரமும் வளர்ந்து பயன்தருவனவாதலால், அவ்வாறு கவனித்தலுடைமையால் நேயம் நிலைபெறுவார்க்கு முறையே அவை உவமமாயின. 'நட்பில்' என்பதை ஏனையோர்க்குங் கொள்க. ஏனைத் தலையாயார் எனத் தொடர்க. அருமை ஈண்டு மிகுதிப் பொருளதே. பனைக்கு விதை ஊன்றியதன்றி இறுதிகாறும் பிறிதொன்றுஞ் செய்யாமையின், 'இட்டஞான்றிட்டதே' எனப் பட்டது. நட்புக்குப் பழமை கருதுதல் சிறந்த இலக்கணமாதலின், தலையாயாரைத் தொன்மையுடையாரென்று மேலும் ஆசிரியர் விதந்து கூறினார். நட்பென்னும் உறுப்பினுள் பழைமை பாராட்டுதலை நாயனார் 'விதிமுகக் கூற்றுள முதன்மைபெற வைத்து விளக்குதலும், "நட்பிற் குறுப்புக் கெழுதகைமை; மற்றதற், குப்பாதல் சான்றோர் கடன்."* என்றதும் இக் கருத்தினான் என்க. ௯

217. கழுநீருட் காரட கேனும் ஒருவன்
விழுமிதாக் கொள்ளின் அமிழ்தாம்;—விழுமிய
குய்த்துவையார் வெண்சோறே யாயினும் மேவாதார்
கைத்துண்டல் காஞ்சிரங் காய்.

(பொ - ள்) கழுநீருள் கார் அடகேனும் ஒருவன் விழுமிதாக் கொள்ளின் அமிழ்தாம் - கழுநீருட் பெய்து சமைத்த கறுத்த இலைக்கறியேனும் ஒருவன் அன்புடையதாகப் பெற்றால் அஃது அமிழ்தமாய் நன்மைதரும்;

* குறள், ௮௧ : ௨.

விழுமிய குய்த் துவை ஆர் வெண்சோறேயாயினும் மேவா தார் கைத்து உண்டல் காஞ்சிரங்காய் - சிறந்த தாளிப்புப் பொருந்திய துவைத்த கறிகளோடு கூடிய வெண்ணிற் மான நெல்லரிசி யுணவேயாயினும் அன்பு பொருந்தாதவர் கையிலுள்ளதாய் உண்ணுதல் எட்டிக்காய்போல் வெறுப் புத் தருவதாகும்.

(க - து) உள்ளன்போடு உதவுவோரிடமே நட்புச் செய்தல்வேண்டும்.

(வி - ம்) 'கழுநீர்' என்பது அரிசி கழுவிய நீர். இலைக் கறியில் தாழ்ந்தவொன்றைக் குறித்தற்குக் 'காரடகு' என்றார். குறிப்பால், முன்னைக் கீரை முதலியன ஈண்டுக் கருதப்படும். துவை, துவையலுமாம். எ

218. நாய்க்காற் சிறுவிரல்போல் நன்கணிய ராயினும்
ஈக்கால் துணையும் உதவாதார் நட்பென்னும்?
சேய்த்தானுஞ் சென்று கொளல்வேண்டும், செய்விளைக்
வாய்க்கா லனையார் தொடர்பு. [கும்

(பொ - ள்) நாய்க்கால் சிறுவிரல்போல் நன்கு அணியராயினும் ஈக்கால் துணையும் உதவாதார் நட்பு என்னும் - நாய்க்காலின் சிறிய விரல்கள் நெருக்கமாயிருப் பதுபோல் மிக நெருக்கமுடையராயினும் ஓர் ஈக்காலினளவும் உதவி செய்யாதவரது நட்பு என்ன பயனுடைய தாகும? சேய்த்தானும் சென்று கொளல்வேண்டும் செய் விளைக்கும வாய்க்கால் அனையார் தொடர்பு-கழனி முழு மையும் விளைக்கும் நீர்க்காலை ஒத்த இயல்பினரது தொடர்பு தொலைவிலுள்ளதாயினும் அதனைத் தேடிச் சென்று அடைதல்வேண்டும்.

(க - து) உதவும் இயல்பினரே நட்புச் செய்தற் குரியர்.

(வி - ம்) நாய்க்காற் சிறுவிரல் இழிவுக்காக வந்த உவமம். ஈக்கால், ஈ என்னும் மிகச் சிறிய பறவையினது கால்; இது சிறு மைக்கு எடுத்துக்காட்டுவதோர் அளவு. வேண்டும் என்பது ஏவல் கண்ணிய வியங்கோள்; உம் ஈற்றுஈன் வந்தது.* வாய்க்காலின் இயல்பு,

---

* சிந். க : கஎஉ. நச்.

கழனியினிடமிருந்து எஞ்ஞான்றுந் தான் ஓர் உதவி பெறுதலின் றாயினும் உற்ற நேரங்களில் தொலைவிலிருந்து தானே முற்போந்து ஓடி வளம் உதவி அவ் வயல் முழுமையும் விளையச் செய்தல். நண்பரது இருப்பின் சேய்மை அவர் தொடர்பின்மேல் ஏற்றப் பட்டது. அ

**219.** தெளிவிலார் நட்பின் பகைநன்று; சாதல்
விளியா அருநோயின் நன்றால்;—அளிய
இகழ்தலின் கோறல் இனிதேமற் றில்ல
புகழ்தலின் வைதலே நன்று.

(பொ - ள்) *தெளிவிலார் நட்பின் பகை நன்று* - நம்பத் தகாதவரது நட்பினும் அவரது பகை நலந்தரும்; *சாதல் விளியா அருநோயின் நன்று* - தீராத கொடிய நோயினும் இறத்தல் நலமாகும்; *அளிய இகழ்தலின் கோறல் இனிது* - பிறரை நெஞ்சு புண்ணுரும்படி இகழ்தலினும் அவரைக் கொல்லுதல் நல்லது; *இல்ல புகழ்தலின் வைதலே நன்று* - ஒருவரிடம் இல்லாதன கூறிப் புகழ்தலினும் அவரைப் பழித்தலே நன்மையாம்.

(க - து) நம்பிக்கை யில்லாதவரிடம் நட்புச் செய்தல் ஆகாது.

(வி - ம்) தெளிவென்பது ஈண்டு நம்பிக்கை யென்னும் பொருட்டு; "தெளிந்தார்இல் தீமை புரிந்தொழுகு வார்"* என்புழிப்போல. தெளிவிலார் பகையினும் நட்பில் இன்னல் மிகுதியாகலின், 'பகை நன்றென்றார். அவர் நட்பினால் உண்டாகும் மிக்க இன்னலை விளக்கும் பொருட்டுப் பகை நன்றென்றதல்லால் வேறில்லையாகலின், மற்று அத்தகையாரிடம் பகையுமில்லாதிருத்தலே நன்றென்க. ஏனையவற்றிற்கும் இங்ஙனங் கொள்க. அதிகாரம் நட்பாராய்தலாகலின், ஏனை மூன்றையும் முன்னதற்கு உவமமாக உரைத்தலுமொன்று. ஆல், ஏ, மற்று - அசை. வைதலே என்பதன் தேற்றேகாரத்தைப் பகை, சாதல், கோறல் என்பவற்றிற்குங் கூட்டுதல் பொருந்தும். "பொருளே உவமம்"† என்பதனால் இதனைக் கொள்க. ௯

* குறள், கஙு : ௩. † தொல். உவமம். ௬0.

**220.** மரீஇப் பலரோடு பன்னாள் முயங்கிப்
பொரீஇப் பொருட்டக்கார்க் கோடலே வேண்டும்;
பரீஇ உயிர்செகுக்கும் பாம்பொடும் இன்று
மரீஇப் பின்னைப் பிரிவு.

(பொ - ள்) மரீஇப் பலரோடு பல்நாள் முழங்கிப் பொரீஇப் பொருள்தக்கார்க் கோடலே வேண்டும் - பல நாள் பலரோடும் சேர்ந்து ஒத்துக் கலந்து பழகிப் பொருளாகத் தக்காரையே நட்புக்கொள்ளல்வேண்டும்; ஏனென்றால், பரீஇ உயிர் செகுக்கும் பாமபொடும் இன்று மரீஇப் பின்னைப் பிரிவு-கடித்து உயிரை அழிக்கும் பாம்பொடாயினும் கூடிப் பின்பு பிரிதல் இன்றாமையாகும்.

(க - து) பலகால் நன்காராய்ந்த பின்னரே தக்காரோடு நட்புச் செய்தல்வேண்டும்.

(வி - ம்) "ஆய்ந்தாய்ந்து கொள்ளாதான் கேண்மை கடைமுறை, தான்சாந் துயரந் தரும்"* என்றார் நாயனார். மருவி, பொருவி, பரிந்து என்பன ஈண்டு விகாரப்பட்டு அளபெடுத்தன. பொருவுதல், ஒத்தல்; பரிதல், அறுதல்; பிறவினைக்கண் வந்தது; "எருமை கயிறு பரிந்தசைஇ"† என்புழிப்போல. ஈண்டுக் கடித்தலென்னும் பொருட்டு. பொருட்டக்காரென்றது, உண்மைத் தகுதியுடையாரை யென்க. ஏகாரத்தைப் பிரித்துக்கூட்டுக. இன்றாமை யென்பது ஈறு தொகுத்தலாய் நின்றது. கO

---

## உரு. நட்பிற் பிழைபொறுத்தல்

நட்பினரிடத்துக் குற்றம் உண்டாயின், அஃது அறியாமையானுதல் அல்லது ஊழினுதல் உண்டாதலன்றி வேறின்றாகலின் பழைமை கருதி அதனைப் பொறுத்து, அவர் நட்பினையே பாராட்டியொழுகுதல்.

**221.** நல்லா ரெனத்தான் நனிவிரும்பிக் கொண்டாரை
அல்லா ரெனினும் அடக்கிக் கொளல்வேண்டும்;
நெல்லுக் குமியுண்டு, நீர்க்கு நுரையுண்டு,
புல்லிதழ் பூவிற்கும் உண்டு.

---

* குறள், அO : உ. † ஐங். கO : ௯.

(பொ - ள்) நல்லார் எனத் தாம் நனிவிரும்பிக் கொண் டாரை அல்லார் எனினும் அடக்கிக் கொளல் வேண்டும் - நல்லவர் என்று தாம் பலகால் ஆராய்ந்து மிகவும் நேசித் துக்கொண்டவரைப் பின்பு ஒருகால் அவர் நல்லவரல்லா ராய்ப் பிழைபட்டாரெனினும் அதனைப் பொறுத்து அவ ரைத தமமிடமே இணக்கிக்கொள்ளல் வேண்டும்; நெல் லுககு உமி உண்டு நீர்க்கு நுரை உண்டு புல் இதழ் பூவிற் கும் உண்டு - ஏனென்றால், பயன்படுதலுடைய நென் மணிக்கு அதிலிருந்து நீக்குதற்குரிய உமியுண்டு, அவ் வாறே நீர்க்கு நுரையுண்டு, பூவிற்கும் புறவிதழ் உண்டு.

(க - நு) உலகத்திற் குற்றமிருத்தல் இயற்கையாக லின், நண்பரிடத்து அதனைப் பாராட்டுதலாகாது.

(வி - ம்) நல்லார், உயர்ந்த இயல்பினர்; நனிவிரும்பிக்கொள் ளல், அணுக்கமாக நேசித்துக்கொள்ளுதல்; அல்லாரென்றது, ஈண்டுப் பிழைபட்டாரென்னும் பொருட்டு. நெல் நீர் பூவென வந்த உவமம், மக்கள் முதனமையாகக் கருதி உணணுவன பருகு வன அணிவனவான பொருள்களிலும் குறைகள் உண்டெனப் புலப்படுத்திநின்றது. புல்லிதழ், புன்மையுடைய இதழ்; புன்மை யாவது, மணமும் நிறமுமில்லாச் சிறுமை. பூவிற்கும் என்னும் உம்மை உயர்வொடு எச்சம்; "செஞ்சொலாயிற் பிற்படக் கிளவார் முற்படக் கிளத்தல்"* என்றமையின், உம்மையேற்ற சொல் இறுதியில் நின்றது. க

222. செறுத்தோ றுடைப்பினுஞ் செம்புனலோ டூடார்,
மறுத்துஞ் சிறைசெய்வர் நீர்நசைஇ வாழ்நர்;
வெறுப்ப வெறுப்பச் செயினும் பொறுப்பரே,
தாம்வேண்டிக் கொண்டார் தொடர்பு.

(பொ - ள்) செறுத்தோறு உடைப்பினும் செம்புன லோடு ஊடார் மறுத்தும் சிறை செய்வர் நீர்நசைஇ வாழ்நர் - நீரின் நன்மையை விரும்பி வாழ்வோர் வயலில் அதனைக் கட்டுந்தோறும் அஃது உடைத்துடைத்துச் செல்லும் இயல்பினதாயினும் அப் புதுப் புனலோடு சினத்தல் செய்யாராய் மீண்டுமீண்டும் அதனை மடைகட்

* தொல். இடை. ௩௯.

டிப் பயன்படுவர்; வெறுப்ப வெறுப்பச் செயினும் பொறுப்பரே தாம் வேண்டிக்கொண்டார் தொடர்பு - உயர்ந்தவரென்று தாம் முன்னர் விரும்பி நட்புச் செய்து கொண்டவரது தொடர்பினைப் பின்பு அவர் வெறுத்தற்குரிய பிழைகளை வெறுப்புண்டாகும்படி செய்தாலும் அவற்றைப் பொறுத்து மேற்கொள்வர்.

(க - து) சிறந்த நண்பர்கள் தம்மிடம் பலகாற் குற்றஞ் செய்ய நேர்ந்தாலும், அவர்தம உயர்வு கருதி அவர்கள் தொடர்பினை மேற்கோடல் வேண்டும்.

(வி - ம்) செறுத்தோறென்னும் பயில்வுப் பொருளால் மறுதது மென்பதற்கு அடுககுப்பொரு ளுரைககப்பட்டது. செறுத்தல், அண்டு மடை கட்டுதல். ஊடாமைக்கு நீரினுலுண்டாம கிளர்ச்சியும் ஓர் ஏதுவாகலின், புதுப்புனல் நுவலப்பட்டது. செம்மை, புதுமைமேற்று; "புதுநாற்றம் செய்கின்றே செம்பூம் புனல்" * என்புழிப் போல. வெறுப்ப வெறுப்ப என்பவற்றில் முன்னது பெயர். 'தாம் வேண்டிக் கொண்டார்' என்றார், அவர் தம் உயர்வால் தமது உள்ளம் பிணிப்புண்டமை தோன்ற. தொடர்பு என்னும் முடிபாற் 'பொறுப்ப' ரென்பதற்குப் பொறுத்து மேற்கொள்வரென்று பொருளுரைத்துக்கொள்க. உ

**223.** இறப்பவே தீய செயினுந்தந் நட்டார்
பொறுத்தல் தகுவதொன் றன்றே;—நிறக்கோங்கு
உருவவண் டார்க்கு முயர்வரை நாட!
ஒருவர் பொறையிருவர் நட்பு.

(பொ - ள்) இறப்பவே தீய செயினும் தம் நட்டார் பொறுத்தல் தகுவ தொன்றன்றே - தம்மோடு நட்புக் கொண்டவர் மிகவுந் தீங்குகள் செய்தாலும் அவற்றைப் பொறுத்தொழுகுதல் தகுதியான தொன்றன்றே! நிறக் கோங்கு உருவ வண்டு ஆர்க்கும் உயர்வரை நாட - நிறமான கோங்க மலரில் அழகிய வண்டுகள் சென்று ஒலிக்கின்ற உயர்ந்த மலைகளையுடைய நாடனே! ஒருவர் பொறை இருவர் நட்பு - ஒருவரது பொறை இருவர் நட்புக்கு இடம்.

* பரிபா. எ : உக - உ.

(க - து) பொறுத்தலால் நட்பு வளர்தலாலும், அஃதொரு பெருந்தன்மையாதலாலும், நட்பிற் பிழை பொறுத்தல் வேண்டும்.

(வி - ம்) நிறம், பொன்னிறம். உருவென்பது, உருவவென ஈறுதிரிந்து வந்தது. ஒருவர் பொறுத்தலால் இருவர்க்கு நலமுண்டாதலின் ஆக்கமானதை மேற்கொள்க வென்றற்கு, 'ஒருவர் பொறை இருவர் நட்'*பென்றார். ௩

**224.** மடிதிரை தந்திட்ட வான்கதிர் முத்தங்
கடுவிசை நாவாய் கரையலைக்குஞ் சேர்ப்ப!
விடுதற் கரியா ரியல்பிலரேல் நெஞ்சஞ்
சுடுதற்கு மூட்டிய தீ

(பொ - ள்) மடி திரை தந்திட்ட வான் கதிர் முத்தம் கடுவிசை நாவாய் கரை அலைக்கும் சேர்ப்ப - மிக்க விசையோடு வருகின்ற மரக்கலங்கள மடிந்து விழுகின்ற அலைகள் கொழித்த வெள்ளிய கதிர்களையுடைய முத்துக்களைக் கரையிற் சிதறச்செய்யுந் துறையை யுடையாய்! விடுதற்கு அரியார் இயல்பு இலரேல் நெஞ்சம் சுடுதற்கு மூட்டிய தீ - நட்பு விடுதற்குக் கூடாதவர் இடையே நல்லியல்பில்லாதவராயின் அத்தகையோர் தமதுள்ளம் புண்படுதற்கு மூட்டிய தீயாவர்

(க - து) கூடிப் பின் பிரியலாகாமையின், ஒருவரால் ஒருவர் உள்ளம் புண்படுமாறு நடந்துகொள்ளலாகாது.

(வி - ம்) தந்திட்ட, தந்த; விடுதற்கரியா ரென்றார், பின் பிரியலாகாமையின்; "நட்டபின் வீடில்லை"† என்றார் திருவள்ளுவரும். 'நெஞ்சஞ் சுடுதற்கு மூட்டிய தீ' என்றமையின், நட்புச் செய்யப்படுவாரும பிழைபடாமற் கருத்தாய் ஒழுகவேண்டு மென்பது பெறப்படும். ௪

**225.** இன்னுசெயினும் விடற்பால ரல்லாரைப்
பொன்னுகப் போற்றிக் கொளல்வேண்டும்;—பொன்னொடு
நல்லிற் சிதைத்ததீ நாடொறும் நாடித்தம்
இல்லத்தில் ஆக்குத லால்.

* பழமொ. கநஉ. † குறள், அ0 : க.

(பொ - ள்) இன்னா செயினும் விடற்பாலரல்லாரைப் பொன்னைப் போற்றிக் கொளல் வேண்டும் - இடையே தீயன செய்தாலும் நட்புவிடுந் தன்மையரல்லாரைப் பொன்னைப்போல் மதித்துக் காத்துக்கொள்ளுதல் வேண்டும்; பொன்னொடு நல் இல் சிதைத்த தீ நாடொறும் நாடித் தம் இல்லத்தில் ஆக்குதலால் - ஏனென்றால், பொன் முதலிய பொருள்களோடு சிறந்த வீட்டையும் எரித்தழிக்கும் இயல்பு வாய்ந்த தீயை நாடோறும் விரும்பித் தமது இல்லத்தில் வளர்த்தலால் என்க.

(க - து) நண்பர் குறைகளைத் தமது பெருங்குணத்தால் தணிவாக வைத்துக்கொண்டு அவரைப் போற்றியொழுகல்வேண்டும்

(வி - ம்) பொன்னைக வென்றமையின், மதிப்புப் பெறப்பட்டது. சிதைக்கும் இயல்பு முன்னரே உண்மையின், தெளிவுபற்றிச 'சிதைத்த'வென இறந்த காலத்தான் நின்றது. ௫

**226.** இன்னா செயினும் விடுதற் கரியாரைத்
துன்னாத் துறத்தல் தகுவதோ—துன்னருஞ்சீர்
விண்குத்து நீள்வரை வெற்ப! களைபவோ
கண்குத்திற் றென்றுதங் கை.

(பொ - ள்) துன் அரு சீர் விண் குத்து நீள் வரை வெற்ப - அணுகுதற்கரிய சிறப்பினையுடைய, வானத்தைக் குத்தும் நீண்ட மூங்கில்களையுடைய மலைநாடனே! கண் குத்திற்றென்று தம் கை களைபவோ - தவறுதலால் தம் கண்ணைக் குத்திற்றென்று தமது கையை மக்கள் தறித்து நீக்கி விடுவார்களோ? இன்னா செயினும் விடுதற்கு அரியாரைத் துன்னாத் துறத்தல் தகுவதோ - ஆதலால், அறியாமையால் தீமைகள் செய்தாலும் நீக்குதற்குக் கூடாத நட்பினரை நெருங்காமற் கைவிட்டுவிடுதல் தகுந்ததாகுமோ! ஆகாதென்க.

(க - து) தம்மைச் சேர்ந்தோர் ஒருகால் தீமைகள் செய்யினும் அவரை உடனே கைவிட்டுவிடாமல் அணைத்துக் கொள்ளல்வேண்டும்.

(வி - ம்) 'துன்னுமல்' என்பது ஈறுதொக்கு நின்றது. 'துன்னருஞ் சீர்' என்பதை மலைநாடனுக்குக் கொள்க. விண் குத்தும் வெற்பென்க. கை நட்புக்கு உவமையாதல் "உடுக்கை யிழந்தவன் கைபோல"* என்னுஞ் சான்றோர் மொழிகளிற் காண்க. சு

**227.** இலங்குநீர்த் தண்சேர்ப்ப! இன்னா செயினும்
கலந்து பழிகாணார் சான்றோர்;—கலந்தபின்
தீமை எடுத்துரைக்குந் திண்ணறி வில்லாதார்
தாமும் அவரிற் கடை.

(பொ - ள்) இலங்கு நீர்த் தண் சேர்ப்ப - விளங்குகின்ற நீரினையுடைய கடலின் குளிர்ந்த துறைவனே! இன்னா செயினும் கலந்து பழிகாணார் சான்றோர் - நட்புச் செய்தபின் நண்பர் கொடுமைகள் செய்தாலும் சான்றோர் அவர்பாற் குற்றங் காணார்; கலந்தபின் தீமை எடுத்துரைக்கும் திண் அறிவு இல்லாதார் தாமும் அவரின் கடை - நட்புச் செய்தபின் நண்பருடைய குற்றங்களை எடுத்துப் பேசுகின்ற, உறுதிவாய்ந்த அறிவில்லாதவர் தாமும் அந் நண்பரைப்போற் கடைப்பட்டவரேயாவர்.

(க - து) நண்பர்பாற் குறைகாண்போர் தாமுங் குறையுடையவரேயாவர்.

(வி - ம்) 'திண்ணறிவில்லாதார்' என்றார், பொறுமை யிழத்தலின். குற்றஞ் செய்யும் நண்பரைவிடத் தாம் குற்றமில்லாதவரென்பதற்கு அடையாளம காணாமையின், 'தாமும் அவரிற் கடை' என்றார். எ

**228.** ஏதிலார் செய்த திறப்பவே தீதெனினும்
நோதக்க தென்னுண்டாம் நோக்குங்கால்!—காதல்
கழுமியார் செய்த கறங்கருவி நாட!
விழுமிதாம் நெஞ்சத்துள் நின்று.

(பொ - ள்) ஏதிலார் செய்தது இறப்பவே தீது எனினும் நோதக்கது என் உண்டாம் நோக்குங்கால் - நண்பரல்லாத அயலார் செய்தது மிகவுந் தீங்குடைய

* குறள், எஅ : அ.

தென்றாலும் அதன் காரணத்தை ஆராயுமிடத்து ஒன்று அறியாமையான் அல்லது உரிமையான் அல்லது ஊழி ஞன் என்று பெறப்படுதலின் அதன்கண் மனம் வருந்தத் தக்கது யாதுண்டு? கறங்கு அருவி நாட - ஆதலால், ஒலிக் கின்ற மலையருவிகளையுடைய நாடனே, காதல் கழுமியார் செய்த விழுமிதாம் நெஞ்சத்துள் நின்று - அன்புமிகப் பொருந்திய நண்பர் செய்துவிட்ட தீங்கு எவ்வாற்றானும் மனம் வருந்தத்தக்கதாகாமல், நெஞ்சத்தில் ஆராய்ந்து நோக்க அன்பின் சிறப்புடையதேயாகும் என்க.

(க - து) அயலார் செய்த பெருந்தீங்கிற்கே மனம் வருந்துதற்கிடமில்லையென்றால், நண்பர் செய்தது இனிய தாகுமன்றி இன்னாததால் யாங்ஙனம் என்பது.

(வி - ம்) 'கழுமுதல்' மிகப் பொருந்துத லென்னும் பொருட்டு; "கழுமிற்றுக் காதல்"* என்பதன் நச். உரை காண்க. செய்தது என்னும் ஈறு தொக்கு நின்றது. நெஞ்சத்துள் நின்று என்றார், நெஞ்சத்துள் நினைய என்னும்பொருட்டு: நிற்க வென் னும் எச்சம் நின்று எனத் திரிந்து வந்தது. நண்பர் செய்தது தீங்கேயாயினும் அவர் முன் செய்த நன்மைகளை நினைய நினைய அத் தீங்கும் இனியதாய் மாறித் தோன்றுமாகலின், 'நெஞ்சத்துள் நின்று விழுமிதாம்' எனப்பட்டது. இதனால், நட்பிற் பிழை பொறுக்கும் முறை இன்னதென்பது பெறப்படும். அ

**229.** தமரென்று தாங்கொள்ளப் பட்டவர் தம்மைத்
தமரன்மை தாமறிந்தா ராயின், அவரைத்
தமரினும் நன்கு மதித்துத் தமரன்மை
தம்முள் அடக்கிக் கொளல்.

(பொ - ள்) தமர் என்று தாம் கொள்ளப்பட்டவர் தம்மைத் தமரன்மை தாம் அறிந்தாராயின்-நண்பர் என்று தாம் நட்புகொண்டவரிடத்து இடையே நண்பராகாத் தன்மையைத் தாம் அறிந்தால், அவரைத் தமரினும் நன்கு மதித்துத் தமரன்மை தம்முள் அடக்கிக்கொளல்-அவரை நண்பரினும் மிகுதியாகப் போற்றி அவரது நண்பரல்லாத

---

* சிந். எ : ௩கஅ.

நிலையைப் புறத்தே தூற்றாமல் தமக்குள் காத்துக்கொள்ளு தல் வேண்டும்.

(க - து) நட்பிற் பிழைபடுவாரைத் தமது பொறுமையால் நல்லராமாறு காத்துக்கொள்ளுதல் வேண்டும்.

(வி - ம்) 'கொள்ளப்பட்டவர் தம்மை' என்பதற்கு ஏழாவதன் பொருள் கொள்க. தமரினும் நன்கு மதித்தல், அவர் நன்னினைவு பெறும்பொருட்டு. தம்முள் அடக்கிக்கொளல், அவர் பிழை நினைவு நீங்காமைப் பொருட்டு. தமர், தம்மவர்; ஈண்டுத் தம்மவரென்னும் உரிமைக்குரிய நண்பரென்பது. கூ

**230.** குற்றமும் ஏனைக் குணமும் ஒருவனை
நட்டபின் நாடித் திரிவேனேல்—நட்டான்
மறைகாவா விட்டவன் செல்வுழிச் செல்க,
அறைகடல்சூழ் வையம் நக.

(பொ - ள்) குற்றமும் ஏனைக் குணமும் ஒருவனை நட்டபின் நாடித் திரிவேனேல் - குற்றமும் மற்றைக் குணமும் ஒருவனை நட்புச் செய்தபின் அவனிடம் தேடிக் கொண்டு திரிவேனாயின், நட்டான் மறை காவாவிட்டவன் செல்வுழிச் செல்க-நட்புக் கொண்டவனுடைய மறைகளைத் தன்னுட் பொதிந்துவையாமல் வெளியிட்டுவிட்ட தீயோன் செல்லுந் தீக்கதிக்கு நான் செல்வேனாக; அறை கடல் சூழ் வையம் நக - அன்றியும் ஒலிக்குங் கடல் சூழ்ந்த உலகம் என்னை இகழ்வதாக.

(க - து) நண்பரிடங் குற்றங் காண்டல் பெரும் பிழையாகும்.

(வி - ம்) குணத்தோடு ஒப்பிட்டுக் குற்றங் காண்டலின், குணமுங் கூறப்பட்டது. நட்பின் அருமை யறிந்தோன் வஞ்சினங் கூறு முறையில் இச் செய்யுள் இயற்றப்பட்டிருக்கின்றது. 'அரு மறை காவாத நட்பைப்'* பிறரும் இகழ்ந்தனர். காவாமல் என்பது ஈறு தொகுத்தலாய் நின்றது. நட்பிற் பிழைகாணுங் கொடுமையின் மிகுதி, ஏனைப் பெருங் குற்றங்களோடு ஒப்புமை கூறி விளக்கப் பட்டது. ௧௦

* திரிகடு. ௫௫.

## உச. கூடா நட்பு

*பொருந்தாத நட்பினியல்பை விளக்குவது*

**231.** செறிப்பில் பழங்கூரை சேறணை யாக
இறைத்துநீர் ஏற்றும் கிடப்பர்;—கறைக்குன்றம்
பொங்கருவி தாழும் புனல்வரை நன்னாட!
தங்கரும முற்றுந் துணை.

(பொ - ள்) கறைக் குன்றம் பொங்கு அருவி தாழும் புனல்வரை நல் நாட - கரிய மலைகள் பொங்கும் அருவிநீர் ஒழுகப்பெறுகின்ற, நீரெல்லையையுடைய சிறந்த நாடனே! செறிப்பு இல் பழங்கூரை சேறு அணையாக இறைத்து நீர் ஏற்றும் கிடப்பர் தம் கருமம் முற்றுந்துணை - கட்டுக் கோப்புப் பிரிந்த பழங்கூரையையுடைய வீட்டிற் சேற்றையே அணையாகக்கொண்டு, ஒழுகும் நீரை இறைத்தும் தம்மேல் ஏற்றும் தமது காரியம் முடியுமளவும் மக்கள் வருந்திக் கிடப்பர். (அதுபோற் பொறுக்க முடியாத குற்றங்களுடைய பொருந்தா நண்பரிடம் தம் காரியம் நிறைவேறுமளவுமட்டும் நல்லோர் மிக்க இடர்களோடு தொடர்பு கொண்டிருப்பர்.)

(க - து) கூடா நட்பினரை அகங்கலந்த நேயத்துக்கு உரியராக்காது விலக்குதல் வேண்டும்.

(வி - ம்) கூரை, கூரை வீடு. கிடப்பரென்னுங் குறிப்பு, இடர்ப்பாட்டோடிருத்தல் உணர்த்தும். 'கறை'. நிறம் உணர்த்துதல், "கறைமிட றணியலும்"* என்பதனுரையிற் காண்க. உவமம், பிறிது பொருள் புலப்படுத்தி நின்றமையின் இது, 'பிறிது மொழிதல்' என்னும் அணி. க

**232.** சீரியார் கேண்மை சிறந்த சிறப்பிற்றாய்
மாரிபோல் மாண்ட பயத்ததாம்—மாரி
வறந்தக்காற் போலுமே வாலருவி நாட!
சிறந்தக்காற் சீரிலார் நட்பு.

---

* புறம். க.

(பொ - ள்) வால் அருவி நாட - வெண்ணிறமான மலையருவிகளையுடைய நாடனே! சீரியார் கேண்மை சிறந்த சிறப்பிற்றாய் மாரிபோல் மாண்ட பயத்ததாம் - தக்கோர் நட்பு மிக்க மேன்பாடுடையதாய் மழை பெய்தாற்போற் சிறந்த பயன் உடையதாயிருக்கும்; மாரி வறந்தக்காற் போலும் சிறந்தக்கால் சீரிலார் நட்பு - தகுதியில்லாதார் நட்பு மிகுந்தால் மழை பெய்யா தொழிந்தாற்போல் வாழ்க்கை வெறித்திருக்கும்.

(க - து) கூடா நட்பினாற் பயன் சிறிதுமிராது.

(வி - ம்) மழை பெய்யாவிடின் வளம் இல்லாமையோடு வெயிலும் உறுத்து நிற்றல்போல், கூடா நட்பினாற் பயனில்லாமையோடு இன்னலும் மிகுதியா யிருக்குமெனக் கொள்க. தக்காா உதவிக்கு மாரியை உவமை கூறினர், அது கைம்மாறறியாக் கடப்பாடுடையதாகலின். "மாரி யன்ன வண்மையிற் சொரிந்து"* என்றார் பிறரும். கூடா நட்பினரது நேயம் பலரது நேயமாய்ப் பெருகினுமென்றற்குச் 'சிறந்தக்கால்' எனப்பட்டது. உ

**233.** நுண்ணுணர்வி னாரொடு கூடி நுகர்வுடைமை
விண்ணுலகே யொக்கும் விழைவிற்றால்—நுண்ணூல்
உணர்வில ராகிய வூதிய மில்லார்ப்
புணர்தல் நிரயத்து ளொன்று.

(பொ - ள்) நுண்ணுணர்வினாரொடு கூடி நுகர்வுடைமை விண்ணுலகே ஒக்கும் விழைவிற்று - நுட்ப உணர்வுடையாரோடு கலந்து பழகி யின்புறுதல் விண்ணுலகத்தின் இன்பமே போலும் விரும்பப்படும் மேன்மையினை யுடையது; நுண் நூல் உணர்விலராகிய ஊதியமில்லார்ப் புணர்தல் நிரயத்துள் ஒன்று - நுண்ணிய நூலுணர்வு மில்லாதவராகிய பயனிலாரோடு நேயங்கொள்ளுதல் நரகத்திற் சேர்தலை ஒக்கும்.

(க - து) கல்வியும் அறிவுமில்லாத கூடா நட்பினரோடு சேர்தலாகாது.

---

* புறம். ௩௯௭ : ௧௯.

(வி - ம்) நுண்ணுணர் வென்று ஒன்றிலும் நுண்ணூலுணர் வென்று மற்றொன்றிலும் விரிந்தமையால், ஈரிடத்தும் இரண்டுங் கொள்க. என்னை? இரண்டும் இயைந்தன்றி மாட்சியுறாமையின் எனக. 'நூலுணர்வுமிலராகிய' வென இழிவு சிறப்பும்மை தொக்கு நின்றது. கல்வியும் அறிவு முடையாரை விண்ணுலக இன்பம் உடையராகவே கருது மியல்பு, இந்நூலுள் முன்னும் * வந்தது. "தேவரனையர் புலவர்"† என்றார் பிறரும். ஆல், அசை. ௩.

**234.** பெருகுவது போலத் தோன்றிவைத் தீப்போல்
ஒருபொழுதுஞ் செல்லாதே நந்தும்;—அருகெல்லாம்
சந்தன நீள்சோலைச் சாரன் மலைநாட!
பந்தமி லாளர் தொடர்பு.

(பொ - ள்) அருகெல்லாம சந்தன நீள்சோலைச் சாரல் மலைநாட - பக்கங்களிலெல்லாம் நீண்ட சந்தனச் சோலைகளின் சாரலையுடைய மலை நாடனே! பந்தம் இலாளர் தொடர்பு பெருகுவதுபோலத் தோன்றி வைத் தீப்போல் ஒரு பொழுதும செல்லாதே நந்தும் - பிணிப்பான நட்பில்லாதவரது தொடர்பு வைக்கோலிற் பற்றிய தீப்போல் முதலிற் பெருகுவதுபோலத் தோன்றிப பின்பு சிறிது நேரமும நிலைத்திராமற் கெடும்

(க - து) கூடா நட்பினரது நேயம் உள்ளப் பிணிப் பற்றதாகலின் விரைவில் நிலையாமற் கெடும்.

(வி - ம்) போலியாகலின் பெருகுவதுபோலத் தோன்றிற்று. ஒருபொழுது மென்றது, ஈண்டுச சிறிது நேரமும் என்னும் பொருட்டு. சாரல், தண்ணிய நீர்த்துளிகளோடு கூடிய இனிய தென்றல். ச

**235.** செய்யாத செய்துநாம் என்றலும செய்வதனைச்
செய்யாது தாழ்த்துக்கொண் டோட்டலும்—மெய்யாக
இன்புறூஉம் பெற்றி யிகழ்ந்தார்க்கும் அந்நிலையே
துன்புறூஉம் பெற்றி தரும.

(பொ - ள்) செய்யாத செய்தும் நாம் என்றலும் - பிறர் செய்யாத செயல்களை யாம் செய்து முடிப்பேம்

* நாலடி. கச : எ. † நான்மணிக். எ௫.

என்று வீறு கூறுதலும், செய்வதனைச் செய்யாது தாழ்த்துக்கொண் டோட்டலும் - தன்றாற் செய்தற்குரியதை உடனே செய்து முடிக்காமற் காலந் தாழ்த்துக்கொண்டு நாளை ஓட்டுதலும், மெய்யாக இன்புறும் பெற்றி இகழ்ந்தார்க்கு - உண்மையில் இன்பம் உறுதற்குரிய இயல்புகளைப் பொருள் செய்யாதிருத்தலும் உடையார்க்கு, அந்நிலையே துன்புறும் பெற்றி தரும் - அம் மனப்பாங்கே அவர் துன்புறுதற்குரிய நிலைமைகளை வருவிக்கும்

(க - து) வீம்பு பேசுதல், சோம்பல் கொள்ளுதல், பொருள் செய்யாதிருத்தல் என்பன துன்பந்தருதலின், அப் பண்புகளைத் தமக்கியல்பாக உடைய கூடா நட்பினரோடு கூடாதிருத்தல் வேண்டும்

(வி - ம்) செய்யாத, பிறராற் செய்ய முடியாதன; பெயர். செயல் தாழ்ந்து நாள் ஓடுதலின், ஓட்டலுமெனப்பட்டது. பொருளல் லவற்றைப் பொருளென் றுணரும் மருளா* மறுத்தற்கு 'மெய்யாக' என்றார். அந்நிலையே என்றா ; துன்பம் உறுவித்தற்குப் பிற வேண்டா என்றற்கு. ௬

**236.** ஒருநீர்ப் பிறந்தொருங்கு நீண்டக் கடைத்தும்
விரிநீர்க் குவளையை ஆம்பலொக் கல்லா ;
பெருநீரார் கேண்மை கொளினுநீ ரல்லார்
கருமங்கள் வேறு படும்.

(பொ - ள்) ஒரு நீர்ப பிறந்து ஒருங்கு நீண்டக் கடைத்தும் விரிநீர்க் குவளையை ஆம்பல் ஒக்கல்லா ஒரு குளத்து நீரில் தோன்றி ஒன்றாய் வளர்ந்தாலும் மணம் வீசும் இயல்புடைய குவளை மலர்களை ஆம்பல் மலர்கள் ஒவ்வா ; பெருநீரார் கேண்மை கொளினும் நீர் அல்லார் கருமங்கள் வேறுபடும் - அதுபோலப் பெருந்தன்மையுடையாரது நட்பைப் பெறினும் அத்தன்மையில்லாதாருடைய செயல்கள் வேறாகவே நிகழும்.

(க - து) கூடா நட்பினர் எவ்வளவு பழகினாலுந் தஞ் சிறுமைகளை விடாராகலின் அத்தகையவரோடு நேயங் கொள்ளலாகாது.

* குறள், ௩௫ : ௧.

(வி - ம்) குவளையென்றது, ஈண்டு நறுமணங் கமழுஞ் செங்கழு நீர் மலர். "கார்த்திகை விளக்கிட்டன்ன கடிகமழ் குவளை"* யென்றார் பிறரும். வேறுபடும் என்றது, தாழ்வாகவே நிகழுமென் னும் பொருட்டு. சு

**237.** முற்றற் சிறுமந்தி முற்பட்ட தந்தையை
நெற்றுக்கண் டன்ன விரலான் ஞெமிர்த்திட்டுக்
குற்றிப் பறிக்கும் மலைநாட! இன்னாதே
ஒற்றுமை கொள்ளாதார் நட்பு.

(பொ - ள்) சிறுமந்தி முற்பட்ட தந்தையை நெற றுக் கண்டன்ன விரலால் குற்றி ஞெமிர்த்திட்டு முற்றல் பறிக்கும் மலைநாட - இளங்குரங்கு, பயற்றங்காயின் நெற்றைக் கண்டாற்போன்ற தன் விரல்களால் தன் எதிர் வந்த தந்தையின், கையைக் குத்தி விரியச்செய்து அது வைத்திருந்த கனியைப் பறித்துக்கொள்கின்ற மலைகளை யுடைய நாடனே! ஒற்றுமை கொள்ளாதார் நட்பு இன் னாது - அகங்கலந்த நேயங்கொள்ளாதாரது நட்பு துன்ப முடையதாகும்

(க - து) உள்ளம் ஒன்றுபடாத கூடாநட்பினரோடு நேயங்கொள்ளலாகாது.

(வி - ம்) முற்றல் - செங்காய். சிறுமந்தி யென்றது, ஈண்டுக் குரங்கின் குட்டியை; மந்தி, பெட்டையை உணர்த்தாமற் பொதுவி னின்றது. தந்தை, பொதுப்பெயர். ஞெமிர்தல், புறத்தில் மட்டுங் கலந்து அகங்கலவாத வேறுபாட்டியல்பைப் புலப்படுத்தும் பொருட்டு 'ஒற்றுமை கொள்ளாதா' ரென்றார். பரத்தலாதலின் ஈண்டு விரித்த லெனப்பட்டது. "வான் ஞெமிர்ந்து"† என்பது மதுரைக் காஞ்சி. எ

**238.** முட்டுற்ற போழ்தின் முடுகியென் னுருயிரை
நட்டா னொருவன்கை நீட்டேனேல்—நட்டான்
கடிமனை கட்டழித்தான் செல்வுழிச் செல்க
நெடுமொழி வையம் நக.

---

* சிந். க: உஉஎ. † மதுரைக். உசரு.

(பொ - ள்) முட்டுற்ற போழ்தில் முடுகி என் ஆர் உயிரை நட்டான் ஒருவன் கை நீட்டேனேல் - நண்பனுக்கு இடுக்கண் உண்டான காலத்தில் விரைந்து எனது பெறற்கரிய உயிரை நட்புச்செய்த அவ்வொருவன் கையில் நான் ஒப்படைக்கேனானால், நட்டான் கடிமனை கட்டு அழித்தான் செல்வுழிச் செல்க - தன் நண்பனின் காவலிலுள்ள மனைவியின் கற்புறுதியை நிலைகுலைத்த தீயோன் செல்லுந் தீக்கதிக்கு யான் செல்வேனாக; நெடுமொழி வையம் நக - அன்றியும் நிலைத்த புகழினையுடைய உலகம் என்னை இகழ்வதாக.

(க - து) பொருந்திய நண்பெனின், உற்ற நேரத்தில் தன் நண்பர்க்கு உயிரையும் வழங்கல் வேண்டும்.

(வி - ம்) முடுகி யென்றது முற்போந் தென்னும் கருத்தினின்றது. இழந்தால் மீண்டும் பெறற்கருமை நோக்கி ஆருயிரெனப்பட்டது. நீட்டேனேல் என்றது, அவற்குரியதாக இதுகாறுந் தன்பால் வைத்திருந்ததை அவனிடம் உடனே ஒப்படைக்கேனாயின் என்னுங் குறிப்பில் நின்றது. கற்பு, ஈண்டுக் 'கட்டு' எனப்பட்டது; நாயனாரும் 'கற்பென்னுந் திண்மை'* என்றது காண்க.

**239** ஆன்படு நெய்பெய் கலனுள் அதுகளைந்து
வேம்படு நெய்பெய் தனைத்தரோ;—தேம்படு
நல்வரை நாட! நயமுணர்வார் நண்பொரீஇப்
புல்லறிவி னாரொடு நட்பு.

(பொ - ள்) தேன் படு நல்வரை நாட - தேன் உண்டாகின்ற உயர்ந்த மலைகளையுடைய நாடனே! நயம் உணர்வார் நண்பு ஒரீஇப புல் அறிவினாரோடு நட்பு - இனியதறியும் பேரறிஞரது நண்பினின்றும் நீங்கிச் சிற்றறிவினாரோடு செய்யும் நட்பு, ஆன் படு நெய் பெய் கலனுள் அது களைந்து வேம்பு அடு நெய் பெய் தனைத்து - ஆனிடத்தில் உண்டாகும் நெய்யைப் பெய்திருந்த கலத்தில் அந் நெய்யை நீக்கி வேம்பின் விதையைக் காய்ச்சியெடுத்த வேப்பெண்ணெயைப் பெய்து வைத்தாற்போன்ற தன்மையதாகும்.

---
* குறள், ௬ : ௪.

(க - து) இனியதறியாத புல்லறிவினரான கூடா நட்பினருடன் நேயஞ் செய்தலாகாது.

(வி - ம்) 'தேம்படு' என்னும் புணர்ச்சி முடிபு, "தேனென் கிளவி" "மெல்லெழுத்து மிகினும்"* என்பவற்றான் முடிந்தது. அரோ, அசை. நயமுணர்வாரென்றார், இனியராயொழுகும் இயல் பறிவாரென்றற்கு. சிற்றறிவினர்க்கு அத் திறம் வாயாமையின், புல்லறிவினரென்று விதந்தார். 'நட்பொரீஇ' யென்று வலித்தல் பெறாமையின், தன்வினைப் பொருளா உரைக்கப்பட்டது. கூ

**240.** உருவிற் கமைந்தான்கண் ஊராண்மை யின்மை
பருகற் கமைந்தபால் நீரளா யற்றே;
தெரிவுடையார் தீயினத்தா ராகுதல் நாகம்
விரிபெடையோ டாடிவிட் டற்று.

(பொ - ள்) உருவிற்கு அமைந்தான்கண் ஊராண்மை இன்மை பருகற்கு அமைந்த பால் நீர் அளாய் அற்று - காட்சிக்கு இனியனாய் உருவமைந்த ஒருவனிடம் ஒப்புர வில்லாமை, பருகுதற்கு அமைந்த பாலில் நீர் கலந்திருந் தாற்போன்ற தன்மையதாகும்; தெரிவு உடையார் தீ இனத்தாராகுதல் நாகம் விரிபெடையோடு ஆடிவிட்டற்று - ஞானமுடையோரா தீய சார்புடையாரோடு நட்புச் செய் தொழுகுதல் நாகப்பாமபு பெட்டை விரியனோடு தவறாக இணைநதுவிட்டாற் போன்ற தன்மையுடையதாகும.

(க - து) ஒப்புரவும் மெய்யுணர்வுமில்லாத கூடா நட்பினருடன் கூடுதலாகாது.

(வி - ம்) ஊரவற்கு உதவியா யொழுகுமியல்பு ஊராண்மை யெனப்பட்டது. தெரிவு, இடருற்ற நேரஙகளில் ஆழ்ந்து மெய்ம்மை தெரிந்தொழுகும் அறிவு. விரியனோடு கூடிய நாகம் தன்னியல்பு மாறித் தீயதாய்க் கெடுதலின், அஃதுவமையாயிற்று. விரியனோடு நாகஙகூடினால் இறக்கும் என்ப. கய

---

* தொல். புள்ளி. சடு-கூ.

## உரு. அறிவுடைமை

இயற்கை யறிவினை யுடையனாதல்.

**241.** பகைவர் பணிவிடம் நோக்கித் தகவுடையார்
தாமேயும் நாணித் தலைச்செல்லார் காணாய்;
இளம்பிறை யாயக்கால் திங்களைச் சேராது
அணங்கருந் துப்பின் அரா.

(பொ - ள்) இளம் பிறை ஆயக்கால் திங்களைச் சேராது அணங்கு அரு துப்பின் அரா - பிறிதொன்றினால் வருத்துதலில்லாத வலிமையினையுடைய இராகுவென்னும் பாம்பு, மதியத்தை அது இளைய பிறைநிலாவாய் மாறின் சேராது; பகைவர் பணிவிடம் நோக்கித் தகவுடையார் தாமேயும் நாணித் தலைச்செல்லார் காணாய் - அதுபோலப், பகைவரின் தளர்வு நிலை கருதித் தகுதியான அறிவுடையோர் தாமாகவே உள்ளமொடுங்கி அவர்மேற் செல்லுதலில்லாதவராவர்.

(க - து) பகைவரேயாயினும் அவர் நிலை தளரின் அவர்க்கு இரக்கங்காட்டுதல் தகுதியான அறிவுடைமையாகும்.

(வி - ம்) பணிவு இங்ஙனந் தாழ்ச்சிப் பொருட்டாதல் "பணிவில் ஆண்மை"* என்பதனானுங் காண்க. தகவு, ஈண்டு மேதக்க அறிவுடைமை. உம்மை, அசை. மேற்செல்லலென்பது, போர்மேற் சேறல். பிறையென்றதோ டமையாது இளம்பிறையென மேலும் விதந்தார், சிறுமையோடு மெலிவுந் தோன்ற வென்க. காணாய், முன்னிலை அசை. க

**242.** நளிகடற் றண்சேர்ப்ப! நல்கூர்ந்த மக்கட்
கணிகல மாவ தடக்கம்;—பணிவில்சீர்
மாத்திரை யின்றி நடக்குமேல் வாழுமூர்
கோத்திரங் கூறப் படும்.

* மலைபடு - ௪உரு.

(பொ - ள்) நளிகடல் தண் சேர்ப்ப - பெரிய கடலின் குளிர்ந்த துறைவனே, நல்கூர்ந்த மக்கட்கு அணிகலமாவது அடக்கம் - வறுமையுற்ற மாந்தர்க்கு அணிகலம் போற் சிறப்பது அடக்கமுடைமையாகும்; பணிவில் சீர் மாத்திரையின்றி நடக்குமேல் வாழும் ஊர் கோத்திரம் கூறப்படும் - பணிதலில்லாது உயர்ந்தொழுகுதலில் ஒரு வரம்பில்லாமல் நடப்பாரானால் தாம் வாழும ஊரவரால் தமது குடிப்பிறப்புப் பற்றிப் பழிக்கப்படுவர்.

(க - து) பணிவோடிருத்தல் அறிவுடைமையாகும்.

(வி - ம்) பின்னும் இன்றியமையாமை பற்றி 'நல்கூர்ந்த மக்கட்'கென்றார். அறிவாகிய அழகை மேலும் விளங்கச் செய்தலின், அடக்கம் அணிகலம் எனப்பட்டது. சீர், ஈண்டு உயர்வு; 'சுருக்கத்து வேண்டும் உயர்வு'* என்பவாகலின். அஃதும் அளவுகடத்தலாகாதென்றற்கு, 'மாத்திரையின்றி நடக்குமேல்' எனப்பட்டது. கூறப்படும், ஐயுற்று பேசப்படும்; நடக்கும் கூறப்படும் என்பன, "தெய்வத்துள் வைக்கப்படும்"† என்புழிப்போல உயர்திணைக்கண் நின்றன. உ

243. எந்நிலத்து வித்திடினுங் காஞ்சிரங்காழ் தெங்காகாது
எந்நாட் டவருஞ் சுவர்க்கம் புகுதலால்,
தன்னாற்றா னாகும் மறுமை; வடதிசையுங்
கொன்னாளர் சாலப் பலர்.

(பொ - ள்) எந்நிலத்து வித்து இடினும் காஞ்சிரங் காழ் தெங்கு ஆகாது - எந்த நிலத்தில் விதையை இட்டாலும் எட்டி விதை தென்னை மரமாக வளராது; எந்நாட்டவரும் சுவர்க்கம் புகுதலால் தன் ஆற்றான் ஆகும் மறுமை- ஆதலால், எந்த நாட்டின்கண் வாழ்வோரும் தமது நல்வினையினால் தேவருலகம் செல்லுதலால், ஒருவற்குத் தன் முயற்சி வகையினாலேயே மறுமைப் பேறு உண்டாதல் கூடுமன்றி இடத்தின் சார்பினாலன்று; வடதிசையும் கொன்னாளர் சாலப் பலர் - போக உலகிருக்கும் வடநாட்டின்கண்ணும் வறிது வாழ் நாட்கழித்து நரகு புகுவோர் மிகப் பலராவர்.

---

* குறள், கஎ : ௩. † குறள், ௫ : ௪௦.

(க - து) இடம் முதலிய சார்பினையே பெரிதாகக் கருதாமல் தமது புண்ணியப் பேற்றில் முயற்சியுடையராய் ஒழுகுதலே அறிவுடைமையாகும்.

(வி - ம்) உம்மை, உயர்வு. கொன்னுளர், பயனிலாளர்; "நம்மருளாக் கொன்னுளன்"* என்றார் பிறரும. அவரவர் அறிவின் முயற்சியே அவரவர்க்கு உய்தி கூட்டுமென்பது பொருள். ௩

**244.** **வேம்பின் இலையுட் கனியினும் வாழைதன்**
**தீஞ்சுவை யாதுந் திரியாதாம்; ஆங்கே**
**இனந்தீ தெனினும் இயல்புடையார் கேண்மை**
**மனந்தீதாம் பக்கம் அரிது.**

(பொ - ள்) வேம்பின் இலையுட் கனியினும் வாழை தன் தீஞ்சுவை யாதும் திரியாது - வேம்பின் இலையுள் இருந்து பழுத்தாலும் வாழைப்பழம் தனது இன்சுவையிற் சிறிதும் வேறுபடாது; ஆங்கே இனம் தீது எனினும் இயல்புடையார் கேண்மை மனம் தீது ஆம் பக்கம் அரிது - அதுபோலவே, தமக்கு நேர்ந்த சார்பு தீயதெனினும் இயற்கையறிவுடையாரது நட்பு, மனந்தீயதாய் மாறும் வகை அரிதாயிருக்கும்.

(க - து) தம் இயல்பில் அறிவுடைமை தீய சார்பினின்று காக்கும்.

(வி - ம்) சார்பினால் இயல்பு திரியாமை கூறினமையின், இயற்கை யறிவுடைமை பெறப்பட்டது. ஆம், அசை. பெரும் பான்மையுந் தீதாதல் இன்மையின், 'அரிது' என்றார். "இன்மை யரிதே வெளிறு"† என்பதிற்போல. ௪

**245.** **கடல்சார்ந்தும் இன்னீர் பிறக்கும், மலைசார்ந்தும்**
**உப்பீண் டுவரி பிறத்தலால்; தத்தம்**
**இனத்தனைய ரல்லர் எறிகடற்றண் சேர்ப்ப!**
**மனத்தனையர் மக்களென் பார்.**

(பொ - ள்) எறிகடல் தண் சேர்ப்ப - அலைகள் வீசுகின்ற கடலின் குளிர்ந்த கரையையுடையவனே! கடல்

* கலித். சஉ : கஅ. † குறள், ருக : ௩.

சார்ந்தும் இன் நீர் பிறக்கும் மலைசார்ந்தும் உப்பு ஈண்டு உவரி பிறத்தலால் - கடலை யடுத்தும் இன்சுவை மிக்க ஊற்றுநீர் தோன்றுதலுண்டு, மலையை யடுத்தும் உவர்ப்பு மிக்க உப்புநீர் உண்டாதலால்; மக்கள் என்பார் இனத் தனையர் அல்லர் மனத்தனையர் - பகுத்தறிவுடைய மக்க ளென்று சிறப்பிக்கப்படுவோர் தமது சார்போடொத்த இயல்பினரல்லர்; தத்தம் இயற்கையறிவோடொத்த நிலை யினராவர்.

(க - து) மக்கள் தத்தம் இயற்கையறிவிற்கேற்பவே ஒழுகுவராதலின், அவ்வறிவினை அவர் தகுதியாகப் பெற் றிருத்தல் நன்று.

(வி - ம்) உப்பு, உவர்ப்புச்சுவை உணர்த்திற்று, உவரி, உவர்ப் புடைய நீர். "வல்லூற் றுவரி தோண்டி"* என்றார் பிறரும். பிறக்கும், பிறக்கும் ஆதலால் என்று பிரித்திசைத்துக் கொள்க. மனமென்றது, ஈண்டு இயற்கையறிவோடொத்த மனப்பான்மை யென்க. ரு

246　பராஅரைப் புன்னை படுகடற் றண்சேர்ப்ப!
ஒராஅலும் ஒட்டலுஞ் செய்பவோ? நல்ல
மரூஉச்செய் தியார்மாட்டுந் தங்கு மனத்தார்
விராஅஅய்ச் செய்யாமை நன்று.

(பொ - ள்) பரு அரைப் புன்னை படுகடல் தண் சேர்ப்ப - பருமனான அடிமரத்தையுடைய புன்னை மரங்கள் உண்டாகின்ற கடலின் குளிர்ந்த கரையையுடையவனே! ஒராலும் ஒட்டலும் செய்பவோ - நண்பரை ஒருகாற் பிரிதலும் மற்றொருகாற் கூடுதலும் உலகத்திற் செய்யத் தக்கனவோ? நல்ல மரூஉச் செய்து யார்மாட்டும் தங்கும் மனத்தார் விராய்ச் செய்யாமை நன்று - சிறந்த நட்புச் செய்து எத்தகையோரிடத்தும் நிலைத்தொழுகும் மனப் பான்மையுடையோர் முதலிலேயே யாவரோடும் மனங் கலந்து நட்புச்செய்துகொள்ளாமை அதனினும் நன்றாகும்.

(க - து) கூடுதலும் பிரிதலுமின்றி யொழுகுதல் அறிவுடைமையாகும்.

* பெரும்பாண். கூஅ.

(வி - ம்) செய்ய, ஈண்டு அஃறிணைப் பன்மை. மரூஉ, பெயர் இரண்டும் ஒரே பொருளன. யார் மாட்டுமென்றார், சேரல் லாரையும் அடக்கி. ஒருவரோடு கூடுதலும் பிரிதலும் செய்து கொண்டிருத்தலினும கூடாமையே நன்றென்றபடி. நல்ல மரூஉச செய்து யார்மாட்டுந் தங்கு மனத்தாரென்றது, தக்கோரெனற் பொருட்டு. அம் மனத்தார பின் பிரிதலாற் பெருந்துன்பமுறுவ ராதலின், அவ்வாறு விதந்தார். ௬

**247.** உணர உணரும் உணர்வுடை யாரைப்
புணரிற் புணருமாம் இன்பம்,—புணரின்;
தெரியத் தெரியுந் தெரிவிலா தாரைப்
பிரியப் பிரியுமாம் நோய்.

(பொ - ள்) புணரின் - நட்புச் செய்தால், உணர உணரும் உணர்வுடையாரைப புணரின் இன்பம் புணரும் - நாம் ஒன்றை உள்ளத்தால் உணர அதனைக் குறிப்பால் உணர்ந்தொழுகுங் கூருணர்வுடையாரை நட்புச் செய்யின் இன்பம் பொருந்தும்; தெரியத் தெரியும தெரிவு இலா தாரைப் பிரியப் பிரியும் நோய் - நம் கருத்துக்கள் வெளிப் படையாகத் தெரிய அங்நிலையினும் அவற்றை அறிந் தொழுகும அறிவிலாதாரை நட்புச் செய்யாமற் பிரிந்திருக் கத் துன்பங்களும் நம்மைச் சேராமற் பிரிந்திருக்கும்.

(க - து) குறிப்பறிந்தொழுகுங் கூரறிவாற்றலால் இன்பம் விளையும.

(வி - ம்) 'குறிப்பிற் குறிப்புணா வாரை உறுப்பினுள், யாது கொடுத்தும கொளல்'*லென்பவாகலின், இங்ஙனங் கூறினர். ஆம் இரண்டும் அசைநிலை. 'ஒருகால் தெரியத் தெரியுந் தெரிவிலா தாரைத் தவறாகப் புணரின் அவரைப் பிரிய நோய் பிரியும்' என்றும் உரைக்கலாமேனும், எந்நிலைக்கணனும் பிரிதலென்பது கூடாமை மேல் நிறுத்தப்பட்டமையின் அது பொருந்தாது. 'பிரியப் பிரியு மாம் நோய்' என்றது, முற்கருத்தை எதிர்மறையானும் விளக்கிய படியாம். ௭

**248.** நன்னிலைக்கண் தன்னை நிறுப்பானும், தன்னை
நிலைகலக்கிக் கீழிடு வானும்,—நிலையினும்
மேன்மே லுயர்த்து நிறுப்பானும்,தன்னைத்
தலையாகச் செய்வானும் தான்.

---

* குறள், எக: ௩.

(பொ-ள்) நல் நிலைக்கண் தன்னை நிறுப்பானும்-சிறந்த நிலையில் தன்னை நிலைநிறுத்திக் கொள்வோனும், தன்னை நிலைகலக்கிக் கீழ் இடுவானும்-தனது முன் நிலையையுங் குலையச் செய்து தன்னைக் கீழ் நிலைக்கண் தாழ்த்திக்கொள்வோனும், மேன்மேல் உயர்த்து நிறுப்பானும் - தான் முன் நிறுத்திக்கொண்ட சிறந்த நிலையினும் மேன்மேல் உயர்ந்த நிலையில் தன்னை மேம்படுத்தி நிலைசெய்துகொள் வோனும், தன்னைத் தலையாகச் செய்வானும் - தன்னை அனைவரினுந் தலைமையுடையோனாகச் செய்துகொள்வோனும், தான் - தானேயாவன்.

(க - து) ஒருவனுக்குத் தன் அறிவு முயற்சியே எல்லாவற்றிற்குந் துணை.

(வி - ம்) "தத்தம் கருமமே கட்டளைக் கல்"* லாதலின், இங்ஙனங் கூறினார். நிலையினும் என்னும் உம்மை உயர்வு. உயர்த்து வானுமென்னாது உயர்த்து நிறுப்பானுமென்றார், உயர்நிலையை வருவித்துக் கொள்ளுதலோடு அவ்வுயர் நிலைக்கண் தன்னை வல் லமையாய் நிலைநிறுத்திக் கொள்வோனுமென்றற்கு; தன்னை என் பதை இதன்கண்ணும் ஒட்டிக்கொள்க.

249. கரும வரிசையாற் கல்லாதார் பின்னும்
பெருமை யுடையாருஞ் சேறல்—அருமரபின்
ஓதம் அரற்றும் ஒலிகடற் றண்சேர்ப்ப!
பேதைமை யன்ற தறிவு.

(பொ - ள்) அரு மரபின் ஓதம் அரற்றும் ஒலிகடல் தண் சேர்ப்ப - அரிய தன்மையையுடைய அலைகள் முழங்கும் முழக்கமிக்க கடலின் குளிர்ந்த துறைவனே! கரும வரிசையால் - தொழில் முறைமையினால், கல்லாதார் பின்னும் பெருமையுடையாரும் சேறல் பேதைமையன்று அது அறிவு - கல்வியறிவில்லாத மூடரையடுத்தும் கல்விப் பெருமையுடைய அறிஞரும் ஒழுகுதல், அறியாமை யன்று; அது காலம் இடம் முதலியவற்றிற் கேற்ப ஒழுகும் அறிவுடைமையாகும்.

* குறள், ருகூ : ரு.

(க - து) கல்லாதவரிடமும் காரியநிமித்தம் அளவாக ஒழுகிக்கொள்ளுதல் அறிவுடைமையாகும்.

(வி - ம்) கரும வரிசையால் என்றது, காரணங் கூறியபடி. உம்மைகள் இரண்டனுள் முன்னது இழிபிலும் பின்னது உயர்விலும் வந்தன. 'அருமரபின் கடல்' என்க. ஆழமும் அகலமும் வாய்ந்து உப்பு முத்து முதலிய அரும்பொருள்களுடைமையானும் உலக வொழுக்கத்துக்கு மழை முதலிய கொடைகளால் ஏதுவாயிருத்தலானும் கடலின் அருமரபு பெறப்படும்; "மகர வாரி வளம்"* என்றார் பிறரும். க

250. கருமமு முட்படாப் போகமுந் துவ்வாத்
தருமமுந் தக்கார்க்கே செய்யா—ஒருநிலையே
முட்டின்றி மூன்று முடியுமேல் அஃதென்ப
பட்டினம் பெற்ற கலம்

(பொ - ள்) கருமமும் உட்படா போகமும் துவ்வா தருமமும் தக்கார்க்கே செய்யா - பொருள்வரவுக் கேதுவான தொழின் முயற்சியினும் ஈடுபட்டு அதனால் இம்மைப் பயனாகத் தான் போகமுந் துய்த்து மறுமைப் பயனாகத் தகுதியுடையார்க்கே அறமுஞ் செய்து, ஒரு நிலையே முட்டின்றி மூன்றும் முடியுமேல் - இம்மூன்றும் ஒரு தன்மையாகவே பிறவியிற் கடைசி வரையிற் றடையின்றி நிறைவேறுமாயின், அஃது பட்டினம் பெற்ற கலம் என்ப - அப் பேறு, தன் பட்டினத்தை மீண்டு வந்தடைந்த வாணிகக் கப்பலை ஒக்கும் என்று அறிஞர் கூறுவர்.

(க - து) முயற்சியும் போகமும் அறமுமுடையனாய் வாழ்தலே அறிவுடைமையாகும்.

(வி - ம்) உட்படா முதலிய வினைகள் உடன்பாட்டின்கண் வந்தன. தக்கார், கல்வி யறிவு ஒழுக்கங்களாகிய தகுதியுடையோர், மூன்றும் ஒன்றுபோல் நடைபெறவேண்டுமென்றற்கு 'ஒருநிலையே' யென்றும், இடையில் ஊறுபடாமல் நடைபெறவேண்டுமென்றற்கு 'முட்டின்றி' யென்றுங் கூறினார். 'இடையிருள் யாமத்து எறிதிரைப் பெருங்கடல் உடைகலப் பட்டாங் கொழிந்தோர்'† பலராகலின், உவமை, அருமை புலப்படுத்தி நின்றது. ௧௦

* சிலப். க : ௧௨ அ. † மணிமே. ௧௧ : ௧௩—௨௦.

## உ௬. அறிவின்மை

இயற்கையறிவினை இல்லாமை என்பது பொருள்.

**251** **நுண்ணுணர் வின்மை வறுமை, அஃதுடைமை**
**பண்ணப் பணைத்த பெருஞ்செல்வம்;—எண்ணுங்கால்**
**பெண்ணவாய் ஆணிழந்த பேடி யணியாளோ,**
**கண்ணவாத் தக்க கலம்.**

(பொ - ள்) *எண்ணுங்கால் - ஆராயுமிடத்து; நுண் உணர்வு இன்மை வறுமை - ஒருவனுக்கு நுட்ப அறிவில்லாமையே வறுமையாவது; அஃது உடைமை பண்ணப் பணைத்த பெருஞ் செல்வம் - அந் நுட்ப அறிவினை உடையவனாயிருத்தலே அவனுக்கு மிகப் பெருகிய பெருஞ் செல்வமாகும்; பெண் அவாய் ஆண் இழந்த பேடி அணியாளோ கண் அவாத் தக்க கலம் - மற்றுப் பெண்ணியல்பு மிக்கு ஆணியல்பு நீங்கிய பேடியும் கண்கள் விரும்பத்தக்க அழகிய அணிகலன்களை அணிந்து கொள்ளுதலுண்டன்றோ! அதனையொத்ததே அறிவிலார் ஏனைச் செல்வ முடையராயிருந்து மகிழ்தலென்க.*

(க - து). *நுண்ணுணர்வில்லாமை ஏனை யெவையிருப் பினும் இல்லாமையையே தரும்*

(வி - ம்) *'சின்னஞ் சிறிய' 'பென்னம் பெரிய' என்றாற் போற், 'பண்ணப் பணைத்த' வென பதுங் கொள்க. ஆண் தன்னியல்பு குறைந்து பெண்தன்மை மிக்கபோது பேடி யெனப் படும்; பெண் அணிதற்குரிய அணிகலன்களைப் பேடியும் அணிந்து வீண் மகிழ்வு கொள்ளுதலை யொத்ததே நுண்ணுணர்வினர் அடைந்து பயன்பெறுதற்குரிய செல்வத்தை அஃதில்லாதார் பெற்று வீணுக்குதலென்க. 'பேடி அணியாளோ' என்னும் முடிபு, "உயர்திணை மருங்கிற் பால்பிரிந் திசைக்கும்"* என்பதனாற் கொள்ளப் படும்.* க

**252.** **பல்லான்ற கேள்விப் பயனுணர்வார் பாடழிந்து**
**அல்ல லுழப்ப தறிதிரேல்—தொல்சிறப்பின்**
**நாவின் கிழத்தி யுறைதலாற் சேராளே,**
**பூவின் கிழத்தி புலந்து.**

* தொல். கிளவி. ௪.

(பொ - ள்) பல் ஆன்ற கேள்விப் பயன் உணர்வார் பாடு அழிந்து அல்லல் உழப்பது அறிதிரேல்-பல நிறைந்த கேள்விகளால் உண்டாகும் பயனைத் தமது பழக்கத்தில் நுகர்ந்து இன்புற்றுவரும் அறிஞர்கள் ஒரோவொருகால் உலகில் தம் பெருமை அழிந்து வருந்துவதற்குக் காரணம் நீவிர் தகுதியாக அறிவீராயின்; தொல்சிறப்பின் நாவின் கிழத்தி உறைதலால் சேராளே பூவின் கிழத்தி புலந்து - அது, பழமையாகத் தொடர்புற்றுவருஞ் சிறப்பினையுடைய நாமகள் வாழ்ந்து வருவதால் பூமகள் ஊடல்கொண்டு அவர்களிடம் சேரமாட்டாள் என்பதேயாம்.

(க - து) கல்வி கேள்விகளிற் பழகிவரும் உள்ளம் பொருள் நினைவுகள் படிதற்கு இடம்பெறாமையின், ஒரோவொருகால் அவ்வுளமுடையோர் வறியராயிருப்பது இயல்பு.

(வி - ம்) 'கேள்விப் பயன்' என்றார், செல்வத்தில் அத்தகைய பயனில்லாமையின். அறிவு உயிரைப் பற்றித் தொடர்ந்து வருதலின், நாமகட்குத் தொன்மை கூறப்பட்டது. கல்வி கேள்விகளில் விரைந்தோடும் நினைவு செல்வத்திற் செல்லாமையின், 'சேராளே பூவின் கிழத்தி' யெனறார். இமயமலையில் மரகதப் பாறையில் பதுமை என்னுங் கயத்திற் பொற்றாமரையில் திருமகள் சிறப்பின் உறைவள் என்பது, 'அருமணி மரகதத் தங்கண் நாறிய எரிநிறப் பொன்னிதழ் ஏந்து தாமரைத் திருமகள்'* என்னுஞ் சிந்தாமணியினாலும் அதனுரையினாலும் அறியப்படுதலின் திரு பூவின் கிழத்தியாதல் பெறப்படும். உ

**253.** கல்லென்று தந்தை கழற அதனையோர்
சொல்லென்று கொள்ளா திகழ்ந்தவன்,—மெல்ல
எழுத்தோலை பல்லார்முன் நீட்ட விளியா
வழுக்கோலைக் கொண்டு விடும்.

(பொ - ள்) கல் என்று தந்தை கழற அதனை ஓர் சொல் என்று கொள்ளாது இகழ்ந்தவன் - இளமையில் தன் தந்தை 'படி' என்று இடித்துக் கூற அதனை ஒரு நற்சொல் என்று ஏற்காமற் பொருள்செய்யாதுவிட்டவன்,

* சிந். க : கஙச.

மெல்ல எழுந்தோலை பல்லார்முன் நீட்ட விளியா வழுக்கு ஓலைக் கொண்டுவிடும் - பின்பொருகால், எழுத்தெழுதிய கடிதமொன்றைப் பலர் முன்னிலையில் ஒருவர் இதனைப் படியுமென்று மெல்லத் தன் கையிற் கொடுக்கத் தனக்கு அது மாட்டாமையால் நாணத்தாற் சினந்து கூவி மானத்தால் ஓவென்று அழுதுவிடுவான்.

(க - து) அறிவின்மை பலர் முன்னிலையில் மானக் குறைவைத் தரும்.

(வி - ம்) 'மெல்ல நீட்ட'வென்றார், அம்மூடவன் சினத்தை யெழுப்புதலின். விளியா, உடன்பாட்டுவினை. வழுக்கு ஓல் - குறைவினால் உண்டாகும் அழுகை யொலி; அவ்வொலியைக் கொண்டுவிடும் என்க, ஓல் ஒலியென்னும் பொருட்டாதல் " அருவி மருங்கு ஓலுறத்த"* என்பதிற் காண்க. ௩

254. கல்லாது நீண்ட ஒருவன் உலகத்து
நல்லறி வாள ரிடைப்புக்கு—மெல்ல
இருப்பினும நாயிருந் தற்றே, இராஅது
உரைப்பினும் நாய்குரைத் தற்று

(பொ - ள்) கல்லாது நீண்ட ஒருவன் - கல்வியறிவு பெறாமல் வளர்ந்துவிட்ட ஒருவன், உலகத்து நல்லறிவாளரிடைப் புக்கு மெல்ல இருப்பினும் நாய் இருந்தற்று - உலகத்தில் உயர்ந்த அறிவாளிகளின் அவையில் நுழைந்து இருக்குமிடந் தெரியாமல் இருந்தாலும் அந்நிலை ஒரு நாய் இருந்தாற் போன்ற தன்மையையுடையதாகும்; இராஅது உரைப்பினும் நாய் குரைத்தற்று - அவ்வாறு அடக்கமாக இராமல் ஏதானும் ஒன்று வாய் திறந்து கூறினும் அது நாய் குரைத்தாற் போன்ற தன்மையுடையதாகும்.

(க -து) கல்வியறிவு பெறாதோர் நாயின் நிலையில் வைத்துக் கருதப்படுவர்.

(வி - ம்) நீண்ட என்றார், ஓரறிவுயிர்போற் கருதி அதன் இழிவு தோன்ற. அறிவாளரின் அறிவொளிமுன் தன் வலியடங்கி அடக்கமுடையான்போல் திகைத்திருத்தலின், 'மெல்ல இருப்

* இறைய. உ. உரை.

யினும்' என்றார். நாய் என்றது, இழிவு கருதி; "நவையின் அலை"* என்னுமிடத்து நச்சினார்க்கினியர் "நாயுடம்பினீநக" என உரைத்த உரையினால் இதனை யறிக. ௪

**255.** புல்லாப்புன் கோட்டிப் புலவ ரிடைப்புக்குக்
கல்லாத சொல்லுங் கடையெல்லாம்;—கற்ற
கடாஅயினும் சான்றவர் சொல்லார் பொருண்மேல்
படாஅ விடுபாக் கறிந்து.

(பொ - ள்) புல்லாப் புன்கோட்டிப் புலவரிடைப் புக்குக் கல்லாத சொல்லும் கடையெல்லாம் - அறிவு நிரம்பாத கீழ்மக்களெல்லாரும் அவ்வாறே மெய்யறிவோடு பொருந்தாத புல்லறிவுக் கூட்டத்தவரான தாழ்ந்த புலவர் நடுவிற் புகுந்து தாம் தெளிவாகக் கல்லாத கருத்துக்களை யெல்லாம் ஆரவாரமாக விரித்துரைப்பர்; கற்ற கடாயினும் சான்றவர் சொல்லார் பொருள்மேல் படா விடுபாக்கு அறிந்து - ஆனால் அறிவு நிரம்பிய பெருமக்களோ, தாம் கற்ற கருத்துக்களைப் பிறர் வினவினாலும் அந் நுண்பொருள்கள்மேல் அவரறிவு கூரிதாகச் செல்லமாட்டாமல் விட்டுப் போதல் தெரிந்து அவற்றைக் கூறாமல் அடக்கமாயிருப்பர்.

(க - து) அறிவின்மையுடையார் அறிவுடையாரைப் போல் அடக்கமாயிரார்.

(வி - ம்) புலவரில் தாழ்தரமானவர், ஈண்டுப் 'புல்லாப் புன்கோட்டிப் புலவ'ரெனப்பட்டார். கடையெல்லாம் - கீழ்மக்களெல்லாரும்; சொல்லும், முற்று. விடுபாக்கு, தொழிற் பெயர்ப் பொருளில் வந்தது, "அஞ்சுதும் வேபாக்கறிந்து"† என்புழிப் போல. 'படா விடுபாக்'கென்றமையான், பொருள் நுண்பொருளெனப் பெறப்பட்டுச் சான்றவர்தம் நுண்ணறிவைப் புலப்படுத்தா நின்றது. ரு

**256.** கற்றறிந்த நாவினர் சொல்லார்தம் சோர்வஞ்சி;
மற்றைய ராவார் பகர்வர்; பனையின்மேல்
வற்றிய ஓலை கலகலக்கும், எஞ்ஞான்றும்
பச்சோலைக் கில்லை யொலி.

* சிந். ௪ : ௮௩. † குறள், ௧௧௩ : ௮.

(பொ - ள்) கற்றறிந்த நாவினர் சொல்லார் தம் சோர்வு அஞ்சி - கற்றுத்தெளிந்த நாவன்மையினையுடைய மேலோர் தம் தவறுதலுக் கஞ்சி மிகுதியாகப் பேசார்; மற்றையராவார் பகர்வர் - ஆனால், கற்றறிவில்லா ஏனையராவோர அவ்வச்சமின்றி யாதானும் பேசிக்கொண்டிருப்பர்; பனையின்மேல் வற்றிய ஓலை கலகலக்கும் எஞ்ஞான்றும் பச்சோலைக்கில்லை ஒலி - பனைமரத்தில் நீர்வற்றிய உலர்ந்த ஓலை கலகலவென்று ஓசையிட்டபடி யிருக்கும், ஆனால் நீரபபசையோடு கூடிய பச்சை ஓலைக்கு எப்போதும் ஒலி இல்லையாதல் காண்க.

(க - து) அறிவில்லாதார் எப்போதும் ஆரவாரித்துக் கொண்டிருப்பர்.

(வி - ம்) சொல்வன்மை யுடையாரே சொல்வார் என்றற்கு நாவினரென்று விதந்தார். பனையின்மேல் என்றது, பனையில் என்றற்கு. இஃது எடுத்துக்காட்டுவமை. கலகலக்கும் என்றது இரட்டைக் கிளவி.* ௬

257 பன்றிக்கூழ்ப் பத்தரில் தேமா வடித்தற்றால்
நன்றறியா மாந்தர்க் கறத்தா றுரைக்குங்கால்;
குன்றின்மேற் கொட்டுந் தறிபோல் தலைதகர்ந்து
சென்றிசையா வாகுஞ் செவிக்கு.

(பொ - ள்) பன்றிக் கூழ்ப் பத்தரில் தேமா வடித்தற்று நன்று அறியா மாந்தர்க்கு அறத்தாறு உரைக்குங்கால் - நன்மையறியாத கீழ்மக்கட்கு அறமுறைமை அறிவுறுக்குமிடத்து அது, பன்றிக்குக் கூழ்வார்க்குந் தொட்டியில் தேமாம்பழத்தைச் சாறு பிழிந்தாற்போல் தகுதியற்றதாகும; குன்றின்மேல் கொட்டுந் தறிபோல் தலை தகர்ந்து சென்று இசையாவாகும் செவிக்கு - அன்றியும்,ஒரு மலைப பாறையின்மேல் அறையப்படும மரததாற செய்யபபட்ட முளைக்குச்சி நுனி சிதைநது அதனுள் இறங்கிப் பொருந்தாமைபோல அவ்வறவுரையும் அவர் செவிக்கு நுழைந்து பொருந்தாதனவாகும்.

* தொல். கிளவி. ௪௮.

(க - து) அறிவில்லாதார் அறவுரைகள் ஏற்று ஒழுகும் வாய்ப்பில்லாதவராவர்

(வி - ம்) தேமா, இன்சுவை மிக்க மாங்கனியின் வகை; முதலில் தகுதியில்லாமை கூறிப் பின் பயன்படாமையுங் கூறினார், குன்றின்மேலென்றது, கல்லிலென்னும் பொருட்டு. தறி, துண்டாக நறுக்கியெடுக்கப்பட்ட மூளைக்குச்சி, அறச்சுவை அறியாது, மறச்சுவை பயின்றிருக்கும் மனத்தினியல்பும், அறவுரைகள் ஏலாது பாறைப்பட்டுக் கிடக்கும் செவிகளின் வன்மையும் ஈண்டு நன்கு விளக்கப்பட்டன. குழிந்த இடம் பத்தரெனப்படுமாகலின்; ஈண்டுத் தொட்டிக்காயிற்று: "நீர்வாய்ப் பத்தல்"* என்பதுங் கருதுக. எ

**258** பாலாற் கழீஇப் பலநாள் உணக்கினும்
வாலிதாம் பக்கம் இருந்தைக் கிருந்தன்று;
கோலாற் கடாஅய்க் குறினும் புகலொல்லா
நோலா உடம்பிற் கறிவு.

(பொ - ள்) பாலாற் கழீஇப் பலநாள் உணக்கினும் வாலிதாம் பக்கம் இருந்தைக்கு இருந்தன்று - பலநாள் பாலினாற் கழுவி உலர்த்தினாலும் வெண்ணிறம் உடைய தாம் நிலைமை கரிக்கு இல்லை; கோலால் கடாய்க் குறினும் புகல் ஒல்லா நோலா உடம்பிற்கு அறிவு - அவ்வாறே, கோலால் அதட்டிக் குத்திக் கூறினும் புண்ணியஞ் செய்யாத உடம்பில் அறிவு ஏறாது.

(க - து) அறிவில்லார் புண்ணியமில்லாதவராதலின், அவர் திருந்துதல் அருமையாயிருக்கும்.

(வி - ம்) உவமையால் நன்முறையாற் றிருத்துதலும் பொருளால் அச்சுறுத்தித் திருத்தலும் பெறப்பட்டன. இருந்தை என்பது கரி; இருமை கருமையாகலின் அப்பெயர் பெற்றது. இருந்தன்று, எதிர்மறைப் பொருட்டு. குறினும், குற்றினும்; குத்தினும் என்க. புகலொல்லா, ஒரு சொல். கீழ்மக்களின் இழிவு கருதி அவரை 'நோலா உடம்'பென்று விதந்தார். அ

**259.** பொழிந்தினிது நாறினும் பூமிசைதல் செல்லாது
இழிந்தவை காமுறூஉம் ஈப்போல்,—இழிந்தவை
தாங்கலந்த நெஞ்சினார்க் கென்றுகும், தக்கார்வாய்த்
தேன்கலந்த தேற்றச்சொல் தேர்வு.

* பதிற். கூ : உ.

(பொ - ள்) பொழிந்து இனிது நாறினும் பூமிசை தல் செல்லாது இழிந்தவை காமுறூஉம் ஈப்போல் - தேன் சொரிந்து இனிது மணந்தாலும் மலரை உண்ணுதற்குச் செல்லாமல் இழிந்த பொருள்களையே விரும்பும் ஈயைப் போல், இழிந்தவை தாம் கலந்த நெஞ்சினார்க்கு என்னாகும் தக்காரவாய்த் தேன் கலந்த தேற்றச் சொல தேர்வு - இழிந்த குணங்களே பொருந்திய மனமுடையார்க்குத் தகுதியுடையார் வாயினின்று வரும் இனிமை பொருந்திய தெளிந்த அறிவுரைகளின் தெரிவுநிலை என்ன பயனைத் தரும்?

(க - து) அறிவில்லார் இழிந்த இயல்புகளையே நாடுவர்

(வி - ம்) பூமிசைதலென்பது தேன் மிசைதல். "பூவுண் வண்டு"* என்புழிப்போல. தாம், சாரியை. நெஞ்சினார்க்கு, புலலறிவினார்க்கு; தெரிந்தெடுக்கப்பட்ட தகுதிநிலை ஈண்டுத் தேர்வெனப் பட்டது. சொற்களுள் இவை உயாவெனறு சிறந்தோரால் தெரிந்தெடுக்கப்பட்ட அவற்றின் தகுதிநிலை, இழிந்தவை கலந்த நெஞ்சினாககு யாது பயனறுமு என்பது பொருள். ௯

260 கற்றா ருரைக்குங் கசடறு நுண்கேள்வி
பற்றாது தன்னெஞ் சுதைத்தலால்,—மற்றுமோர்
தன்போ லொருவன் முகநோக்கித் தானுமோர்
புன்கோட்டி கொள்ளுமாம் கீழ்.

(பொ - ள்) கற்றார் உரைக்கும் கசடு அறு நுண் கேள்வி பற்றாது தன் நெஞ்சு உதைத்தலால் - கல்வியறிவு பெற்றோர் தெரிந்து சொல்கின்ற குற்றமில்லாத நுண்ணிய கேள்விப் பொருளைக் கடைப்பிடியாமல் தனது மனம் இகழ்ந்து தள்ளிவிடுதலால், மற்று தன்போல் ஒருவன் முகம் நோக்கித் தானும் ஓர் புன்கோட்டி கொள்ளும் கீழ் - மற்றுக் கீழ்மகன், தன்போற் கீழ்மக னொருவன் முகத்தைப் பார்த்துத் தானும் உரையாடுதற்கு ஒரு புல்லிய அவையை அமைத்துக்கொள்வன்.

* சிந். கக: ௫௩௫.

(க - து) அறிவில்லாதவர் அறிவில்லாதவரோடு கூடியே வாழ்நாளை வறிதாக்குவர்.

(வி - ம்) மற்று, வினைமாற்று. ஓர், அசை. பேரறிஞர் தம் அறவுரைகளை அறிவுறுத்துதற்கு அவை கூட்டிக் கோடல்போல இவனும் ஓர் புன்கோட்டி கொள்ளும் என்றார்; பலா சேராமையின் அதன் இழிவு தோன்ற, 'ஒருவன முகநோக்கி' எனப்பட்டது. "வெள்ளைக் கோட்டியும் விரகினில் ஒழிமின்"* என்றார் பிறரும். ௧0

---

## உஎ. நன்றியில் செல்வம்

யார்க்கும் நன்மை பயவாத செல்வம என்பது பொருள்.

**261.** அருகல தாகிப் பலபழுத்தக் கண்ணும்
பொரிதாள் விளவினை வாவல் குறுகா;
பெரிதணிய ராயினும் பீடிலார் செல்வம
கருதுங் கடப்பாட்ட தன்று.

(பொ - ள்) அருகலதாகிப் பல பழுத்தக் கண்ணும் பொரிதாள் விளவினை வாவல் குறுகா - குறையாததாகிப் பல பழங்கள் பழுத்தாலும் பொரிந்த அடி மரத்தையுடைய விளாமரத்தை வௌவால்கள அணுகமாட்டா; பெரிது அணியராயினும் பீடு இலார் செல்வம கருதும் கடப்பாட்ட தன்று - அதுபோல, மிக அருகிலுள்ளவராயினும் பெருந் தன்மையிலலாதவரது செலவம, தசசோரால், பயன்படுஞ செல்வமாகக் கருதப்படும முறைமையுடையதன்று.

(க - து) பெருந்தன்மையில்லாதவரது செல்வம் நலம் பயவாது.

(வி - ம்) அவ்வப்போதும் குறையாததாகி என்றற்கு 'அரு கலதாகி' என்றார். அருகாமை குறையாமைப் பொருட்டாதல், "பருகுவன்ன அருகா நோக்கமொடு"† என்பதனாற் காண்க. மேலே, ஓடும் முள்ளுமிருத்தலின, வௌவாற்குப் பயன்படா வாயின. பெரிதணிமை உவமைக்கும, அருகாமையும் பன்மையும் பொருளுக்கும உரைத்துக்கொள்க. ஒப்புரவினாலேயே பீடுண்டாதலின், 'பீடிலார செல்வம்' என்றார். ௧

---

* சிலப் ௯0 : ௧௬அ. † பொருந. எஎ.

**262.** அள்ளிக்கொள் வன்ன குறுமுகிழ வாயினும்
கள்ளிமேற் கைந்நீட்டார் சூடும்பூ அன்மையால்;
செல்வம் பெரிதுடைய ராயினும் கீழ்களை
நள்ளார் அறிவுடை யார்.

(பொ - ள்) *அள்ளிக்கொள்வு அன்ன குறுமுகிழ வாயினும் கள்ளிமேல் கைநீட்டார் சூடும்பூ அன்மையால் - அள்ளிக்கொள்ளுதல் போல, நிறையச் சிறிய அரும்புகளுடையனவாயினும் அவை சூடும் மலர்களல்லாமையால் கள்ளிச்செடியின்மேல் யாரும கை நீட்டமாட்டார்; செல்வம் பெரிதுடையராயினும் கீழ்களை நள்ளார் அறிவுடையார் - அதுபோலச் செல்வம மிக உடையவர்களானாலும அது நன்மை பயவாமையின் கீழ்மக்களை அறிவுடையார் அணுகமாட்டார்.*

(க - து) *கீழ்மக்களின் செல்வம் அறிஞர்களால் மதிக்கப்படாத, நலம் பயவாச் செல்வமாகின்றது.*

(வி - ம்) *கவர்ச்சியாகவும் மிகுதியாகவும் அரும்பெடுத்திருத்தலின், 'அள்ளிக் கொள்வன்ன' என்றார்; "அள்ளிக் கொள்வற்றே பசப்பு"* என்றார் நாயனாரும். கீழ்கள், அரிதிற் கிடைத்த செல்வத்தைத் தகுதியாகப் பயன்படுத்திக்கொள்ளும் பீடு இலாதார்.* உ

**263** மல்கு திரைய கடற்கோட் டிருப்பினும்,
வல்லூற் றுவரில் கிணற்றின்கட் சென்றுண்பர்;
செல்வம் பெரிதுடைய ராயினும், சேட்சென்றும்
நல்குவார் கட்டே நசை.

(பொ - ள்) *மல்கு திரைய கடற்கோட்டு இருப்பினும் வல் ஊற்று உவர்இல் கிணற்றின்கட் சென்று உண்பர் - பலவாக நிறைந்த அலைகளையுடைய கடற்கரையில் தாம் தங்கியிருந்தாலும் வலிதின் நீரூறுதலுடைய உவர்ப்பில்லாத கிணற்றிற் சென்று மக்கள் நீர் பருகுவர்; செல்வம் பெரிதுடையராயினும் சேண் சென்றும் நல்குவார்*

* குறள், ககக : எ.

கட்டே நசை - கீழ்மக்கள் அருகாமையே செல்வம் மிக உடையவராயினும் தக்கோரின் பொருள் விருப்பம் மிகத் தொலைவு சென்றும் உதவுவார்கண்ணதேயாகும்.

(க - து) செல்வ முடையோர் கீழோராயின், தக்கோர்க்கு அது பயன்படுதலில்லை.

(வி - ம்) கடலில் இயல்பாக மிக்க நீரிருத்தல்போ லன்றிக் கிணற்றிற் சிறுகச்சிறுக முயற்சியோடு நீர் வந்து கூடுதலின், 'வல்லூற்றுக் கிணறு' எனப்பட்டது. இயல்பாகப் பெருஞ்செல்வம் பெற்றிருத்தலின்றித் தாமே தம் முயற்சியாற் சிறுகச சிறுகப் பொருளீட்டும் நிலையினராயினும், அவர் நல்குவோராயின் அவரிடமே தக்கோர் உள்ளஞ் செல்லுமென்பது கருதது. நல்குவாரென்றார், நல்கும் பேரினிமைக் குணமுடையா ரென்றற்கு. உண்பரென்றது பொதுவினை. ஏகாரம்; தேற்றம். ௩

**264.** புணர்கடல்சூழ் வையத்துப் புண்ணியமோ வேறே;
உணர்வ துடையா ரிருப்ப—உணர்விலா
வட்டும் வழுநுணையும் போல்வாரும் வாழ்வாரே,
பட்டும் துகிலும் உடுத்து.

(பொ - ள்) புணர் கடல் சூழ் வையத்துப் புண்ணியமோ வேறு - கடல் நாற்புறமுஞ் சூழ்ந்து பொருந்தியிருக்கும் உலகத்தில் நல்வினை என்பது தனி நிலைமை யுடையது; உணர்வதுடையார் இருப்ப உணர்விலா வட்டும் வழுதுணையும் போல்வாரும் பட்டும் துகிலும் உடுத்து வாழ்வர் - ஏனென்றால், நல்லன உணர்ந்தொழுகுதலுடையார் வளமின்றியிருக்க, அவ் வுணர்வொழுக்கமில்லாரான கறிமுள்ளியுங் சத்தரியும் போன்ற கீழோர் பட்டும் உயர்ந்த ஆடைகளும் உடுத்துக்கொண்டு வாழ்வுடையரா யிருக்கின்றனர்.

(க - து) தக்க உணர்வில்லாதவர் நல்வினைவயத்தாற் செல்வமுடையவராயினும், அச் செல்வம் தக்கோராற் கண்ணியமாகக் கருதப்படாத நிலையினை யுடையது.

(வி - ம்) 'கிழவர் இன்னோர் என்னாது பொருள்தான் பழவினை மருங்கின் பெயர்பு பெயர்பு உறையு'மாகலின்,* அப் புண்ணி

* கலித். உக : கO-௪.

யத்துக்கும் அறிவொழுக்கங்கட்குந் தொடர்பில்லை யென்பார், இவ் 'வையத்துப் புண்ணியமோ வேறு' என்றார். ஊக்குறைவால் ஆரவாரமின்றி யிருக்க வென்னும் பொருட்டு, 'இருப்ப' என்றார். வட்டும் வழுதுணையுஞ் சிறுமை தோன்ற நின்றன. போல்வாரு மென்னும் உபமை, அசை. முன் நல்வினையினாற் செல்வமுடையவ ராயினும் இப் பிறவியில் மதிக்கத்தக்க நற்சாலபு ஏது மின்மையின், அச் செல்வம் நன்மை பயவாச செல்வமாயிற்றென்பது கருத்து. வருஞ் செய்யுளும் இப் பொருட்டு. ௬

**265.** நல்லார் நயவர் இருப்ப நயமிலாக்
கல்லார்க்கொன் றாகிய காரணம்,—தொல்லை
வினைப்பய னல்லது வேனெடுங் கண்ணாய்!
நினைப்ப வருவதொன் றில்.

(பொ - ள்) நல்லார் நயவர் இருப்ப நயமிலாக் கல் லார்க்கு ஒன்று ஆகிய காரணம் - உயர்ந்த அறிவு செயல்க ளுடையாரும் இனியருமான மேலோர் உலகத்தில் வள மின்றியிருக்க, அவ்வினிமையுங் கல்வியறிவுமில்லாக் கீழோர்க்கு ஒரு செல்வநிலை உண்டான காரணம், தொல்லை வினைப்பயன் அல்லது வேல் நெடு கண்ணாய், நினைப்ப வருவ தொன்று இல் - வேற்படைபோன்ற நீண்ட கண்களை யுடைய மாதே! பழைய நல்வினையின் பயனேயல்லது வேறு ஆய்ந்து துணிதற்குரிய காரணம் இல்லை.

(க - து) நற்குண நற்செயல்களில்லார் செல்வரா யிருப்பினும், சான்றோர் அதனை முன்வினைப் பயனென்று கருதி மதியாது செலவர்

(வி - ம்) தம் இயல்பில் நல்லராதலோடு பழகுதற்கும் இனிய ரென்றற்கு, நயவரென்றுங் கூறினார். ஒன்றென்று சுட்டாது சென்றார், அது மதிக்கப்படாமையின். ஆராய்ந்து காணத்தக்க அத்தனை பெரிய காரணம் யாதுமில்லை யென்றற்கு, 'நினைப்ப வருவதொன்றில்' என்று மேலும் விதந்துரைக்கப்பட்டது. தொல்லை வினைப்பய னென்றது, காரணந் தெரிவித்தபடி; "தீதில் வினை யினால் நந்துவர் மக்களும்"* என்றார் பிறரும். ௫

* நான்மணிக். சக.

266. நாருத் தகடேபோல் நன்மலர்மேற் பொற்பாவாய் !
நீருய் நிலத்து விளியரோ ;—வேருய
புன்மக்கள் பக்கம் புகுவாய்நீ பொன்போலும்
நன்மக்கள் பக்கம் துறந்து.

(பொ - ள்) நன் மலர் மேல் பொன் பாவாய்-சிறந்த தாமரை மலரின்மேல் வீற்றிருக்கும் பொன்னுலான பாவையை ஒத்த திருமகளே ! நீருய் நிலத்து விளியர் - நீ சாம்பராய் வெந்து இவ்வுலகத்தில் அழிந்துபோகக் கடவாய் ; ஏனென்றால் ; நீ பொன்போலும் நன்மக்கள் பக்கம் துறந்து நாருத் தகடே போல் வேருய புன்மக்கள் பக்கம் புகுவாய் - பொன்போல் மதிக்கப்படுதற்குரிய மேன்மக்களின் பக்கம் நீங்கி அவர்க்கு முற்றிலும் இயல்பில் வேறுன கீழ்மக்களின் பக்கம் மணத்தலில்லாத புறவிதழைப்போற் சேர்ந்து நீ சூழ்ந்து நிற்பாயாதலின்.

(க - து) கீழ்மக்களிடம் திரண்டிருக்குஞ் செல்வம் இருப்பதும் இல்லாததும் ஒன்றே.

(வி - ம்) நாருத் தகடே போற் புகுவாய் என்க. நல்லோரர் வருந்துதலின் மிகுதியை இச் செய்யுள் பழித்துரை கூறுமுகமாக நன்கு விளக்கிற்று. விளியியர் என்னும் வியங்கோள் விளியர் என நின்றது. உணர்வில்லாரிடம் செல்வம் சேருங்கால் அது நன்றியில் செல்வமாய் மணமற்றுப் போதலாலும், புறவிதழ் மலரைச் சூழ்ந்து அதனைக் காத்து நிற்றல்போற் செல்வம் அவ்வுணர்வி லாரைச் சூழ்ந்து திரண்டு காத்து நிற்றலாலும் 'நாருத் தகடேபோற் புகுவாய்' என்ருர். மூன்றும்* இச் செய்யுட்கருத்து வந்தது. சு

267. நயவார்கண் நல்குரவு நாணின்று கொல்லோ ;
பயவார்கட் செல்வம் பரம்பப் பயின்கொல் ;
வியவாய்காண் வேற்கண்ணுய் இவ்விரண்டும் ஆங்கே
நயவாது நிற்கு நிலை.

(பொ - ள்) நயவார்கண் நல்குரவு நாணின்றுகொல் - தாழ்ந்தொழுகி இரவாத நன்மக்கள்பால் உள்ள வறுமைக்கு

* நாலடி. உஎ : ச.

வெட்கமில்லைபோலும்; பயவார்கண் செல்வம் பரம்பப் பயின்கொல் - பிறர்க்குப் பயன்படுதலில்லாத புன்மக்களிடம் செல்வம் பரவுதற்கு அது பிசின்போலும்; வியவாய் காண் வேற் கண்ணாய் இவ்விரண்டும் ஆங்கே நயவாது நிற்கும் நிலை - வேற்படையை ஒத்த கண்களையுடைய பெண்ணே! வறுமையும் செல்வமுமென்னும் இவ்விரண்டும் அவ்விடங்களில் இனிமைப்படாது நிற்கும் இயல்புக்கு நீ வியப்படைவாய்.

(க - து) கீழ்மக்களின் செல்வம் இனிமைப்படாது.

(வி - ம்) நயவாா, எதிர்மறை. பயின் பிசினுதல், "பல் கிழியும் பயினும"* என்பதனுனு காண்க. இனிமைப் படாமையோடு நிலையாகவும் உள்ள தன்மை வியப்பிற்குரியதாகலின், 'வியவாய்காண்' என்றார். வியவாய், ஈண்டு உடன்பாடு. காண், முன்னிலையசை.  எ

268. வலவைக ளல்லாதார் காலாறீ சென்று
கலவைகள் உண்டு கழிப்பர்;—வலவைகள்
காலாறுஞ் செல்லார் கருனையால் துய்ப்பவே
மேலாறு பாய விருந்து.

(பொ - ள்) வலவைகள் அல்லாதார் கால் ஆறு சென்று கலவைகள் உண்டு கழிப்பர் - நாணிலிகளல்லாத நல்லோர் தம் வறுமையால் ஊர் விட்டு ஊர் கால்வழி நடந்துபோய் அங்கங்கும் கிடைக்கும் இழிந்த கலவையுணவுகள் உண்டு காலங் கழிப்பர்; வலவைகள் கால் ஆறுஞ் செல்லார் கருனையால் துய்ப்ப மேல் ஆறு பாய விருந்து - ஆனால் நாணிலிகளான புல்லியோர் கால் வழியும் நடந்து செல்லாராய்த் தம்மேல் நெய் பால் தயிரென்னும் ஆறுகள் பாய்ந்தொழுகக் கறிகளோடு விருந்துண்டு இன்புறுவர். என்னே இவ்வுலகியற்கை!

(க - து) கீழ்மக்களின் செல்வம் வீண் களியாட்டங்கட்கே செலவாகும்.

* சிந். க : உ0கூ.

(வி - ம்) பலரிடமிருந்து சிறுகச் சிறுகக் கிடைக்கும் பல்வேறு உணவு கறிகளை ஒருங்கு சேர்க்க அஃது ஒரு வேளை யுணவுக்குப் போதியதாதலின், கலவையுண வெனப்பட்டது; காலாறுஞ் செல்லா ரெனவே ஊர்திகளில் இறுமாந்து செல்வரென்பது பெறப்படும். கருணையாலென்னும் ஆலுருபு "பெண்டகையால் பேராமக் கட்டு"* என்புழிப்போல உடனிகழ்ச்சிப்பொருளில் வந்தது. அ

269 பொன்னிறச் செந்நெற் பொதியொடு பீள்வாட,
மின்னொளிர் வானங் கடலுள்ளுங் கான்றுகுக்கும்;
வெண்மை யுடையார் விழுச்செல்வ மெய்தியக்கால்
வண்மையும் அன்ன தகைத்து

(பொ - ள்) பொன் நிறச் செந்நெல் பொதியொடு பீள் வாட மின் ஒளிர் வானம் கடலுள்ளும் கான்று உகுக்கும் - பொன்னின் நிறத்தையுடைய உயர்ந்த செந்நெல் என்னும் பயிர், மேல் மூடிய தாளுடன் உள்ளிருக்குங் கருவும் வாட, மின்னல் மின்னும் மேகம் கடலுள்ளும் நீர் சொரிந்து பெய்யும்; வெண்மையுடையார் விழுச் செல்வம் எய்தியக்கால் வண்மையும் அன்ன தகைத்து - அறியாமை யுடைய புன்மக்கள் சிறந்த செல்வத்தை அடைந்தால் அவர் கொடைத்திறமும் அதுபோன்ற இயல்பினதேயாகும்

(க - து) புன்மக்கள் செல்வம் தேவையற்றோர்க் கெல்லாங் கொடுக்கும்படி நேர்ந்து வீணாகச் செலவழியும்.

(வி - ம்) கடலுள்ளு மென்றார் களருள்ளு மென்றற்கு. மேகம் பயிரின்மேற் செல்லும்போது நீரை வெளிப்படுத்தாமற் கடலிலுங் களரிலுஞ் செல்லுங்கால் வீணாய் வெளிப்படுத்துதலின், உகுக்கும் என்னாது கான்றுகுக்கும் எனறார்; கான்றல், வெளிப்படுத்துதல். "இனமையரிதே வெளிறு"† என்புழிப்போல, வெண்மை அறியாமை யுணர்த்திற்று. பெய்தற்குரிய தகுதியான இடத்திற் பெய்யாமற் காற்றால் ஈர்ந்து அலைப்புண்ட விடத்தே மேகம் நீரைக் கக்கி விடுதலின், அவ்வாறே உதவுதற்குரிய தகுதியாளர் இன்னாரென் றறியாமல் தம்மை வன்கண்மை செய்யுந் தறுகணாளர்க்கும் வீணர்க்குமே கயவர் தமது செல்வத்தை உகுத்துவிடுவா ரென்பார், 'வண்மையும் அன்ன தகைத்து' என்றார். "ஈர்ங்கை விதிரார் கயவர் கொடிறுடைக்குங் கூன்கைய ரல்லா தவர்க்கு"‡ என்றார் நாயனாரும். கூ

* குறள், கoகூ : ரு. † குறள் : ருக : ரு. ‡ குறள் : கoஅ : எ.

**270.** ஓதியும் ஓதார் உணர்விலார் ஓதாதும்
ஓதி யனையார் உணர்வுடையார்;—தூய்தாக
நல்கூர்ந்தும் செல்வர் இரவாதார், செல்வரும்
நல்கூர்ந்தார் ஈயா ரெனின்.

(பொ - ள்) *ஓதியும் ஓதார் உணர்விலார் ஓதாதும ஓதி யனையார் உணாவுடையார் - இயற்கை யறிவில்லாதவர் நூல்களை ஓதிஞராயினும் ஓதாதவரேயாவர், இயற்கை யறிவுடையார் நூல்களை ஓதாதிருந்தும ஓதிஞரோடொப்ப விளங்குவர்; தூய்தாக நல்கூர்ந்தும் செல்வர் இரவாதார செல்வரும நல்கூர்ந்தார் ஈயா ரெனின் - வறுமையுற்றும், மனத்தூய்மையோடிருந்து பிறரை ஒன்று இரவாதவர் செல்வரேயாவர், செல்வரும் பிறர்க்கு ஒன்று உதவா ரென்றல் வறுமையாளரேயாவர்.*

(க - து) *அறிவும் உதவுங் குணமும் இல்லாமற் செல்வம் மாண்புறாது.*

(வி - ம்) *உணர்வென்றது, ஈண்டு உலகநடை யறிந்தொழுகும் இயற்கை யுணாவு. கல்வியுடைமை செல்வமுடைமை யென்னும் இரண்டும் முறையே உலகநடை யறிந்தொழுகல், உதவுதல் என்னும் ஒப்புரவியல்புகளாலேயே மாட்சிமைப்படும என்பது பொருள்; கல்வியும் ஒரு செல்வமாகலின்* உடன் உரைக்கப்பட்டது. இவ்விருவகைச செல்வங்களும், நன்றியுள் செல்வமாம்வாயில் உணர்த்திற்று இச் செய்யுளென்க.* ௧0

---

## உ௮. ஈயாமை

*பிறர்க்கு ஒன்று ஈயாமையின் இயல்புணர்த்துவது.*

**271.** நட்டார்க்கும் நள்ளா தவர்க்கும் உளவரையால்
அட்டது பாத்துண்டல் அட்டுண்டல்;—அட்டது
அடைத்திருந் துண்டொழுகும் ஆவதின் மாக்கட்கு
அடைக்குமாம் ஆண்டைக் கதவு.

---

* குறள், ௨0 : ௧0. சிந். எ : ௧௧

(பொ - ள்) நட்டார்க்கும் நள்ளாதவர்க்கும் உள வரையால் அட்டது பாத்து உண்டல் அட்டு உண்டல் - சமைத்துண்ணுதலென்பது, தமக்குள்ள பொருளளவினால் தம்மிடம் உறவுகொண்டோர்க்கும் கொள்ளாத விருந்தினர்க்கும் தாம சமைத்ததைப் பகுத்துதவிப் பின் தாம் உண்ணுதலாகும்; அட்டது அடைத்திருந்து உண்டொழுகும் ஆவது இல் மாக்கட்கு அடைக்குமாம் ஆண்டைக் கதவு - அவ்வாறன்றித் தாம் சமைத்ததைத் தமது வீட்டின் கதவை யடைத்துக்கொண்டு தனியாயிருந்து தாமே உண்டு உயிர்வாழ்கின்ற மறுமைப் பயனற்ற கீழ்மக்கட்கு மேலுலகக் கதவு மூடப்படும்.

(க - து) இம்மையிற் பிறர்க்கொன்று ஈயாதவர்க்கு மறுமையில் துறக்கவுலகின்பம் இல்லை

(வி - ம்) "கொடையொடுபட்ட குணனுடை மாந்தர்க்கு அடையாவாம் ஆண்டைக் கதவு"* என்றார் முன்னும். ஈயப்படும் பொருள்களில் உணவு முதன்மையானதாகலின், அதனை ஈண்டுக் கூறினார். அட்டுண்டல் என்பது, இல்லறம் நடத்துதலென்னும் பொருட்டு; இல்லிருந்து அட்டுண்டு ஒருவன் இல்வாழ்க்கை நடத்துதலாவது, பாத்துண்டலேயாம் என்பது பொருள். "தொல்லோர் சிறப்பின் விருந்தெதிர் கோடலும்"† என்றார் பிறரும். ஆவது, மேன்மேற் பிறவியாக்கம்; மக்கட் பிறவியின் பயனெய்தாமையின் 'மாக்கள்' என்றார். க

**272.** எத்துணை யானும் இயைந்த அளவினால்
சிற்றறஞ் செய்தார் தலைப்படுவர்;—மற்றைப்
பெருஞ்செல்வம் எய்தியக்கால் பின்னறிதும் என்பார்
அழிந்தார் பழிகடலத் துள்.

(பொ - ள்) எத்துணையானும் இயைந்த அளவினால் சிற்றறம் செய்தார் தலைப்படுவர் - எவ்வளவு குறைந்ததாயினும் தமக்கிசைந்த அளவினால் சிறிய ஈதலறத்தைச் செய்தார் பிறவிப்பயனில் முற்படுவர்; மற்றைப் பெருஞ்செல்வம் எய்தியக்கால் பின் அறிதும் என்பார் அழிந்தார் பழி கடலத்துள் - மற்றுப், பெருஞ்செல்வம் எய்தினால் அறம்

* நாலடி. ௯0 : க. † சிலப். கரு : எஉ-௩.

என்பதைப் பின்பு கருதுவோம் என்றிருப்போர் பிறர் பழிக்கின்ற துன்பக்கடலில் வீழ்ந்து அழிந்தவராவர்.

(க - து) அறஞ் செயாதவர் இன்னற் கடலில் அழுந்தியவராவர்.

(வி - ம்) 'எத்துணையானு' மெனவும், 'இயைந்த அளவினு' லெனவும், 'சிற்றறம்' எனவும் சிறுமைப் பொருள் தோன்றப் பலவுங் கூறியது, மிகச் சிறிதாயினும் என்றற்பொருட்டு. மற்று, வினை மாற்று. 'கடலத்துள்' என்றார், நிறைந்த துன்ப வாழ்க்கையில் என்றற்கு. லகர ஈற்றுப் பெயர் அத்துச் சாரியை ஏற்று முடிந்தமை புறனடையாற்* கொள்ளப்படும். மீண்டுந் தலையெடாமையின் 'அழிந்தா' ரெனப்பட்டது. உ

**273.** துய்த்துக் கழியான் துறவோர்க்கொன் றீகலான்
வைத்துக் கழியும் மடவோனை—வைத்த
பொருளும் அவனை நகுமே; உலகத்து
அருளும் அவனை நகும்.

(பொ - ள்) துய்த்துக் கழியான் துறவோர்க்கு ஒன்று ஈகலான் வைத்துக் கழியும் மடவோனை - தான் துய்த்துச் செலவழிக்காமலும் துறவடைந்த உள்ளத்தார்க்கு ஒன்று கொடாமலும் செல்வத்தை வாளாத் தொகுத்துவைத்து உயிர் நீங்கி யொழியும் அறிவிலாதானை, வைத்த பொருளும் அவனை நகும் உலகத்து அருளும் அவனை நகும் - அவன் அவ்வாறு தொகுத்துவைத்த பொருளும் அவன் அறியாமை கண்டு உலகத்தில் அவனை நகையாடும், அவன் அப் பிறவியில் தொகுக்காத அருளும் அவனை நகையாடும்.

(க - து) ஈயாத குணமுடையோர்க்குப் பொருட் பயனுமில்லை, அருட்பயனுமில்லை.

(வி - ம்) கழியான் என்பதற்குக் காலங் கழியான் எனலும் ஆம். உறவோர் முதலியோர்க் கீதல் முன் வந்தமையின், ஈண்டுத் துறவோர்க்கீதல் நுவலப்பட்டது. "நன்றாய்ந் தடங்கினோர்க்கு ஈத்துண்டல்"† என்றார் பிறரும். "துறவோர்க்கு எதிர்தலும்"‡

---

* தொல். உருபி. ௩௦. † அறநெறிச். ௬௩. ‡ சிலப். கசு. எஉ.

என இளங்கோவடிகளும் அருளுதல் காண்க. ஒரு பயனுமின்றி அவன் பொருண்முயற்சி வீணானமையின், 'மடவோன்' என்றார். இம்மைப் பயனாகிய பொருட் பயனையும் மறுமைப்பயனாகிய அருட் பயனையும் ஒருங்கிழந்தமையின் இரண்டும் அவனை நகும் என்றார். அவனது ஏழைமை புலப்படுத்தும்பொருட்டு நகுமெனப்பட்டது. அவனை என வேண்டாது விதந்தார், அப் பழிக்கு அவனே உரியனாதலி னென்க. ௩

**274.** கொடுத்தலுந் துய்த்தலுந் தேற்றா இடுக்குடை
உள்ளத்தான் பெற்ற பெருஞ்செல்வம் இல்லத்து
உருவுடைக் கன்னியரைப் போலப் பருவத்தால்
ஏதிலான் துய்க்கப் படும்.

(பொ - ள்) கொடுத்தலும் துய்த்தலும் தேற்றா இடுக்கு உடை உள்ளத்தான் பெற்ற பெருஞ்செல்வம் - தக்கார்க்கு ஈதலையும் தான் துய்த்தலையுந் தெளியாத இடுக்குப் பிடித்த உள்ளமுடையோன் அடைந்த பெருஞ்செல்வமானது, இல்லத்து உரு உடைக் கன்னியரைப் போலப் பருவத்தால் ஏதிலான் துய்க்கப்படும்-தன் குடியிற் பிறந்து வளர்ந்த அழகுடைய கன்னிப் பெண்களைப் பருவகாலத்திற் பிறர் அடைந்து நுகர்தல்போல உரிய காலத்தில் அயலவரால் துய்க்கப்படும்.

(க - து) ஈயாதார் செல்வம் கடைசியில் ஏதிலரால் நுகரப்படும்.

(வி - ம்) தேற்றா, தன்வினைக்கண் வந்தது; "வாயினால் பேசல் தேற்றேன்"* என்புழிப்போல. இடுக்குடை யுள்ளம், சுருங்குதலுடைய உள்ளம்; என்றது, இவறன்மையுடைய உள்ளம்; உருவுடை யென்றார், செல்வமும் நன்கு திரண்டுவருங் காலத்தில் என்பது தோன்ற. பருவத்தால் என்னும் ஆலுருபு, "காலத்தினாற் செய்த நன்றி"† யென்புழிப்போல ஏழாவதன் பொருளில் மயங்கி வந்தது. இவனுக்குத் துய்க்கும் இயைபின்மையின் அவ்வியைபுடைய பிறர் துய்ப்பரென்றபடி. ௪

**275.** எறிநீர்ப் பெருங்கடல் எய்தி யிருந்தும்
அறுநீர்ச் சிறுகிணற் றூறல்பார்த் துண்பர்;
மறுமை யறியாதா ராக்கத்தின் சான்றோர்
கழிநல் குரவே தலை.

* சிந். க : உஉஅ. † குறள், கக : உ.

(பொ - ள்) எறிநீர்ப் பெருங்கடல் எய்தியிருந்தும் அறுநீர்ச் சிறுகிணற்று ஊறல் பார்த்து உண்பர் - அலை வீசுகின்ற நீர்ப்பெருக்கினையுடைய பெரிய கடலை அடுத்திருந்தும், அதன் நீர் பயன்படாமையால் அடிக்கடி நீர் வற்றுகின்ற சிறிய கிணற்றின் ஊற்றையே மக்கள் தேடிக் கண்டு உண்பர்; மறுமை அறியாதார் ஆக்கத்தின் சான்றோர் கழி நல்குரவே தலை - ஆதலால் மறுமைப் பயனறியா தொழுகும் புல்லியோர் செல்வத்தினும் குணநிறைந்த பெரியோரது மிக்க வறுமையே மேலானதாகும்.

(க - து) ஈயாதார் பெருஞ் செல்வராயிருப்பினும் அவரால் நன்மையில்லை.

(வி - ம்) சான்றோரது சிறிய உதவியும் சற்றுந் தீங்கற்றதாய் இருமை நலங்களும் பயப்பிக்குமாகலின், தலையென்றார். கீழ் உஎ-ம் அதிகாரத்திலும்* இச் செய்யுளின் உவமை வந்திருத்தலின், அதனையும் அதன் உரையையும் ஈண்டு நினைவுகூர்க. ௫

276. எனதென தென்றிருக்கும் ஏழை பொருளை
எனதென தென்றிருப்பன் யானும்;—தனதாயின்
தானும் அதனை வழங்கான் பயன்துவ்வான்;
யானும் அதனை அது.

(பொ - ள்) எனது எனது என்று இருக்கும் ஏழை பொருளை எனது எனது என்று இருப்பன் யானும் - என்னுடையது என்னுடையது என்று எண்ணிக்கொண்டிருக்கும் அறிவிலானது செல்வத்தை நானும் என்னுடையது என்னுடையது என்று எண்ணிக்கொண்டிருப்பேன்; ஏனென்றால், தனதாயின் தானும் அதனை வழங்கான் பயன்துவ்வான் யானும் அதனை அது - அச் செல்வம் அவனுடையதாயின் அதற்கறிகுறியாக அவன் அதனைப் பிறர்க்குதவாமலும் அதன் பயனைத் துய்க்காமலும் இருக்கின்றனன்; யானும் அச் செல்வத்தை அது செய்யாமலிருக்கின்றேன். (இருவர்க்கும் அதனிடத்தில் வேறுபாடு யாதும் இல்லையாகலின் என்க.)

* நாலடி. உஎ : ௩.

(க - து) பிறர்க்கீயாத பொருள், அதனை உடையானுக்கும் உரிமையுடையதன்று.

(வி - ம்) இச் செய்யுள் பிறனொருவன் கூற்றாகக் கூறப்பட்டது. ஏழை யென்றார், செல்வத்தைப் பயன்படுத்தி இன்புறலறியாமையின். 'அது' வென்றது, வழங்குதலுந் துய்த்தலுஞ் செய்யாமையை. ஈண்டுப் பெயாப் பயனிலையாய் நின்றது; "பெயா கொள வருதல்"* என்பதனாற் கொள்க. இச் செய்யுள் நகைச் சுவையுடையதாய் நின்றது. சு

277. வழங்காத செல்வரின் நல்கூர்ந்தார் உய்ந்தார்;
இழந்தா ரெனப்படுதல் உய்ந்தார்—உழந்ததனைக்
காப்புய்ந்தார் கல்லுதலும் உய்ந்தார்தங் கைந்நோவ
யாப்புய்ந்தார் உய்ந்த பல.

(பொ - ள்) வழங்காத செல்வரின் நல்கூர்ந்தார் உய்ந்தார் - பிறர்க்கொன்று உதவாத செல்வர்களைவிட அச் செல்வமில்லாத வறுமையாளர்களே பிழைத்துக்கொண்டவர்கள்; ஏனென்றால், இழந்தார் எனப்படுதல் உய்ந்தார் - பொருளை வீணே தொகுத்துவைத்துப் பின் ஒருங்கே இழந்துபோனார் என்று உலகவரால் பழிக்கப்படுதலினின்று அவர்கள் பிழைத்துக்கொண்டனர்; உழந்ததனைக் காப்பு உய்ந்தார் - வருந்தித் தேடிய பொருளைப் பின் காத்தலினின்றுந் தப்பினர்; கல்லுதலும் உய்ந்தார் - அதனைப் புதைத்து வைக்கும் பொருட்டுக் குழி தோண்டுதலுந் தப்பினர்; தம் கை நோவ யாப்பு உய்ந்தார் - தம்முடைய கைகள் நோவும்படி அதனைக் கட்டிச் சேமித்தலுந் தப்பினர்; உய்ந்த பல - இன்னும் இவ்வாறு அவர்கள் தப்பிக்கொண்ட வகைகள் பலவாகுமாதலின் என்க.

(க - து) ஈயாத செல்வர்க்கு இன்னல் பல உண்டு.

(வி – ம்) ஈயாமையாற் பயனில்லாமையோடு இன்னலும் பல வுண்மையால், செல்வத்தின் இன்னலை யெய்தா வறியவர் அவ் வீயாதவரினும் உயர்ந்தவராவரென்றார். உய்ந்தாரென்று பலமுறை வந்தது, வற்புறுத்தல் நோக்கி யென்க. உய்ந்த, வினைப்பெயர்க் கிளவி†. எ

* தொல். வேற்றுமையி. ௫. † தொல். பெயரி. கசு.

**278.** தனதாகத் தான்கொடான்; தாயத் தவருந்
தமதாய போழ்தே கொடாஅர்;—தனதாக
முன்னே கொடுப்பின் அவர்கடியார், தான்கடியான்
பின்னை அவர்கொடுக்கும் போழ்து.

(பொ-ள்) *தனதாகத் தான் கொடான் - பொருள் தன்னுடையதாக அந்நிலையிலும் தான் பிறர்க்கு வழங்கான்; தாயத்தவரும தமதாய போழ்து கொடார் - அவனுக்குப் பின் அவன் தாயத்தவரும் அப்பொருள் தம்முடையதான காலத்திலும் வழங்கார்; தனதாக முன்னே கொடுப்பின் அவர் கடியார் - அப்பொருள் முன்னே தன்னுடையதாயிருக்க அந்நிலையில் அவன் பிறர்க்கு ஒன்று வழங்கின் அத்தாயத்தவர் அதனை நீக்கார்; தான் கடியான் பின்னை அவா கொடுக்கும் போழ்து - தன்னுரிமைக்குப் பின் அததாயததவர் பிறாக்கு யாதேனும வழங்குங் காலத்தில் தானும் அதனை நீக்கான்; (அவ்வாறிருக்குமபோது, உரிமையுள்ளபோதே பிறர்க்குதவியாய் வாழ்ந்து பயன் பெறுமைக்குத்தான் காரணம் யாதோ?)*

(க-து) *தனககுரிமையுளளபோதே ஈந்து பயன் பெறுதல் நன்று.*

(வி-ம்) *ஈயாது தன் தாயத்தவர்க்கு வைத்தலால் அவரும் பயன் பெறுதலில்லாமையின், பின்னுள்ளோர்க்கு வேண்டு மென்று இவறன்மை செயது வைத்தலிலும் பயனில்லை யென்றும் தனக்குரிமையுமிருந்து பிறரால் தடையுமில்லாத காலத்திற் பொருட் பயனையடைதலே இனிதென்றும் விளக்கியபடியாகும். தலைமுறை தலைமுறையாகப் பொருட்பயனிழக்கும் கீழ்மக்களின் இயல்பு கூறி, இந்நிலை எத்துணை இரங்கத்தக்கதென ஈயாமையின் இழிவு இதனாற் புலப்படுத்தப்பட்டது.*

**279.** இரவலர் கன்றுக ஈவார்ஆ வாக
விரகிற் சுரப்பதாம் வண்மை;—விரகின்றி
வல்லவர் ஊன்ற வடிஆபோல் வாய்வைத்துக்
கொல்லச் சுரப்பதாங் கீழ்.

(பொ-ள்) *இரவலர் கன்றுக ஈவார் ஆவாக விரகின் சுரப்பதாம் வண்மை - இரப்போர் கன்றுகளை ஒப்பக்*

கொடுப்போர் ஆன்களை ஒப்பப் பூரிப்புடன் குறையாதளிப்பதே கொடையெனப்படும்; விரகு இன்றி வல்லவர் ஊன்ற வடி ஆ போல் வாய் வைத்துக் கொல்லச் சுரப்பதாம் கீழ்-அவ்வுயிர்க்கிளர்ச்சி யின்றி, கறக்க வல்லவர் தம் விரல்களை அழுத்தி நோவுண்டாக்க அது பொறுது பாலை ஒழுகச் செய்யும ஆன்களைப்போற் சூழ்ச்சியுடையார் பல வாயில்கள் வைத்து வருத்தக் கீழ்மக்கள் அதனால் தம் பொருளைச் சொட்டுவோராவர்.

(க - து) மனமகிழ்ச்சியில்லாமற் கொடுப்பதும் ஈயாமையை ஒக்கும்.

(வி - ம்) விரகென்றது, கிளர்ச்சி. "வெண்குடை விரகுளி கவிப்ப"* என்புழிப்போல. சுரப்பதென்றார், ஈவோர் செல்வம் அறாது பெருகி வருதலின். பின் உவமையில் வடித்தல் 'கூறினமையானும் கீழ்மக்கள் இயல்பு கூறுதலானும் 'சுரப்பதாம கீழ்' என்னுமிடத்துச் சுரப்பதென்பதற்குச் சொட்டுவரென்றுரைத்துக் கொள்க. கீழ் என்றதற்கேற்பச் சுரப்பதென்பதும் அஃறிணை முடிபில் நின்றது. வாய்வைத்தல், சூழ்சசிகள் செய்தலென்னும் பொருட்டு. கூ

**280.** ஈட்டலுந் துன்பமற் றீட்டிய வொண்பொருளைக்
காத்தலும் ஆங்கே கடுந்துன்பம்;—காத்தல்
குறைபடில் துன்பம்; கெடில்துன்பம்; துன்பக்கு
உறைபதி மற்றைப் பொருள்

(பொ - ள்) ஈட்டலும் துன்பம் - பொருள் திரட்டுதலுந் துன்பம்; ஈட்டிய ஒண்பொருளைக் காத்தலும் ஆங்கே கடுந்துன்பம் - திரட்டிய சிறந்த பொருளைப் பாதுகாத்தலும் அவ்வாறே மிக்க துன்பமாகும்; காத்தல் குறைபடின் துன்பம் - அங்ஙனம் பாதுகாத்த முறையில் பொருள் தன் அளவிற் குறைந்துபோகுமாயின் துன்பமே; கெடின் துன்பம் - இயற்கை நிகழ்ச்சிகளால் முற்றும் அழிந்துபோகுமானல் பின்னும் துன்பம்; துன்பக்கு உறைபதி பொருள்-ஆதலால், பொருள் துன்பங்களெல்லாவற்றிற்குந் தாங்குமிட மென்க.

* பெருங். இலாவாண. உ : கூஉ.

(க - து) துன்பங்களுக்கு உறைவிடமாயுள்ள பொருளைப் பயன்படுத்துமுறை யறிந்து வழங்குதலே அறிவுடைமையாகும்.

(வி - ம்) முறையறிந்து பயன்படுத்தினால் அப்போது அஃது இன்பமும் அறமும் பயந்து தன்னை யுடையானை விளக்கமுறச் செய்தலின், 'ஒண்பொருள்' என்றார். மற்று இரண்டனுள் முன்னது வினைமாற்று; பின்னது அசை. காத்தல் குறைபடின் என்னுமிடத்துக் காத்தலிற் குறைபடின் என உருபு விரித்துக் கொள்க. துன்பக்கு என்பதில் அத்துச் சாரியை தொக்கு நின்றது. துன்பம் என்பதை மனத்தளர்ச்சி* என்றுரைத்தார் சிலப்பதிகார அரும்பத உரைகாரர். பிறர்க்கு வழங்கி ஈதலறம் புரிதலால் இத்துன்பங்களெல்லாந் தோன்றாதொழிந்து இன்பமும் உண்டாகுமாயின், அதுவன்றோ செயற்பாலதென்பது கருத்து. ௬0

---

## உ௬ இன்மை

பொருளில்லாமையின் இழிவை உணர்த்துவது.

281. அத்திட்ட கூறை அரைச்சுற்றி வாழினும்
பத்தெட் டுடைமை பலருள்ளும் பாடெய்தும்;
ஒத்த குடிப்பிறந்தக் கண்ணுமொன் றில்லாதார்
செத்த பிணத்திற் கடை.

(பொ - ள்) அத்து இட்ட கூறை அரைச்சுற்றி வாழினும் பத்து எட்டு உடைமை பலருள்ளும் பாடு எய்தும் - துவர் ஊட்டிய ஆடையை இடுப்பில் உடுத்துக்கொண்டு ஞானவாழ்வில் வாழ்ந்தாலும் பத்தானும் எட்டானும் பொருளுடைமை பலரிடத்திலும் பெருமையடையும்; ஒத்த குடிப்பிறந்தக்கண்ணும் ஒன்று இல்லாதார் செத்த பிணத்தின் கடை - ஏற்ற உயர்குடிக்கண் பிறந்தாலும் ஒரு பொருளில்லாதார் செத்த பிணத்தினுங் கடைப்பட்டவராவர்.

(க - து) துறவு நிலையும் உயர்குடிப் பிறப்பும் உடையராயினும் வறுமையில்லாமையே பெருமை தரும்.

---

* சிலப். கக : எக-உரை.

(வி - ம்) "அத்துண் ஆடையர்"* என்றார் பிறரும். அரைச் சுற்றி வாழினுமென்றார், பற்றற்றிருக்கும் எளிமை தோன்ற. பத்தெட்டென்றது, ஒரு சிற்றளவான குத்துமதிப்பு. பெரும் பான்மையோராலும் மதிக்கப்படு மென்றற்குப் பலருள்ளும் எனப் பட்டது. பலாக்கும் உடன்பாடான வென்றற்கு 'ஒத்த' வென்றார். உயர்குடி நலனுந் துறவு மாண்பு மிருந்தும் பொருளில்லாதார் இத் துணை இழிக்கப்படுவரெனின், ஏனையோரது வறுமையின் இழிவு கூறவேண்டாதாயிற்று. க

**282.** நீரினும் நுண்ணிது நெய்யென்பர், நெய்யினும்
யாருமஅறிவர் புகைநுட்பம்;—தேரின்,
நிரப்பிடும்பை யாளன புகுமே, புகையும்
புகற்கரிய பூழை நுழைந்து.

(பொ - ள்) நீரினும் நுண்ணிது நெய் என்பர் - நெய் நீரைப் பார்க்கினும் நுட்பமானதென்று அறிந்தோர் கூறு வர்; நெய்யினும புகை நுட்பம யாரும அறிவா - இனி, நெய்யைப் பார்க்கினும் புகை நுட்பமென்பதை அனைவரும் அறிவர்; தேரின் - ஆராய்ந்தால், நிரபபிடும்பையாளன் புகையும் புகற்கு அரிய பூழை நுழைந்து புகும - வறுமை யாகிய துன்பமுடையோன் அப புகையும புகுதற்கு அரிய மிக நுண்ணிய புழையிலும நுழைந்து புகுவான்.

(க - து) வறுமைத் துன்பமுடையோன் மிக மெல் லியனுவான்.

(வி - ம்) நெய் நீரினும் நுண்ணிதாதலைப் பலரும் அறியா ராதலின், புகை நுட்பமெனறதற்கு யாருமறிவரென்று கூறினாற் போற் கூறாது, பொதுவாக 'என்பா' என்றாா. அதிகாரம் இன்மை குறித்ததாகலின், 'தேரின இரப்பிடும்பையாளன்' எனப் பிரித் துரைத்தல் சிறவாது. "நிசச நிரப்பிடும்பை"† என்றாா பிறரும். 'நிரப்பிடும்பை' யென்பது, பெரும்பாலும் பசி மிகுதியால் வயிற்றை நிரப்பும் இன்னலுணர்த்தி மிகக வறுமையை விளக்குமாதலின், அவன் மிக மெல்லியன் எனற்குப் புகையும புகற்கரிய பூழை நுழைந்து புகுமென்றாா. புகுதலென்றது, இரத்தல். உ

**283.** கல்லோங் குயர்வரைமேற காந்தள் மலராக்கால்
செல்லாவாம செம்பொறி வண்டினம;—கொல்லைக்
கலாஅற் கிளிகடியுங் கானக நாட!
இலாஅஅர்க் கில்லை தமர்.

* சிந். எ : உகஉ. † இறைய. க. உரை

(பொ - ள்) கல் ஓங்கு உயர் வரைமேல் காந்தள் மலராக்கால் செல்லா செம்பொறி வண்டினம் - கற்கள் வளர்ந்துள்ள உயர்ந்த மலையின்மேல் காந்தள் முதலிய மலர்கள் மலராவிட்டால் சிவந்த புள்ளிகளையுடைய வண்டின் திரள் அங்கே செல்லமாட்டா; கொல்லைக் கலால் கிளி கடியும் கானக நாட! இலார்க்கு இல்லை தமர் - ஆதலால், தினை முதலிய புனங்களில் கிளி முதலிய பறவைகளைச் சிறுசிறு கற்களால் ஓட்டுகின்ற காட்டையுடைய நாடனே! பொருளில்லாத வறியோரிடத்தில் உறவினர் வருதலில்லை.

(க - து) வறியோரை எவரும் அணுகார்.

(வி - ம்) கற்கள் ஓஙகுதலென்றது, உயர்ந்து தெரிதல்; மலர்கள் மலர்தலில்லாத மலையென்றற்குக் கல்லோஙகு வரை எனப் பட்டது. ஆம், அசை. கானகமென்றது, மலையையடுத்த கானக மென்க. நுகாதற்குரிய பொருளகளில்லாமையின் தமர் வருதலில்லை என்றாராயிற்று. ௩

284 உண்டாய போழ்தின் உடைந்துழிக் காகம்போல்
தொண்டா யிரவர் தொகுபவே;—வண்டாய்த்
திரிதருங் காலத்துத் தீதிலிரோ என்பார்
ஒருவரும் இவ்வுலகத் தில்.

(பொ - ள்) உடைந்துழிக் காகம்போல் உண்டாய போழ்தின் தொண்டு ஆயிரவர் தொகுப - ஒருவன் இறந்து விட்டபோது அவனுடம்பைக் காகங்கள் சூழ்ந்து மொய்த்துக்கொள்வதுபோல் ஒருவற்குச் செல்வமுண்டான காலத்தில் அவனுக்கு ஒன்பதினாயிரம் பேர் ஏவல் புரிவோராய் வந்து கூடுவா; வண்டாய்த் திரிதருங் காலத்துத் தீதிலிரோ என்பார் ஒருவரும் இவ்வுலகத்து இல் - ஆனால் வறுமையினால் உணவுக்காக ஒருவர் வண்டுபோற் பல விடங்களிலும் அலையுங்காலத்தில் அவரைத் தீங்கில்லாம லிருக்கிறீர்களா என்று நலம் உசாவுவார் இவ்வுலகத்தில் ஒருவரும இல்லை.

(க - து) பொருளில்லாதவர்களை உலகம் பொருள் செய்யாது.

(வி - ம்) உடம்பு கட்டுத் தளர்ந்து உயிர் நீங்குதலின், இறத்தல் உடைதலெனப்பட்டது. தொண்டு, ஈண்டு இரட்டுற மொழிதல்; தொண்டென்னுஞ் சொல் ஒன்பதென்னும் பொருட்டுமாதல் "தொண்டுபடு திவவின்"* என்னும் மலைபடுகடாத்துட் காண்க. ஒன்பதிஞயிரம் என ஓர் அளவு கூறினர், மிகுதி தேற்றுதற்கு. உணவுநாடிச் சேறற்கும், சிறிது சிறிதாகப் பெறுதற்கும், அலைதற்கும் வண்டுவமம் வந்தது. ௪

**285.** பிறந்த குலமாயும்; பேராண்மை மாயும்;
சிறந்ததங் கல்வியும் மாயும்;—கறங்கருவி
கன்மேற் கழூஉங் கணமலை நன்னுட!
இன்மை தழுவப்பட் டார்க்கு.

(பொ - ள்) கறங்கு அருவி கல்மேல் கழூஉம் கண மலை நல் நாட! - பாய்ந்து ஒலிக்கின்ற அருவிநீர் கற்களின் மேற்புறத்தைக் கழுவுகின்ற கூட்டமான மலைகளையுடைய சிறந்த நாடனே! இன்மை தழுவப்பட்டார்க்குப் பிறந்த குலம் மாயும் பேராண்மை மாயும் சிறந்த தம் கல்வியும் மாயும் - உலகத்தில் வறுமை பொருந்தியவர்க்கு அவர் பிறந்த குலத்தின் பெருமை கெடும்; அவருடைய பேராற்றல் கெடும்; எல்லாவற்றிற்கும் மேலான அவர்தம் கல்வி நிலையுங் கெடும்.

(க - து) வறுமை பொருந்தியவர்க்கு இருமை நலங்களுங் கெடும்.

(வி - ம்) குலமென்றது ஈண்டுக் குடி; ஆண்மை யென்றது திறமை. கல்வி எழுமையும் ஏமாப்புடைத்தாகலின்† 'சிறந்த கல்வி' யெனப்பட்டது. இன்மையால் என உருபு விரித்துக் கொள்க. ரு

**286.** உள்கூர் பசியால் உழைநசைஇச் சென்றூர்கட்கு
உள்ளூ ரிருந்துமொன் றாற்றாதான்;—உள்ளூர்
இருந்துயிர் கொன்னே கழியாது தான்போய்
விருந்தின னாதலே நன்று.

(பொ - ள்) உள் கூர் பசியால் உழை நசைஇச் சென்றூர்கட்கு உள்ளூர் இருந்தும் ஒன்று ஆற்றாதான் -

* மலைபடு. உக. † குறள், ௪௦ : அ.

உடம்பில் மிகுகின்ற பசித் துன்பத்தால் தான் இருக்குமிடத்தை நாடிவந்தவர்கட்குத் தான் உள்ளூரிலிருந்தும் ஒன்று உதவ இயலாதவன், உள்ளூர் இருந்து உயிர் கொன்னே கழியாது தான் போய் விருந்தினனாதலே நன்று - அவ்வாறு உள்ளூரில் இருந்து தனது உயிர் வாழ்க்கையை வீணே கழிககாமல் தான் வெளியூர்கட்குப போய்ப் பிறர் இல்லத்தில் விருந்தினனாயிருந்து உண்ணுதலே நலமாகும்.

(க - து) பிறர்க்கொன்று உதவ இயலாத வறியோனது உயிர்வாழ்ககை வீண் என்க.

(வி - ம்) நேரத்தில் உணவு கிட்டாமை தோன்ற 'மிகுகின்ற பசி' யென்றார்; நாடி வருவோர்க்கு இல்லை யென்றல் பெருந்தீதாகலின், 'நசைஇச் சென்றார்கட்கு' என்று விதந்தார்; 'இரப்போர்க்கு ஈயா இன்மை"* என்றார் பிறரும். வறுமை மிகுதி தோற்றுதற்கு 'உள்ளூர இருந்தும்' எனப்பட்டது. உயிர என்றது, ஈண்டு உயிர வாழ்க்கை; 'இரத்தலே நன்'றென்றற்கு, 'விருந்தினனாதலே நன்'றென்றது, இகழ்ச்சி. உளளூரில் ஒருவாக்கொருவர் விருந்தினராதல் செல்லாமையின், 'போய் விருந்தினனாதல நன்' றென்று கூறினர். பிறர்க்கு விருந்தினராகுமுகமாகவேனும் அவர்க்குப் புண்ணியம விளைய ஏதுவாகித தன துயிர்வாழ்க்கையைப் பயனுடையதாக்குகவென இகழ்ந்து கூறுவார், 'கொன்னே கழியாது' என்றா ரென்க. கொன் ஈண்டுப் பயனின்மைப் பொருட்டு.† கூ

287. நீர்மையே யன்றி நிரம்ப எழுந்ததங்
கூர்மையும் எல்லாம் ஒருங்கிழப்பர்;—கூர்மையின்
முல்லை அலைக்கும் எயிற்றாய்! நிரப்பென்னும்
அல்லல் அடையப்பட் டார்.

(பொ - ள்) கூர்மையின் முல்லை அலைக்கும் எயிற்றாய் - தமது கூர்மையால் முல்லையரும்புகளை வெல்லும் பற்களையுடைய பெண்ணே! நிரப்பு என்னும் அல்லல் அடையப்பட்டார் நீர்மையே யன்றி நிரம்ப எழுந்த தம் கூர்மையும் எல்லாம் ஒருங்கு இழப்பர் - வறுமை என்னும் இன்னலால் தாக்குண்டவர் தமது இயற்கையறிவையேயன்றி

---

* புறம், எஉ. † தொல். இடை. கூ.

நிரம்ப வளர்ந்த தமது கூரிய செயற்கையறிவையும் என எல்லாம் ஒருங்கே இழந்துவிடுவர்.

(க - து) பொருளில்லாதவர்க்குத் தம் இயற்கை செயற்கை யறிவுகளும் மழுங்கிவிடும்.

(வி - ம்) நீர்மையென்றது இயற்கையியல்பு; "நெறியிற் றிரியா நீர்மை"* என்புழிப்போல. நிரம்ப எழுந்த கூர்மை யென்று மேல் வருதலின், இஃது இயற்கையறிவினை உணாத்தி நின்றது; எனவே; கூர்மை யென்பது செயற்கையறிவெனக் கொள்ளப்படும்; இனி, இயற்கை நல்லியல்புகளையன்றி நன்கு மலர்ந்த தம் கூரிய அறிவினையும் என எல்லாம் ஒருங்கிழப்பர் என்றுரைத்தலும் ஒன்று. ஒருங்கிழப்பரென்றார், எல்லாவற்றின் மலர்ச்சிக்கும் உலகத்திற் பொருளே ஏதுவாயிருத்தலின் என்க; "பொருள் துன்னுங்காலைத் துன்னாதன இல்லையே"† என்றார் பிறரும். எ

288. இட்டாற்றுப் பட்டொன் றிரந்தவர்க் காற்றாது
முட்டாற்றுப் பட்டும் முயன்றுள்ளூர் வாழ்தலின்
நெட்டாற்றுச் சென்று நிரைமனையிற் கைந்நீட்டுங்
கெட்டாற்று வாழ்க்கையே நன்று.

(பொ - ள்) இட்டு ஆற்றுப்பட்டு ஒன்று இரந்தவர்க்கு ஆற்றாது முட்டு ஆற்றுப்பட்டு முயன்று உள்ளூர் வாழ்தலின் - சிறுமையாகிய வறுமை வழியில் அகப்பட்டுத் தம்மிடம் ஒன்று இரந்தவர்க்கு உதவ மாட்டாமல் முட்டுப்பாடான முறைமையில் இருந்துகொண்டு முயற்சியோடு உள்ளூரில் உயிர்வாழ்தலைவிட, நெடு ஆற்றுச் சென்று நிரை மனையில் கை நீட்டும் கெடு ஆறு வாழ்க்கையே நன்று - தொலைவழி நடந்துபோய் அங்கங்கும் வரிசையாக உள்ள வீடுகளிற் கை நீட்டி இரந்துண்ணுங் கெடுவழி வாழ்க்கையே நன்றாகும்.

(க - து) பிறர்க்கொன்று உதவமாட்டாத வறுமை வாழ்வினும் நாடு கடந்துபோய் இரந்துண்ணும் இழிவு வாழ்வே நன்று.

---

* பெரும். இலாவா. கஎ : கஎச. † சிந். அ : கூ.

(வி - ம்) இட்டாறு - சிறுமை வழி; "இட்டிய குயின்ற துறை"* என்புழிப்போல; என்றது, ஈண்டு வறுமை. வாழ்க்கை எளிதாக நடவாமையின், 'முயன்று' என்றார். இரந்துண்ணும் வாழ்வில் உயிர்ப்பண்பு கிளர்ந்தெழாமையாலும். தமக்கும் பிறர்க்கும் இன்னாமை தருவதனாலும் அது 'கெட்டாற்று வாழ்க்கை' யென்று விதந்து கூறப்பட்டமை பெரிதுங் கருத்திருத்தற்பாலது. "இன்னாமை வேண்டின் இரவெழுக"† என்றார் பிறரும். நன்று என்றார், வினையொழியும் வரையில் உயிரேனும் உடம்பில் நிலைத்திருக்க உதவுதலின் என்க. அ

**289.** கடகஞ் செறிந்ததங் கைகளால் வாங்கி
அடகு பறித்துக்கொண் டட்டுக்—குடைகலனு
உப்பிலி வெந்ததைதின் றுள்ளற்று வாழ்பவே,
துப்புரவு சென்றுலந்தக் கால்.

(பொ - ள்) துப்புரவு சென்று உலந்தக்கால் - நுகரப்படும் பொருள்கள் நீங்கி வறுமையுற்றவிடத்து, கடகம் செறிநத தம் கைகளால் - முன்பு செல்வராயிருந்தபோது கடகம் செறிந்திருந்த தம் கைகளினால், வாங்கி அடகு பறித்து-தூறுகளை வளைத்து அதிலுள்ள கீரைகளைப்பறித்து, கொண்டு அட்டு - அதனையே முதன்மையாகக் கருதி உப்புமில்லாமல் அவித்து, குடை கலனு உப்பு இலி வெந்தை தின்று உள் அற்று வாழ்ப - பனையோலையின் முடக்கே உண்கலனாக அவ் வுப்பில்லாததான வெவியலை மென்று வாயாறி அமைதியற்று உயிர் வாழ்வார்கள்.

(க - து) வறுமை நிலையினும் அமைதியிழந்த இழிந்த நிலை வேறில்லை

(வி - ம்) குடைவாகக் கட்டப்படுதலின் ஓலைப்பட்டை 'குடை' யெனப்பட்டது; "வேள்நீர் உண்ட குடை"‡ என்றார் கலியினும். இழிவு தோன்ற 'வெந்தை' என்றும் பசியாறுது வாளா மெல்லுதல் தோன்றத் 'தின்று' என்றும் விதந்தார். வெந்தை, வெவிய லெனப்படும்; "பராரை வேவை"§ யென்றார் பிறரும். உலத்தல், ஈண்டு நிலைகெடுதல். கூ

* ஐங. உஉ : டு. † நான்மணிக். கஎ. ‡ கலித். உரு.
§ பொருந. க0ச.

**290.** ஆர்த்த பொறிய அணிகிளர் வண்டினம்
பூத்தொழி கொம்பின்மேற் செல்லாவாம்;—நீர்த்தருவி
தாழா உயர்சிறப்பின் தண்குன்ற நன்னுட!
வாழாதார்க் கில்லை தமர்

(பொ - ள்.) *ஆர்த்த பொறிய அணிகிளர் வண்டினம் பூத்து ஒழி கொம்பின்மேல் செல்லா* - நிறைந்த புள்ளிகளையுடைய அழகுமிக்க வண்டுக்கூட்டங்கள், பூத்தல் மாறிய பூங்கொம்புகளிடத்திற் செல்லமாட்டா ? *நீர்த்து அருவி தாழாது உயர் சிறப்பின் தண் குன்ற நல் நாட* - இனிய நீரருவி அறாது ஒழுகுகின்ற மிக்க சிறப்பினையுடைய குளிர்ச்சியான மலைகளையுடைய உயர்ந்த நாடனே ! *வாழாதார்க்கு இல்லை தமர்* - ஆதலாற் பொருள் மலர்ச்சியில்லாத வறியோர்க்கு உறவாவோர் இல்லை.

(க - து.) *நுகர் பொருள்கள் மாறிய வறியோரை எவரும நாடார்.*

(வி - ம்) *பூத்து, தொழிற்பெயாப்பொருளி னின்றது. சில காலம் வரையிற் பூத்துப், பின் பூவெடுத்தலே மாறிப்போன பூங் கொம்புகள் இங்குக் குறிக்கப்பட்டன. ஆம் - அசை. உவமையின் கருத்தாற், பொருள மலர்ச்சியும் பிறாக்குதவுதலு முடையராய் உயிர வாழ்தலே வாழ்தலாகுமென்பது பெறப்படும். இச் செய்யுட் பொருள், முன்னும் வந்தது.** கo

---

## ௩௦. மானம்

*என்றது, தாழ்வு தாளாத உள்ளவியல்பு.*

**291.** திருமதுகை யாகத் திறனிலார் செய்யும்
பெருமிதங் கண்டக் கடைத்தும்—எரிமண்டிக்
கானந் தலைப்பட்ட தீப்போற் கனலுமே,
மான முடையார் மனம்.

* நாலடி. உக : ௩.

(பொ - ள்) திரு மதுகையாகத் திறன் இலார் செய்யும் பெருமிதம் கண்டக் கடைத்தும் - செல்வம் வலிமையாகக் கயவர் செய்யும் வரம்பு கடந்த செயல்களைப் பார்த்த விடத்தும், எரி மண்டிக் கானம் தலைப்பட்ட தீப்போல் கனலும் மானமுடையார் மனம் - மானமுடைய நன் மக்களின் மனம் எரிதல் மிகுந்து காட்டில் உண்டான காட்டுத் தீப்போல் அனல் கொள்ளும்.

(க - து) தகாத செயல்களைக் கண்டால் மானமுடையார் மனம் அழல்கொள்ளும்.

(வி - ம்) மதுகை யென்றது, வலிமை; "அனை மதுகையர் கொல்"* என்புழிப்போல. திறனிலார் என்றது, கயவரை; பெருமிதம் என்றது, பெருமிதம் போன்ற பொருந்தாச் செயல்களை இலக்கணத்திற்று. கண்டக் கடைத்தும் என்னும் உம்மை, பிற பொருந்தாச் செயல்களை அறிந்தவிடத்தும் கனலும்போல் என்பது விளக்கி இறந்தது தழீஇயது. க

292 என்பாய் உகினும் இயல்பிலார் பின்சென்று
தம்பா டுரைப்பரோ தம்முடையார்;—தம்பாடு
உரையாமை முன்னுணரும் ஒண்மை யுடையார்க்கு
உரையாரோ தாமுற்ற நோய்.

(பொ - ள) என்பாய் உகினும் இயல்பிலார் பின் சென்று தம் பாடு உரைப்பரோ தம் உடையார் - தன்மானமுடையோர், தாம் எலும்பாகித் தசை சிதையினும், குணமில்லாதவர் பின் சென்று தம்முடைய இடுக்கண்களைச் சொல்லிக்கொள்ளமாட்டார்; தம் பாடு உரையாமை முன்னுணரும் ஒண்மையுடையார்க்குத் தாம் உற்ற நோய் உரையாரோ - தம்முடைய துன்பங்களைத் தாம் எடுத்துரையாமைக்கு முன்பே அவற்றை உணர்ந்து உதவும் அறிவு விளக்கமுடைய குணசாலிகட்கும் தாம் அடைந்த இன்னல்களை அவர் உரையார்போலும்! (மானமுடையார் இயற்கை அத்தகைத்து!)

(க - து.) மானமுடையார் தம் துன்பங்களைப் பிறர்க்குப் புலப்படுத்தார்.

---

* குறுந். உகo.

(வி - ம்) உருதல், தசை வீழ்தல்; இயல்பு, இயற்கையான நற்குணம். "எதிலாரென்பார இயல்பில்லார்"* என்புழிப்போல. ஓகாரங்களுள் முன்னது எதிர்மறை; பின்னது ஐயங் கருதிய வினா. தம் என்றது, தம் உயிரியல்பாகிய மானத்தை உணர்ந்தாரின்றது. உடையாரக்குமென்று உயர்வு சிறப்பும்மை விரித்துக்கொள்க. உ

**293.** யாமாயின் எம்மில்லங் காட்டுதும் தாமாயின்
காணவே கற்பழியும் என்பார்போல்—நாணிப்
புறங்கடை வைத்தீவர் சோறும் அதனல்
மறந்திடுக செல்வர் தொடர்பு.

(பொ - ள்) யாமாயின் எம் இல்லம் காட்டுதும் - வறியேமாகிய யாமாயின் செல்வர்கட்கு உண்ணவும் இளைப்பாறவும் எம் இல்லத்தை இடமாக உதவுகின்றோம்; தாமாயின் காணவே கற்பு அழியும் என்பார்போல் நாணிப் புறக்கடைவைத்து ஈவர் - ஆனல் அச் செல்வர்களாயின், யாம் காணுமளவிலும் தம் மனைவியரின் கற்புக் கெடும் என்று கருதுவார்போல் மனங் கூசிச், சோறும் வாயிலின் வெளியில் வைத்துப் போடுவர்; அதனல் மறந்திடுக செல்வர் தொடர்பு - ஆதலால், பிறரைப் பொருள் செய்யாத செல்வர்களின் தொடர்பை மக்கள் மறந்துவிடுவார்களாக!

(க - து.) தாம் வறியராயினும் தம்மை மதியாத செல்வர்களின் தொடர்பை மானமுடையோர் மறந்துவிடுதல் வேண்டும்.

(வி - ம்) நாணி என்றார், அச் சோறிடுதலுந் தகாததொன்று செய்தலாக அவர் கருதுதலின். சோறும் என்னும் உம்மை, உள்ளே இருந்து உண்ணுதற்குரிய உணவும் என்னும் பொருள் தந்து உயர்வு சிறப்பாய், இனிச் சற்று இளைப்பாறும் பொருட்டுப் படுத்தலும் புறக்கடைக்கண்ணதே என்னும் பொருள் பெறுவித்து எதிரது தழீஇயதாய் நின்றது. ௩

**294.** இம்மையும் நன்றும் இயல்நெறியுங் கைவிடா
தும்மையும் நல்ல பயத்தலால்,—செம்மையின்
நானம் கமழுங் கதுப்பினுய்! நன்றேகாண்,
மான முடையார் மதிப்பு.

* நான்மணிக். ௪௯.

(பொ-ள்.) செம்மையின் - நடுநிலையாக நோக்குமிடத்து, நானம் கமழும் கதுப்பினுய் - கத்தூரி மணக்குங் கூந்தலுடைய பெண்ணே! மானமுடையார் மதிப்பு - மானமுடையார் நடக்கை, இம்மையும் நன்ருும் - புகழும் இன்பமுந் தருதலால் இம்மையிலும் நன்ருகும்; இயல் நெறியும் கைவிடாது உமமையும் நல்ல பயத்தலால் நன்றே- உண்மை நெறியும் வழுவுதலின்றி மேலுலகிலும் இன்பமாவன உண்டாக்குதலால் மறுமைக்கும் நல்லதேயாம்.

(க-து) மானமுடையார் ஒழுக்கம் இருமைக்கும் இன்பந் தரும்.

(வி-ம்) இயல் நெறி வீடு பயப்பதாகலின், இயல் நெறியுமென்று உம்மை தந்தார்; நாயனுரும் "பேராவியற்கை"* என வீட்டினை விதந்தமை காண்க. உம்மை யென்றது, மேலுலகம். மதித்தொழுகும் ஒழுக்கம், மதிப்பெனப்பட்டது.

**295**　பாவமும் ஏனைப் பழியும் படவருவ
சாயினும் சான்றவர் செய்கலார்; சாதல்
ஒருநாள் ஒருபொழுதைத் துன்பம் அவைபோல்
அருநவை ஆற்றுதல் இன்று.

(பொ-ள்) பாவமும் ஏனைப் பழியும் பட வருவ சாயினும் சான்றவர் செய்கலார் - மறுமைக்குத் தீவினையும் இம்மைக்கு மற்றைப் பழியும் உண்டாகும்படி நேர்வன தாம் இறப்பதாயினும் சான்ருேர் செய்யமாட்டார்; சாதல் ஒருநாள் ஒரு பொழுதைத் துன்பம அவைபோல் அருநவை ஆற்றுதல் இன்று - ஏனென்ருல், இறத்தல் என்பது ஒரு நாளில் ஒரு நேரத்துத் துன்பம், ஆனுல் அப்பாவமும் பழியும்போல என்றுந துன்பம; ஆனுல் அப் பாவமும் பழியும்போல் என்றுந் துன்பத்துக் கேதுவான பெருங் குற்றம் பயப்பிப்பது வேருென்றும் இல்லை.

(க-து) மானமுடையோர் பழிபாவங்கட்கு அஞ்சியொழுகுவர்.

---

* குறள், ௩எ: ௪௦.

(வி - ம்) எனையென்றார் மற்றொன்றாகிய வென்றற்கு. வருவ, பெயா. சாதலின் இன்னாத தில்லையாகலின்* அவ்வின்னலின் உயர்வு தோன்றச் சாயினும் என்றார். அருநவை, தீர்தற்கரிய குற்றம். ரு

**296.** மல்லன்மா ஞாலத்து வாழ்பவ ருள்ளெல்லாம்
செல்வ ரெனினும கொடாதவர் நல்கூர்ந்தார;
நல்கூர்ந்தக் கண்ணும் பெருமுத் தரையரே,
செல்வரைச் சென்றிரவா தார்

(பொ - ள்) மல்லல் மா ஞாலத்து வாழ்பவருள் எல்லாம - வளப்பமிகக இப் பெரிய உலகில் உயிர்வாழ்பவரெல்லாருள்ளும், செல்வர் எனினும கொடாதவர் நல்கூர்ந்தார் - பொருளுடையராயினும பிறர்கொன்று உதவாத இயல்புடையார் வறியரேயாவர், நல்கூர்நதக்கண்ணும் பெருமுத்தரையரே செல்வரைச சென்று இரவாதார் - வறுமையுற்றவிடததும் பொருளுடையாரிடம் சென்று ஒன்று இரவாதவர் பெருமுத்தரையரையொதத பெருஞ செல்வரேயாவர்.

(க - து) உலகத்தில் ஒன்று உதவும் நிலையும் இரவா நிலையுமே செல்வநிலையாகும்.

(வி - ம்) பெருமுத்தரையர்† ரென்பாா, இவ் வாசிரியர் காலத்தில் விளஙகிய பெருஞ்செல்வராவா; பெருமுத்தரையரே என்னும் ஏகாரத்தை நல்கூர்ந்தா ரென்பதற்கும் ஒட்டுக. கொடாதவர் செல்வத்தாற் பயன் பெறாமையின், 'நல்கூர்ந்தா' ரெனவும், நல்கூர்ந்தக்கண்ணும் மானத்தோடு மனவமைதியாய் வாழ்தலின் பிறரை இரவாதவர் பெருமுததரையரே யெனவுங கூறப்பட்டனர். சு

**297.** கடையெலாம் காய்பசி அஞ்சுமற் றேனை
இடையெலாம் இன்னுமை அஞ்சும்—புடைபரந்த
விற்புருவ வேனெடுங் கண்ணாய்! தலையெல்லாம்
சொற்பழி அஞ்சி விடும்.

(பொ - ள்) புடை பரந்த வில் புருவ வேல் நெடு கண்ணாய் - பக்கங்களில் தசை பருத்த வில்போலும் புரு

* குறள். உகூ : கO. †நாலடி. உO: கO.

வங்களையுடைய வேல்போலும் நீண்ட கண்களமைந்த பெண்ணே! கடை எலாம் காய் பசி அஞ்சும், இடை எலாம் இன்னமை அஞ்சும், மற்று ஏனைத் தலை எலாம் சொல்பழி அஞ்சிவிடும் - மக்களிற் கடையானவரெல்லாரும் தம்மை வருத்தும் வயிற்றுப்பசிக்கு அஞ்சி மானங் கைவிடுவர்; இடைப்பட்டவரெல்லாரும் தம் வாழ்க்கையில் வரும் உயிரிறுதி முதலிய துன்பங்களுக்கு அஞ்சி மானத்தை விட்டொழுகுவர்; ஆனல் மற்றத் தலையானவரெல்லாரும் பழிச் சொற்களுக்கு அஞ்சி மானம் விடாது நடந்துகொள்வர்.

(க - து) பழிச்சொல்லுக்கு அஞ்சுகின்ற மானத்தோடு உயிர் வாழ்தலே தலைமக்களின் செயலாகும்.

(வி - ம்) "காய்பசிக் கடும்பேய்"* என்றார் பிறரும். கடை இடை தலை யென்பன மக்களைக் குறித்தன; மற்று, வினைமாற்று. பசி நீக்கமே நோக்கமாக உயிர் வாழ்வோர் கடையானவரெனவும், ஏனை வாழ்க்கையின்பமே நோக்கமாக உயிர்வாழ்வோர் இடையானவரெனவும், மானங்காத்தலே நோக்கமாக உயிர்வாழ்வோர் தலையானவரெனவும் இச் செய்யுள் கூறிற்று; மானமாவது பழிச் சொல் அஞ்சி யொழுகுத லென்க. "சான்றோர் பழியொடு வரூஉம் இன்பம் வெஃகார"† என்றார் அகத்திலும். விடும் என்னும் விகுதி அந்நிலையில் அவா உறுதியுடன் நடந்துகொள்வரென்னுந் துணிவுப் பொருள் உணர்த்திற்று. சாதலின் இன்னாத தில்லையாகலின், இன்னமை உயிரிறுதியாகிய துன்பத்தையும் உணர்த்துதல் கண்டு கொள்ளப்படும்; புருவங்களையுடைய கண் என்க. எ

**298.** நல்லர் பெரிதளியர் நல்கூர்ந்தார் என்றெள்ளிச்
செல்வர்சிறு நோக்கு நோக்குங்கால்—கொல்லன்
உலையூதுந் தீயேபோல் உள்கனலுங் கொல்லோ,
தலையாய சான்றோர் மனம்.

(பொ - ள்) நல்லர், பெரிது அளியர், நல்கூர்ந்தார் என்று எள்ளிச் செல்வர் சிறுநோக்கு நோக்குங்கால் - இவர் நல்லவர், மிகவுங் கனிவுடையர், ஆயினும் வறியராயிருக்கின்றார் என்று இகழ்ச்சியால் நல்லியல்புகளை

* மணிமே. : ௬ அ௨. † அகநா. ௧௧௨.

இகழ்ந்து கூறிச் செல்வர்கள் சிறுமைப் பார்வை பார்க்குங் கால், தலையாய சான்றோர் மனம் கொல்லன் உலையூதும் தீயேபோல் உள் கனலும் - தலைமக்களான சான்றோர் களின் உள்ளம் கொல்லனது உலைக்களத்தில் ஊதியெழுந் தீச்சுடர்போல் உள்ளே அழல் கொள்ளும்.

(க - து) மெய்யறிவின்றி நல்லியல்புகளைப் பழித் தொதுக்கும் செல்வர் உரைகட்குச், சான்றோர் உள்ளம் மிகவும் அழலும்.

(வி - ம்) சிறு நோக்கு, பொருள்செயா நோக்கு; "சிறு நகை"* என்புழிப்போல. கொல்லும் ஒவும் அசை. நல்லியல்புகள் பால் மதிப்பின்மையே மாணிகள் உள்ளம் அத்தனை அழல் கொள்ளு தற்கு ஏதுவாயிற்று. தலையாய என்றார் அச செல்வர் முதல் அனைவரினும் மேலாயவ ரென்றற்கு. சினம் ஆறுதல் அவரியல் பாகலின், உள்கனலும் எனப்பட்டது. அ

299. நச்சியார்க் கீயாமை நாணன்று, நாளும்
அச்சத்தால் நாணுதல் நாணன்றாம் ;—எச்சத்தின்
மெல்லிய ராகித்தம் மேலாயார் செய்தது
சொல்லா திருப்பது நாண்.

(பொ - ள்) நச்சியார்க்கு ஈயாமை நாண் அன்று - தம்மை விரும்பிவந்தடைந்தவர்க்கு ஒன்று உதவமாட் டாமை நாண் அன்று; நாள் நாளும அச்சத்தால் நாணுதல் நாண் அன்று - நாடோறும் தீயவை அஞ்சும் அச்சத்தால் அவை செய்ய நாணுதலும் ஒரு நாண் அன்று; எச்சத்தில் மெல்லியராகித் தமமேலாயார் செய்தது சொல்லாதிருப்பது நாண் - தமது மரபில் தாம் வீரம் முதலியவற்றில் எளிய ராகித் தம் முன்னோர் ஆற்றிய அரிய செயல்களைத் தமக் கொரு பெருமையாகச் சொல்லிக்கொள்ளாதிருத்தலே மாணிகட்கு மேலான நாணமாவதாகும்.

(க - து) தம் செயல்களால் தாம் பெருமை கொள்ளு தலே மாணிகட்கு அழகு.

* மணிமே. கஅ : அகூ.

(வி - ம்) நாணம்; ஈண்டு நல்லியல்பாகக் கருதப்பட்டது. நச்சியார்க்கு ஈயமாட்டாமை காரணமாக நாணுதலும் அச்சத்தால் நாணுதலும உயர்ந்த நாணஙகளாயினும் அவற்றினும் உயர்ந்த தொரு நாணத்தின் மேன்மை தேற்றுமபொருட்டு, அதனை நோக்க அவை நாண் அல்ல என்றார். ஆம், அசை. எச்சம என்றது, ஈண்டு வழிவழி மரபு; "வண்மையும் மாண்பும் வளனும் எச்சமும் தெய்வமும் யாவதும் தவமுடையோர்க்கு"* என்றதிற் காண்க. தாம் முயன்று தமது எளிமையை நீக்கிக்கொள்ளாமை மானமுடைய ஒருவற்கு மிக நாணத்தகுவதாதலின், இவ்வாறு கூறினார். ௯

**300.** கடமா தொலைச்சிய கானுறை வேங்கை
இடம்வீழ்ந்த துண்ணு திறக்கும ;—இடமுடைய
வானகம் கையுறினும வேண்டார் விழுமியோர்,
மானம் மழுங்க வரின்.

(பொ - ள்) கடம் மா தொலைச்சிய கான் உறை வேங்கை இடம வீழ்ந்தது உண்ணாது இறக்கும் - மதம் பொருந்திய யானையை அதன் வலி தொலைத்து வீழ்த்திய காட்டிலுறையும புலி, தனக்கு இடப்பக்கம் வீழ்ந்த அவ் வியானையை, தான் பசி மிகுதியால் உயிர் துறக்குந் தறு வாயிலிருபபினும, உண்ணமல் உயிர்விடும்; இடம உடைய வானகம கையுறினும வேண்டார் விழுமியோர் மானம மழுங்கவரின் - ஆதலால் செல்வப பெருக்குடைய துறக்க வுலகம் தானே தன் கையசபபடினும அது தமது மானம் கெட வருவதாயின் அதனைப பெரியோர் விருமபார

(க - து) மானத்தால் உண்டாகும் இன்பமே இன்ப மாகும்.

(வி - ம்) "கிடந்துயிர மறுகுவதாயினும், இடம்படின் வீழ் களிறு மிசையாப் புலி"† என்றார பிறரும். 'இடமுடைய வான கம்' என்றவிடத்து இடம் என்றது வளம் உணர்த்தும்; "இட மில்லாக் காலும்"‡ என்புழிப்போல. ஈண்டுப் போகம் உணர்த் திற்று. 'கையுறின்' என்றது, கிடைப்பினும் என்னும்பொருட்டு. 'மழுஙக' வென்னுங குறிப்பாற், பெரியோர்களுக்குள்ள மேன்மை யெல்லாம் அவர்கள்பால இம்மானம் என்னும் உயர் குணம் ஒன்று என்றும் பொன்றாது சுடர்விட்டுக் கொண்டிருப்பதுதான் என்பது பெறப்படும். ௰

* பதிற். அ : ௪. † அகம் உ௯. ‡ குறள், ௯௰எ : ௪.

## ௩௧. இரவச்சம்

மானக்குறைவுக் கேதுவான இரத்தலுக்கு அஞ்சி யொழுகுதல்.

**301.** நம்மாலே யாவரிந் நல்கூர்ந்தார் எஞ்ஞான்றுந
தம்மாலாம் ஆக்கம இலரென்று—தம்மை
மருண்ட மனத்தார்பின் செல்பவோ, தாமும்
தெருண்ட அறிவி னவர்.

(பொ - ள்) நமமாலே ஆவா இந நல்கூர்ந்தார் - இவ் வறுமையாளர் நம் உதவியினுலேயே வாழ்வு பெறுதற் குரியர்; எஞ்ஞான்றும் தம்மால் ஆம் ஆக்கம இலர் - எந்த நாளிலும தம் வல்லமையால் உண்டாகப்பெறும் வாழ்வு இல்லாதவர், என்று தம்மை மருண்ட மனத்தார் பின் - என்று செருக்கித் தம்மை உயர்ந்தோராக மயங்கிப் பெருமிதங்கொள்ளும் மனப்பான்மையுடையார பின்னே, தெருண்ட அறிவினவர் தாமும செல்பவோ - தெளிந்த மெய்யறிவினையுடைய மேலோரும் இரந்து செல்வரோ? செல்லார்

(க - து) பிறரை எளியராகவுந தம்மைப பெரியராக வுங் கருதும் உள்ள முடையோர்பால் இரததற்கு அஞ்சுதல் வேண்டும.

(வி - ம்) ஆதல், ஈண்டு வாழ்வு பெறுதல்: ஆக்கம் என்றதும் அது. தம்மால் என்றுரா, தமது முயற்சி வல்லமையால் என்றற்கு. தக்கோர்க்கு உதவிசெய்தே தாம் பெரியராதல் வேண்டுமென்றறி யாமையின்* 'மருண்ட' என்றும், வாழ்க்கையின பயனாகிய தெளிவு பொருளினுலேயே வருவதன்று என்றறிந்தொழுகுதலின் 'தெருண்ட' என்றுங் கூறினர். 'மருண்ட மன'மென்றும், 'தெருண்ட அறி'வென்றுங் கூறிய வேறுபாடும் அறிதற்குரியது. க

**302** இழித்தக்க செய்தொருவன் ஆரஉணலின்
பழித்தகக செய்யான் பசித்தல் தவறே?
விழித்திமைக்கு மாத்திரை யன்றே, ஒருவன்
அழித்துப் பிறக்கும் பிறப்பு

* புறம். ௭௨; ௧௨ - அ.

(பொ - ள்) இழித்தக்க செய்து ஒருவன் ஆர உணலின் பழித்தக்க செய்யான் பசித்தல் தவறோ - இழிக்கத் தக்க மானக்குறைவான செயல்களைச் செய்து ஒருவன் வயிறார உண்ணுதலைவிட உலகம் பழிக்கத்தக்க அச செயல்களைச் செய்யாளுய் வறுமையாற் பசியோடிருத்தல் தவறாகுமோ? ஒருவன் அழிதது பிறக்கும் பிறப்பு விழித்து இமைக்கும மாத்திரையன்றோ - ஏனென்றால், அழிக்கப் பட்டு ஒருவன் பிறககும பிறபபு இமைத்துப பின் கண் திறக்கும் நொடிப்பொழுதாமன்றோ ?

(க - து) நொடிபபொழுதில் மாய்தற்குரிய இப் பிறவியின் பொருட்டு மானக்குறைவான இரததல் செயலைச் செய்து உயிர பிழைத்தல் ஆகாது.

(வி - ம்) இழி பழி என்பன ஈறு குறைந்து நின்றன. இழித் தக்க, பழித்தக்க எனபவை, பெயாகள். இழிவுடைய செயல்கள் பழிப்புடையனவாகலின், 'இழிக்கத்தக்க' 'பழிக்கத்தக்க' எனக் காரண காரியமாக வேறுபடுத்திக கூறப்பட்டன. அழிதுதுப் பிறக் கும் என்றதற்கேற்ப, இமைத்து விழிக்கும் என்று மாற்றிக்கொள்க. 'பிறந்தவா சாதலும் இறந்தவா பிறததலும உறஙகலும் விழித்தலும் போன்ற துணைமையின்'* இஙஙனங கூறினா. உயிரின் பெருங குண விளககமே பிறவி யெடுத்தலால ஒருவன அடையவேண்டும் பயனுகலின, அப் பெருங குணம் அழியப் பிறவியை ஓம்புதல் வீண் என்றபடி; பிறவும் ஏற்றவாற்றிற் கிஙஙனம் உரைதுதுக் கொள்க.　　　　உ

303. இல்லாமை கந்தா இரவு துணிந்தொருவர்
செல்லாரும் அல்லர் சிறுநெறி ;—புல்லா
அகம்புகுமின் உண்ணுமின் என்பவர்மாட் டல்லான்
முகம்புகுதல் ஆற்றுமோ மேல் ?

(பொ - ள்) இல்லாமை கந்தா இரவு துணிந்து ஒருவர் செல்லாரும் அல்லா சிறுநெறி - வறுமை காரணமாக இரத்தலுக்குத் துணிந்து அச் சிறுவழியில் ஒருவர் செல் லுங் கட்டாய முடையராதலுங் கூடும; ஆனல் ; புல்லா அகம் புகுமின் உண்ணுமின் என்பவர்மாட்டு அல்லால்

* மணிமே. கசு : அசு - எ.

முகம் புகுதல் ஆற்றுமோ மேல் - தாம் செல்லுமுன்பே தம்மை முன்போந்து தழுவி, வீட்டுக்கு வாருங்கள், உண்ணுங்கள் என்று வரவேற்பாரிடத்தன்றி மேன்மக்கள் ஏனையோரிடம் தலை காட்டுதல் செய்வரோ? தலை காட்டாரென்க.

(க - து) தம்மை வரவேற்காதவரிடம் வறுமை காரணமாகவும் இரத்தற்கு மேலோர் அஞ்சுவர்

(வி - ம்) கந்தென்றது, ஈண்டுக் காரணமென்னும்பொருட்டு. "பழமை கந்தாக"* "காதன்மை கந்தா"† என்புழிப்போல. இரத்தல், 'சிறுநெறி' எனப்பட்டமை கருதற்பாலது. புலவா, உடன்பாடு. பிறர் குறிப்பிற் கேற்றவாறு தமது முகத்தை நொடித்துக்கொண்டு நுழையும் இரவின இழிவு தோன்றத், தலை காட்டுதல் ஈண்டு 'முகம்புகுத' லெனப்பட்டது. இவ் விழிவு மேற் செய்யுளிலும் வருதல் காண்க. ௩

**304.** திருத்தன்னை நீப்பினும் தெய்வம் செறினும்
உருத்த மனத்தோ டுயாவுள்ளி னல்லால்,
அருத்தம் செறிக்கும் அறிவிலா பின்சென்
றெருத்திறைஞ்சி நில்லாதா மேல்

(பொ - ள்) திரு தன்னை நீப்பினும தெய்வம் செறினும் உருத்த மனத்தோடு உயர்வு உள்ளினல்லால் - திருமகள் தன்னைத் துறந்தாலும ஊழ் உருத்தெழுந்தாலும் தாம் மேலும ஊக்கமுற்ற உள்ளத்தோடு உயர்ந்த செய்கைகளைக் கருதி யொழுகுதலல்லால், அருத்தம் செறிக்கும அறிவிலார் பின் சென்று எருத்து இறைஞ்சி நில்லாதாம் மேல் - செல்வத்தை இறுக்கிப் பிடிக்கும மெய்யறிவில்லாக் கீழ்மக்கள் பின்னேபோய் மேலோர் தலைவளைந்து இரந்து நில்லார்.

(க - து) திரு நீங்கினும் ஊழ் கறுவினுங்கூட மேலோர் இரத்தற்கு அஞ்சுவர்

(வி - ம்) திரு பொருளன்று, பொருள் பெறுதற்குரிய பேறு; "திருவினும் நிலையிலாப் பொருள்"‡ என்பதன்கண் இவ் வேறு

* நாலடி. ௩க : க0. † குறள், ௫க : எ. ‡ கலித். அ.

பாடு புலப்படும். தெய்வ மென்றது, அறக்கடவுள் ; ஆவது, ஊழ் ; "தெய்வப் புணர்ச்சி"* என்பதிற்போல. உருத்த - உருக்கொண்ட, முனைந்த வென்க. எருத்து - கழுத்து ; எருத்திறைஞ்சி நிற்றல் இரத்தலின் இழிவு காட்டிற்று. மேல், மேலோர்க்கு ஆகுபெயர் ; நில்லா தென்னும் அஃறிணை முடிபு மேல் என்னுஞ் சொல் கரு திற்று. இவ்வாறு முற்செய்யுளிலும் வந்தமை நினைவு கூர்க. ௪

**305.** கரவாத திண்ணன்பின் கண்ணன்னா கண்ணும்
இரவாது வாழ்வதாம வாழ்க்கை ;—இரவினை
உள்ளுங்கால் உள்ளம் உருகுமால், என்கொலோ
கொளளுங்கால் கொள்வார் குறிப்பு.

(பொ - ள்) கரவாத திண் அன்பின் கண் அன்னார் கண்ணும் இரவாது வாழ்வதாம் வாழ்க்கை-தமக்கொன்று ஒளியாத உறுதியான மெய்யன்பினையுடைய கண்போன்ற அன்பர்களிடத்தும் யாதும் இரத்தல் செய்யாது வாழ்வது வாழ்க்கையாகும ; இரவினை உள்ளுங்கால் உள்ளம் உருகும் - இரத்தலாகிய செயலை நினைக்கும்பொழுதே உள்ளம கரைந்து அழிகின்றது ; கொள்ளுங்கால் கொல்வார் குறிபபு என்கொலோ - அவ்வாறுனல், பிறரிடம் ஒன்று ஏற்குங்காலத்தில் அங்ஙனம ஏற்பவரது கருத்துத்தான் எவ்வாறு நையாநிற்கும் !

(க - து) அன்பர்களிடத்தும் இரக்குந்தொழில் உயிராற்றலை ஒடுக்கும.

(வி - ம்) அனபின் அன்னாரென்க. ஆலும கொல்லும் அசை. குறிப்பு என்றூ, அவர கருதது அந்நேரத்தில், இடுவார கருத்தின் வழியெல்லாம இயஙகி ஒன்று பெறுதலில் முனைந்து நிற்றலின். அன்பரிடதததும் இரததல அஞ்சுகவென்பது இச செய்யுளிற் பெறப்பட்டது. "கரவாது உவந்தீயும கணணன்னா கண்ணும், இரவாமை கோடி யுறும்", "இரவுள்ள உள்ளம் உருகும்" என்னும் நாயனார் திருமொழிகள்† இஙகு ஒப்புநோக்கற்பாலன. ௫

**306.** இன்னு இயைக இனிய ஒழிகென்று
தன்னையே தானிரப்பத் தீர்வதற்—கென்னைகொல்
காதல் கவற்றும் மனத்தினுற் கண்பாழ்பட்
டேதி லவரை இரவு.

* இறைய. உ - உரை † குறள், ௧0௭ : ௧, ௯.

(பொ - ள்) இன்னா இயைக இனிய ஒழிக என்று தன்னையே தான் இரப்பத் தீர்வதற்கு - தூய மெய்யுணர்வு உண்டாதற்கு உலகத்துன்பங்களே ஏதுவாயிருத்தலின், அத்துன்பங்கள் வந்துபொருந்துக, இன்பந் தருவன நீங்குக என்று தன் உள்ளத்தையே தான் வேண்டித் தெளிவு செய்துகொள்ள அதனால் தம்மைவிட்டு நீங்கிவிடுதற்குரிய பொருள் முட்டைக்காக, காதல் கவற்றும் மனத்தினால் கண் பாழ்பட்டு ஏதிலவரை இரவு என்னைகொல் - அதற்கு மாறாய், அப் பொருளின்மேற் கொள்ளும் அவா வருத்து கின்ற மனத்தினால் அறிவு பாழாகி அயலாரை ஒன்று இரத்தல் ஏன்?

(க - து) பொருளால் வருந் துன்பத்தை நோக்கி அதனைத் துறக்குந்தெளிவுடையோர், அப்பொருளுக்காகப் பிறரை இரக்க அஞ்சுவர்

(வி - ம்) தீர்வது, பெயர்; நான்கனுருபு பொருட்டுப்பொருளது. கண் என்றது அறிவு. "பெரியோர்ப் பிழைப்பதோர் கண்ணிலி யாகும்"* என்பதனானுங் காண்க. அவாவால் அறிவு மறைக்கப்படுதலின், 'காதல் கவற்று மனத்தினாற் கண்பாழ்பட்' டென்றார். இரவொழிதற்கு இச் செய்யுளிற் கருவி கூறப்பட்டது. சு

**307.** என்றும் புதியார் பிறப்பினும் இவ்வுலகத்
தென்று மவனே பிறக்கலான்—குன்றின்
பரப்பெலாம் பொன்னொழுகும் பாயருவி நாட!
இரப்பாரை எள்ளா மகன்

(பொ - ள்) குன்றின் பரப்பெலாம் பொன் ஒழுகும் பாய் அருவி நாட - மலையின் பரந்த இடமெல்லாம் பொன் பரவுதற்கு ஏதுவான பாயும் மலையருவிகளையுடைய நாடனே! என்றும் இவ்வுலகத்துப் புதியார் பிறப்பினும் - இந்த உலகத்தில் என்றும் புதிய மக்கள் பிறந்தாலும், என்றும் அவனே பிறக்கலான் - என்றும் அவனொருவனே உண்மையிற் பிறத்தலுடையான்; அவன் யாரெனில்; இரப்பாரை எள்ளா மகன் - இரந்துண்ணும் எளியோரை

* பெருங. உஞ்சைக். கசுஉ-ரு.

இகழாதொழுகும் மகனெனத் தக்கான் என்க; (ஏனை யோர் பிறந்தும் பிறவாதவராவர்.)

(க - து) இரப்பாரை இகழாதவனே மகனெனப் பாராட்டப்படும் பிறப்பின் பயனெய்துவோனாவன்

(வி - ம்) புதியாரென்றது, புதிய வடிவினையுடைய மக்கள்; அவனே என்று முதலிற் சுட்டிப் பின் விளக்கினார், இது செய்யுளாகலானும்,* உலகத்தில் அவனொருவனே பலராலும் மனிதனாக மதிக்கப்பட்டுப் பிறவியின் பயனுடையனாய், பாரி வள்ளல்போன்று, ஏனையோரினும் மேம்பட்டு விளங்குதல் வெளிப் படையாகலானு மெனக. அவன் என்றது இனவொருமை. பிறக்க லான் என்பதில் அல தொழிற்பெய ரீறு. எ

308. புறத்துத்தன் இன்மை நலிய அகத்துத்தன்
நன்ஞானம் நீக்கி நிறீஇ ஒருவனை
ஈயாய் எனக்கென் றிரப்பானேல் அந்நிலையே
மாயாதோ மாற்றி விடின்.

(பொ - ள்) புறத்துத் தன் இன்மை நலிய - புறத்தே உடம்பைத் தனது வறுமை வருத்த அதனால், அகத்துத் தன் நல்ஞானம் நீக்கி நிறீஇ - உள்ளத்தில் தனது நலலறிவை ஒதுக்கி மனந்துணிந்து, ஒருவனை ஈயாய் எனக்கு என்று இரப்பானேல் - பொருளாளனொருவனை எனக்கு யாதானும் இடு என்று மானமுடையோன் இரந்துநிற்பானாயின், மாற்றிவிடின் அந்நிலையே மாயாதோ - அவன் இல்லை என்று மறுத்துவிட்டால் அந்நொடியே அம் மானி உயிரழிவா னன்றோ? (ஆதலால், இரத்தல் எந்நிலையிலும் அஞ்சுதற் குரிய தென்க.)

(க - து) மானிகள் இரந்து கருத்தழிதலினும் இர வாது நலிதலே நன்று.

(வி - ம்) புறத்து என்றார், உடம்பையும் உலகத்தையும் நினைந்து; நன்ஞானம் என்பதன் குறிப்பானும், 'நிறீஇ' என்னுங் குறிப்பானும் இரப்பான் என்றது, ஈண்டு மானமுடையோனை யென்க. உள்ளத்தை ஒருவழி நிறுத்தி யென்றற்கு நிறீஇ

† தொல். கிளவி. ௩௧.

யென்றார். உயர்ந்தோர், தாழ்ந்தோர்க்கு இடுகின்ற தொழில் ஈத லெனப்படுமாகலின்,* அவ்விழிவு தோன்ற 'ஈயாய்' எனப் பட்டது. மாய்தலென்றது, சாதலொத்த துன்பமடைதல்; "இரப் பவர் சொல்லாடப் போஒம் உயிர்"† என்றார் திருவள்ளுவரும். அ

**309.** ஒருவ ரொருவரைச் சார்ந்தொழுகல் ஆற்றி
வழிபடுதல் வல்லுத லல்லால்,—பரிசழிந்து
செய்யீரோ என்னுனும் எனனுஞ்சொற் கின்னுதே
பையத்தான் செல்லும் நெறி?

(பொ - ள்) ஒருவர் ஒருவரைச் சார்ந்தொழுகல் ஆற்றி வழிபடுதல் வல்லுதலல்லால் - வறுமையாளரொரு வர் செல்வரொருவரைச சார்ந்து இருந்துகொள்ளுதல் செய்து அவரைப் பின்பற்றி யொழுகுதல்‡ கூடுவதன்றி, பரிசு அழிந்து என்னுனும் செய்யீரோ என்னுஞ் சொற்குப் பையத் தான் செல்லுநெறி இன்னுதே - தமது இயல்பாகிய மானம் அழிந்து ஏதானும் ஈயீரோ என்றிரக்கும் இரப் புரைக்கு, அடக்கமாகத் தான் ஒழுகிக்கொள்ளும் அம் முறைமை தீதாமோ? (அது, இதனினும் மேல் என்க.)

(க - து) தொழுதுண்டு வாழ்தலினும் இரந்துண்டு வாழ்தல் அஞசுக.

(வி - ம்) ஆற்றி என்றார், அஃதருமைபாதலின். மானமே உயிரினியலபாய் விளங்குதலின், அதனே வாளாப் பரிசெனவே விதந்தார். பொறுமையோடு அடங்கி நடத்தல், 'பையச் செல்லுத' லெனப்பட்டது. தொழுதுண்டு வாழ்தல் வறுமையினுஞ் சற்று வலிவுடைத்தாதல் பற்றி, 'வல்லுதல்' என்னுஞ் சொல் பெய் துரைக்கப்பட்ட தென்க. ஏகாரம், வினு. கூ

**310.** பழமைகந் தாகப் பசைந்த வழியே
கிழமைதான் யாதானுஞ் செய்க;—கிழமை
பொறுஅ ரவரென்னின் பொத்தித்தம் நெஞ்சத்
தறுஅச் சுடுவதோர் தீ.

(பொ - ள்) பழமை கந்தாகப் பசைந்த வழியே கிழமைதான் யாதானும் செய்க - பழமையாகிய நட்பே

* தொல். எச்ச. சகூ. † குறள், ௧0எ : ௧0. ‡ புறம். ௧அ௬ : உ.

பற்றுக்கோடாக நண்பர்பால் ஒன்று பெறுதற்கு உள்ளம் விரும்பியவிடத்து உரிமையால் அவ்வாறு ஏதேனுஞ் செய்து கொள்க; கிழமை பொருஉர் அவரென்னின் பொத்தித் தம் நெஞ்சத்து அறாச் சுடுவதோர் தீ - ஆனால், அங்ஙனம செய்யும் உரிமைச் செயலை அந்நண்பர் பொறாரென்றால், தமது நெஞ்சத்தில் மூட்டப்பட்டு அம் மானக் குறைவால் உண்டான வேதனை யென்னும் ஒரு தீ என்றும் நீங்காது சுடுவதாகும். (ஆதலால், உரிமை கருதியும இரத்தல் அஞ்சப் படுமென்பது.)

(க - து) பழமை கருதியவிடத்தும் இரத்தலுக்கு அஞ்சுக.

(வி - ம்) தடுக்கும் அறிவைப் பிற்படுத்தி உள்ளம் இரத்தற்கு மீதூர்ந்து விழைந்தவழி யென்றற்குப், பசைந்த வழியே யெனப்பட்டது. "பசைஇப் பசந்தன்று நுதல்"* என்றார் பிறரும். இரத்தல் செயக என்றற்கு உள்ளங் கூசுதலின், 'யாதானுஞ் செய்க' என்று வேண்டாவகையாய்க் கூறினார். அங்ஙனம் மனம் பொறுத்து அது செய்தும் அதனை அந் நண்பர் கருதாது கைவிடுவரென்றால், பின்பு, நினைய நினையக் கனந்தெழும் வேதனைத் தீ உள்ளத்தே அறாது மூண்டுவிடுமாகலின், அந் நிலையினும் இரததல் பெரிதஞ்சப்படும் என்பது பின் வரிகளால் உணர்த்தப்பட்டது. ௧0

---

## ௩௨. அவையறிதல்

அவையிலுள்ளாரின் தகுதி தெரிந்து ஒழுகுதல்.

**311.** மெய்ஞ்ஞானக் கோட்டி உறழ்வழிவிட் டாங்கோர்
அஞ்ஞானந் தந்திட் டதுவாங் கறத்துழாய்க்
கைஞ்ஞானங் கொண்டொழுகுங் காரறி வாளர்முன்
சொன்ஞானஞ் சோர விடல்.

(பொ - ள்.) மெய்ஞ்ஞானக் கோட்டி உறழ்வழி விட்டு - உண்மை யறிவினையுடைய கூட்டத்திற் கலந்து

* குறுந். அஎ.

அவர் வழி நின்றொழுகுதலை விடுத்து, ஆங்கு ஓர் அஞ்ஞானம் தந்திட்டு அது அறத்துழாய் - அதற்கு மேலும அம மெய்ஞ்ஞான முடையாரிடையே தமது ஓர் அறியாமைக் கருத்தையும உரைத்து, அதனையே மிகவும பன்னிப் பன்னிப பேசி, கைஞ்ஞானம கொண்டு ஒழுகும கார அறிவாளர்முன் - இவவாறு தமது சிற்றறிவே பற்றி யொழுகுகின்ற மயக்கவறிவினரெதிரில், சொல ஞானம சோர விடல் - புகழ்தற்குரிய தமது ஞானபபெருமையினைக் காட்டிக கொள்ளாமல தளர்ந்துசகொளக

(க - து.) தமது சிற்றறிவையே பேரறிவாகக் கொண்டு அடங்காதொழுகுவாரிடம சான்றோர் தமது ஞானப்பெருமையை வெளிபபடுத்திக்கொள்ளார.

(வி - ம்) 'அதுவாங்கு' என்னுமிடத்தில் 'ஆங்கு' அசை. 'கை' சிறுமைப் பொருட்டாதல், 'கையேடு' 'கைவாள்' என்பவற்றானுங காணக. அறியாமை மிகுதியாக உடைய அறிவென்றற்குக் 'காரறிவு' எனப்பட்டது. விடல் எனனும வியஙகோள் ஈண்டு உடன்பாடு. பயனில்லாமையின விடுக என்றார். க

**312.** நாப்பாடஞ் சொல்லி நயமுணர்வார் போறசெறிக்குந்
தீப்புலவற் சேரார் செறிவுடையார்;—தீப்புலவன்
கோட்டியுட் குன்றக் குடிப்பழிக்கும் அல்லாக்கால்
தோட்புடைக் கொள்ளா எழும்.

(பொ - ள்) நாப் பாடம் சொல்லி நயம் உணர்வார் போல் செறிக்கும் தீபபுலவன் சேரார் செறிவுடையார்- தாம இதற்குமுன் நெட்டுருச் செய்த பாடங்களை அப்படியே சொல்லிக்காட்டி ஏதோ பொருள் நயம் உணர்வார்போல் நடித்துத் தம் அறியாமைக் கருத்துக்களை அவற்றிற் செறித்துக் கூறும் போலிப் புலவனை அவ்வாரவாரமில்லா மெய்ப்புலவோர் அணுகார்; ஏனென்றால், தீப் புலவன் கோட்டியுள் குன்ற - மெய்ப்புலவோராகிய தமது வருகையால் அப் போலிப் புலவன் அவ்வயிற் பெருமை கெடுதலால், குடிப்பழிக்கும் - அவன் தமது

* தொல். அகத். க, இளம். உரை

குடிப்பிறப்பைப் பற்றிப் பழித்துப் பேசுவான்; அல்லாக்கால் தோட்புடைக் கொள்ளா எழும்—அல்லாவிட்டால் தன் தோளைத் தட்டிக்கொண்டு வலுச்சண்டைக்கு எழுவான் என்க.

(க - து) போலிப் புலவரோடு மெய்ப்புலவர் சேர்ந்து பெருமை குன்றுதலாகாது.

(வி - ம்) பொருள் தெரிந்து கல்லாமையின், 'நாப்பாட' மெனவும், போலிப்புலவரால் உலகுக்குத் தீமை விளைதலின் 'தீப்புலவன' எனவும் கூறினார். செறிவு, போலியாரவாரமில்லா அடக்கமுடைமை. கல்வி, அறிவு ஒழுக்கம் முதலியவற்றால் இவரைக் குறைகூறலாகாமையின் இவர் குடிப்பிறப்பைப் பற்றிப் பேசும் எனவும், அதனை எவரும் பொருள் செய்யாமையின் தோள்தட்டி எழும் எனவும் உரைத்தார். "வெல்வது வேண்டி வெகுண்டுரைக்கும் நோன்பிலி"* என்றார் பிறரும். 'குன்ற' என்னும் எச்சம காரணப்பொருட்டு. உ

313 சொற்றாற்றுக் கொண்டு சுனைத்தெழுதல் காமுறுவர்,
கற்றாற்றல் வன்மையுந் தாந்தேற்றார்,—கற்ற
செலவுரைக்கும் ஆறறியார், தோற்ப தறியார்,
பலவுரைக்கும் மாந்தர் பலர்.

(பொ - ள்) சொல் தாறு கொண்டு சுனைத்தெழுதல் காமுறுவர் - சொல்லாகிய முட்கோல் கொண்டு நாத்தினவெடுத்துப் பேச முற்படுதலை மிக விரும்பும் இயல்பினர், கற்று ஆற்றல் வன்மையும் தாம் தேற்றார் - நூல் நுட்பங்களைக் கற்றறிந்து ஒழுகும் வல்லமையுந் தாம் தெளியார்; கற்ற செல உரைக்கும் ஆறு அறியார் - தாம் கற்ற சிலவற்றைக் கேட்பவர் உள்ளத்திற் பதியும்படி எடுத்துரைக்கும் முறையையும் அறியார்; தோற்பது அறியார் - தம் சொற்கள் பயன்படுதலின்றி வீணாகி யொழிதலையும் கருதார்; பல உரைக்கும் மாந்தர் பலர் - ஒன்றைப் புலப்படுத்தும்பொருட்டு இவ்வாறு பல சொற்கள் சொல்லி அவம்படும் மாந்தர் உலகிற் பலராவர்.

(க - து) நாத்தினவெடுத்துப் பல சொல்லலாகாது.

* திரிகடு. உ௮.

(வி - ம்) 'காமுறும் இயல்பினர் தேறார், அறியார், அறியார். இவ்வாறு பல உரைக்கும் மாந்தர் உலகிற் பல' என்க. பொருள் வளமில்லாமையின், நயனிலாச சொற்கள் 'தாறு' எனப்பட்டன. ஏதுவை நோக்கி இடையொற்று மிக்கது. சில சொல்லல் தேறாது பல சொல்லக் காமுறுதலின்,* 'சுனைநசெழுநல்' என்றார். ஆற்றல் ஈண்டு ஒழுகுதலென்னும்பொருட்டு. 'ஆற்றுவா ராற்றல்'† என்பதும் கருதுக. உம்மை பிறவற்றிற்கும் கொள்க. ௩

**314** கற்றதூஉ மின்றிக் கணக்காயர் பாடத்தால்
பெற்றதாம் பேதையோர் சூத்திரம்—மற்றதனை
நல்லா ரிடைப்புக்கு நாணாது சொல்லித்தன்
புல்லறிவு காட்டி விடும்

(பொ - ள்) கற்றதும் இன்றிக் கணக்காயர் பாடத்தால் பெற்றது ஆம் ஓர் சூத்திரமதனை - தாம் ஆழ்ந்து பயின்றதுமின்றித் தக்க கேள்வியுமின்றிப பள்ளி ஆசிரியர் நெட்டுருச் செய்வித்த மனப்பாடத்தால் தெரிந்துகொண்டதாகிய ஒரு நூற்பாவினை, நல்லாரிடைப புக்கு நாணாது சொல்லிப் பேதை தன் புல்லறிவு காட்டிவிடும் - நற்புலவர் அவையிற் சென்று நாணுதலின்றி விரித்துரைத்து அறிவிலான் தனது சிற்றறிவினைக் காட்டிககொள்வான்.

(க - து) நூல் நுட்பங்களை நன்குணர்ந்து விளங்கும் நற்புலவரிடையில் ஏனையோர் நாவடக்கமுடையராதல் வேண்டும்

(வி - ம்) கற்றதூஉமின்றி என்னும் உம்மை கேட்டதூஉமின்றி என்பது விளக்கி நின்றது. கணக்காயர், கல்வி கற்பிக்கும் பள்ளியாசிரியர்; "கணக்காயர் இல்லாத ஊரும்"‡ என்றார் கடுகத்தினும். ஓர் சூத்திரமென்றார், வேறு தெரியாமையானும் அஃதும் அரிதிற் கிடைத்தமையானும். மற்று, அசை. பிழையைப் பிழையென்று கருதும் உள்ளவொடுக்கமில்லாமையின், 'நாணாது சொல்லி' எனப்பட்டது. ௪

**315.** வென்றிப் பொருட்டால் விலங்கொத்து மெய்கொள்ளார்
கன்றிக் கறுத்தெழுந்து காய்வாரோ—டொன்றி
உரைவித் தகமெழுவார் காண்பவே, கையுள்
சுரைவித்துப் போலுந்தம் பல்.

* குறள், சுஙு : க. † குறள், உ௯ : ௫. ‡ திரிகடு. ௯0.

(பொ - ள்) வென்றிப் பொருட்டால் விலங்கு ஒத்து மெய்கொள்ளார் கன்றிக் கறுத்தெழுந்து காய்வாரோடு - போலி வெற்றியின் பொருட்டுப் பகுத்தறிவின்றி விலங்கோ டொத்தவராய் உண்மையை அறியாமற் காழ்த்து மிகக் கொதித்து எரிந்து விழுவாரோடு, ஒன்றி உரை வித்தகம் எழுவார் சுரை வித்துப் போலுந் தம் பல் கையுள் காண்ப- நெருங்கித் தமது உரைவல்லமையைப் புலப்படுத்த முற் படும் நற்புலவர் சுரையின் விதையை ஒத்த தம் பற்களைக் கன்னத்தில் அறைந்து அவர் உதிர்த்தலால் உடனே தம் கையிற் காண்பவராவர்.

(க - து) சினத்தால் தம்மை வெல்ல முற்படும் போலிப் புலவருடன் நற்புலவர் தமது உரை வித்தகத்தைப் புலப்படுத்திக் குறைவடைதலாகாது.

(வி - ம்) கறுத்தென்றதோ டமையாது எழுந்தென்றமை யின், மிகக் கறுத்தெனப்பட்டது. உரைவித்தகத்துக்கு முற்படு வார் என்றுரைத்துக்கொள்க. சுரைவித்தென்னும் உவமை உதிர்ந்த பல்லின் இயல்புரைத்தபடி; "சுரைவித் தேய்ப்பப் பிறழ்ந்துவேருயின்"* என இவ்வுவமை பல்லுக்குப் பிறண்டும் வந்திருத்தல் அறிக. ௫

316. பாடமே ஓதிப் பயன்றெரிதல் தேற்றுத
மூடர் முனிதக்க சொல்லுங்கால்—கேடருஞ்சீர்ச்
சான்றோர் சமழ்த்தனர் நிற்பவே, மற்றவரை
ஈன்றுட் கிறப்பப் பரிந்து.

(பொ - ள்) பாடமே ஓதிப் பயன் தெரிதல் தேற்றுத மூடர் முனிதக்க சொல்லுங்கால் - செய்யுள்களை நெட் டுருச் செய்து சொல்லிக்கொண்டு அதன் பொருள் நுட்பங் கண்டு இன்புறுதல் அறியாத மூடர்கள் அருவருக்கத்தக்க உரைகளைச் சொல்லும்போது, கேடு அரு சீர்ச் சான்றோர் அவரை ஈன்றுட்கு இறப்பப் பரிந்து சமழ்த்தனர் நிற்ப - என்றும் அழிதலில்லாத சிறப்பினையுடைய மெய்ப்புலமை சான்ற பெரியோர் அம் மூடர்களைப் பெற்றெடுத்த தாய்க்

* மணிமே. ௨0 : ௫0

காக அவள் வருந்துவளே என்று மிக இரங்கி யாதுங் கூருது பொறுமையுடையரா்யிருப்பர்.

(க - து) சான்ளுேர் அவையில் மூடர்கள் யாதும் பேசித் தம்மை ஈன்ளுர் பெயர்க்கு இழுக்குத் தேடுதலாகாது.

(வி - ம்) பாடமே என்னும் ஏகாரம் பொருள் தெரியாதவ ரெனப் பிரித்து நிற்றலின் பிரிநிலை. தெரிதல், தெரிந்து இன்புறுதல். சான்ளுேன் எனக் கேட்ட தாய் ஈன்ற ஞான்றினும் பெரிதுவத்தலின்* மூடனெனக் கேட்ட தாய் அவ்வீன்ற ஞான்றினும் பெரிது வருந்துதல் ஒருதலையாகலின், 'ஈன்ருட்கு இறப்பப் பரிந்து' என்ருர்; தாய் வருந்துதல் அம் மகப் பேற்ருல யாாக்கும் யாதும் பயனின்மையினென்க. பொதுவிற் பெற்ளுேர்க் கென்ஞது ஈன் ருட் கென்ருர், அவள் வருத்தம பெரிதாகலினென்பது. க

317 பெறுவது கொள்பவர் தோள்போல் நெறிப்பட்டுக்
கற்பவர்க் கெல்லாம் எளியநூல்; மற்றம்
முறிபுரை மேனியர் உள்ளம்போன் றியாாக்கும்
அறிதற் கரிய பொருள்.

(பொ - ள்) பெறுவது கொள்பவர் தோள்போல் நெறிப்பட்டுக் கற்பவர்க்கெல்லாம் நூல் எளிய - கொடுப்பவரை மனத்துட் கொள்ளாமல் தாம் பெறுகின்ற விலைப் பொருளேயே கருத்தாகக் கொள்ளும பொது மகளிரின் தோள்கள் பலர்க்கும் எளியவாதல்போல ஒரு தொடர் புற்றுக் கற்பவரெல்லார்க்கும நூல்களின் பொதுக்கருத்துக் கள் எளியனவாய் விளங்கும் ; மற்று - ஆனல், அம முறி புரை மேனியர் உள்ளமபோன்று யாாக்கும் அறிதற்கு அரிய பொருள் - மாந்தளிர் போன்ற மேனியையுடைய அவ் விலைமகளிரின் மனம் யார்க்கும் அறிதல் அருமை யாதல் போல, நூலின் உட்பொருள்கள் எல்லார்க்கும் அறிதற்கரியனவாகும்.

(க - து) நூல்களின் நுண்பொருள் அறியும் நற்புலவோர் உலகில் மிகச் சிலராவர்.

* குறள், எ : கூ. புறம். உஎஅ.

(வி - ம்) நெறிப்பட்டுக் கற்பவர்க் கென்றார், ஓரளவு செயற்கை முயற்சிகளால் நூல்களின் மேற்போக்கான கல்வி யறிவை யாரும் அறியலாம் என்றற்கு; மற்று, வினைமாற்று. நூல்களின் ஆழ்ந்த உட் கருத்துக்களே உண்மையிற் 'பொருள்' என்பதற்குரியனவாகலின், வாளா 'பொருள்' என்றே கூறினார். அவற்றை யறிவோரே 'நூல் வழி நுனித்த நுழை நுண்ணுணர்வின'* ரென்க. எ

**318**. புத்தகமே சாலத் தொகுத்தும் பொருடெரியார்
உய்த்தக மெல்லா நிறைப்பினும்—மற்றவற்றைப்
போற்றும் புலவரும் வேறே, பொருடெரிந்து
தேற்றும் புலவரும் வேறு.

(பொ - ள்) புத்தகமே சாலத் தொகுத்தும் பொருள் தெரியார் - புத்தகங்களை மிகுதியாகத் தொகுத்து வைத் தும் பலர் அவற்றின் பொருள் தெரியாதவராவர்; உய்த்து அகமெல்லாம் நிறைப்பினும் அவற்றைப் போற்றும் புல வரும் வேறு பொருள் தெரிந்து தேற்றும் புலவரும் வேறு- பிறர் முயன்று நூல்களை வீடு முழுமையும் நிறைத்துவைத் தாலும அவற்றை அன்புடன் பாதுகாக்கும் அறிஞர்களும் வேறு, அவற்றின் கருத்தறிந்து தம்மையும் பிறரையும் தெளிவித்துக்கொள்ளும் பேரறிஞர்களும் அவரின் வேறாவர்.

(க - து) நூல்களின் கருத்தறிந்து நலம் பெறல் வேண்டும்

(வி - ம்) நூல்களிற் றெளிவு பெறுதல் பிறர் முயற்சியா லன்றென்பது 'உய்த்து அகமெல்லாம் நிறைப்பினும்' என்றதனாற் பெறப்படும். மற்று, வினைமாற்று. பொதுவாகவேனும் நூல்களின் அருமையறிந்தன்றிப் போற்றுதலாகாமையானும், அப் போற்றுத லொன்றும அவரை அவ்வறிவுத்துறையிற் செலுத்தும் வாயிலாத லானும் அவரும் ஈண்டுப் புலவரெனப்பட்டன ரென்க. 'பொருள் தெரிந்து' எனறார், பயன்கொண்டு என்னும் பொருட்டு; "நூல் விளைந்தனைய நுண்சொற் புலவர்"† என்றார் பிறரும். அ

**319**. பொழிப்பகல நுட்பநூ லெச்சமிந் நான்கின்
கொழித்தகலங் காட்டாதார் சொற்கள்—பழிப்பில்
நிரையாமா சேர்க்கும் நெடுங்குன்ற நாட!
உரையாமோ நூலிற்கு நன்கு?

---

* பெருங. இலாவா. ௫ : ௧0௨.  † சிந். ௧௩ : ௩0அ.

(பொ - ள்) பொழிப்பு அகலம் நுட்பம் எச்சம் இந் நான்கின் நூல் கொழிததது அகலம் காட்டாதார் சொற்கள் - பொழிப்புரை அகலவுரை நுட்பவுரை எச்சவுரை யென் னும் இந் நால்வகையுரைகளாலும் நூலை ஆராய்ந்து தெரிந்து அதன் விரிந்த பொருட்பெருக்கை விளக்கிக் காட்டாதவருடைய சொற்கள், பழிப்பு இல் நிரை ஆமா சேர்க்கும் நெடு குன்ற நாட - பழித்தலில்லாத காட்டாக் களின் இனத்தைத் தமது செழுமையால் தம்மாட்டு வரு விக்கும் உயர்ந்த மலைகளையுடைய நாடனே! நூலிற்கு நன்கு உரையாமோ - நூலிற்குச் சிறந்த உரையாகுமோ? ஆகாவென்க.

(க - து) ஏதொன்றையும் நால்வகை யுரைகளாலும் விளக்கிப் பேசவேண்டும்.

(வி - ம்) பொதுவின் உரைத்தல் பொழிப்பெனவும், வினவி யுரைத்தல் அகலமெனவும், ஏதுவினிறுத்தல் நுட்பமெனவும், இவற்றாற் றுணிதல் எச்சமெனவும் உரைக்கப்படும். இவற்றி னியல்பை நச். பாயிரவுரை மேற்கோள்களிற்* காணக. வளமான, ஆக்கனென்றற்குப் 'பழிப்பில் ஆமா' என்றார். கூ

**320.** இற்பிறப் பில்லா ரெனைத்துநூல கற்பினும்
சொற்பிறரைக் காக்குங் கருவியரோ?—இற்பிறந்த
நல்லறி வாளர் நவின்றநூல் தேற்றாதார்
புல்லறிவு தாமறிவ தில்.

(பொ - ள்) இற்பிறப்பு இல்லார் எனைத்து நூல் கற் பினும் சொல் பிறரைக் காக்கும் கருவியரோ - உயர்ந்த குடிபிறப் பில்லாதவர் எவ்வளவு நூல்கள் பயின்றாலும் ஏனைக் கல்லாதவரின் வழுச்சொற்களை இகழாது அடக்கும் பொறுமையாகிய கருவியை யுடையவராவரோ? ஆகார்; இற் பிறந்த நல்லறிவாளர் - ஆனால் உயர்குடியுட் பிறந்த சிறந்த அறிவுடையவர், நவின்ற நூல் தேற்றாதார் புல் லறிவுதாம் அறிவது இல் - புலனெறியுலகில் அடிப்பட்டுப் பழகிவரும் நூல்களையும் நுண் பொருள் தெளியப்பெறாத

* தொல். சிறப்புப்பாயிர வுரை, நச. மேற்.

கல்லாமையுடையவரது சிற்றறிவைத் தாம் ஆராய்ந்து காண்பதில்லை.

(க - து). நூலறிவின் சிறப்போடு குடிப்பிறப்பு மாண்புமிருப்பின், புலவர்கட்கும பொறுமையும் பெருந் தன்மையும மிகும்.

(வி - ம்) பிறர் சொல்லை யென மாறுக. ஓகாரம், வினா. கருவி யரோ வென்றார், அக் கருவி கலவி முதலியவற்றாற் கிடைப்பதன் றாய்க் குடிப்பிறப்பினாற் சிறப்பிற் கிடைக்குமென்றற்கு; "குலத் தோடு புணர்ந்த நலத்தகு நண்பின் அழுக்கா றகன்ற ஒழுக்கா றோம்பி"* என்றார் பிறரும். நவின்ற நூலென்றது, அறியும் எளிமைபற்றி ; அவ்வெளிமையினும் அதனைத் தெளியாதவரது புல்லறிவு, தானே வெளிப்படையாய் மிகுந்து தெரியினும், பெரி யோர் நோக்கம் அது காண்பதல்லாமையாற், 'புல்லறிவு அறிவது இல்' எனப்பட்டது. ௧0

---

## ருரு. புல்லறிவாண்மை

தாழ்ந்த அறிவையே உயர்ந்த அறிவாகக் கருதிக்கொண்டு ஒழுகும் இயல்பு.

**321.** அருளின் அறமுரைக்கும அன்புடையார் வாய்ச்சொல்
பொருளாகக் கொள்வர் புலவர் ;—பொருளல்லா
ஏழை அதனை இகழ்ந்துரைக்கும் பாற்கூழை
மூழை சுவையுணரா தாங்கு.

(பொ - ள்) அருளின் அறம் உரைக்கும அன்புடை யார் வாய்ச்சொல் பொருளாகக் கொள்வர் புலவர் - அருள் காரணமாக அறம்அறிவுறுததும் அன்புடைய பெரியோரது வாய்மொழியை அறிவுடையோர் பெரும்பயனுடையதாக மதித்தேற்றுக் கொள்வர் ; பாற்கூழை மூழை சுவையுண ராதாங்கு பொருளல்லா ஏழை அதனை இகழ்ந்துரைக்கும்- ஆனாற் பாலடிசிலை அகப்பை சுவையுணராமைபோல ஒரு பொருளாகக் கருதுதற்கில்லாத அறிவிலான் அவ்வாய் மொழியை மதியாது இகழ்ந்துரைப்பான்

---

* பெருங். இலாவா. ௨: ௨௨-௫.

(க - து) புல்லறிவாளர் நல்லோர் பொருளுரையை மதியாதொழுகுவர்

(வி - ம்) அன்பிருந்தன்றி அருள்பிறவாதாகலின், அருளோடு அன்பும் உரைக்கப்பட்டது. பொதுவாக அறிஞரென்றற்கு ஈண்டுப் 'புலவ'ரெனப்பட்டது மூழை சுவையுணராமைபோல அறிவிலான் அன்புடையார் வாயச்சொல்லின் பெருமையுணரானென்க. "பொரு ளுணரா ரில்வழிப் பாட்டுரைத்தல் இன்னா"* என்றதூஉங் காண்க. உவமை, ஏழைக்கு உணரும் இயல்பிலலாமை உணர்த்திற்று; காரணம் புல்லறிவின் இயல்பு அததகைத் தென்றபடி. க

**322.** அவ்வியம் இல்லார் அறத்தா றுரைக்குங்கால்
செவ்விய ரல்லார் செவிகொடுத்துங் கேட்கலார்;
கவ்வித்தோல் தின்னுங் குணுங்கர்நாய் பாற்சோற்றின்
செவ்வி கொளல்தேற்றா தாங்கு

(பொ - ள்) கவ்வித் தோல் தின்னும் குணுங்கர் நாய் பால் சோற்றின் செவ்விகொளல் தேற்றாதாங்கு - தோலைக் கவ்வித் தின்னும் புலையருடைய நாயகள் பாலடிசிலின் நன்மையறிதலைத தெரிநதுகொள்ளாமைபோல, அவ்விய மில்லார் அறத்தாறு உரைக்குங்கால் செவ்வியரல்லார் செவி கொடுத்தும் கேட்கலார் - அழுக்காறு முதலிய மனமாசுக ளில்லாதவர் அறநெறி அறிவுறுததுமபோது நல்லறி வில்லாப் புல்லறிவாளர் அதனைக் காதுகொடுத்துங் கேட்க மாட்டார்.

(க - து) புல்லறிவுடைய கீழ்மக்கள் சான்றோர் அறி வுரைகளை ஏலார்.

(வி - ம்) உரைக்குஙகால் என்று நிகழ்கால வினையாற் கூறினார், அஃதவர்க்கு 'முந்நிலைக் காலமுந் தோன்றும் இயற்கை'† யாதலின். அஃது அவர்பால் அல்லாதார்க்குள்ள அழுக்காற்றையுங குறிப்பானுணர்த்திற்று. செவி கொடுத்தும என்றா, அற விலக்கு தல்பற்றி. குணுஙகர், புலையராதல் திவாகரத்திற் காண்க. 'செவ்வி' என்றது, அதன் நன்மையை. உ

**323.** இமைக்கும் அளவிற்றம் இன்னுயிர்போம் மார்க்கம்
எனைத்தானும் தாங்கண் டிருந்தும்—தினைத்துணையும்
நன்றி புரிகல்லா நாணின் மடமாக்கள்
பொன்றிலென் பொன்றுக்கா லென்?

* இன்னாநாற். கக. † தொல். வினை. சஙஉ.

(பொ-ள்) இமைக்குமளவில் தம் இன்னுயிர் போம் மார்க்கம் எனைத்தானும் தாம் கண்டிருந்தும் - கண்ணிமைக்கும் அத்துணைச் சிறுபொழுதில் தமது இனிய உயிரானது பிரிந்துபோம் இயல்பை எவ்வகையாலுந் தாம் தெரிந்திருந்தும், தினைத்துணையும் நன்றி புரிகல்லா நாண் இல் மடமாக்கள் பொன்றிலென் பொன்றுக்கால் என் - உலகில் உயிரோடிருப்பதற்குள் தினையளவாயினும் நற்செயல்கள் செய்து பிறவியைப் பயனுடையதாக்கிக் கொள்ளாத வெட்கமில்லா அறியாமை மாந்தர் இறந்தாலென்ன, இறவாது இருந்தாலென்ன? இரண்டும் ஒன்றே.

(க-து) புல்லறிவுடையோர் தமது வாழ்க்கையைப் பயனுடையதாக்கி இன்புறல் அறியார்.

(வி-ம்) தாம் இனிதாகக் கருதி வளர்க்கும் உயிர் என்றற்கு, இன்னுயிர் என்றார். மார்க்கமறிதல், பிறருயிர் பிரியும் வழிகளைக் காண்டலென்க. எனைத்தானு மென்றது, எல்லாப்படியானு மென்றற்கு. "எனைப்பொரு ளுண்மை"* என்புழிப்போல. தாம் வறிதே உயிர்காத்து நிற்கும் பொருந்தாச் செயலில் உள்ள வொடுக்க மின்மையின், 'நாணில்' எனவும், அதனைத் தடியும் அறிவாற்றலில்லாமையின் 'மடமாக்க' ளெனவுங் கூறினார்.　௩

**324.** உளநாள் சிலவால் உயிர்க்கேமம் இன்றால்,
பலர்மன்னுந் தூற்றும் பழியால்,—பலருள்ளும்
கண்டாரோ டெல்லாம் நகாஅ தெவனொருவன்
தண்டித் தனிப்பகை கோள்.

(பொ-ள்) உள நாள் சில, உயிர்க்கு ஏமம் இன்று, பலர் தூற்றும பழி - இவ்வுலகில் உயிர்வாழ்ந்திருக்கும் நாட்கள் சில, அச் சில நாட்களிலும் உயிர்க்குப் பாதுகாப்பில்லை, பலர் தூற்றும் பழி வேறு; பலருள்ளும் கண்டாரோ டெல்லாம நகாஅது எவன் ஒருவன் தண்டித் தனிப்பகை கோள் - ஆதலால், பலரோடும் மகிழ்ந்தொழுகாது விலகி எதிர்ப்பட்டவரோ டெல்லாம் ஒருவன் கடும் பகை கொள்ளுதல் ஏன்?

* மணிமே. உஎ : ௬௨.

(க - து) பலரோடும் அளவளாவி மகிழாது விலகிப் பகைகொள்ளுதல் புல்லறிவாகும்.

(வி - ம்) ஆலும் மன்னும் உம்மையும் அசை. பலருள்ளும், மூன்றாவதனோடு உறழ்ந்தது.* நகுதல், அளவளாவி மகிழ்ந்தொழுகுதல். தண்டுதல், நீங்குதல். "கற்றல் வேண்டுவோன் வழிபாடு தண்டான்"† என்பது முதுமொழிக்காஞ்சி. தனிப்பகை, மிக்க பகை யென்னும்பொருட்டு. ௪

**325.** எய்தி யிருந்த அவைமுன்னர்ச் சென்றெள்ளி
வைதான ஒருவன ஒருவனை;—வைய
வயப்பட்டான் வாளா இருப்பானேல், வைதான்
வியத்தக்கான் வாழும எனின.

(பொ - ள்) எய்தியிருந்த அவை முன்னாச சென்று எள்ளி ஒருவன் ஒருவனை வைதான் - ஒருவன் சென்று கலந்திருந்த தக்கோர் அவையின்முன் ஒருவன் போய் அவனை இகழ்ந்து திட்டினால், வைய வயபபட்டான் வாளா இருப்பானேல் வைதான் வியததககான் வாழும எனின் - அவ்வாறு திட்ட அதற்கு உட்பட்டவன் பொறுமையோடு சுமமா இருநதுவிடுவானாயின் அநநிலையில் வைதவன் நன்னிலைமையில் உயிாவாழ்வா னென்றால் அவன் வியக்கததககவனேயாவான் (உயிாவாழ்தல அரிதென்றபடி )

(க - து) பெரியோர் நடுவிற் பிறரை வைதல புல்லறிவின் இயல்பாகும்

(வி - ம்) வைதானனெனவொரு வருவித்துரைக்க. வயப்பட்டான், பெயா. வாளா விருததல், தன் ஊழும அவன அறியாமையும் நினைந்து. வாளா விருந்தமையின் பிழை வைதானறனக்கே உரிததாய் அவன் வாழ்வு கெடுதற்கேதுவாயிற்று. "உய்யார் பெரியாரப் பிழைததொழுகுவாா"‡ என்றது தமிழ்மறை. ௫

**326.** மூப்புமேல் வாராமை முன்னே அறிவினையை
ஊக்கி அதன்கண் முயலாதான்—நூக்கிப்
புறத்திரு போகென்னும இன்னுச்சொல் இல்லுள்
தொழுத்தையாற் கூறப் படும்.

---

* தொல் வேற்றுமைமயங். உரு. † முதுமொழிக். ௧0 : ௩.
‡ குறள், ௯0 : ௯.

(பொ - ள்) மூப்பு மேல் வாராமை முன்னே அறவினையை ஊக்கி அதன்கண் முயலாதான் - கிழத்தனம் மேல் எழுந்து தோன்றுவதற்குமுன் உலகில் அறச்செயலைத் தொடங்கி அதன்கண் முயன்றுவராதவன், நூக்கிப் புறத்திரு போக என்னும் இன்னாச்சொல் இல்லுள் தொழுத்தையால் கூறப்படும் - பின்பு வீட்டில் ஏவற்காரியாலும் நெட்டித் தள்ளப்பட்டு 'வெளிப்புறத்தில் இரு' 'ஒழிந்துபோ' என்னுங் கொடுஞ் சொற்களுங் சொல்லப்படுவான்.

(க - து) புல்லறிவாளர் நல்லது செய்ய அறியாராய்ப் பிறரால் இகழவும் படுவர்.

(வி - ம்) மூப்பு மேல்வருதலாவது, அது மேலெழுதலென்க. நூக்குதல் - மோதித்தள்ளுதல்; "கரை நூக்கிப் புனல் தந்த*" என்றார் பரிபாடலினும். போகவென்னும் அகர வீறு தொக்கது. தொழுத்தையாலுமென இழிவு சிறப்பும்மை விரித்துக்கொள்க. இல்லுட் பிறரும் அவ்வாறிகழ்தலின் தொழுத்தையும் இகழ்வளென்பது. அறவினை செய்யாதான் மூப்புப் புண்ணியப் பயன் இல்லாமையின் மிக நெளிந்து பேரின்னலுடையதாய்ப் பிறர்க்குப் பெருந்துன்பந் தந்து அவரிகழ்ச்சிக்கு ஏதுவாயிற்று. ௬

327. தாமேயும் இன்புறார், தக்கார்க்கு நன்றாற்றார்,
ஏமருசார் நன்னெறியுஞ் சேர்கலார்,—தாமயங்கி
ஆக்கத்துள் தூங்கி அவத்தமே வாழ்நாளைப்
போக்குவார் புல்லறிவி னோர்

(பொ - ள்) புல்லறிவினோர் தாமேயும் இன்புறார் தக்கார்க்கும் நன்றாற்றார் ஏமம் சார் நல் நெறியும் சேர்கலார் - தாழ்ந்த அறிவினையுடையோர் தாமாகிலும் இன்புறல் அறியார், தகுதியுடைய பிறர்க்கும் நன்மை செய்ய அறியார், தமதுயிர்க்கு அரணாக அமைந்த அறவொழுக்கங்களையும் சேரத்தொழுகார்; தாம் மயங்கி ஆக்கத்துள் தூங்கி அவத்தமே வாழ்நாளைப் போக்குவார் - தாம் மதிமயங்கி முன்னை நல்வினையாற் கிடைத்த செல்வச் செழுமையில் அழுந்தி வீணே தம் வாழ்நாளைக் கழித்தொழிவர்.

* பரிபா. ௬ : ௨௭.

(க - து) புல்லறிவாளர் தம் வாழ்நாளைத் தமக்கும் பிறர்க்கும் பயன்பட வொட்டாமல் வீணாக்கிக்கொள்வர்.

(வி - ம்) ஏமஞ்சார் நன்னெறியென்றது, வீடுபேற்று நெறி. அவத்தம், ஒருசொல்; "அவத்தமே பிறந்து"* என்றார் தேவாரத்தினும். எ

**328.** சிறுகாலை யேதமக்குச் செல்வுழி வல்சி
இறுகிறுகத் தோட்கோப்புக் கொள்ளார்—இறுகிறுகிப்
பின்னறிவாம் என்றிருக்கும் பேதையார் கைகாட்டும்
பொன்னும் புளிவிளங்கா யாம்.

(பொ - ள்) சிறு காலையே தமக்குச் செல்வழி வல்சி இறுக இறுகத் தோட் கோப்புக் கொள்ளார் - இளம் பருவத்திலேயே தமது செல்லுமிடமாகிய மறுமைக்கு, அறமாகிய உணவு அழுந்த அழுந்தக் கட்டுணவு தேடிக் கொள்ளாதவராய்; இறுகி இறுகிப் பின் அறிவாம் என்று இருக்கும் பேதையார் - பொருளில் இறுக்கம் மிகக் கொண்டு அறவினையைப் பிற்காலத்திற் காண்போம் என்று செம்மாந்திருக்கும் புல்லறிவினார், கைகாட்டும் பொன்னும் புளிவிளங்காயாம் - இறுதிக்காலத்திற் சாககாட்டுத் துன்பத்தினால் அற நினைவு வந்து அந்நிலையிற் பேச நாவெழாமையால் அயலிலுள்ளார்க்கு அறஞ்செய்மி னெனக் கைக் குறியாகக் காட்டும் பொன்னும் அவராற் புளிச்சுவையுள்ள விளங்காய் கேட்டலாகக் கருதி மறுக்கப்படும்.

(க - து) புல்லறிவு எதனையுங் காலத்திற் செய்து கொள்ளாது ஏமாந்து பின் கவலும.

(வி - ம்) 'தமக்குச் செல்வுழி' யென்பதைத் 'தம் செல்வழிக்கு' என மாறுக. வல்சி இறுகுதலாவது, கட்டுணைப் பொருட்டு நன்கு பிசைந்து செறித்தலால் அவை ஒன்றோடொன்று அழுந்திப் பொருந்துதல்; கட்டுணவு கவளங் கவளமாக வைத்துச் செறித்துச் செறித்துக் கட்டப்படுவதுபோல மறுமைக்குணவாகிய அறத்தையும் மேலுமேலுந் தேடிச் செறித்துக்கொள்ள வேண்டுமென்றற்கு, 'இறுக இறுக' வென மிகுதிப் பொருளில் அடுக்கிக் கூறினர். வழிநடையின்போது கட்டமுது தோளிற் கோக்கப்படுவ

* தேவா. கஉ0 : க.

தாகலின், 'தோட் கோப்'பெனப்பட்டது, சாக்காட்டு நிலையிலிருப் பார்க்குப் புளிவிளங்காய் ஏலாததொன்றாகலின், மறுக்கப்படும். "ஐயா விளாம்பழமே யென்கின்றீ ராஙகதற்குப் பருவமன் றென் செய்கோ"* என்றார் பிறரும். "மரப்பெயர்க் கிளவி"† என்பத னன் விளங்காய், இனமெல்லெழுத்து மிக்கது. அ

**329** வெறுமை யிடத்தும் விழுப்பிணிப் போழ்தும்
மறுமை மனத்தாரே யாகி,—மறுமையை
ஐந்தை யனைத்தானும் ஆற்றிய காலத்துச்
சிந்தியார் சிற்றறிவி னர்.

(பொ - ள்) வெறுமையிடத்தும விழுப் பிணிப் போழ்தும மறுமை மனத்தாரேயாகி - கையிற் பொருளில் லாத வறுமைக் காலத்தும மிக்க நோயுண்டான நேரத்தும மறுமைக்குரிய அறநினைவினராயிருந்து, ஆற்றிய காலத்து - செல்வம் முதலியவற்றால் ஆற்றல் வாய்ந்த காலத்தில், மறுமையை ஐந்தை யனைததானுஞ் சிந்தியார் சிற்றறிவினர் - அம்மறுமைககுரிய அறத்தைச் சிறு கடுகி னளவாயினும புல்லறிவினா கருதார

(க - து) புல்லறிவு, துன்பக்காலததில் மட்டுமே நன்மையை நினையும் இயல்புடையது.

(வி - ம்) மறுமைக்குரிய அறம் ஈரிடஙகளிலும் 'மறுமை' யெனப்பட்டது. ஐந்தை, ஐயெனனுஞ் சிறுமை அடியாகப் பிறந்த சொல். ஆற்றுந் தகுதி, பொருந்திய காலம் இஙகு ஆற்றிய காலம் எனப்பட்டது. "பின்னை வழி நினைந்து நோய்காண பொழுதின் அறஞ்செய்வார்க் காணுமை நாய் காணிற் கற்காணுவார்‡"முதலின் அவரைச் சிற்றறிவினர் என்றார். கூ

**330.** என்னேமற றிவ்வுடம்பு பெற்றும் அறம்நினையார்
கொன்னே கழிப்பர்தம் வாழ்நாளை,—அன்னே
அளவிறந்த காதற்றம் ஆருயி ரன்னர்க்
கொளஇழைக்குங் கூற்றமுங் கண்டு.

(பொ - ள்) அன்னே அளவிறந்த காதல் தம் ஆருயி ரன்னர்க் கொள இழைக்கும் கூற்றமும் கண்டு - ஐயோ,

---

* சிந். சு: கஅ௨. † தொல். உயிர்மயங். கூ. ‡ பழமொ. ௩சுக.

தம்பால் அளவு கடந்த அன்பினையுடைய தம ஆருயிரன்ன உறவினரை உயிர்பிரித்துக்கொள்ள முயலுங் கூற்றுவனை யும் உலகிற் பார்த்துக்கொண்டு, என்னே இவ் வுடம்பு பெற்றும் அறம் நினையார் -கொன்னே தம வாழ்நாளைக் கழிப்பர் - ஆ! பெறற்கரிய இம் மக்களுடம்பைப பெற் றும் அறத்தை நினையாதவராய்ப் புல்லறிவினர் தம் வாழ் நாளை வீணே கழிக்கின்றனர்!

(க - து) புல்லறிவானது, செய்திகளை நேரிற் கண்டும் தெளிவுபெறாத இயல்புடையதா யிருக்கின்றது.

(வி - ம்) என்னே அன்னே என்னும் இரஙகல் புல்லறிவி னரின் எழைமை கருதிற்று. பெற்றும் என்னும் உம்மை, பெறற் கருமை யுணாததிற்று. மேல் ஆருயிரன்ன ரென்பதனல தமதன்பு பெறப்படுதலின், அளவிறந்த காதல் என்பது தமபால் அவர் செலுத்தும் அன்பெனக்கொள்ளப்படுப. எத்துணை அருமையாளரை யுங கூற்றுவன் பிரித்தெடுததுக்கொளள முயலுதலால் மற்று யார் பொருட்டு அறததையுங கருதாது பொருட் பற்றுதலோடு இவ்வாறு சிக்கென்றிருந்து வாழ்நாளை வீணுக்கிக் கொள்ளுத லென்று அறிவுறுததுமுகத்தால் இச் செய்யுள புல்லறிவின் இழிந்த இயல்பை விளககுவதாயிற்று. எனவே, "செல்வததைப் பெற்றார் சினஙகடிந்து செவ்வியராய்ப் பல்கிளையும் வாடாமற் பாத்துண்டு நல்லவாம் தானம் மறவாத தன்மையராய்"* விளஙகல் வேணடும் என்ப தறிந்துகொள்ளப்படும். புல்லறிவினா கழிப்ப ரென்று எழுவாய வருவித்துக்கொள்க. மற்று, வினைமாற்று. 'உடம்பு பெற்றும் மற்றுக் கொன்னே கழிப்ப' ரென்க. ௩௦

---

## ௩௪. பேதைமை

யாதும் அறியாமை என்பதுணர்த்தும்.

331. கொலைஞர் உலையேற்றித் தீமடுப்ப ஆமை
நிலையறியா தந்நீர் படிந்தாடி யற்றே,
கொலைவல் பெருங்கூற்றம் கோள்பார்ப்ப ஈண்டை
வலையகத்துச் செம்மாப்பார் மாண்பு.

(பொ - ள்) கொலை வல் பெரு கூற்றம் கோள் பார்ப்ப ஈண்டை வலையகத்துச் செம்மாப்பார் மாண்பு -

* அறநெறி. ௧௪௩.

கொல்லுந் தொழிலில் வல்லமை யுடையோனாகிய ஆற்றலிற் பெரிய கூற்றுவன் தம் உயிர் கொள்ளுதலை எதிர்நோக்கிக்கொண்டிருக்க இவ் வுலகப் பற்றாகிய வலையிற் கிடந்து அதன்கட் களித்திருப்பாரது ஏழைமையியல்பு, கொலைஞர் உலை ஏற்றித் தீ மடுப்ப ஆமை நிலையறியாது அந் நீர் படிந்தாடி யற்று - தன்னைக் கொல்லுங் கொலைஞர் தன்னை உலையில் இட்டு அடுப்பிலேற்றித் தீக்கொளுவ ஆமை நிலையறியாது அவ்வுலைநீரில் மூழ்கி விளையாடி மகிழ்ந்தாற்போன்றது

(க - து) பேதைமை தனக்கு வரும் இடுக்கணை யறியாது களித்திருக்கும் இயல்புடையது.

(வி - ம்) 'தீமடுப்ப, தீச்செறிப்ப வென்க. பெருங்கூற்றமென்றது, எதிர்ப்பாரையற்ற பேராற்றல் வாய்ந்த கூற்றம்; மாற்றருங் கூற்றம்.* கோள் பெயர்; இவ்வுலக வலையென்றற்கு, 'ஈண்டை வலை' யெனப்பட்டது. பற்றின் கட்டுக் கருதி வலையெனப் பட்டது. கிடந்தென ஒருசொல் வருவிக்க மாண்பென்னும் நன்மொழியாற் கூறியது, மிக்க இழிவை யுணர்த்திற்று. மேற்செய்யுளில வருதற்கும இங்ஙனங் கொள்க. இடுக்கண் அறியாமை ஈண்டுப் பேதைமையாயிற்று. க

332 பெருங்கட லாடிய சென்றார் ஒருங்குடன்
ஓசை அவிந்தபின் ஆடுது மென்றற்றால்
இற்செய் குறைவினை நீக்கி அறவினை
மற்றறிவாம் என்றிருப்பார் மாண்பு.

(பொ - ள்) இல்செய் குறைவினை நீக்கி அறவினை மற்றறிவாம் என்றிருபபார் மாண்பு - குடும்பத்துக்குச் செய்யவேண்டிய குறைவுகளைச் செய்து தீர்த்து அறச் செயல்களைப் பின்பு கருதுவோம் என்று காலத்தை எதிர் நோக்கியிருப்பாரது இழிதகைமை, பெருங்கடல் ஆடிய சென்றார் ஒருங்கு உடன் ஓசை அவிந்தபின் ஆடுதும் என்றற்று - பெரிய கடலில் நீராடுதற்குச் சென்றவர், முழுதும் ஒருசேர அலையொலி அடங்கியபின் நீராடுவோம் என்று கருதினாற் போன்றது.

* தொல். புறத். ௨௪.

(க - து) நடவாத தொன்றை நினைவது பேதைமை யின் இயல்பு.

(வி - ம்) ஆடிய, செய்யியவெனனும் எச்சம். ஒருங்கு, எல்லா அலைகளும்; உடன், சேரவெனக. ஓசை யென்றது, இலைக்கலை யால் அலையின் மோதுதலை யுணர்த்தும். ஆல், அசை. குறைவினை யென்பதில், இன் சாரியை; குறைவினை, அறாவினை என்றது, செய்யு ளோசையின் இன்பங் கருதிற்று. குறைவாகிய செயலென்றுரைப் பின் அவ்வின்பத்திற்காக ஆசிரியா செய்த விரகு புலப்படாது போமாதலின், அது சிறவாது. மற்று என்றது, இங்குப் பின் என்னும் பொருட்டு: "மற்றறிவாம் நல்வினையாம" இளையம்* என்புழிப்போல. உ

333 குலந்தவங் கல்வி குடிமைமூப் பைந்தும்
விலங்காமல் எய்தியக் கண்ணும்—நலஞ்சான்ற
மையறு தொல்சீர் உலகம் அறியாமை
நெய்யிலாப் பாற்சோற்றின் நேர்.

(பொ - ள்) குலம் தவம் கல்வி குடிமை மூபபு ஐந தும் விலங்காமல் எய்தியக்கண்ணும - நல்லிணக்கம் தவ வொழுக்கம கல்வியறிவு, குடிவளம் ஆண்டில் மூத்தோ ராதல் என்னும் ஐந்தும தடையின்றிப பெற்றவிடத்தும், நலம் சான்ற மை அறு தொல்சீர் உலகம அறியாமை நெய் இலாப் பால் சோற்றின் நேர் - இன்பம் நிரமபிய தீதற்ற தொன்மையாகிய இயல்பினையுடைய வீட்டுலகவொழுக்கம் அறியானாயிருத்தல் நெய் இல்லாத பாலடிசிலுக்கு ஒப் பாகும்.

(க - து) உறுதிப்பொரு ளறியாமை பேதைமை யின் இயல்பு.

(வி - ம்) குடிமையென்பதிற் குடிப்பிறப்பும அடங்குதலின் குலம் என்றது சாதியென்னும் பொருளையும், மூப்பு என்பதில் உலகியலறிவும் அடங்குதலின் உலகமென்பது வீட்டுலகமென்னும் பொருளையும் உணர்த்தும். விலங்குதல் குறுக்கிடுதலாகலின் விலங் காமலென்றதற்குத் தடையின்றியென் றுரைக்கப்பட்டது. 'நலஞ் சான்ற மையறு தொல்சீர்' என்னும் அடைமொழிகளின் பெருமை

* நாலடி. உ : கூ.

கருத்திருக்கற்பாலது; இதனால், இன்பம் நிரம்பிய மாசில்லாத இயற்கையொழுங்கோடு கூடிய ஒழுக்கமே அந்நிலையினை உய்க்கும் என்றறிந்துகொள்ளல் வேண்டும். முனனும் இஃது 'இயல்நெறி'* என்றுணாததப்பட்டமை காணக. பாற்சோறாயினும் நெய்யின்றி மாட்சிமைப் படாமைபோல எத்துணைச் சிறந்த வாழ்க்கை நலங்களும் இயற்கை அருளொழுக்கமின்றி நலப்படாவென்பது இதனாற் பெறப்பட்டது. ௩

**334** கன்னனி நல்ல கடையாய மாக்களின்;
சொன்னனி தாமுணரா வாயினும்—இன்னினியே
நிற்றல் இருததல் கிடத்தல் இயங்குதலென்
றுற்றவர்க்குத் தாமுதவ லான்

(பொ - ள்) கல் நனி நல்ல கடையாய மாக்களின் - மக்களிற் கடைப்பட்டவரான பேதையரைவிடக் கற்பாறைகள் மிக நல்லனவாம்; (ஏனெனில்) தாம் சொல் நனி உணராவாயினும் உற்றவர்கு இன்னினியே நிற்றல் இருததல் கிடத்தல் இயங்குதல் என்று உதவலான் - அவை இக் கடைபபட்டவாகளைப்போற் சான்றோர் உறுதிமொழிகளை முற்றும உணரமாட்டாவாயினும் தமமை அடைநதவர்க்கு உடனே நின்றுகொள்ளல் இருநது கொள்ளல சாய்ந்துகொள்ளல் நடந்துகொள்ளல் என்று பலவற்றிற்கும் இடம் உதவுதலான் என்க.

(க - து) சொல்வதுணராமையும் தாமேயுஞ் செய்யாமையும் பேதையோர் இயல்பாகும்.

(வி - ம்) இன்னினியே, உடனே என்னும் பொருட்டு† உணராததொன்று அந்நிலைமைக்கு வேறான உதவுதலைச் செய்தலாகத தானெடுத்து மொழிதலால், 'தாம் உணராவாயினும்' 'தாம் உதவலான்' என இருமுறை 'தாம்' என்னும் பெயர்ச்சுட்டுக் கொடுத்து விதந்தார். பலவற்றிற்குமெனை ஒரு சொல் வருவிக்க. கற்பாறைக்கும் பேதைக்கும் உணராமை பொதுவாயினும் கற்பாறையால் உதவியுண்டென்று ஒரு வேறுபாடு காட்டி ஏதுவின் நிறுத்துக் கல் நனி நல்ல வென்றாரென்பது. நனிநல்ல வென்றார், நினைந்த வண்ணமெல்லாம் உதவுதலாலும், அவ்வுதவுதல் சிறந்த அறமாதலாலுமென்க. ௪

* நாலடி ௩0 : ௪. † ஐங். உ௩ : ௨.

**335.** பெறுவதொன் றின்றியும் பெற்றனே போலக்
கறுவுகொண் டேலாதார் மாட்டும்—கறுவினுல்
கோத்தின்னு கூறி உரையாக்கால் பேதைக்கு
நாத்தின்னும் நல்ல சுனைத்து.

(பொ - ள்) பெறுவதொன்று இன்றியும் பெற்றனே போலக் கறுவுகொண்டு - தனது சினத்துக்கு ஏதுவாகப் பெறுங் காரணம் ஒன்று இல்லாதிருந்தும் அக்காரணம் பெற்றவனேபோலக் கோபித்தலை மேற்கொண்டு, ஏலாதார் மாட்டும் கறுவினுல் கோத்து இன்னு கூறி உரையாக்கால்- தனது சினம் சென்று தாக்குதலில்லாத உயர்ந்தோரிடத்தும் கோபத்தால் இன்னுச சொற்களைத் தொடுத்துரைத்துப் பேசாவிட்டால், பேதைக்கு நல்ல சுனைதது நாத தின்னும் - பேதைகளுக்கு மிக்க தினவு நாவை அரித்து விடுவதுபோலிருக்கும்.

(க - து) பேதை மாக்கள காரணமில்லாமலே பிறரைப் பகைத்தும் பழித்தும் நாத் தினவாற் சுமமா பேசிய படியே யிருப்பர்.

(வி - ம்) கறுவென்றது மனத்தின் நிகழுஞ் செற்றம். கோத்து என்றார், காரணநதோடு அறிஞர் தொடுப்பதுபோற் போலியாக முறைப்படுத்தி யென்றற்கு. கூறி யென்றதன் மேலும் உரையாக்கா லென்றார். விளக்கங் கூறுவதுபோல வாளா பன்னிப் பன்னிப் பேசுதலினென்க. அதற்குக் காரணம் தினவே யல்லது வேறில்லாமையின், அதன் மிகுதி தோன்ற 'நாத்தின்னும் நல்ல சுனைத்து' என்றார்; இஃது, 'உண்டற்குரிய வல்லாப் பொருளை உண்டன போலக் கூறும்'* ஒரு மரபு. ௫

**336.** தங்கண் மரபில்லார் பின்சென்று தாமவரை
எங்கண் வணக்குதும் என்பவர்—புன்கேண்மை
நற்றளிர்ப் புன்னை மலருங் கடற்சேர்ப்ப!
கற்கிள்ளிக் கையிழந் தற்று.

(பொ - ள்) நல் தளிர்ப் புன்னை மலரும் கடல் சேர்ப்ப - அழகிய தளிர்களையுடைய புன்னைமரங்கள் மலர்

* தொல். பொருளி. கக.

களைப் பூக்கின்ற கடற்கரையாய்! தங்கண் மரபு இல்லார் பின் சென்று தாம் அவரை எங்கண் வணக்குதும் என்பவர் புன்கேண்மை - தம்மிடத்தில் மதிப்பில்லாதவர் வழிச் சென்று 'அவரை எம்மிடம் அடங்கும்படி செய்வோம்' என்று சொல்லுவோர் கருதும் அச் சிறியோர் தொடர்பு, கல் கிள்ளிக் கை இழந்தற்று - கருங்கல்லைக் கிள்ள முயன்று ஒருவன் கைவிரலை இழந்ததனோடு ஒக்கும்.

(க - து) திருந்தா இயல்புடையது பேதைமையாகும்.

(வி - ம்) மரமென்பது ஈண்டு நன்மதிப்பு. புன்கேண்மையென்றார், அப் பேதையர் தொடர்பை. கல்லையுங் கிள்ளமுடியாது தாமுங் கைவிரலிழந்தாற்போல, அப் பேதையோரையுந் திருத்த முடியாமல் தாமும் அவரால் தீங்குறப்பெறுவ ரென்பது; "கற் கிள்ளிக் கையுய்ந்தார் இல்"* என்றார் பிறரும். "நிலத்தறைந்தான் கைபிழையா தற்று"† என்றதூஉங் காண்க. ௬

**337.** ஆகா தெனினும் அகத்துநெய் யுண்டாகின்
போகா தெறும்பு புறஞ்சுற்றும்;—யாதுங்
கொடாஅ ரெனினும் உடையாரைப் பற்றி
விடாஅர் உலகத் தவர்.

(பொ - ள்) ஆகாது எனினும் அகத்து நெய் உண்டாகில் போகாது எறும்பு புறம் சுற்றும் - தமக்கு உண்ண வாய்க்காதெனினும் குடத்தினுள் நெய் இருக்குமாகில் எறும்புகள் போகாமல் அக் குடத்தைச் சூழச் சுற்றிக் கொண்டிருக்கும்; யாதும் கொடாரெனினும் உடையாரைப் பற்றி விடார் உலகத்தவர் - அதுபோல, ஒன்றும் உதவமாட்டா ரென்றாலும் பொருளுடையோரைச் சூழ்ந்துகொண்டு பேதைமாக்கள் விடமாட்டார்கள்.

(க - து) பேதைமை யென்பது, அறியாமையும் வீண் முயற்சியுமுடையது.

(வி - ம்) இஃது எடுத்துக்காட்டுவமை. உடையார் என்றது பொருளுடையாரை; "உடைப் பெருஞ் செல்வர்"‡ என்றார் புறத்தினும். உலகத்தவரென்றது, ஈண்டுப் பேதையரைக் கருதிற்று.

* பழமொ. ௪௮. † குறள், ௩௪: ௭. ‡ புறம். ௧௮௮.

முடிவறியாது வீண்முயற்சி செய்யும் பேதைமையின் பெற்றி இதன் கண் நுவலப்பட்டது. எ

338 நல்லவை நாடொறும் எய்தார், அறஞ்செய்யார்,
இல்லாதார்க் கியாதொன்றும் ஈகலார்,—எல்லாம்
இனியார்தோள் சேரார், இசைபட வாழார்,
முனியார்கொல் தாம்வாழும் நாள்.

(பொ - ள்) நல் அவை நாடொறும் எய்தார், அறம் செய்யார், இல்லாதார்க்கு யாதொன்றும் ஈகலார், எல்லாம் இனியார் தோள் சேரார், இசைபட வாழார்-உயர்ந்தோர் அவைக்களத்தை நாடொறுஞ் சென்றடைந்து கேள்விப் பயன் பெறுமலும், நற்செயல்கள் செய்யாமலும், இல்லாத வறியோர்க்கு யாதொன்றும் உதவாமலும், எல்லா வகையாலும் இனியரா யிருக்கும தம மனைவியா தோளை மருவாமலும, கல்வி முதலியவற்றால் உலகிற் புகழுண்டாக வாழாமலுமிருக்கும பேதைமாந்தர், முனியார்கொல் தாம வாழும் நாள் - உயிர்வாழும் வெற்று வாழ்நாட்களை வெறுரோ !

(க - து) பேதையர் வாழ்நாள் வறிதே கழிந தொழியும்.

(வி - ம்) நாடொறுமென்னும் குறிப்பால் நல் அவை எனப் பிரித்துரைக்க. இனியராயிருந்தும் தம துணைவியர் தோள் சேரா ரெனவே பேதையர் பிற மாதர் நினைவின ரென்பது பெறப்படும். "பிறன்பொருளாட் பெட்டொழுகும் பேதைமை"* என்றார் பொய்யில் புலவரும். ஒரு பயனுமில்லாது கழியுந் தம் வாழ் நாளில் வெறுப்புத் தோன்றாதோ வென்றற்கு, 'முனியாகொல்' எனப்பட்டது. அ

339. விழைந்தொருவர் தம்மை வியப்ப ஒருவர்
விழைந்திலேம் என்றிருக்குங் கேண்மை,—தழங்குகுரல்
பாய்திரைசூழ் வையம் பயப்பினும் இன்னாதே
ஆய்நலம் இல்லாதார் மாட்டு.

(பொ - ள்) விழைந்து ஒருவர் தம்மை வியப்ப ஒருவர் விழைந்திலேமென்றிருக்கும் ஆய்நல மில்லாதார் மாட்டுக்

* குறள் கஙி: க.

கேண்மை - ஒருவர் தம்மை விரும்பி மதித்து அளவளாவ ஒருவர் அவரை விரும்பிலேம் என்று புறக்கணித்திருக்கும் இத்தகைய நுண்ணுணர்வில்லாப் பேதையரிடத்துண்டாகுந் தொடர்பு, தழங்கு குரல் பாய் திரைசூழ் வையம் பயப்பினும் இன்னாது - ஒலிக்குங் குரலோடு பாய்ந்திழியும் அலைகளையுடைய கடல் சூழ்ந்த உலகத்தைப் பயப்பதாயினும் இனிய தொன்றன்று.

(க - து) பொருள் செய்ய வேண்டுவதைப் புறக்கணித்துக் கிடப்பது பேதைமையின் இயல்பு.

(வி - ம்) வியப்ப வென்றது, வியந்தளவளாவவென்க, 'தம்முள் ஒருவர் விழைய ஒருவர் விழைந்திலேமென்றிருக்கும் ஆய்நலமில்லாதார் மாட்டுக் கேண்மை இன்னாது' என்பது. விழைவோரையும் ஆய்நலமில்லாதாரென்றது, அறியாது விழைதலின். ஆய்நலமாவது, ஈண்டு நுண்ணுணர்வு; "ஆய்தல்......உள்ளதன் நுணுக்கம்"* என்பது தொல்காப்பியம்; பிறவிதொறும் இன்பம் பெருக்கும் அறவொளியைக் கெடுத்தலின் அவர் கேண்மை வையம் பயப்பினும் இன்னாதாயிற்று. க

340. கற்றனவும் கண்ணகன்ற சாயலும் இற்பிறப்பும்
பக்கத்தார் பாராட்டப் பாடெய்தும்; தானுரைப்பின்
மைத்துனர் பல்கி மருந்தின் தணியாத
பித்தனென் றெள்ளப் படும்.

(பொ - ள்) கற்றனவும் கண் அகன்ற சாயலும் இல் பிறப்பும் பக்கத்தார் பாராட்டப் பாடு எய்தும் - தான் கற்ற கல்விகளும், காட்சி பரந்த தன் சாயலும், தனது உயர்குடிப் பிறப்பும் அயலவர் பாராட்டப் பெருமையடையும்; தான் உரைப்பின் - அவ்வாறன்றித் தான் புகழ்ந்தால், மைத்துனர் பல்கி மருந்தின் தணியாத பித்தன் என்று எள்ளப்படும் - தனக்கு முகமன் மொழிந்து விளையாடுவோர் மிகப் பெருகி அதனால், மருந்தினால் தெளியாத பித்தன் இவன் என்று உலகத்தவரால் இகழப்படும் நிலையை ஒருவன் அடைவான்.

---

*தொல். உரி, ௩௨.

(க - து) பேதைமை, பிறர் கருத்தறியாது அவர் முகமனுக்கு மகிழும் பித்துத் தன்மை யுடையது.

(வி - ம்) கற்றனவும் என்றமையால் அறிவும், சாயலும் என்றமையால் அழகும், இற்பிறப்பும் என்றமையால் இவ்விரண்டிற்கும் ஏதுவான இயற்கைச் சார்புங் கொள்க. தான் உரைத்தலால், பிறர், தன் மகிழ்ச்சிக்குரியது இச்சை பேசுதலென் றறிந்து அதுவே பேசுவாராய்ப் பல்க, அதனால் தன் அறிவு நிலைதிரிந்து பித்துடையதாகுமென்பது பின் வரிகளின் கருத்து. மைத்துனரென்னுங் குறிப்பால், அவ்விசசை பேசுதலும் பகடிசெய்யுங் கருத்தானென்பது பெறப்படும்: "மைந்தனை மகிழ்வ கூறி மைத்துனத் தோழன் என்றான்"* என்பதும் அதன் உரையுங் காண்க. க0

---

## ௩௫. கீழ்மை

கீழ்மக்களின் தன்மை யுணர்த்திற்று.

**341.** கப்பி கடவதாக் காலைத்தன் வாய்ப்பெயினும்
குப்பை கிளைப்போவாக் கோழிபோல்,—மிக்க
கனம்பொதிந்த நூல்விரித்துக் காட்டினும் கீழ்தன்
மனம்புரிந்த வாறே மிகும்.

(பொ - ள்) கப்பி கடவதா காலை தன் வாய்ப் பெயினும் குப்பை கிளைப்பு ஓவாக் கோழிபோல் - கடமையாக நாடோறும் நொய்யரிசியைத் தன் வாயிற் பெய்தாலும் குப்பை கிளைத்தலை விடாத கோழியைப்போல், மிக்க கனம் பொதிந்த நூல் விரித்துக் காட்டினும் கீழ் தன் மனம் புரிந்த வாறே மிகும்-மிக்க பெருமை நிறைந்த மெய்ந்நூலுண்மைகளைப் பொருள் விளக்கி அறிவுறுத்தாலும் கீழ்மகன் தன் மனம் விரும்பிய வழியே முனைந்தொழுகுவான்.

(க - து) கீழ்மை யென்பது பிறர் கூறும் அறிவுரையை ஏலாது.

(வி - ம்) கடவது, கடமை. "கடவது திரியாக் கடவுளர்க் கண்டு"† என்புழிப்போல. மிகும் என்றார், தன்னியல்பே காட்டிச் சேறலின். க

---

* பெருங. ௫: அஎ. † சிந். ௫: கூக.

**342.** காழாய கொண்டு கசடற்ருர் தஞ்சாரல்
தாழாது போவாம் எனஉரைப்பின்—கீழ்தான்
உறங்குவம் என்றெழுந்து போமாம்,அஃதன்றி
மறங்குமாம் மற்ருென் றுரைத்து.

(பொ - ள்) *காழ் ஆய கொண்டு கசடு அற்ருர் தம சாரல் தாழாது போவாம என உரைப்பின்-உறுதியாகிய மெய்ந்நூலுணர்வு கொண்டு வினை நீங்கிய மேலோர் பக்கல் நாம் காலந் தாழாது சென்று பயனுறுவோம் என்று அறிந்தோர எடுத்துக்காட்டினுல், கீழ்தான் உறங்குவம் என்று எழுந்துபோம அஃதன்றி மறங்கும் மற்ருென்று உரைத்து-கீழ்மகன் தூங்குவோம வம்மின் என்று எழுநதுபோவான், அஃதன்றி வேறு வம்பு பேசி மாறுபடுவான்.*

(க - து) *இருந்தால் வாளா கிடததலும் யாதேனுஞ் செய்தால பழுது செய்தலுங் கீழோர் இயல்பாகும்.*

(வி - ம்) *காழ் என்றது ஈண்டு மெய்யுணர்வு; "காழ் இலா மம்மர்கொள மாந்தா"* என்ருா முன்னும். கலஙகுதலில்லாததென்பது பொருள். தம் தான், சாரியை. உறஙகுவம என்னும் உளப்பாட்டுப் பன்மை, உரைதத்தாரையும் உட்கொண்டு நின்றது. ஆம் இரண்டும் அசை. மற்ருென்றென்றது குறிப்பாற் றீமை மேற்று.* ௨

**343.** பெருநடை தாம்பெறினும பெற்றி பிழையா
தொருநடைய ராகுவர் சான்ருே;—பெருநடை
பெற்றக் கடைத்தும் பிறஙகருவி நன்னுட!
வற்ருும் ஒருநடை கீழ்.

(பொ - ள்) *பெரு நடை தாம் பெறினும் பெற்றி பிழையாது ஒரு நடையராகுவர் சான்ருேர் - உலகிற் பெருமித நிலையைத் தாம் பெற்ருலும தம பெருந்தன்மையாகிய இயல்பு வழுவாது என்றும் ஒரு தன்மையராய் விளங்குவர் மேலோர்; பெருநடை பெற்றக்கடைத்தும் பிறங்கு*

---

* நாலடி. ௨: ௪.

அருவி நல் நாட வற்றும் ஒரு நடை கீழ் - பெருமித நிலையைப் பெற்றவிடத்தும், விளங்குகின்ற அருவிகளையுடைய சிறந்த மலைநாடனே, கீழ் மகனும் என்றுந் தனது கீழ்மையியல்பு தோன்ற ஒரு நடையாய் ஒழுகவல்லவனுவன்.

(க - து) செல்வ நிலையிலும் கீழோர் கீழோராகவே யிருப்பர்.

(வி - ம்) நடை யென்றது, செல்வப்போக்கு. பெறினு மென்னும் உம்மை பெருதிருந்தகாலத்து மென இறந்தது தழீஇயது. பெற்றக்கடைத்து மென்னும் உம்மையும் அற்று. கீழுமென எச்சவும்மை கொள்க. வல்லதென்னுங் குறிப்பானும் ஒரு நடையென்னுங் குறிப்பானும் கீழுஞ் சான்றோரொப்ப ஒரு நடையராகுவரென் றுரைக்கப்பட்டது. நாயனாருந் "தேவரனையர் கயவர்"* என்றிங்ஙனம் இகழ்ந்துரை முறைமை மேற்கொண்டமை காண்க. செல்வாக்குக்கேற்ற பெரும்போககைப் பெறாமல் தமது கீழ்மையியல்பையே கீழோர் மேற்கொண்டிருப்பரென்பது. ௩

344. தினையனைத்தே யாயினும் செய்தநன் றுண்டால்
பனையனைத்தா உள்ளுவர் சான்றோர்;—பனையனைத்
தென்றுஞ் செயினும் இலங்கருவி நன்னுட!
நன்றில நன்றறியார் மாட்டு.

(பொ - ள்.) தினையனைத்தேயாயினும் செய்த நன்று உண்டால் பனையனைத்தா உள்ளுவர் சான்றோர் - தினையளவினதேயாயினும் செய்த உதவி முன் இருக்குமாயினல் அதனைப் பனையளவினதாகக் கருதிக் கனிந்திருப்பர் மேலோர்; பனையனைதது என்றும் செயினும் இலங்கு அருவி நல் நாட நன்று இல நன்று அறியாமாட்டு-நாளும் பனையளவு உதவி செயினும், விளங்குகின்ற அருவிகளையுடைய உயர்ந்த மலைநாடனே, நன்மையறியாக் கீழோரிடத்தில் அவை சிறிதளவும் நன்றி பாராட்டுதலில்லாதனவாகும்.

(க - து.) கீழ்மை, நன்றி மறக்கும் இயல்புடையது.

(வி - ம்) உள்ளுதல், உள்ளிக் கனிதல்: "கன்றுள்ளிய புனிற்றா"† என்பது காண்க. 'நன்றில' என்னுமிடத்து 'நன்று'

* குறள். ௧௦௭௩ : ௩. † பெரும. இலாவா. ௧௭: ௪0.

நன்றியையும் 'நன்றறியார்' என்னுமிடத்து அது மேன்மையையும் உணர்த்தும். ௬௪

**345.** பொற்கலத் தூட்டிப் புறந்தரினும் நாய்பிறர்
எச்சிற் கிமையாது பார்த்திருக்கும்;—அச்சீர்
பெருமை யுடைத்தாக் கொளினுங்கீழ் செய்யுங்
கருமங்கள் வேறு படும்.

(பொ - ள்) *பொன் கலத்து ஊட்டிப் புறந்தரினும் நாய் பிறர் எச்சிற்கு இமையாது பார்த்திருக்கும் - பொன்னாற் செய்த உண்கலத்தினால் உண்பித்துப் பாதுகாத்தாலும் நாயானது பிறர் எறியும் எச்சிற் சோற்றுக்குக் கண்ணிமையாமல் விழித்துக்கொண்டு காத்துக் கிடக்கும். அச்சீர் - அத்தன்மையாக, பெருமையுடைத்தாக் கொளினும் கீழ் செய்யும் கருமங்கள் வேறுபடும் - பெருமைக்குரியனைப் பெருமைப்படுத்தினாலும் கீழ்மகன் செய்யுஞ் செயல்கள் அந் நிலைமைக்கு வேறாகும்.*

(க - து.) *கீழ்மையியல்பு, திருத்தினாலுந் திருந்தாது.*

(வி - ம்.) *புறந்தருதல், காத்தல். பார்த்திருக்குமென்றது, காத்திருக்கு மென்றற்கு. அச்சீரென்றது, உவமப்பொருட்டு; 'அன்ன பிறவே' என்பதனாலும், 'பல் குறிப்பினவே'* என் பதனாலும் இது கொள்ளப்படும். வேறுபடும் என்பது, கீழ்மைத் தொழில்களாகவே நிகழும் என்னுங் குறிப்பிற்று.* ௫

**346** சக்கரச் செல்வம் பெறினும் விழுமியோர்
எக்காலுஞ் சொல்லார் மிகுதிச்சொல்;—எக்காலும்
முந்திரிமேற் காணி மிகுவதேற் கீழ்தன்னை
இந்திரனு எண்ணி விடும்.

(பொ - ள்.) *சக்கரச் செல்வம் பெறினும் விழுமியோர் எக்காலும் சொல்லார் மிகுதிச் சொல் - ஆட்சிச் செல்வம் பெற்றாலும் மேலோர் எந்தக் காலத்திலும் வரம்பு கடந்த சொற்களைச் சொல்லமாட்டார்கள்; முந்திரிமேற் காணி மிகுவதேல் கீழ் தன்னை எக்காலும் இந்திரனு*

---

* தொல். உவம. கக.

எண்ணிவிடும் - ஆனால் முந்திரியளவுக்குமேற் காணியளவாகச் செல்வம் மிகுவதானால் கீழ்மகன் தன்னை என்றுந் தேவர்கோனாக எண்ணி இறுமாந்து உரையாடுவன்.

(க - து) சிறிது நிலையுண்டானால் கீழ்மக்கள் மிகவுஞ் செருக்குவர்

(வி - ம்.) அரசாட்சிச் செல்வம் ஈண்டுச் 'சக்கரச் செல்வ' மெனப்பட்டது. "தாங்கு மாவணைகைச் சக்கர மிக்குயா பிறரும்"* என்றார் சிந்தாமணியினும். பெறினுமென்னும் உம்மை எச்சம். மிகுதிச்சொல், தன்முனைப்புச் சொல்; மண்ணுலக வேந்தனாகவு மன்றி விண்ணவர் கோனாகவே எண்ணிவிடுவ னென்றற்கு, 'இந்திரன்' வென்றார். சிறு இன்பத்தையும் பெரிது பாராட்டிக் களிக்கும் கீழ்மையியல்பினை இச் செய்யுள் விளக்கிற்று. சு

**347.** மைதீர் பசும்பொன்மேல் மாண்ட மணியழுத்திச்
செய்த தெனினுஞ் செருப்புத்தன் காற்கேயாம்;
எய்திய செல்வத்த ராயினும் கீழ்களைச்
செய்தொழிலாற் காணப் படும்

(பொ - ள்) மை தீர் பசும்பொன்மேல் மாண்ட மணியழுத்திச் செய்ததெனினும் செருப்புத் தன் காற்கேயாம் - குற்றந் தீர்ந்த கிளிச்சிறை என்னும் பசிய பொற்றகட்டின்மேல் மாட்சிமைவாய்ந்த மணிகளைப் பதித்துச்செய்யப்பட்டதாயினும் செருப்பு ஒருவனது காலுக்கே அணிந்துகொள்ள உதவும், எய்திய செல்வத்தராயினும் கீழ்களைச் செய்தொழிலாற் காணப்படும் - அதுபோலச், சிறக்கப் பொருந்திய செல்வமுடையரானாலும் கீழ் மக்களை அவர் செய்கின்ற தொழில்களால் இன்னாரென்று கண்டு கொள்ளுதல் கூடும்.

(க - து.) கீழோர் இயல்பு, நிலைமைகளால் வேறுபடுதலில்லை.

(வி - ம்) மைதீர் பசும்பொன் என்றது 'கிளிச்சிறை' யென்னும் பொன்னுதல், "வீறுயர் பசும்பொன்"† என்புழிக் காண்க. மாண்ட மணியாவது, குணச் சிறப்புடைய மணிகளென்க. பிற

* சிந். கஅ : கசுஅ. † சிலப்: கக௫.

வுறுப்புகட்கன்றென்று பிரித்தலின், காற்கேயென்னும் ஏகாரம் பிரிநிலை. காண என்பது காணல் என்னுந் தொழிற்பெயரின்றிரிபு. முன் வந்த "பொறக்கலத்தூட்டி" யென்னுஞ் செய்யுள்* ஈண்டு நினைவுகூர்தற்குரியது. எ

**348**. கடுக்கெனச் சொல்வற்றும், கண்ணோட்டம் இன்றும்,
இடுக்கண் பிறர்மாட் டுவக்கும்,—அடுத்தடுத்து
வேகம் உடைத்தாம், விறன்மலை நன்னாட!
ஏகுமாம் எள்ளுமாம் கீழ்.

(பொ - ள்) விறல் மலை நல் நாட - ஆற்றல் வாய்ந்த மலைகளையுடைய சிறந்த நாடனே! கீழ் - கீழ்மகன், கடுக்கெனச் சொல் வற்று - கடுமையாகப் பேசுதல் வல்லான்; கண்ணோட்டம் இன்று - கண்ணோட்ட மில்லான்; இடுக்கண் பிறர் மாட்டு உவக்கும் - பிறரிடத்து நேரும் இன்னலுக்கு மகிழ்வான்; அடுத்தடுதது வேகம் உடைத்து - அடிக்கடி சீற்ற முடையான்; ஏகும் - கண்ட விடங்கட்குச் செல்வான்; எள்ளும - பிறரை இகழ்வான்.

(க - து) பிறர்க்குத் தொல்லைகள் விளைப்பது கீழ் மக்களின் இயல்பு

(வி - ) வல்லது என்றது, இகழ்ச்சிகுறிப்பு. ஆம் அனைத்தும் அசை பிறர்மாட்டு என்பதைப் பிறவிடங்கட்குங் கொள்வது பொருந்தும். வேகம், சினத்தின வேகம். மலைக்கு விறலாவது, என்றுான்றும் வளமுடைமை; "உழவர் உழாதன நான்கு பயன் உடைத்தே"† என்பவை முதலாயின. கீழ் எனினும் அஃறிணைச் சொல்லால் எல்லாம அஃறிணை முடிபு கொண்டன. கீழ்மக்களின் இயல்புகள் சிலவற்றை இச்செய்யுள் தொகுத்துணர்த்திற்று. அ

**349**. பழைய ரிவரெனறு பன்னாட்பின் நிற்பின்
உழையினிய ராகுவர் சான்றோர்;—விழையாதே
கள்ளுயிர்க்கும் நெய்தற் கனைகடல் தண்சேர்ப்ப!
எள்ளுவர் கீழா யவர்

(பொ - ள்) கள் உயிர்க்கும் நெய்தல் கனை கடல் தண் சேர்ப்ப - தேன் சொரியும் நெய்தல மலர்களையுடைய

* நாலடி ௩. ௫. ௫. † புறம். ௧0௯.

ஒலிக்கின்ற கடலின் குளிர்ந்த கரையை யுடையவனே! பின் நிற்பின் பல் நாள் பழைய ரிவரென்று உழை இனிய ராகுவர் சான்றோர் - தமக்குப் பின்னால் வந்து ஒருவர் பணிவுடையராய் நின்றால் இவர் பலநாள் பழகியவரென்று விரும்பி அவரிடம் சான்றோர் அன்புடையவராவர்; கீழாய வர் விழையாது எள்ளுவர் - ஆனால் கீழ்மக்கள் அவரைத் தமக்கு அடங்கினவரெனக் கொண்டு அன்புடன் விரும் பாமல் அதிகாரத்தால் மதியாது ஒதுக்குவர்.

(க - து) தம்மை விரும்புவோரைத் தாம் மதியா தொதுக்குவது கீழ்மக்களின் இயல்பு.

(வி - ம்) பின் நிற்றல் ஈண்டுப் பணிவுடையராயிருத்தல் உணர்த்திற்று. 'பின் நிற்பின் இவர் பன்னாட் பழையரென்று சான்றோர் உழை இனியராகுவ'ரென்று கொள்க. உழை, அவ ருழை யென்க. விழையாதே என்னுங் குறிப்பானும் பின் நிற்பின் என்னுங் குறிப்பானும், எள்ளுதல் அதிகாரத்தானென்பது பெறப் படும். கீழாயவர் என்பதில் ஆயவரென்பது ஆக்கமன்று; நூலா னது என்புழிப்போல வினைமுதற் குறிப்பிடைச்சொல்; அதனை எழுவாய்ச் சொல்லுருபு என்ப; "வேற்றுமைப் பொருள்வயின்"* என்பதற்குச் சேனாவரையர் உரைத்த உரை காண்க. க

**350.** கொய்புல் கொடுத்துக் குறைத்தென்றுந் தீற்றினும்
வையம்பூண் கல்லா சிறுகுண்டை;—ஐயகேள்,
எய்திய செல்வத்த ராயினும் கீழ்களைச்
செய்தொழிலாற் காணப் படும்.

(பொ - ள்) கொய் புல் கொடுத்துக் குறைத்து என்றும் தீற்றினும் வையம் பூண்கல்லா சிறு குண்டை - கொய் தற்குரிய பசும்புல்லை அறுத்துக்கொடுத்து நாடோறும் உண்பித்து வந்தாலும் சிற்றெருதுகள் வண்டிகள் பூண் டிழுக்க உதவா; ஐய கேள் - ஐய கேட்பாயாக; எய்திய செல்வத்தராயினும் கீழ்களைச் செய்தொழிலாற் காணப் படும் - சிறக்கப் பொருந்திய செல்வமுடையரானாலும் கீழ்மக்களை அவர் செய்கின்ற தொழில்களால் இன்னா ரென்று கண்டுகொள்ளுதல் கூடும்.

* தொல. இடை. உ.

(க - து) எவ்வளவு நலமுறச் செய்யினும் கீழ்மக்கள் பிறாக்குப பயன்படார்.

(வி - ம்) கொய் புல் என்பது புல்லின் இளம்பதமான தகுதி யுணர்த்திற்று. குறைத்துக் கொடுத்தென்று மாறுக. பூண்கல்லா, ஒரு சொல். 'சிறு குண்டை' யென்றது, வளர்ச்சியில்லாது குறுகி மூத்த எருதுகள். "குண்டைக் குறட்பூதம்"* என்றார் தேவாரத்தினும். 'காணப்படு' மென்பதற்குக், கீழ் 'மைதீர் பசும்பொன்'† என்னுஞ் செய்யுளில் உரைத்தாங்குரைக்க. ௧௦

---

## ௩௰. கயமை

மெலிந்த உணர்வினரது இயல்புணர்த்திற்று.

351. ஆர்த்த அறிவினர் ஆண்டிளைய ராயினுங்
காத்தோம்பித் தம்மை அடக்குப;—மூத்தொறூஉம்
தீத்தொழிலே கன்றித் திரிதந் தெருவைபோல்
போத்தறார் புல்லறிவி னார்.

(பொ - ள்) ஆர்த்த அறிவினர் ஆண்டு இளையராயினும் காத்து ஓம்பித் தம்மை அடக்குப - உறுதிமிக்க மெய்யறிவினையுடையார் ஆண்டில் இளையராயினும் தம்மைத் தீய நெறியினின்றுந் தடுத்து நன்னெறியில் நிறுத்தி அடக்கிக்கொள்வர், மூத்தொறும் தீத்தொழிலே கன்றித் திரிதந்து எருவைபோல் போத்து அறார் புல்லறிவினார் - ஆனால் மெலிந்த அறிவினையுடையார் கழுகுபோல முதிர முதிரத் தீய செய்கைகளே தடிப்பேறி அலைந்து மாசு நீங்கார்.

(க - து) ஆண்டு முதிர்ந்து உலகப் பழக்கம் ஏறுதலால் கயவர் பெறும் பயன் யாதுமில்லை.

(வி - ம்) ஆர்த்தவென்பது காழ்த்தவென்னும் பொருட்டு 'காத்து ஓம்பி அடக்குப' என்பதற்குப் புலன் நெறியிற் காத்து ஞானநெறியில் ஓம்பி அருளில் தம்மை அடக்கி யொழுகுவர் என்க. மூத்தொறும் என்றார், மூத்தலிற் பயனில்லாமையின். எருவை

* தேவா. ௬௪௪ : ௧.	† நாலடி. ௩௫ : ௭.

மேலுமேலும் பிணத்தையே உகத்தலைப்போல் தீயனவே விரும்பியலைவா என்பது. போத்தென்றது புரை; ஆவது, குற்றம். கயமை ஈண்டு மென்மையாகலின் * மெலிந்த அறிவினா புலலறிவினரெனப்பட்டனர். க

**352.** செழும்பெரும் பொய்கையுள் வாழினும் என்றும்
வழும்பறுக்க கில்லாவாந் தேரை;—வழும்பில்சீர்
நூல்கற்றக் கண்ணும் நுணுக்கமொன் றில்லாதார்
தேர்கிற்கும் பெற்றி அரிது

(பொ - ள்) செழும் பெரும் பொய்கையுள் வாழினும் என்றும் வழும்பு அறுக்ககில்லாவாம் தேரை - நீர் நிறைந்த பெரிய குளத்தின்கண் உயிர்வாழ்ந்தாலும் தவளை தன்மேல் உள்ள வழுவழுப்பான அழுக்கை நீக்கிக்கொள்ளும் ஆற்றலில்லாதனவாகும்; வழும்பு இல் சீர் நூல் கற்றக்கண்ணும நுணுக்கம் ஒன்று இல்லாதார் தேர்கிற்கும் பெற்றி அரிது- அதுபோல, பிழையற்ற சிறப்பினையுடைய மெய்நூல்களைப் பயின்றாலும நுட்பஞ் சிறிது மில்லாதவர் தமமை அதனால் மேம்படுத்திக்கொள்ளும் மாட்சி இல்லை.

(க - து) அறிவு உரமில்லாதவர், தக்க வாய்ப்புகளிருந்தாலும் தம்மை மேம்படுத்திக்கொள்ள அறியார்.

(வி - ம்) பொய்கைக்குச் செழுமை நீரின் நிறைவு. உரமுள்ள அறிவு நுணுக்கம்பெறும் ஆற்றலுடையதாகலின், நுட்பமில்லா அறிவென்பது மெலிந்த அறிவினை யுணர்த்தும், ஆதலின் ஈண்டு நுணுக்கமில்லாதாரென்றது, கயவரை யென்க. தேர்தல், தகுதி பெறுதல்; மாட்சிமைப்படுத்திக்கொள்ள லென்பது. அருமை, இன்மைமேற்று; "மதிநுட்பம் நூலோடுடையார்" † எனத் தெய்வப்புலவர் மதிநுட்பத்துக்கு முதன்மை தேற்றியதூஉங் காண்க. உ

**353.** கணமலை நன்னாட! கண்ணின் றொருவர்
குணனேயுங் கூறற் கரிதால்;—குணனழுங்கக்
குற்றம் உழைநின்று கூறுஞ் சிறியவர்கட்
கெற்றா லியன்றதோ நா.

* தொல். உரி. ௨௪. † குறள், ௬௪ : ௬.

(பொ - ள்) கண மலை நல் நாட - கூட்டமான மலை களையுடைய உயர்ந்த நாடனே!, கண் இன்று ஒருவர குணனையும் கூறற்கு அரிது - புறத்தில் ஒருவரது நல்லியல் பினையும் பேசுதற்கு அருமையாயிருக்குமென்ப; குணன் அழுங்கக் குற்றம் உழைநின்று கூறும் சிறியவர்கட்கு எற்றால் இயன்றதோ நா - ஆனால் அவரது நல்லியல்பு கெடும்படி, செய்யாத குற்றங்களை அவரெதிரிலிருந்து செய் ததாகக் கூறும் மெலிந்த அறிவினார்க்கு, நாக்கு எதனால் உருவானதோ, அறிகிலேம.

(க - து) கயவர், அஞ்சாது பொய்யுரைக்கும் இயல் பினர்.

(வி - ம்) புறத்திற் குறை கூறாது குணங்கூறுதல் பொருந்து மேனும் அதனையும காரணமின்றிக் கூறச் சான்றோர் கூசுவர்; அற்றாயின், காரணமின்றியே அதுவும் குற்றத்தை, இல்லாத குற்றத்தை, எதிரிலேயே புனைந்துரைத்துப் பழிப்பதாயின் அதனை என்னென்பது என்றபடி. எதிரிற் குற்றங் கூறித் திருத்த முயல் வது நன்றாகலின், இங்குக் குற்றம் என்றது இல்லாத குற்றத்தை யென்க. அறிகிலேம என்பது சொல்லெச்சம். தசையினாலியன்ற தனறென்பது குறிப்பு* அறிவொடு படாத நாவினியல்பு இனைத் தென்பது இதனாற் பெறப்பட்டது. ரு

**354.** கோடேந் தகலல்குற் பெண்டிர்தம் பெண்ணீர்மை
சேடியர் போலச் செயல்தேற்றார்;—கூடிப்
புதுப்பெருக்கம் போலந்தம் பெண்ணீர்மை காட்டி
மதித்திறப்பர் மற்றை யவர்.

(பொ - ள்) கோடு ஏந்து அகல் அல்குற் பெண்டிர் தம் பெண் நீர்மை சேடியர்போலச் செயல் தேற்றார் - பக்கம் உயர்நது அகன்ற அல்குலையுடைய நல்லிலக்கணம் அமைந்த நற்பெண்டிர், வேலைக்காரிகளைப்போல் தமது பெண்மையியல்பைப் புறத்தில் ஒப்பனை செய்து காட்டுதல் அறியார்; மற்றையவர் கூடிப் புதுப் பெருக்கம்போலத் தம் பெண் நீர்மை காட்டி மதிதது இறப்பர் - ஆனால் ஏனைத் தீய பெண்டிரோ தம்முட் கூடிப் புதுவெள்ளம்

* தொல். எச். சுசு.

போலப் புனைதல் செய்து தமது பெண்மையியல்பைப் புறத்திற் புலப்படுத்தித் தாமே மதித்து வரம்புகடந்து நடப்பர். (அதுபோற் கயவர் இடம்பத்தால் அவம்படுவ ரென்பது.)

(க - து) கயமை உள்ளீடில்லாததாகலின் இடம்பத்தையே விரும்பும்

(வி - ம்) கோடேந்து அகலல்குலென்னும் அடைமொழி ஈண்டு நல்லிலக்கணந் தேற்றிப் பெண்டிர் நற்பெண்டிரென்ப துணர்த்திற்று. ஒப்பனை செய்துகொள்ளாமைக்குச் சேடியர் உவமமாயினர். புதுப்புன லுவமம் ஈண்டு ஒப்பனை ஆரவாரம் முதலியவற்றிற்கு வந்தது. மதித்திறப்பரென்பதற்கு, பிறர், பொருள் தந்தபோது அவரை மதித்து, தராதபோது மீறி ஒழுகுவ ரென மொழிந்துகொள்க. உவமமும் இதற்கொக்குமென்பது "புதுப்புனலும் மாரியறவே அறுமே அவரன்பும் வாரியறவே அறும்" என மேலும்* இவ்வியல்பு தேற்றி வருதலால் அறியப் படும். உவமமட்டுங் கூறி இச்செய்யுள் அறிஞர் கயவர்களியல்பு உணர்த்தலின், இது பிறிதுமொழிதலென்னும் அணி. அறிஞர் அடக்கமாகவும் கயவர் ஆடம்பரமாகவும் ஒழுகுவரென்பதும் இதனாற் பெறப்பட்டது. ௪

**355.** தளிர்மேலே நிற்பினுந் தட்டாமற் செல்லா
உளிநீரார் மாதோ கயவர் ;—அளிநீரார்க்
கென்னுஞ் செய்யார் எனைத்தானுஞ் செய்பவே
இன்னுங்கு செய்வார்ப் பெறின்.

(பொ - ள்) தளிர்மேலே நிற்பினும் தட்டாமற் செல்லா உளிநீரார் கயவர் - இளந்தளிரின்மேல் நின்றாலும் பிறர் தட்டினாலன்றி அதனுள் இறங்காத உளியின் இயல்பினையுடையவர் கயவர்; அளிநீரார்க்கு என்னும் செய்யார் இன்னுங்கு செய்வார்ப் பெறின் எனைத்தானும் செய்ப - ஏனென்றால், பிறர்க்கு இரங்கும் இயல்புடைய சான்றோர்க்குச் சிறிதும் பயன்படாமல், தமக்குக் கொடுமை செய்வாரைப் பெற்றால் அவர் எவ்வளவும் பயன்பட்டு வேலை செய்வர்.

---

* நாலடி. ௩௭ : ௪௦.

(க - து) கயவர், வருத்தியே வேலை வாங்குதற்குரியர்.

(வி - ம்) அளிநீரரான சான்றோர்பக்க விருப்பது இனிதாக வேலை பார்ப்பதற்கிடமாயினும் அங்கு அவர் பயன்படாமல், தம்மை வருத்துவார் பக்கலே பயன்படுதல்பற்றித் தளிர்மேலே நிற்பினும் தட்டாமற செல்லாத உளி உவமமாயிற்று. "கரும்பு போற் கொல்லப் பயன்படுங் கீழ்"* என்றார் திருவள்ளுவரும். மாது, ஓ, அசை செய்தல், ஈண்டுப் பயன்படுதலின்மேற்று. இக் கருத்து இவ்வுவமமே கொண்டு, "விட்டுக் கருமம் செயவைத்த பின்னரும முட்டாதவரை வியங்கொளல் வேண்டுமால்; தொட்டக்கால மாழ்குந் தளிர்மேலே நிற்பினுந் தட்டாமற் செல்லாது உளி"† எனப் பிறாண்டும் வருதல் அறிக. உளிக்கு இறங்குத லென்றது, கயவர் தம் தொழில செய்தற்குக் கொள்ளப்படும். (௯)

356 மலைநலம் உள்ளும குறவன்; பயந்த
விளைநிலம் உள்ளும் உழவன்; சிறந்தொருவர்
செய்தநன் றுள்ளுவர் சான்றோர்; கயந்தன்னை
வைததை உள்ளி விடும்

(பொ - ள்) மலைநலம் உள்ளும் குறவன் - குறவன் தனக்கு வளந் தந்த மலையினது நன்மையை நினைந்து பாராட்டிக்கொண்டிருப்பான்; பயந்த விளைநிலம் உள்ளும் உழவன் - உழவன் தனக்கு விளையுள் பயந்த விளைநிலங்களின் நன்மையை நினைந்து பாராட்டிக்கொண்டிருப்பான்: சிறந்து ஒருவர்செய்த நன்று உள்ளுவர் சான்றோர் - அவை போல, ஒருவர் அருட்குணம் மிகுந்து தமக்குச் செய்த நன்றியை நினைந்து பாராட்டிக்கொண்டிருப்பர் சான்றோர்; கயம் தன்னை வைததை உள்ளிவிடும - ஆனால் தாழ்ந்த அறிவினன், தன்னைப் பிறர் பழித்ததை நினைத்துப் பகைமை கொண்டுவிடுவன்; (நலம் பாராட்டான் என்பது.)

(க - து) மெலிந்த அறிவினர், பிறர் தீமைகள் உள்ளுதலை விலக்கி நலந்தேடி உள்ளும் ஆற்றலில்லாதவராவர்.

(வி - ம்) குறவர்க்கும் உழவர்க்கும் வாழ்வு மலையினாலும் விளைநிலத்தினாலும் உண்டாதல்போல, சான்றோரது வாழ்வு பிறர்

* குறள் ௧0௮. † பழமொ. ௧௬௧.

செய்த நன்றியுள்ளுதலையே அடிப்படையாகக் கொண்டு நடை பெறுதலும், கீழோரது வாழ்வு பிறரைப் பகைத்துக் கொள்ளு தலையே அடிப்படையாகக் கொண்டு நடைபெறுதலும் பெறப்படும். உள்ளுதல், ஈண்டு நினைந்து பாராட்டுதல். புன்மை கருதிக் கயம் என அஃறிணையான் முடிக்கப்பட்டது. "இரும்பிற் பிணிப்பர் கயத்தை"* என்றார் பிறரும். விடும் என்னுந் துணிவுப்பொருள் விகுதி, தவறித் தீயதில் நுழைந்துவிட்ட புன்மையின் முரட்டுத் துணிவினை உணர்த்தும். ௬

**357.** ஒருநன்றி செய்தவர்க் கொன்றி யெழுந்த
பிழைநூறுஞ் சான்றோர் பொறுப்பர்;—கயவர்க்
கெழுநூறு நன்றிசெய் தொன்றுதீ தாயின்
எழுநூறுந் தீதாய் விடும்.

(பொ - ள்) ஒரு நன்றி செய்தவர்க்கு ஒன்றி எழுந்த பிழை நூறுஞ் சான்றோர் பொறுப்பர் - தமக்கு ஒரு நன்மை செய்தவர்க்குச் சான்றோர் அவரால் பின்பு தொடர்ந்து உண்டான நூறு குற்றங்களும் பொறுத்து நிற்பர்; கயவர்க்கு எழுநூறு நன்றி செய்து ஒன்று தீதாயின் எழுநூறுந் தீதாய்விடும் - ஆனால் அறிவில் தாழ்ந் தோர்க்கு ஒருவர் எழுநூறு நன்மைகள் செய்து பின்பு தவறுதலால் ஒன்று தீமையாக நேர்ந்துவிட்டால் அவ் வெழுநூறு நன்மைகளும் தீமைகளாய்க் கருதபபட்டு விடும்.

(க - து) கயவர் அறிவு, நன்மைகளில் அழுந்தி நில்லாமல் தீமைகளையே முனைந்தெண்ணி நிற்கும்.

(வி - ம்) ஒன்றியெழுதல், சேரத் தோன்றுதல்., பொறுத்த லாவது, பொறுத்துத் தீங்கியற்றாது நிற்றலென்றும், தீதாய் விடுதலாவது, தீமைகளாய்க் கருதப்பட்டுப் பல துன்பங்கள் விளைதற்கு ஏதுவாய் விடுதல் என்றுங் கொள்க; "நிலம்புடை பெயர்வதாயினும் ஒருவன் செய்தி கொன்றோர்க்கு உய்தி இல்"† என்பவாகலின், சான்றோர் பிழை நூறும் பொறுப்பாராயினர். "நன்றி செய்குநர்ப் பிழைத்தோர்க் குய்வில வென்னுங் குன்றா வாய்மை"‡ என்றதூஉம் அறிக. ௭

* நான்மணிக். ௬௨. † புறம். ௩௪. ‡ கல்லா. ௪.

358. ஏட்டைப் பருவத்தும் இற்பிறந்தார் செய்வன
மோட்டிடத்துஞ் செய்யார் முழுமக்கள்;—கோட்டை
வயிரஞ் செறிப்பினும் வாட்கண்ணாய்! பன்றி
செயிர்வேழ மாகுத லின்று.

(பொ - ள்) *ஏட்டைப் பருவத்தும் இற்பிறந்தார் செய்வன மோட்டிடத்தும் செய்யார் முழு மக்கள் - பொருளில்லாமை முதலியவற்றால் தளர்வுண்டான காலத்திலும் உயர்குடியிற் பிறந்த சான்றோர் செய்யும் நற்செயல்களைச் செல்வமுள்ள காலத்திலும் கயவர்கள் செய்யார்; கோட்டை வயிரம் செறிப்பினும் வாட்கண்ணாய் பன்றி செயிர்வேழம் ஆகுதல் இன்று - ஒளிமிக்க கண்களையுடைய பெண்ணே! பன்றியின் கொம்பை வயிரம் பொருத்திப் பூண்கட்டினும் அது போர்ச்சினமுடைய யானையாத லில்லை.*

(க -து) *நல்லன செய்தல் கயவரியல்பன்று.*

(வி - ம்) *உவமையாற் கயவர்க்கு இயல்பன்மை பெறப்படும். ஏட்டை, தளர்வு. "ஏட்டைப் பசி"* என்புழிப்போல இற்பிறந்தாரென்னுங் குறிப்பால் அறஞ்செய்தல் பிறவியியல்பென்பது பெறப்படும். மோடென்றது, ஈண்டுச் செல்வவுயர்வு. இழிவு கருதியும், உருவம் ஏனை அறிஞரை யொப்ப முழுதொத்திருப்பது கருதியும், அறிவு முதலிய உயிர வளர்ச்சியின்றிப் பிறந்த வடிவாக விளங்குதல் கருதியும் மூடர் 'முழுமக்க' ளெனப் பட்டனர். செறிப்பினும், செறித்துக் கட்டினுமென்க.* அ

359. இன்றாதும் இந்நிலையே ஆதும் இனிச்சிறிது
நின்றாதும் என்று நினைத்திருந்—தொன்றி
உரையின் மகிழ்ந்துதம் உள்ளம்வே றாகி
மரையிலையின் மாய்ந்தார் பலர்.

(பொ - ள்) *இன்று ஆதும் இந்நிலையே ஆதும் இனிச் சிறிது நின்று ஆதும் என்று நினைத்திருந்து ஒன்றி உரையின் மகிழ்ந்து - இன்று செல்வராவோம், இப்பொழுதே*

* சிந். உ : ௩அ.

செல்வராவோம், இனிச் சற்றுப் பொருத்துச் செல்வராவோம என்று எண்ணமிட்டுக் கொண்டிருந்து அதிற் படிந்து வாய்ப்பேச்சினுற் களித்து, தம உள்ளம் வேருகி- ஆனுல் அதற்குரிய முயற்சியிலராய்த் தம் இயல்பு வேறுபட்டு, மரை இலையின் மாய்ந்தார் பலர் - தாமரையிலையைப் போல், இருந்த நிலையிலேயே மாய்ந்தொழிந்த கயவர் பலராவர்.

(க - து) அறிவின் மெலிந்தோர் வீண் எண்ணமும் வாய்பபேச்சும் உடையவராய் உரிய செயலில்லாதவராவர்.

(வி - ம்) இந்நிலையே என்பதற்கு, இப்போதுள்ள தொழில் முதலிய நிலைமைகளின் ஏதுவாகவே யென்றுரைத்தலும் ஒன்று. மரை, தாமரை யென்பதன் முதற்குறை; தாமரையிலை கடைசியில் தான் இருந்த இடத்திலேயே இருந்து உலாந்து மறைந்து விடுதலால் உவமையாயிற்று; இலையைக் கூறினுர் மேலே விளங்கித் தெரிதலாலும் கயவர்க்கு உவமையாதலாலு மென்க. "மரையிலைபோல மாய்ந்திசினோர் பலரே"* என்றார் பிறரும். கூ

360. நீருட் பிறந்து நிறம்பசிய தாயினும்
ஈரங் கிடையகத் தில்லாகும்;—ஓரும்
நிறைப்பெருஞ் செல்வத்து நின்றக் கடைத்தும்
அறைப்பெருங்க லன்ன ருடைத்து.

(பொ - ள்) நீருள் பிறந்து நிறம் பசியதாயினும் ஈரம் கிடையகத்து இல்லாகும் - நீரினுள் தோன்றி மேலே நிறம் பசுமையுடையதாயிருந்தாலும நெட்டியின் உள்ளே ஈரம் இல்லையாம்; நிறைப்பெருஞ் செல்வத்து நின்றக் கடைத்தும் அறைப்பெருங்கல் அன்னர் உடைத்து - அதுபோல, நிறைந்த பெரிய செல்வ நிலையில் நின்றாலும், பாறையாகிய பெரிய கல்லைப்போல் வன்மையான உள்ளம் படைத்த கயவரை உடைத்து இவ்வுலகம

(க - து) கயவர்க்கு ஈர உள்ளம் இல்லை.

(வி - ம்) நீா செல்வத்துக்கும், பசுமை கவர்ச்சியாகிய தோற்றப் பொலிவுக்கும் ஈரம் இரக்கத்துக்கும கொள்ளப்படும்; ஓரும், அசை.

* புறம். உஎ.

எதுகை நோக்கி நிறைப்பெருவென ஒற்று மிக்கது. பாறைபட்ட உள்ள முடையா ரென்றற்கு, 'அறைப்பெருங் கல் அன்னு' ரென்றார். படிமம் வகுத்தற்கும், இருத்தல் கிடத்தல் முதலியவற்றிற்குங் கூடப் பயன்படுதலில்லாத அறுப்புக்களையுடைய பெருங்கல் அறை யெனப்படுமாகலின், யாதும் பயன்படாமை கருதிற்று இவ்வுவமம். "கல் நனி நல்ல கடையாய மாக்களின்" *எனக் கீழ் வந்தது இதனி னுஞ் சிறந்த கல்லென்பது இதனாற் பெறப்பட்டது. ௬௦

---

## ௩௭. பன்னெறி

பலவகைப்பட்ட ஒழுகலாறுகளை உணர்த்துவது.

**361.** மழைதிளைக்கு மாடமாய் மாண்பமைந்த காப்பாய்
இழைவிளக்கு நின்றிமைப்பின் என்னும்?—விழைதக்க
மாண்ட மனையாளை யில்லாதான் இல்லகம்
காண்டற் கரியதோர் காடு.

(பொ - ள்) மழை திளைக்கும் மாடமாய் மாண்பு அமைந்த காப்பாய் இழை விளக்கு நின்று இமைப்பின் என்னும் - மேகங்கள் தவழும் உயர்ந்த மாளிகையாய்ச் சிறப்பமைந்த பாதுகாப்புடையதாய் மணிகளால் இழைக் கப்பட்ட விளக்குகள் அங்கங்கும் இருந்து ஒளிவிடினும் என்ன பயனாகும்? விழைதக்க மாண்ட மனையாளை யில்லா தான் இல்லகம் காண்டற்கு அரியதோர் காடு - மாட்சிமை வாய்ந்த விரும்பத்தக்க இல்லக் கிழத்தியை யில்லாதவனது வீடு கண்கொண்டு பார்த்தற்கியலாததொரு கொடிய காடாகும்.

(க - து) மனையாள் இல்லாத வீடு வீடன்று.

(வி - ம்) திளைத்தல், இடைவிடாது பயிலுதல்; பெருமையும் காப்பும் ஒளியுமுடையதாயிருந்தாலும் வீட்டுக்கு உணர்வு விளக்காகிய மனையாள் இன்றியமையாதவ ளென்பது கருத்து; "மனைக்கு விளக்காகிய வாணுதல்"† என்றார் பிறரும்; மாண்ட விழைதக்க மனையாளென்க. மனைமாட்சி மனைக்கு மங்கலமாகலின்‡ இல்லாள்

---

* நாலடி. ௩௪ : ௪. † புறம். ௩௧௪. ‡ குறள், ௬ : ௧௦.

இல்லாத இல்லம், அறவோர் துறவோர் அந்தணர் விருந்து உற வோர் நண்பர் குழந்தைகள் பெரியோர் உலவுதலற்றுக் காண்டற்கரிய தோர் காடாயிருக்கும் எனப்பட்டது. க

**362.** வழுக்கெனைத்து மில்லாத வாள்வாய்க் கிடந்தும்
இழுக்கினைத் தாம்பெறுவ ராயின்,—இழுக்கெனைத்துஞ்
செய்குறுப் பாணி சிறிதே,அச் சின்மொழியார்
கையுறுப் பாணி பெரிது.

(பொ - ள்) வழுக்கு எனைத்தும் இல்லாத வாள்வாய்க் கிடந்தும் இழுக்கினைத் தாம் பெறுவராயின் - சோர்வு சிறிதுமில்லாத வாளின் காவலில் இருந்தும் மகளிர் ஒழுக்கத் தவறுதலைத் தாம் உறுவராயின், இழுக்கு எனைத்தும் செய்குறுப் பாணி சிறிதே அச் சின்மொழியார் கையுறுப் பாணி பெரிது - குளிர்ந்த மொழிகளைப் பேசும அம்மகளிர் தமது வாழ்நாளிற் குற்றம் சிறிதுஞ் செய்யாத காலம் சிறிதே; மற்றுத் தம் கணவர்க்கு வயபபட்டொழுகாக் காலம் பெரிதென்க.

(க - து) மகளிர்க்கு நிறை காக்குங் காபபே தலை.*

(வி - ம்) வாள் என்றது, வாள் வீரரின் காவல்; ஆகுபெயர். கிடத்தல், கட்டுப்பட்டிருத்தல். காவலினும் இழுக்குப் பெறுவராயின் நிறை சிறிது மில்லாதவர் அம் மகளி ரென்பது பெறப்படுதலின், அவர் தம் வாழ்நாளில் இழுக்கெனைத்துஞ் செய்குறுப் பாணி சிறிதே யெனப்பட்டது. பாணி என்றது காலம்; “ எம் சொல்லற் பாணி நின்றனனாக ”† என்புழிப்போல. எனைத்துஞ் செய்குறுப் பாணி யென்றார், எதானும் வழுக்குடையராகவே யிருப்பரென்றற்கு. கையுறுமை, இககு வயமாயிராமை. உ

**363.** எறியென் றெதிர்நிற்பாள் கூற்றம்; சிறுகாலை
அட்டில் புகாதாள் அரும்பிணி;—அட்டதனை
உண்டி யுதவாதாள் இல்வாழ்பேய்; இம்மூவர்
கொண்டானைக் கொல்லும் படை.

(பொ - ள்) எறி என்று எதிர்நிற்பாள் கூற்றம் - தன் கணவற்குச் சினத்தை மூட்டி ‘ அடி ’ என்று எதிரில்

* குறள், ௬ : ௭. † குறிஞ்சிப். ௨௫-௨.

அடங்காது நிற்கும் மனைவி அவனுக்குக் கூற்றுவனாவாள்; சிறு காலை அட்டில் புகாதாள் அரும்பிணி - காலை நேரத்தில் அடுக்களையிற் சென்று உணவு சமைக்காதவள் தன் கணவனுக்குக் கொடிய நோயாவாள், அட்டதனை உண்டி உதவாதாள இல்வாழ் பேய் - சமைத்ததை அவனுக்குரிய உணவாக இடாமல் உண்பவள் இல்லத்தில் வாழும் பேயாவாள்; இம் மூவர் கொண்டானைக் கொல்லும் படை - இம் மூவகையியல்புடைய மாதரும் தம்மை மணந்துகொண்ட கணவன்மாரை உயிரோடு வருத்தும் கருவிகளாவர்.

(க - து) இல்வாழ் பெண்டிர் அடக்கமும் சுறுசுறுப்பும் அன்புமுடையவராய் விளங்கவேண்டும்.

(வி - ம்) சினத்தை மேலுமேலும் மூளச் செய்து கணவற்கு இறுதியுண்டாகுதலின 'கூற்ற'மெனவும், காலத்தில் உணவு கிட்டாமற் செய்தலால் நோயுண்டாதலின் 'பிணி' எனவும், பெரும்பசி கொணடு முன் உண்ணுதலின் 'பேய்' எனவும் கூறினார். சிறுகாலை யெனறது காலை நேரத்தின் முற்பகுதியிலுந் தொடக்கநேரதைக் குறித்தது. பிணிக்கு அருமையாவது, என்றும் இவ்வாறே நடந்து தீராநோ யாதல். அட்டதனை உதவாதாள் என்ற தன்மேலும் உணடி யென்றது, அட்டது தன் கணவற்குரிய உணடியென்று கருதாதவளாய் என்னும் பொருட்டு. பேய்க்குப் பெரும்பசி இயலபாதல் "பேஎயப் பிறப்பிற் பெரும்பசியும்"* என்பதனானும் பெறப்படும். ௩

364 கடியெனக் கேட்டுங் கடியான், வெடிபட
ஆர்ப்பது கேட்டும் அதுதெளியான்,—பேர்த்துமோர்
இற்கொண் டினிதிருஉம் ஏமுறுதல் என்பவே,
கற்கொண் டெறியுந் தவறு.

(பொ - ள்) கடி எனக் கேட்டும் கடியான் - இனி மண வாழ்க்கையை முனிந்துவிடு என்று தக்கோர் அறிவுரை கள் கேட்டும முனியானாய், வெடிபட ஆர்ப்பது கேட்டும் அது தெளியான் - தலை வெடிக்கும்படி உலகிற் சாப்பறை கள் முழங்குவது கேட்டும் அத் துறவியல்பைத் தெளியானாய், பேர்த்தும் ஓர் இல்கொண்டு இனிது இருஉம் ஏமுறு

* திரிகடுக. ௯0.

தல் கல்கொண்டு எறியும் தவறு என்ப-மீண்டும் இரண்டா முறையாக ஓர் இல்லக்கிழத்தியை மணம்புரிந்து கொண்டு இன்புற்றிருக்கும் மயக்கத்தையடைதல் தன்னையே தான் கற்கொண் டெறிந்துகொள்ளும் தவறென்று சான்றோர் கூறுவர்.

(க - து) இரண்டாம் முறையாகவும் மனைவாழ்க்கையிற் புகாமல் மக்கள் துறவுடையராய் உலகப் பெரும்பணிகள் செய்து விளங்குதல் வேண்டும்.

(வி - ம்) கடியான் முதலியன முற்றெச்சம். இனிதென்றது, உடல் நலங் கருதிற்று. எழுறுதல், ஈண்டு மயக்கமுறுதல்: "தலைப்பட்டார் தீரத் துறந்தார் மயங்கி வலைப்பட்டார் மற்றையவர்"* என்னும் நாயனார் திருமொழியை இங்கு நினைவுகூர்க. ௪

**365** **தலையே தவமுயன்று வாழ்தல், ஒருவர்க்**
**கிடையே இனியார்கட் டங்கல்,—கடையே**
**புணராதென் றெண்ணிப் பொருள்நசையால் தம்மை**
**உணரார்பின் சென்று நிலை.**

(பொ - ள்) தலையே தவம் முயன்று வாழ்தல் ஒருவர்க்கு - மக்கட் பிறவியில் வந்த ஒருவர்க்கு, தம் வாழ்க்கையில் தவமுயற்சியுடையராய் வாழ்தல் தலையான தாகும்; இடையே இனியார்கண் தங்கல் - தமக்கு இனியராயிருக்கும் மனைவி மக்கள் முதலிய உறவினரிடத்து மனந் தங்கி அவரோடொழுகுதல் இடைத்தரமான வாழ்வாகும்; கடையே புணராது என்று எண்ணிப் பொருள் நசையால் தம்மை உணரார்பின் சென்று நிலை - மேற்கூறிய இருவகை வாழ்வின் முயற்சியும் தமக்குக் கைகூடாதென்று நினைந்து வெறும் பொருள் விருப்பத்தால் தம் குடிப்பிறப்பு கல்வி முதலிய தகுதிகளையுங் கருதிப்பாராது நடத்துஞ் செல்வர்களின் பின் சென்று நிற்கும் அடிமை நிலை கடைப்பட்ட வாழ்வாகும்.

(க - து) வாழ்க்கையிற் பற்றின்றி யொழுகும் அறப்பணியாளர் தலையான முயற்சியுடையோராவர்.

* குறள், ௩௪௮: அ.

(வி - ம்) ஒருவர்க்கு என்பதைப் பிறவற்றிற்குங் கூட்டுக. தலை, இடை, கடையென ஈண்டுக் கூறிய வாழ்வு முறையே அருள் வாழ்வும், அன்பு வாழ்வும், அடிமை வாழ்வுமாகும். பிறர்பால் அடிமைத் தொழில் பூண்டிருப்போர் முறையாக மனையறம் நடத்துதல் இயலாதாகலின் அதனை வேறு பிரித்துக் கடையாக்கினர். பொருண் முயற்சி இம் மூன்றற்கும் பொதுவெனக் கொள்க. பொருள் ஈட்டிப் பலர்க்கும் உதவியாய் வாழ்தலும், தமக்கினியார்க்கு மட்டுமே உதவியாய் வாழ்தலும், தமக்கும் இனிமையின்றி உயிர்வாழ்தலும் கருதினமையின், முறையே இவை தலை இடை கடையாயின. பொருணசையாலென்றூர், கண்டது பயனன்று நசையே யென்றற்கு. பின்நிற்றலாவது, ஈண்டுத் தொழுதுண்டு வாழ்தல். "பின்நின்றேவல் செய்கின்றேன்"* என்ப திருவாசகத்தினும். ௫

366 கல்லாக் கழிப்பர் தலையாயார்; நல்லவை
துவ்வாக் கழிப்பர் இடைகள்; கடைகள்
இனிதுண்ணேம் ஆரப் பெறேம்யாம் என்னும்
முனிவினுற் கண்பா டிலர்.

(பொ - ள்) கல்லாக் கழிப்பர் தலையாயார் - மக்களில் உயர்ந்தோர், நற்கருத்துக்களை ஆழ்ந்து அறிந்து தெளிவு பெறுதலை மேற்கொண்டு அம் முறையில் தம் வாழ்நாட்களைக் கழிப்பர்; நல்லவை துவ்வாக் கழிப்பர் இடைகள் - இடைத்தர மக்கள், இனிய பண்டங்களை ஐம்புலன்களாலும் நுகர்ந்தின்புறுதலை மேற்கொண்டு அம் முறைமையில் வாழ்நாள் கழிப்பர்; கடைகள் இனிது உண்ணேம் ஆரப் பெறேம் யாம் என்னும் முனிவினுல் கண்பாடு இலர் - கடைத்தர மக்கள், 'யாம் பண்டங்களை இன்பமாய் நுகரப் பெற்றிலேம், நிறையப பெற்றிலேம்' என்னும் வெறுப்பினுல் இரவினும் உறக்கமில்லாதவராவர்.

(க - து) உலகப் பொருள்களின் வாயிலாகத் தம்மைத் தெளிவுடையராக்கிக்கொள்ளும் மக்களே உயர்ந்தோராவர்.

(வி - ம்) கற்றல், ஆழ்ந்துணர்ந்து தெளிவு பெறுதல். ஒரு பொருளைக் காண நேர்ந்தால் அதுகொண்டு தலையானவர் தமதறி

* திருவாச. கோயின் மூத்த. உ.

யைத் தெளிவு செய்ய முயல்வரெனவும், இடைப்பட்டவர் புலன்களால் நுகர்ந்தின்புற முயல்வரெனவும், கடைப்பட்டவர் ஏதும் பெறாராய் ஆற்றாமை மட்டுமே கொண்டு அமைதியின்றி மெலிவர் எனவும் உணர்த்திற்று இச்செய்யுள்; நாயனார் கடைப்பட்டவர் நிலையை ஒதுக்கிப் பேறுடையாரிருவ ரியற்கையைமட்டு மெடுத்து, "இருவே றுலகத் தியற்கை திருவேறு தெள்ளிய ராதலும் வேறு"* என்றருளிச் செய்தார். கண்படுதல், உறக்கங் கொள்ளுதல். சு

**367.** செந்நெல்லா லாய செழுமுளை மற்றுமச்
செந்நெல்லே யாகி விளைதலால்,—அந்நெல்
வயனிறையக் காய்க்கும் வளவய லூர !
மகனறிவு தந்தை யறிவு.

(பொ - ள்) செந்நெல்லாலாய செழுமுளை மற்றும் அச் செந்நெல்லேயாகி விளைதலால்-சாலி என்னும் உயர்ந்த செந்நெல்லின் விதையினால் உண்டான செழுவிய முளை பின்னும் அச் செந்நெற் பயிராகவே தோன்றி விளைதலால், அந்நெல் வயல் நிறையக் காய்க்கும் வளவயல் ஊர மகனறிவு தந்தை யறிவு - அச் செந்நெல் வயல் நிறைய விளைந்து கிடக்கும் வளமான கழனிகளையுடைய ஊரனே! புதல்வன் அறிவு அவன் தந்தையின் அறிவு வகையை ஒத்ததாகும்

(க - து) புதல்வனுடைய அறிவு ஒழுக்கங்களை விரும்பும் தந்தை, தான் நல்லறிவு நல்லொழுக்கமுடையவனாய் விளங்குதல் வேண்டும்.

(வி - ம்) செந்நெல், நெல்லின் உயர்ந்த இனத்தைச் சேர்ந்தது. காய்க்கும் என்றது, ஒரு வழுவமைதி. ஊரன், மருத நிலத்துத் தலைவன். இச்செய்யுள், ஒருவன் அறிவு செயல் முதலியவை அவன் மரபினரையுஞ் சாருமென் றறிவுறுத்துமுகத்தால், அவனை நன்னிலையில் நிறுத்த விரும்பிற்று. எ

**368.** உடைப்பெருஞ் செல்வரும் சான்றோரும் கெட்டுப்
புடைப்பெண்டிர் மக்களும் கீழும் பெருகிக்
கடைக்கால் தலைக்கண்ண தாகிக் குடைக்கால்போற்
கீழ்மேலாய் நிற்கும் உலகு.

* குறள், ௩௮ : ௪.

(பொ - ள்) உடைப்பெருஞ் செல்வருஞ் சான்றோருங் கெட்டுப் புடைப்பெண்டிர் மக்களும் கீழும் பெருகி - தமது பொருளைப் பலர்க்கும் வழங்கும் அன்புரிமையுடைய பெரிய செல்வ வளம் வாய்ந்த இல்லறத்தாரும் ஏனைத் துற வாசிரியரும் வறியராய் நிலை சுருங்கிச் சார்புப் பெண்டி ராகிய வேசையரின் மக்களும் ஏனைக் கயவர்களும் செல்வ முடையவர்களாய் நிலைபெருகி, கடைக்கால் தலைக்கண்ண தாகிக் குடைக்கால்போல் கீழ்மேலாய் நிற்கும் உலகு-அவ் வாற்றால், கடைப்பட்டதாகிய சால் தலைப்புறத்திலிருப்ப தாய், குடையினது தண்டு கீழ்மேலாக நிற்பதுபோல் இவ்வுலகம் தலைகீழாய் நிற்கும் இயல்புடையதா யிருக் கின்றது.

(க - து) உலகநிலை கொண்டு மக்களை மதித்தலாகாது.

(வி - ம்) செல்வம், பிறர்க்கு வழங்குவார்க்கே பயன்றந்து உடைமையாதலின் அவ் வன்புரிமையுடையாரது செல்வம் 'உடைப்பெருஞ் செல்வ' மெனப்பட்டது. அவ்வாற்றால், அற வோர முதலியோரைப் புறந்தருவாராதல் பற்றி அவர் இல்லறத்தா ரெனப்பட்டனர். "படைப்புப் பல படைத்துப் பலரோடு உண் ணும் உடைப்பெருஞ் செல்வர்"* எனப் புறத்தில் வருதலும் அறிக. புடைப்பெண்டிர், பொருள்தருவார் பக்கல சாரும் பெண்டிர்; இக் குறிப்பினாலும் முன்னாக் கூறிய செல்வர் இல் லறத் தோன்றல்கள் என்பது பெறப்படும். இஃது உலகியற்கை கூறுமுகத்தான் மெய்ப்பொருளொன்று அறிவுறீஇயது. அ

369. இனியார்தம் நெஞ்சத்து நோயுரைப்ப அந்நோய்
தணியாத உள்ளம் உடையார்,—மணிவரன்றி
வீழும் அருவி விறன்மலை நன்னாட!
வாழ்வின் வரைபாய்தல் நன்று.

(பொ - ள்) மணி வரன்றி வீழும் அருவி விறல் மலை நல் நாட - மணிகளை வாரிக்கொண்டு வீழ்கின்ற அருவி களையுடைய வென்றிமிக்க மலைகளமைந்த சிறந்த நாடனே! இனியார் தம் நெஞ்சத்து நோய் உரைப்ப அந் நோய் தணி யாத உள்ளம் உடையார்-தமக்கு இனியரா யிருப்போர்

---

* புறம். கஅஅ.

தமது உள்ளத்திலுள்ள கவலையைத் தாமே ஆற்றிக் கொள்ள வியலாது எடுத்துச் சொல்ல அக் கவலைக்கு ஏது வான குறையைத் தீர்த்து அதனைத் தணிவிக்காத இரக்க மற்ற வன்னெஞ்சுடையார், வாழ்வின் வரை பாய்தல் நன்று-இவ்வுலகில் உயிர் வாழ்தலினும் ஒரு மலையின்மேல் ஏறி வீழ்ந்து உயிர் மாய்த்துக் கொள்ளுதல் நலமாகும்.

(க - து) பிறர்க்கு உதவியாயிராதவர் இருப்பதும் இறப்பதும் ஒன்றே.

(வி - ம்.) இனியாரென்றது, உறவினர் நண்பர் முதலியோர், நோய் தணித்தலாவது, நோய்க்கு ஏதுவானதைத் தணித்த லென்க. ஒப்புரவறியாதவர் உலக நடை யறியாதவராகலின் உலகில் அவர் இருத்தலும் இல்லாமையும் ஒன்றேயாயின. "ஒத்த தறிவான் உயிர்வாழ்வான் மற்றையான் செத்தாருள் வைக்கப்படும்" * என்றார் நாயனாரும். வரை பாய்தலால் அவ் விழிவு பெறப்படாமை நோக்கி நன்றென்றார். "மிக்க மிகு புகழ் தாங்குபவோ தற்சேர்ந் தார் ஒற்கம் கடைப்பிடியாதார்" † என்றார் பிறரும். க

370 புதுப்புனலும் பூங்குழையார் நட்பும் இரண்டும்
விதுப்பற நாடின்வே றல்ல;—புதுப்புனலும்
மாரி அறவே அறுமே, அவரன்பும்
வாரி அறவே அறும்.

(பொ - ள்) புதுப் புனலும் பூங் குழையார் நட்பும் இரண்டும் விதுப்பு அற நாடின் வேறு அல்ல - புது நீர்ப் பெருக்கும் அழகிய தோடணிந்த வேசையரின் றொடர்பும் விரைதலின்றி ஆராய்ந்தால் அவை தம் தன்மையில் வேறு வேறு அல்ல; புதுப் புனலும் மாரி அறவே அறும் அவர் அன்பும் வாரி அறவே அறும் - புது வெள்ளமும் மழை நிற்க நின்றுவிடும் அவ் விலைமகளிர் அன்பும் பொருள் வரு வாய் நீங்க நீங்கிவிடும்.

(க - து) பொருட் பெண்டிர், பொருளை மட்டுங் கொண்டு பொருள் கொடுப்பாரைக் கொள்ளாதவராகலின், அவர் தொடர்பு கொள்ளத்தக்கதன்று.

* குறள், உஉ: ச. † ஐங். ஐம். சஅ.

(வி - ம்.) விதுப்பென்றது, உள்ளத்துடிப்பு; ஈண்டு விரைவுக்காயிற்று. "விதுப்புறு விருப்பொடு"* என்புழிப்போல. முன் உம்மைகள் இரண்டும் எண்; பின் உம்மைகள் இரண்டும் ஒன்றை யொன்று தழுவிய எச்சங்கள். பொருள் நிலையற்ற தாகலின் அப் பொருளுக்கேக்கமாக இனியரா யொழுகுவாரது அன்பும் நிலையற்றதாய் இன்னாமை பயக்குமென்று ஏதுவின் நிறீஇயினார். ௧0

---

## ௩௮. பொதுமகளிர்

பொருள் கொடுப்பார் பலாக்கும் உரிய பொதுப் பொருளாயிருக்கும் வரைவில் மகளிரின் இயல்பு.

**371**. விளக்கொளியும் வேசையர் நட்பும் இரண்டும்
துளக்கற நாடின்வே றல்ல;—விளக்கொளியும்
நெய்யற்ற கண்ணே அறுமே, அவரன்பும்
கையற்ற கண்ணே அறும்.

(பொ - ள்) விளக்கொளியும் வேசையர் நட்பும் இரண்டும் துளக்கு அற நாடின் வேறு அல்ல - விளக்கின் ஒளியும் விலைமகளிர் உறவுமாகிய இரண்டும் கலக்கமின்றி ஆராய்ந்தால் அவை தம் தன்மையில் வேறு அல்ல; விளக்கொளியும் நெய் அற்றகண்ணே அறும் அவா அன்பும் கை அற்றகண்ணே அறும - விளக்கின் ஒளியும் நெய் வற்றியபோதே அவியும், அம் மகளிரின் அன்பும் பொருள் வற்றியபோது இல்லையாய்விடும்.

(க - து) பொதுமகளிர் அன்பு விலைக்கே அல்லது விலை கொடுப்பார்க்கன்று.

(வி - ம்.) ஒளிக்குக் காரணம் நெய்யாதல்போல அவரன்புக்குக் காரணம் பொருளல்லது வேறல்ல என்றார். துளக்கற நாடுதல், ஐயந்திரிபின்றி ஆராய்தல். கண்ணே யென்னும் ஏகாரம் இரண்டிடத்தும் தேற்றம்; ஏனையது, அசை. கையென்னும் இடப்பெயர், இடத்திலுள்ள பொருட்காயிற்று; ஆகுபெயர். "பிறந்தவழிக் கூறலும்"† என்றதனாற் கொள்க. ௧

---

* புறம் ௨௧௩.            † தொல். வேற்றுமைமயங். ௩௧.

**372.** அங்கோட் டகலல்குல் ஆயிழையாள் நம்மோடு
செங்கோடு பாய்துமே என்ருள்மன்;—செங்கோட்டின்
மேற்காணம் இன்மையான் மேவா தொழிந்தாளே
காற்கால்நோய் காட்டிக் கலுழ்ந்து.

(பொ - ள்) *அம் கோடு அகல் அல்குல் ஆய் இழையாள் நம்மோடு செங்கோடு பாய்துமே என்ருள் மன்* - அழகிய பக்கங்கள் உயர்நத அகன்ற அல்குலையுடைய ஆராய்ந்தெடுத்த இழைகளையணிந்த விலைமகள் நாம் பொருளுடையமாயிருந்த காலத்து நம்மோடு செங்குத்தான மலையுச்சியில் ஏறிக் கீழ்விழுந்து ஒன்ருய் உயிர் துறப்போம் என்று அன்புரை கூறினுள்; *காணம் இன்மையான் செங்கோட்டின்மேல் மேவா தொழிந்தாளே கால் கால்நோய் காட்டிக் கலுழ்ந்து* - இப்போது நமது கையிற் பொருளில்லாமையால் தனது காலில் வாதநோயென்று காட்டிப் போலியாக அழுது இம் மலையுச்சியின்மேல் வராமற் போனுளே!

(க - து) பொதுமகளிரின் அன்புரை போலியென்றுழிக.

(வி - ம்) 'அஙகோட் டகலல்குல்' இயற்கை யழகினையும் 'ஆயிழை' செயற்கை யழகினையும் உணர்த்தி அவை கருவியாகக் காமுகரைப் பிணிக்கும் பொது மகளிரின் இயல்பு புலப்படுத்தின. 'பாய்தும்' என்றது முன்னிலையை உளப்படுத்திய பன்மை.* ஏதானும் இடர் வந்தாற் 'பாய்தும்' என்றபடி. ஏகாரம், உறுதி புலப்படுத்தித் தேற்றமாய் நின்றது. மேல், மேவா தொழிந்தாளெனக் கூறப்படுதலின் மன் ஒழியிசையன்று; கழிவுப் பொருளது. ஒழிந்தாளே என்னும் ஏகாரம் ஈண்டு இரங்கலின் மேற்று. இறந்த காலத்தாற் கூறினமையின் இப்போது இவன் வறிஞுய் வாழ வழியற்று உயிர்துறக்கச் செஙகோட்டின் மேல் ஏறினுனயிற்று. கால் காற்ருகலின், கால் நோய் வாயு நோய். பொருள் இப்போது இல்லையாயினது அவள் பறித்துக் கொண்டமையின் என்க. உ

**373.** அங்கண் விசும்பின் அமரர் தொழப்படுஞ்
செங்கண்மா லாயினும் ஆகமன், தங்கைக்
கொடுப்பதொன் றில்லாரைக் கொய்தளி ரன்னுர்
விருப்பர்தங் கையாற் ருெழுது.

---

* தொல் வினை. இ.

(பொ - ள்) அங்கண் விசும்பின் அமரர் தொழப் படும் செங்கண்மால் ஆயினும் ஆக - அழகிய இடமகன்ற விண்ணுலகத்தின் தேவர்களால் வணங்கப்படுகின்ற சிவந்த தாமரைக் கண்களையுடைய திருமாலை ஒப்பவனாயினுமாக; தம கைக்கொடுப்பது ஒன்று இல்லாரைக் கொய் தளிர் அன்னார் விடுப்பர் தமகையால் தொழுது - கொடுக்கத்தக்க பொருள் தமது கையில் ஒன்றுமில்லாத ஆடவரை, கொய்தற்குரிய இளந்தளிர் போன்ற மேனியையுடைய பொதுமகளிர் தம் கைகளால் வணங்கி விடைகொடுத் தனுபபிவிடுவர்.

(க - து) பொதுமகளிர் பொருளொன்றல்லது வேறு தகுதி கருதார்.

(வி - ம்) 'மால்' என்றது பெருமையும், 'செஙகண்' என்றது உருவும், 'அமரர் தொழப்படு' மென்றது செல்வாக்கும் உணர்த்தின. உரு, திரு முதலியவற்றிற் சிறந்த ஆடவர்க்கு நல்லிலக்கண மாகத் திருமாலைக் கூறுதல் நூற்றுணிபாகலின்* ஈண்டுங் கூறினா. திருமாலாயினும் பொருளிலனேல் விடத்தக்கானென்னும் பொருட்டாகலின், மன் கழிவின்கண் வந்தது. 'கொய்' தளி ரென்னும் அடை தளிரின் தகுதி கருதிற்று. பொருளீட்டுதற் குரிய சிறந்த ஆடவனாகலானும் பொருளுண்டான காலத்து வருக வென விரும்புதலானும் பகைப்பதின்றி இனிதாக விடுத்தலின், 'தொழுது விடுப்ப' ரென்றார். ௩

374. ஆணமில் நெஞ்சத் தணிநீலக் கண்ணார்க்குக்
காணமி லாதார் கடுவனையர்;—காணவே
செக்கூர்ந்து கொண்டாரும் செய்த பொருளுடையார்
அக்காரம் அன்னார் அவர்க்கு.

(பொ - ள்) ஆணம் இல் நெஞ்சத்து அணிநீலக் கண் ணார்க்குக் காணம் இலாதார் கடு அனையர் - அன்பில்லாத உள்ளமும் அழகிய நீலமலர் போன்ற கண்களுமுடைய பொது மகளிர்க்குப் பொருளில்லாதார் எத்துணை உயர்ந் தவராயினும் நஞ்சையொப்பத் தோன்றுவர்; காணவே

* தொல். புறத். ௫ : ௯-௧௦, புறம். ௫௮ : ௧௭-௯, சிந். ௧௩ : ௩௮௩.

செக்கூர்ந்து கொண்டாரும் செய்த பொருளுடையார் அக்காரம் அன்னார் அவர்க்கு - பலரும் காணச் செக்காட்டிப் பிழைப்பாரும் ஈட்டிய செல்வ முடையார அவர்களுக்குச் சர்க்கரைபோல் விரும்பத்தக்கவ ராவர்.

(க - து) எந்நிலையினும் பொருளுடையாரையே விலை மகளிர் விரும்புவர்

(வி - ம்) அகமும் புறமும் தம்மியல்பில் மாறுபட்டு நிற்குங் கள்ளம் உணர்த்துவார், 'அணியில் நெஞ்சத்து அணிநீலக் கண்ணார்' என்றார். "மாயப்பொய் கூட்டி மயக்கும் விலைக்கணிகை"* என்றார் பிறரும. 'கடுவினைய' ரென்றமையாற் பொருளின்மையே அவர்க்கு எடுப்பாயத தோன்றுதல் பெறப்பட்டது. கொள்ளலென்றது, ஈண்டு உயிர்வாழ்வின் மேற்று; உம்மை இழிவு சிறப்பு; இதனால், காணமில்லாதார எத்துணை உயர்ந்தவராயினும் என மேல் உரைக்கப்பட்டது. இவை நான்கு பாட்டானும் பொதுமகளிர அன்பு பொருட்கேயன்றி அது கொடுப்பார்க் கன்றென்பது பெறப்பட்டது. ச

**375.** பாம்பிற் கொருதலை காட்டி ஒருதலை
தேம்படு தெண்கயத்து மீன்காட்டும்—ஆங்கு
மலங்கன்ன செய்கை மகளிர்தோள் சேர்வார்,
விலங்கன்ன வெள்ளறிவி னார்.

(பொ - ள்) பாம்பிற்கு ஒரு தலை காட்டி ஒரு தலை தேம் படு தெள் கயத்து மீன் காட்டும மலங்கு அன்ன செய்கை மகளிர்தோள் சேர்வார் - இன்சுவை மிக்க தெளிந்த நீர்ப் பொய்கையில் பாம்புக்குத் தனதுடலின் ஒரு புறமாகிய தலையைக் காட்டி மற்றொரு புறமாகிய வாலை மீனுக்குக் காட்டி அவ்வவற்றிற்கினமாயிருந்து உயிர் பிழைதது வரும விலாங்கு மீனைப் போன்ற கள்ளச் செயலுடைய விலைமகளிரின் தோள்களைக் கூடுங் காமுகர், விலங்கு அன்ன வெள் அறிவினார் - விலங்கைப்போற் பகுத்தறிவில்லா அறியாமை யுடையவராவர்.

(க - து) விலைமகளிர் கள்ளவுருவினராகலின் அவரைக் கூடற்க வென்பது.

* பரிபா. உ0 : சக.

(வி - ம்) விலாங்கு மீனின் தலைப்புறம் பாம்புபோலவும் வாற்புறம் மீன்போலவும் இருக்குமாகலின், பாம்பு மீனென்று கருதி இரைபிடிக்க வருமாயின் அதற்குத் தலைப்புறங் காட்டி இனம்போல உலவி உயிர் தப்பியும், தனக்கு உணவாகிய சிறு மீன்கள் பாம்பென்று கருதி அஞ்சி விலகுமாயின் அவற்றிற்கு வாற்புறங் காட்டி இரையுண்டு உயிர் பிழைத்தும் அது வஞ்சித்து வாழ்தலின், பொருளற்றாரையும் பொருளுற்றாரையும் பகையாதும நேசித்தும் அவரவர்க்கேற்ப ஒழுகிப் பிரிந்தும் பொருள் பறித்தும் வஞ்சித்து உயிர்வாழும் விலைமகளிர்க்கு அஃது உவமமாயிற்று. கரந்து பொருள்பறித்து வாழும இம மகளியரியல்பு, "காரிகை கடுநீனத் தூண்டி லாக, உட்கும நாணும் ஊராண் ஒழுக்கும், கட்கின் கோல் முங கட்டிரை யாக, இருங்கண் ஞாலத் திளையோர ஈட்டிய, அருங கல வெறுக்கை யனைமீ ஞகை, வாஙகுபு கொள்ளும் வழக்கியல் வழாஅப் பூங்குழை மகளிர்"* எனப் பிறண்டும் நுவலப்பட்டமை காணக. ஒரு தலை, ஒரு புறம். ஆஙகு, அசை. கள்ளத்தைப் பகுந்தறிதலாகிய உள்ளீடிலலாமையின, 'வெள்ளறிவு' ரென்றார். (௫)

**376.** பொத்தநூற் கல்லும் புணர்பிரியா அன்றிலும்போல்
நித்தலும் நம்மைப் பிரியலம் என்றுரைத்த
பொற்றொடியும் போர்த்தகர்க்கோ டாயினள் நன்னெஞ்சே
நிற்றியோ போதியோ நீ.

(பொ - ள்) பொத்த நூல் கல்லும் புணர் பிரியா அன்றிலும்போல் நித்தலும் நம்மைப் பிரியலம என்று உரைத்த பொன் தொடியும போர்த தகர்க் கோடு ஆயினள் - நாம் பொருளுடையமாயிருந்த காலத்தில், கோத்த நூலோடு பொருந்திய மணியும் சேர்க்கை பிரியாத அன்றிற் பறவைகளும்போல எந்நாளும் நமமைப் பிரியோம் என்று உறுதி கூறிய பொன்னாற் செய்த வளையலை யணிந்த பொது மகள், இப்போது, போர்த்தொழில் செய்கின்ற ஆட்டுக் கடாவின் கொம்புபோல் மனம் முறுக்குண்டு வன்மையாய்ப் பின்வாங்கி விட்டாள்; நல் நெஞ்சே நிற்றியோ போதியோ நீ - கவடற்ற நெஞ்சமே! இனி நீ அவ்விடமே நயந்து நிற்பாயோ அன்றி நன்னெறியில் திரும்பி வருவாயோ?

(க - து) விலைமாதர் நம்பத்தக்கவரல்லர்.

* பெருங. இலாவா. எ : எ௩-௯.

(வி - ம்) பொத்த வென்பது ஈண்டுக் கோத்த வென்னும் பொருட்டு. கல், முத்து முதலிய மணிகள். "கற்குளி மாக்கள்"* என்புழிப்போல. நூலும் மணியும் போலவும் பிரியா அன்றில் போலவும் என்றது, என்றும் உடனுறைவுக்கு வந்த உவமம். 'பிரியலம்' என்பது ஆயத்தையும் உள்ளடக்கிப் படர்க்கையை உளப்படுத்திய தன்மைப் பன்மையாம். தகர்க்கோடு வல்லென்று திரிந்து பின் வாங்கி நிற்றற்கு உவமையாயிற்று. சு

**377.** ஆமாபோல் நக்கி அவர்கைப் பொருள்கொண்டு
சேமாபோல் குப்புறூஉஞ் சில்லைக்கண் அன்பினை
ஏமாந் தெமதென் றிருந்தார் பெறுபவே
தாமாம் பலரால் நகை.

(பொ - ள்) ஆமாபோல் நக்கி அவர் கைப் பொருள் கொண்டு சேமாபோல் குப்புறூஉம் சில்லைக்கண் அன்பினை ஏமாந்து எமது என்றிருந்தார் - முதலிற் காட்டாவைப் போல் மெத்தென ஊற்றின்பந் தந்து காமுகரின் கையி லுள்ள பொருளைப் பறித்துக்கொண்டு பின்பு காட்டெரு தைப்போற் பிறவிடத்துப் பாய்ந்தோடிவிடும் தீயொழுக்க முடைய பொதுமகளுள்ளத்துப் போலியன்பினை மதி மயங்கி எமக்குரியதென்று நம்பியிருந்தவர், பெறுப பல ரால் நகை - உலகிற் பலரால் நகைத்தலைப் பெறுவர்.

(க - து) பொருட்பெண்டிருறவை நம்பியிருந்தவர் பின்பு வறிய நிலையில் அவராற் கைவிடப்பட்டுப் பலரால் நகைத்தலுக் கிடமாவர்.

(வி - ம்) ஆமா பிறவுயிர்களை நாவினால் மெத்தெனத் தடவு மென்றும், அதுவே அவ் வுயிர்கட்குக் கடுவாகி இறுதியை விளை விக்குமென்றுங் கூறுப. ஆமா காட்டான் ஆனமைபோலச் சேமா வுங் காட்டெருதாயிற்று. குப்புறுதல், பாய்ந்து கடத்தல். பிறவிடத் தென்றது பொருளுடையார் பிறரிடத்தென்க. தன் விருப்பம் போல் திரிந்து வளம் உண்டு கொழுத்திருத்தலின் அவ்வியல் புடைய பொதுமகளிர்க்குக் காட்டுவிலங்குகள் எடுத்துக் காட்டப் பட்டன. சில்லை, தூர்த்தை; இழிவென்னும் பொருளான் வந்தது. தாம், ஆம், அசைகள். நம்பிப் பொருளிழந்து கைவிடப் பட்ட நிலைகள், பிறர் நகைத்தற்குக் காரணமாயின. எ

* கல்லா. ௪: ௨௨.

378. ஏமாந்த போழ்தின் இனியார்போன் றின்னாராய்த்
தாமார்ந்த போதே தகர்க்கோடாம்—மானோக்கின்
தந்நெறிப் பெண்டிர் தடமுலை சேரார்ரே,
செந்நெறிச் சேர்துமென் பார்.

(பொ - ள்) ஏமாந்த போழ்தின் இனியார்போன்று இன்னாராய்த் தாம் ஆர்ந்தபோதே தகர்க்கோடு ஆம் - காமுகர் தம்பால் மயங்கியிருந்த காலத்தில் புறத்தே அவர்க்கு இனியாரைப்போ லிருந்து அகத்தே வஞ்சம் மிக்கவராய்த் தாம் அவர் பொருளையெல்லாம் உண்டுவிட்ட வுடனே ஆட்டுக் கடாவின் கொம்புபோல் திருக்குண்டு செல்கின்ற, மான் நோக்கின் தம் நெறிப் பெண்டிர் தடமுலை சேரார் செந்நெறிச் சேர்தும் என்பார் - மான் போன்ற மருண்ட பார்வையினையுடைய தம் மனம் போன வழியே யொழுகும் பொருட் பெண்டிரது அகன்ற மார்பினை அருணெறியி லொழுகுவே மென்றிருப்பார் கூடார்.

(க - து) விலைமாதரது சேர்க்கையால் அருணெறி யொழுக்கங் கெடும்.

(வி - ம்) தகர்க்கோடாம் பெண்டிரென்க. அருணெறி யொழுக்கத்துக்குப் பொருணெறிப் போக்குடை கரவு முடையாரது தொடர்பு மாறுபட்டதாகலின் சேராரென்றார். "பொருட்பொருளார் புன்னலந் தோயார் அருட்பொருள், ஆயும் அறிவி னவர்"* என்றா நாயனாரும். தந்நெறிப் பெண்டிரென்றது, ஒருவர்க்குரிமையாய் அடங்காமை யுணர்த்திற்று.

379. ஊறுசெய் நெஞ்சந்தம் உள்ளடக்கி ஒண்ணுதலார்
தேற மொழிந்த மொழிகேட்டுத்—தேறி
எமரென்று கொள்வாருங் கொள்பவே யார்க்குந்
தமரல்லர் தம்உடம்பி னார்.

(பொ - ள்) ஊறு செய் நெஞ்சம் தம் உள்ளடக்கி ஒள் நுதலார் தேற மொழிந்த மொழி கேட்டு - பிறர்பாற் பொருள்பறித்துக் கொள்ளுதலாகிய தீமையைச் செய்யுந்

* குறள், கஉ : ௪.

தமது நினைவைப் புறத்தே புலப்படாதபடி தம் உள்ளத்தில் அடக்கிக்கொண்டு ஒளிமிக்க நெற்றியையுடைய பொருட்பெண்டிர் புறத்தே மனந் தெளியும்படி மொழிந்த பசப்பு மொழிகளைக் கேட்டு, தேறி எமர் என்று கொள்வாரும் கொள்ப - அவற்றை நம்பி அப் பெண்டிர் எமக்குரியரென்று உரிமை கொள்வாருங் கொள்வர்; யார்க்கும் தமர் அல்லர் தம உடம்பினர் - அம் மாதரார் எவர்க்கும் உறவினராகார்; அவர் தமக்கே உரிய உடம்பினையுடையர்.

(க - து) வேசையர் தமதுடம்பைத் தமதாக்கத்துக்குப் பயன்படுத்துவாரன்றிப் பிறரெவர்க்கும் உரிமையாக்கார்.

(வி - ம்) 'தூண்டி லிரையின் துடக்குள் ளூறுத்துத் தேன் தோய்த் தன்ன தீஞ்சொல் அளை இ'* உரையாடும் இயல்பினராதலின், 'ஊறுசெய் நெஞ்சம் தம உள்ளடக்கித் தேற மொழிந்த மொழி' என்றார். 'கொள்வாரும் கொள்ப' வென்றார். தமக்குடம்பாடின்மையின், அன்புடையராயின் பிறர்க்கென்பும் உரியராவராகலின் அன்பிலாரான இவர் தம் முடம்பு தமக்கே உரியவராயினர். இவை ஐந்து பாட்டானும் விலைமாதரது கரவுடைமை பெறப்பட்டது. க

**380.** உள்ளம் ஒருவன் உழையதா ஒண்ணுதலார்
கள்ளத்தாற் செய்யுங் கருத்தெல்லாந்—தெள்ளி
அறிந்த விடத்தும் அறியாரம் பாவம்
செறிந்த உடம்பி னவர்.

(பொ - ள்) உள்ளம் ஒருவன் உழையதா - தமது நெஞ்சம் வேறொருவனிடத்ததாக, ஒள் நுதலார் கள்ளத்தால் செய்யுங் கருத்தெல்லாம் - ஒளிபொருந்திய நெற்றியையுடைய பொருட் பெண்டிர் வஞ்சனையால் தம்மிடஞ் செய்யும் நினைவெல்லாம், தெள்ளி அறிந்தவிடத்தும் அறியாராம் பாவம் செறிந்த உடம்பினவர் - ஆராய்ந்து நன்றாகத் தெரிந்த நிலையிலும் தீவினைமிக்க பிறப்பினையுடையவர் அத்தெரிவினைத தமதொழுக்கத்திற் கொண்டுவரும் அறிவாற்றலில்லாதவராவர்.

---
* பெருங. உஞ்சைக். ௩௫: ௧௦௮ - ௯.

(க - து) தீவினைமிக்கார் விலைமாதரின் வஞ்சங்களை நன்கு தெரிந்திருந்தும் அவரின் நீங்கியொழுகும் ஆற்ற லில்லாதவராவர்.

(வி - ம்) உள்ளம் ஒருவனுழையதா வென்றமையான் உடம்பு பிறனொருவ னுழையதாக் கள்ளஞ் செய்வ ரென்பது பெறப்பட்டது. அறிதற்கிருந்த அறிவாற்றல், தீவினைச செறிவால் அறிந்தவா றொழுகுதற் கில்லாமையின், 'அறிந்தவிடத்தும் அறியாராம்' என்றார். ஆம், ஆவரென்னும் பொருட்டு. 'அறிவதறிந்தும் பழியோடு பட்டவை செய்தல் செய்த வினையான் வரு மாகலின்* 'பாவஞ் செறிந்த உடம்பினவர்' என்றார். இதனான் வஞ்சமிக்க விலைமாதரி னின்று காமுகர் நீஙகாமைக்கு ஏதுக் கூறுமுகத்தால் அவ்விரு திறத்தாரது இழிவும் உரைக்கப்பட்டது. ௯0

---

## ௩௯. கற்புடை மகளிர்

கணவன்பால் ஆழ்ந்த அன்புணர்வுடைய இல்லற நிகழ்த்தும் மகளிரது இயல்பு.

**381**. அரும்பெறற் கற்பின் அயிராணி யன்ன
பெரும்பெயர்ப் பெண்டி ரெனினும்—விரும்பிப்
பெறுநசையாற் பின்னிற்பா ரின்மையே பேணும்
நறுநுதலாள் நன்மைத் துணை.

(பொ - ள்) அரும் பெறல் கற்பின் அயிராணி அன்ன பெரும் பெயர்ப் பெண்டிர் எனினும் - பெறற் கரிய கற் பொழுக்கமுடைய அயிராணி என்னுந் தேவர்கோன் மனைவிபோல் வாழ்க்கையிற் பெரிய புகழ் வாய்ந்த மகளி ராயினும், விரும்பிப் பெறு நசையால் பின் நிற்பார் இன்மையே பேணும் நறுநுதலாள் நன்மைத்துணை - அவருள், உணவு முதலிய பொருள்களை விரும்பி அவற்றை அடையும் வேட்கையால் தன் பின்னே இரந்து நிற்கும் இரவலர் இல்லாமையையே தனது இல்லற வொழுக்கத் தாற் காத்தொழுகும் இயற்கை மணங் கமழு நெற்றியை

* நாலடி, கக : அ.

யுடைய பெண்ணே அவ் வில்லறத்தின் பயன்களாகிய மேன்மேல் நன்மைகட்குத் துணையாவாள்.

(க - து) கற்புடை மகளிர்க்கு விருந்து புறந்தரும் இயல்பு இன்றியமையாதது.

(வி - ம்) கற்பாவது, கணவன்பால் ஆழ்ந்த அன்புணர் வுடைமை. அயிராணியின் கற்புக் கூறவே இவரது கற்பும் பெறப் பட்டது. படவே, பின்னிற்பா ரென்றது இரவலாக்காயிற்று. அயிராணி கூறப்பட்டமையின், கற்பொழுக்கத்தோடு திரு உரு முதலிய ஏனைப் படைப்புக்களும் பெறப்பட்டன. இல்லறவொழுக்க மாவது, அறவோர்க்களித்தல் முதலியன ; அவற்றுள்ளும் விருந்து புறந்தருதல் மிக இன்றியமையாததாதலின், 'பின்னிற்பாரின்மையே பேணும் நறுநுதலாள் துணை' யெனப்பட்டது. "இல்வாழ்வ தெல் லாம் விருந்தோம்பி வேளாண்மை செய்தற் பொருட்"* டென்றார் நாயனாரும். வீடுபயக்கும் அருணெறிக்கு ஏதுவாயப் பொருள்களிற் பற்றின்றிநின்று உலகில் அறம் வளாக்கும் பயிற்சியே இல்லறத் தின்கண் நடைபெறுதற்குரியதாகலின், ஒரு பயனுங் கருதாது ஆருயிர்களை ஓம்புதலாகிய விருந்து புறந்தருதலின இன்றியமை யாமை இவ்வாறுணர்த்தப்பட்டது. இல்லம போதுவார் குறிப் பறிந்து, அவரை இரவலராக்காது உடனே விருந்தாக ஏற்றொழுகுக வென்பார், 'பின்னிற்பா ரின்மையே பேணும்' என்றார். ஏகாரம், தேற்றம். நீன்மை யென்றது, தவம் முதலிய துறவற நிலைகள். க

**382.** குடநீரட் டுண்ணும் இடுக்கட் பொழுதுங்
கடனீ ரறவுண்ணுங் கேளிர் வரினும்
கடனீர்மை கையாறுக் கொள்ளு மடமொழி
மாதர் மனைமாட்சி யாள்.

(பொ - ள்) குடம் நீர் அட்டு உண்ணும் இடுக்கண் பொழுதும் கடல் நீர் அற உண்ணும் கேளிர் வரினும் - குடத்திலுள்ள நீரையே காய்ச்சிப் பருகிப் பசியாறும் இன்னாக் காலத்தும் கடல் நீர் முழுமையும் உண்டு பசி யாறுதற்குரிய அத்தனை உறவினர் ஒருங்கு விருந்தாக வந் தாலும், கடன் நீர்மை கை ஆறுக் கொள்ளும் மடமொழி மாதர் - அந்நேரத்தில், தன் கடமையாகிய விருந்தோம்பு மியல்பைச் செயன் முறையாக மேற்கொள்கின்ற மென்

* குறள், கூ : க.

மையான சொற்களையுடைய பெண்ணே, மனை மாட்சி யாள் - இல்லற வாழ்க்கைக்குரிய மாட்சிமையுடையவ ளாவாள்.

(க - து) எந் நிலையிலும் விருந்தோம்பும் இயல்பே மனைமாட்சியாகும்.

(வி - ம்) நீரையேனும் நிரம்ப உண்டு பசியாறுதல் கருதிக் 'குடம் நீ' ரெனப்பட்டது. "விருந்துகண் டொளிக்குந் திருந்தா வாழ்க்கைப் பொறிப்புணா உடம்பிற் றோன்றி என் அறிவுகெட நின்ற நல்கூர்மை"* என்றதூஉங் காண்க. உறவினர்க்கு விருந் தோம்பல் இயலாத நிலையே இல்லறத்தார்க்கு இடுக்க ணென்பதாக லின், வறுமைப் பொழுதை 'இடுக்கட் பொழு'தென்று விதந்தார். 'கடனீரற வுண்ணு' மென்றது கேளிரின் பன்மை யுணர்த்தி நின்றது. வரினும் என்னும் உம்மை எதிர்மறையாய், வருதலின் அருமை யுணாத்திற்று. கடன் கீழ்ச் செய்யுளிற் கூறப்பட்டது. மனைமாட்சியாள் என்னும் ஒருமையால் மாதர், குற்றுகரப் போலி யென்றுகொள்க. ௨

383. நாலாறும் ஆறாய் நனிசிறிதாய் எப்புறனும்
மேலாறு மேலுறை சோரினும்—மேலாய
வல்லாளாய வாழுமூர் தற்புகழு மாண்கற்பின்
இல்லாள் அமர்ந்ததே இல்.

(பொ - ள்) நால் ஆறும் ஆறாய், நனி சிறிதாய், எப் புறனும் மேல்ஆறு மேல் உறை சோரினும் - வீடு நாலாபக்க மும் இடிந்து வழியுடையதாய், மிகவுஞ் சிறியதாய், எந்தப் பக்கமும கூரை சல்லுகி மேல்வழியாய்த் தன்மேல் மழை ஒழுகுவதாய் அதததை வறிய நிலையிலிருப்பினும், மேலாய வல்லாளாய் வாழும் ஊர் தன் புகழும் மாண் கற்பின் இல்லாள அமர்ந்ததே இல் - உயர்ந்த இல்லற வொழுக்கங்களில திறமையுடையவளாய் அதனால் தான் வாழும ஊரவர் தன்னைப புகழ்ந்தேத்துகின்ற மாட்சிமை யான கற்பு நிலையுடைய மனைவி அமர்ந்திருக்கும் வீடே வீடெனப்படும்.

---

* புறம். ௨௬௬.

(க - து) செல்வம் முதலியவற்றைவிட இல்லக் கிழத்தியின் நற்குணமே இல்வாழ்க்கைக்கு முதன்மை யானது.

(வி - ம்) மேலாய, பெயர். வறிய நிலையிலும் இன்சொல் முதலிய நலங்களுடன் மனம் அமைய விருந்தோம்புதல் செய்த லின், 'வல்லாளாய்' என்றார். தற்புகழும் இல்லாள் என்க. இல்லறவொழுக்கமுடையது இல்லம் எனப்படுமல்லது ஏனைச் செல்வச் சிறப்புடையன அஃதாகாவென்பது கருத்து. இவை மூன்று பாட்டானும கற்புடை மகளிர்க்கு முதன்மையாவன விருந்து புறந்தரல் முதலிய இல்லறக் கடமைகளென்பது விளக்கப் பட்டது. "உள்ளது தவச்சிறி தாயினும் மிகப்பல ரென்னாள் நீள்நெடும் பந்தர் ஊண்முறை யூட்டும் இற்பொலி மகடூஉ"* என்றதூஉங் காண்க. ௩

**384.** கட்கினியாள், காதலன் காதல் வகைபுனைவாள்,
உட்குடையாள், ஊர்நாண் இயல்பினாள்,—உட்கி
இடனறிந் தூடி இனிதின் உணரும்
மடமொழி மாதராள் பெண்.

(பொ - ள்) கட்கு இனியாள் காதலன் காதல் வகை புனைவாள் - பார்வைக்கு இனிய இயற்கையழகுடைய ளாய்த் தன் காதலன் விருப்பபடி செயற்கைக் கோலங் கள் செய்துகொள்வாளும, உட்கு உடையாள் ஊர்நாண் இயல்பினாள் - தனது கற்பொழுக்கச் சிறினாற் கண்டா ரெவரும் அஞ்சும் மதிப்புடையவளாய்த் தான் வாழும் ஊரிலுள்ள மகளிரெல்லாரும் தன்னுடைய இல்லறச் செய் கைகளின் திறமைக்கு வியந்து நாண்கொள்ளற்குரிய மாட் சிமையுடையாளும், உட்கி இடன் அறிந்து ஊடி இனி தின் உணருமு மடமொழி மாதராள் - தன் கணவன்பால் உள்மதிப்புக்கொண்டு செவ்வியறிந்து ஊடியும் அஃது இனிதாம்படி அவ்வூடல் நீங்கியும இன்பம் விளைக்கும் மென்மையான மொழிகளையுடைய பெண்ணே, பெண் - இல்வாழ்க்கைக்குரிய வாழ்க்கைத் துணையாவள்.

(க - து) தோற்றமும் ஒழுக்கமும் காதலுமுடைய மாது சிறந்த வாழ்க்கைத் துணையாவள்.

* புறம். ௩௩௧.

(வி - ம்) இல்லக் கிழத்தியின் அறுவகை நலங்களை மூவிரு முகமாக இச்செய்யுள் வகுத்தோதிற்று. இனியாள் புனைவாள் ஓரிரு வகையும், உடையாள் இயல்பினுள் மற்றோரிருவகையும், ஊடுவாள் ஊடலுணர்வாள் பிறிதோரிருவகையுமாயின. இறுதிப் பகுதி ஊடி உணருமென்று வந்தமையான், ஏனைப்பகுதிகளும் அவ்வாறே எச்சமும் முடிவுமாய் உரைக்கப்பட்டன. தனக்கென் றொரு புனைவின்மையின 'காதலன் காதல் வகை புனைவா'ளென் றார். கணவன் பிரிவிற் கண்ணகி, வாடிய மேனி வருத்தத்தோடு* இருந்தமை ஈண்டு நினைவுகூரப்படும், உணர்தல், தெளிதல்; ஊடல் சிறிது நீட்டிப்பினும் இன்பங் கெடுமாகலின் அளவறிந் துணாதல் தோன்ற, 'இனிதினுணரு' மென்றார்; கணவன் மாட்டு உட்கின்றி இஃதியலாமையின் 'உட்கி ஊடி உணரும்' எனப்பட்டது. இதனாற் 'கற்புடை மகளி'ரின் நலங்கள் தொகுத் துரைக்கப்பட்டன. ௬

385 எஞ்ஞான்றும் எங்கணவர் எந்தோள்மேற் சேர்ந்தெழினும்
அஞ்ஞான்று கண்டேம்போல்நாணுதுமால்;—எஞ்ஞான்றும்
என்னை கெழீஇயினர் கொல்லோ பொருள்நசையாற்
பன்மார்பு சேர்ந்தொழுகு வார்.

(பொ - ள்) எஞ்ஞான்றும் எம் கணவர் எம் தோள் மேல் சேர்ந்தெழினும் அஞ்ஞான்று கண்டேம்போல் நாணுதும் - எம் கணவர் எந்நாளும் எம் தோள்மேல் முயங்கியெழுந்தாலும் தலைநாளிற் கண்டேம்போல் அவர் பால் யாம நாணமுடையமாயிருக்கின்றேம்; எஞ்ஞான்றும் பொருள் நசையாற் பன்மார்பு சேர்ந்தொழுகுவார் என்னை கெழீஇயினர் கொல்லோ - அவ்வாறிருக்க, பொருள் வேட்கையால் எந்நாளும் ஆடவர் பலர் மார்புகளைச் சற்றும் நாணின்றிக் கூடியொழுகும் பரத்தையர் தமதுள் ளத்தில் என்ன தான் உடையராயிருக்கின்றனரோ!

(க - து) கற்புடை மகளிர்க்கு நாண முதலிய பெண்மையியல்புகள் அணிகளாகும்.

(வி - ம்) எம் என்னும் பன்மை உயர்வு கருதிற்று† தோள், இன்பந் துய்த்தற்கு இலக்கணை. ஆலுங் கொல்லும் அசை. பொருள்நசையால் என்றது இயல்பு உணர்த்தியபடி. பொருணசையாற் சேர்ந்தொழுகலின் காதலுமின்றிப் பன்மார்பு சேர்ந்

* சிலப். ௧ : ௯௮. † தொல். கிளவி. ௨௭

தொழுகலின் கற்பும் நாணுமின்றி அவம்படுதலின், அவரெல்லாந் தமதுயிரில் என்னை கெழீஇயினரோ என்று குலமகள் ஒருத்தி தனக்குள் வியந்து கூறுவாளாயினள். உயிரினுஞ் சிறந்ததாய் நாணும், நாணினுஞ் சிறந்ததாய்க் கற்பு மிருத்தலின், * அவை யிரண்டு மில்லாத உயிர் யாதுமில்லாத தாயிற்று. ஆதலின், கெழீஇயினரோவென்னும் வினா ஈண்டு எதிர்மறைப் பொரு ளது. முதன்மைபற்றி நாண் கூறினமையின், அச்சம் மடம் பயிர்ப்பென்னும்† ஏனைப் பெண்மையியல்புகளுங் கொள்ளப் படும். ரு

**386.** உள்ளத் துணர்வுடையான் ஓதிய நூலற்றால்
வள்ளன்மை பூண்டான்கண் ஒண்பொருள்;—தெள்ளிய
ஆண்மகன் கையில் அயில்வாள் அனைத்தரோ
நாணுடையாள் பெற்ற நலம்.

(பொ - ள்) உள்ளத்து உணர்வுடையான் ஓதிய நூல் அற்று - உள்ளத்தில் இயற்கை நுண்ணுணர்வுடையா னொருவன் கற்ற கல்வியறிவை யொத்ததாயும், வள்ளன்மை பூண்டான்கண் ஒண்பொருள் அற்று - இயற்கையிற் கொடைக்குணம் உடையானொருவனிடத்து மாட்சிமைப் படுகின்ற ஒள்ளிய செல்வத்தை ஒத்ததாயும், தெள்ளிய ஆண்மகன் கையில் அயில்வாள் அனைத்து - வாட்பயிற்சி யில் தெளிவடைந்த வீரமிக்க ஆடவனொருவன் கையில் விளங்கும் கூரிய வாட்படையை ஒத்ததாயும் இருக் கின்றது, நாண் உடையாள் பெற்ற நலம் - நாணம் முதலிய பெண்ணீர்மைகளுடைய கற்புடைய பெண் ணொருத்தி பெற்ற அழகு முதலிய நலங்களென்க.

(க - து) மகளிர்க்கு நாண முதலிய பெண்மைப் பண்புகளிருப்பின், அவர்க்கு ஏனை நலங்களுஞ் சிறக்கும்.

(வி - ம்) அற்றென்பதை ஒண் பொருட்கும் கொள்க. உவமைகளால் அறிவும் கொடையும் வீரமுமாகிய ஆடவரியல்பு கள் ‡ பெறப்பட்டன; அனைத்தே மகளிர்க்கு நாண என்பது கருத்து. குறித்த ஆணியல்புகளின்றேற் கல்வியும் பொருளும் கருவியும் மாட்சிமைப்படாமைபோல, நாண முதலிய பெண்ணீர் மைகளின்றேல் எவ்வகை நலனும் பயனில்லன வென்பதாம்.

* தொல். கள. உஉ. † தொல், கள. அ. ‡ தொல். கள: எ.

கலமென்றது, அழகு முதலிய பலவகை நன்மைகளை. இவை யிரண்டு பாட்டானும் கற்புடை மகளிர்க்குரிய நாணினது நன்மை கூறப்பட்டது. சு

387. கருங்கொள்ளுஞ் செங்கொள்ளுந் தூணிப் பதக்கென்று
ஒருங்கொப்பக் கொண்டானும் ஊரன்;—ஒருங்கொவ்வா
நன்னுதலார்த் தோய்ந்த வரைமார்பன் நீராடாது
என்னையுந் தோய வரும்.

(பொ - ள்) கருங்கொள்ளும் செங்கொள்ளும் தூணிப் பதக்கு என்று ஒருங்கு ஒப்புக் கொண்டானும் ஊரன் - மருத நிலத்து ஊரில் இருந்துகொண்டே அவ்வூரானொரு வன் தாழ்ந்த கருங்கொள்ளையும் உயர்ந்த செங்கொள்ளை யும் ஒரே விலைக்குத் தூணிபதக்கு என்று ஒரே அளவாக ஒன்றாய் வாங்கினனும்; ஒருங்கு ஒவ்வா நல்நுதலார்த் தோய்ந்த வரை மார்பன் நீராடாது என்னையும் தோய வரும் - அதுபோலப் பெண்மையியல்பில் என்னோடு ஒருங்கு ஒவ்வாத நல்ல நெற்றியையுடைய பரத்தையரை மருவிய மலைபோலும் பெரிய மார்பினையுடைய என் கண வன் நீராடுதலுஞ் செய்யாது என்னையும் மருவ வருகின்ற னன். (ஈதென்ன முறை!)

(க - து) கற்புடைமகளிர் தூயர்.

(வி - ம்) தூணி யென்பது நான்கு மரக்காலும் பதக்கென் பது இரண்டு மரக்காலுமாய்த தூணிப் பதக்கென்பது ஆறு மரக் காலளவை யுணர்த்திற்று. ஆம என்பது இகழ்வின்மேற்று. உருவில மட்டும ஒத்து அழகியராய் உள்ளத்தால் ஒவ்வாரான பரத்தையரென்றற்கு 'நன்னுதலா' ரென்றும் 'ஒருஙகொவ்வா' வென்றுங கூறினா. மேன்மாசினும் மனமாசு தீயதாய் மேற் புறத்தைப் பின்னுந் தீதாக்கி ஊறு விளைத்தலின், தலைவி பெரிதஞ் சினள். "மனத்தின்கண மாசிலனாதல் அனைத்தறம்"* என்ற தூஉம் இக்கருத்தின்மேற்று. 'நீராடா' தென்னும் குறிப்பால் இவ் வசசமும், பரத்தையர் இழிவுடையராய்த் தன்னோடொவ்வாமை யும், ஆனல் தலைமகன் ஒப்பக் கருதினமையும், கணவர் எத்துணை தவறுடையராயினும் கற்புடை மகளிர் அவரது திருத்தம் விரும்பு வரல்லது வெறுத்து வேறாவரல்ல ரென்பதும், பிறவும் பெறப்படும்.

* குறள். ச: ச.

இது, பரத்தையர்மாட்டும் பிரிந்து வந்த தலைமகனோடு ஊடிய தலைமகள் தன்னுட் கூறியது. எ

**388.** கொடியவை கூறாதி பாண ! நீ கூறின்
அடிபைய இட்டொதுங்கிச் சென்று—துடியின்
இடக்கண் அனையம்யாம் ஊரற் கதனால்
வலக்கண் அனையார்க் குரை.

(பொ - ள்) கொடியவை கூறாதி பாண - பாண ! கேட்க இன்னாதனவான தலைவனைப் பற்றிய நயவுரைகளை எம்மிடங் கூறாதே; நீ கூறின் - நீ கூறுவதானால், துடியின் இடக்கண் அனையம் யாம் ஊரற்கு அதனால் - ஊரனை எம் தலைவனுக்கு யாம் உடுக்கையின் இடப்பக்கத்தை ஒத்துப் பயன்படாமலிருக்கின்றோ மாதலால், அடி பைய இட்டு ஒதுங்கிச் சென்று வலக்கண் அனையார்க்கு உரை - மெல்ல அடியிட்டு நீங்கிப்போய் அவ்வுடுக்கையின் வலப் பக்கம்போற் பயன்படுதலுடைய பரத்தையர்க்குக் கூறு.

(க - து) கற்புடை மகளிர் தமதூடுதலாற் கணவரது திருத்தத்தை நாடுதற்குரியர்.

(வி - ம்) பரத்தையிற் பிரிந்துவந்த தலைமகனைப் பற்றி நய வுரைகள் கூறிக்கொண்டு பாணன் வாயில் வேண்டத் தலைவி மறுத்தமை கூறியது. இது புலவியாற் சினக்குறிப்போடிருந்தமை யால் நயவுரைகள் கொடியவையாயின. பாணன் தலைவனுக்குத் தூதாக வந்தவன்; அஞ்சிப் பதுங்கி யொதுங்கிச் செல்லும் அவனதிழிந்த நடையில்பு கூறி இகழ்வாள், 'அடி பைய இட்டொதுங்கிச் சென்று' என்றாள். துடிக்குக் கண்ணென்றது, அதன்கண் ஒலியெழுப்பும் இடம். உவமை பயன்படாமையும் பயன்படுதலுங் காட்ட எழுந்தது. யாம் என்னும் பன்மை உயர்வினின்றது. ஊரன், மருதநிலத்துத் தலைவன்; ஊடல் மருதத்தின் உரிப்பொருளாகலின் * இவ்வாறு கூறுதல் மரபு. இச் செய்யுட் கருத்து இவ் வதிகாரத்தின் இறுதிச் செய்யுளினும் வரும். அ

**389.** சாய்ப்பறிக்க நீர்திகழுந் தண்வய லூரன்மீது
ஈப்பறக்க நொந்தேனும் யானேமன்,—தீப்பறக்கத்
தாக்கி முலைபொருத தண்சாந் தணியகலம்
நோக்கி யிருந்தேனும் யான்.

* தொல். அகத். கசு.

(பொ - ள்) சாய் பறிக்க நீர் திகழும் தண்வயல் ஊரன்மீது ஈப் பறக்க நொந்தேனும் யானேமன்-கோரைகளைப் பறித்துவிடுதலால் நீர் நன்கு விளங்கித் தெரிகின்ற குளிர்ந்த வயல்களையுடைய ஊரனாகிய என் தலைவன்மேல் முன்னெல்லாம் ஓர் ஈ வந்து உட்கார அதுபொறாமல் வருந்தியவளும் யானே, தீப்பறக்கத் தாக்கி முலை பொருந்த தண் சார்ந்து அணி அகலம் நோக்கி இருந்தேனும யான் - தீப்பொறி பறக்கப் பரத்தையர் தம் கொங்கைகளால் நெருக்கிக் கலவிசெய்த, குளிர்ந்த சந்தனமணிந்த அவனது அகன்ற மார்பினை இப்போது பார்த்துப் பொறுத்திருந்தவளும் யானே காண்

(க - து) கற்புடைய மகளிர்க்குத் தங் கணவர்மாட்டு அன்பு எந்நிலையிலுங் குன்றாது.

(வி - ம்) களைகளாகிய கோரைகளைப் பறித்துவிட நீர் நன்கு விளங்கித் தெரிதல்போல, பரத்தையிற் பிரிவென்னுந் தலைவனது குறையொன்றனைக் கருதாதுவிட அவன் நலங்கள் நன்குவிளங்கிப் பெரிதும் இன்பஞ் செய்கின்றனவாதலின், அந்நலங்களால் யான் கவரப்பட்டுப் பொறுப்பேனாயினே னென்பது தலைவியின் விடை. புலவாது நின்றனை யென்ற தோழிக்குத் தலைவி கூறியது இது. "ஊடியிருப்பினும் ஊரன் நறுமேனி கூடலினிதாம எனக்கு" * என ஐந்திணையைம்பதினும் இது வரும். முன்னே பொறுதிருந்தே னென்றமையின் ; மன் கழிவுப்பொருளி னின்றது. 'தண்சார்ந் தணியகல' மென்னுங்குறிப்பால் தலைவன் நலங்கள் பைய வெளிப்படும். பின் வந்த யான என்பதற்கும் ஏகாரங் கொள்க. ௯

**390.** அரும்பவிழ் தாரினன் எம்அருளும் என்று
பெரும்பொய் உரையாதி, பாண ;—கரும்பின்
கடைக்கண் அனையம்நாம் ஊரற் கதனால்
இடைக்கண் அனையார்க் குரை.

(பொ - ள்) அரும்பு அவிழ் தாரினன் எம் அருளும் என்று பெரும்பொய் உரையாதி பாண - அரும்புகள் போதாகி மலரும் மாலையை யணிந்த எம் தலைவன் எமக்குத் தலையளி செய்ய வருகின்றனன் என்று பெரியதொரு

* ஐந். ஐம். ௩௦.

பொய்ம்மொழியை, பாண! எம்மிடம் மொழியாதே; கரும்பின் கடைக்கண் அனையம் நாம் ஊரற்கு அதனால் இடைக்கண் அனையார்க்கு உரை - ஊரனாகிய எம் தலைவற்கு யாம் கரும்பின் நுனிக் கணுக்கள் போலச் சுவையிலேமா யிருக்கின்றனமாதலின் அதன் நடுக் கணுக்களையொப்ப அவற்குச் சுவை மிக உடையரான பரத்தையரிடம் அதனைச் சொல்.

(க - து) கற்புடை மகளிர், கணவன் வருகையில் அன்புடையராயிருப்பர்.

(வி - ம்) தலைவன் வருகை தனக்குப் பொய்யெனவே பரத்தையர்க்கு மெய்யாதல் பெறப்படுதலின், 'இடைக்கண் ணனையாார்க்குரை' யென்றாள். 'பொய்யுரையாதி' யென்னுங் குறிப்பால், அவன் அருளுதல் மெய்யாதல் வேண்டுமென்னும் தலைவியின் வேட்கை பெறப்படும். கண்ணென்றது கணு. கரும்பின் நுனி இடைப் பகுதிகளின் சுவையியல்பு முன்னும் வந்தது.* இவை நான்கு பாட்டானும், கணவன் தவறுடையானாயினும் தாம் பொறுமையுடையராய் அன்பின் நீங்காது தமது புலத்தலால் அவனைத் திருத்தி ஏற்றுக்கோடலாகிய கற்புடை மகளிரது மற்றொரு கடமையும் நுவலப்பட்டது. ௧0

---

* நாலடி. உஉ : ௧.

# ௩. காமத்துப் பால்

இது காமவின்பத்தின் இயல்பை யுணர்த்தும் பகுதி. அறம் பொருள் இன்ப மென்னும் வழக்கால், காமம் இன்பமென்றே கூறப்படுதல் விளங்கும். விளங்கவே, வீடென்பது இன்பத்தின் வேறென்றுணரப்படும். அஃது, இன்ப துன்ப மற்ற அமைதிநிலை யென்று கொள்க. அந்நிலையை யெய்துங்கால் அஃது இவ்வின் பத்தினுஞ் சிறப்புடையதாய் விளங்கலின், அறம் பொரு ளின்ப மென்னும் இம் மூவகை உறுதிப் பொருளினும் உயர்வுடையதாய் இவற்றின் விடுதலையேயாம். ஆதலின், துய்த்தற்குரியவாக நூல் களால் உணர்த்தப்படும் பொருள்கள் அறமுதலிய மூன்றுமே யாகலின் காமத்துப்பால் மூன்றாம் பகுதியாக இறுதியில் நின்ற தென்க.

## ௪௦. காமநுதலியல்

'இன்பத்தின் இயல்பு நுவலும் அதிகாரம்' என்பது பொருள்; இன்பமாவது, பொருள்களின் வாயிலாகப் புலன்களால் நுகர்வ தோர் உணர்வு. அதன்கண், ஒருகாலத் தொருபொருளால் ஐம் புலனும் ஒருங்கு நுகருங் காமவின்பம் சிறத்தலின், அதுவே 'இன்ப' மென் றெடுத்துக்கொள்ளப்பட்டது. அஃது, ஒத்த தலைவனுந் தலைவி யும் இயற்கையன்பினால் ஒருவரையொருவர் இன்றியமையாராய்த் தம்முட் கூடுங்கால, அவருள்ளத்துணர்வாய்த் தோன்றுவதோ ருணர்வுநிலை. அந்நிலை மாட்சிமைப்பட்டன்றி அதனினுஞ் சிறந்த தொன்று கைவாராமையின், அது மாட்சிமைப்படும் வாயில்கள் இவ்வதிகாரத்தா னுவலப்படும்.

**391**. **முயங்காக்காற் பாயும் பசலைமற் றூடி**
**உயங்காக்கால் உப்பின்றும் காமம்;—வயங்கோதம்**
**நில்லாத் திரையலைக்கும் நீள்கழித் தண்சேர்ப்ப!**
**புல்லாப் புலப்பதோர் ஆறு.**

(பொ - ள்) முயங்காக்கால் பாயும் பசலை - தலைவியை மருவாவிடின் அவளுடம்பிற் பசலைநிறம் பரவும்; மற்று ஊடி உயங்காக்கால் உப்பு இன்றும் காமம் - ஆனால் அவள் இடையிடையே ஊடல்கொண்டு உள்ளம் மெலியாவிடின் காமவுணர்வு சுவையில்லாததாகும்; வயங்கு ஓதம் நில் லாத் திரை அலைக்கும் நீள் கழித் தண் சேர்ப்ப புல்லாப் புலப்பதோர் ஆறு - ஆதலால், விளங்குகின்ற கடலானது

ஒரு படியினும் நில்லாத தன் அலைகளால் அலைத்தெதிர்கின்ற நீண்ட கழியினையுடைய குளிர்ந்த துறைவனே! காமத்திற்கு ஊடிப புணர்வது ஓர் இனிய நெறியாகும்.

(க - து) ஊடலுங் கூடலும் காமம மாட்சிமைப் படுதற்கு ஏது.

(வி - ம்) பசலையென்றது ஈண்டு ஒளிமழுக்கம். உப்பு, சுவையென்னும் பொருட்டு, ஆகுபெயா; சற்றே குறையினுங் கூடினுஞ் சுவை கெட்டு மற்றளவின் ஏற்கச சுவை பயப்பதொரு பொருளாகலின், அவ்வியல்பினதான ஊடற்சுவைக்கு ஈதுரைக்கப்படும். "உப்பமைந் தற்றாற் புலவி"* எனருரா நாயனுரும்; பிறரும் "உப்பமை காமம்"† என்பா. அலை எதிாதலாற் கழிநீா நிறைநது உப்பு மிக்கு மாட்சிமைப்படுதலின, தலைவன்பாற் குறைகண்டு அதனுல் ஒரு நிலையினு நில்லாது கடலலைபோற் கொந்தளிக்கும உள்ளமுடையளான தலைவி, தன்கண் வந்து கூடுகின்ற தலைவனைத் தனதூடலால் எதிர்த்து அவனுணாவை நீாமையுஞ் சுவையு மிகுவித்து மாட்சிமைப்படுத்துவ ளெனபது, 'நில்லாத் திரையலைக்கும் நீள் கழி' என்னும் அடைமொழியின் கருத்தாம். 'ஊடுதல் காமத்திற் கின்பம் அதற்கின்பம் கூடி, முயங்கப் பெறின்' ‡ என்னும் உண்மை இசசெய்யுளான் உணர்த்தப்பட்டது. 'புலவாப் புல்லுவதோ ராறு' என்று மாற்றி எதிா நிரனிறையாகக் கொள்க. தலைமகளை ஊடல் நீக்கிக் கூடிய தலை மகற்கு, முன்னம் வாயில் நோந்த தோழி உவகை மிக்குக் கூறியது. இதனுற், காமம் மாட்சிமைப் படுவதோராறு நுவலப்பட்டது. க

**392.** தம்மமர் காதலர் தார்சூழ் அணியகலம்
விம்ம முயங்குந் துணையில்லார்க்—கிம்மெனப்
பெய்ய எழிலி முழங்குந் திசையெல்லாம்
நெய்தல் அறைந்தன்ன நீர்த்து.

(பொ - ள்) தம் அமர் காதலர் தார் சூழ் அணி அகலம் விம்ம முயங்கும் துணை இல்லார்க்கு - தம்மால் அன்பு செய்யப்படுங் காதலரது மலர்மாலை யணிந்த அழகிய அகன்ற ஆகத்தைக் கொங்கைகள் பூரிக்க மருவியின்புறுமோர் ஆதரவில்லாத எம்போலும் பிரிந்த மகளிர்க்கு, இம் எனப் பெய்ய எழிலி முழங்கும் திசையெல்

* குறள், ௧௩௧ : ௨. † சிந். ௧ : ௭௮. ‡ குறள், ௧௩௩ : ௧0.

லாம் நெய்தல் அறைந்தன்ன நீர்த்து - இம்மென்று மழை பொழிய மேகம் இடித்தொலிக்குந் திசையெல்லாம் சாப்பறை அறைந்தாற் போன்ற தன்மையுடையது.

(க - து) பிரிவின்கண் அன்புசெய்து இரங்குவார்க்குக் காமம் மாட்சிமைப்படும்.

(வி - ம்) 'காதலா' எனறமையால் தலைவர் தம்மாட்டு அன்பு செய்தலும் பெறப்பட்டது. 'துணை' யென்றாள், தலைவன்றொடா பொன்றே தம் வாழ்க்கைக்குத துணையல்லது பிறிதன்றென்றற்கு. இம்மெனவென்பது ஒலிகுறிப்பு; அதனை ஈண்டுக் கிளந்தோது றா, பருவங் கருதினமையின். அஃதொன்றன்றி வேறியாதும் அவள் செவியகம் புகாமையின். "முடங்கிறைச சொரிதரு மாத்திரள் அருவி இன்பல இமிழ்இசை ஓப்பனள் கிடந்தோள், அஞ் செவி"* யென்றார் பிறரும். எல்லாமென்பது தொறுப்பொரு ளதாகலின் ஒருமையின் முடிந்தது. சாதலன்ன பிரிவென்பவா லின்† 'நெய்த லறைந்தன்ன' வென்றா. இது, பருவங்கண்க ஆற்றாளாய் தலைவி தன்னுட் கலுழ்ந்து கூறியது. ௫

393 கம்மஞ்செய் மாக்கள் கருவி ஒடுக்கிய
மம்மர்கொள் மாலை மலராய்ந்து பூத்தொடுப்பாள்
கைமமாலை இட்டுக் கலுழந்தாள், துணையில்லார்க்கு
இம்மாலை என்செய்வ தென்று,

(பொ - ள்) கம்மம் செய் மாக்கள் கருவி ஒடுக்கிய மம்மர்கொள் மாலை மலராய்ந்து பூத்தொடுப்பாள் - கம்மத் தொழில் செய்கின்ற மக்கள் தொழிலை நிறுத்தித் தம் கருவிகளை ஏறக்கட்டிச் சென்ற மயக்கஞ் செய்யும் இம் மாலைப்போதில் மலர்களை ஆராய்ந்து மாலை தொடுப்பவள், கைம்மாலை இட்டுக் கலுழ்நதாள் துணையில்லார்க்கு இம் மாலை என் செய்வதென்று - நின் பிரிவு கேட்டுத் தனது கையிலிருந்த மாலையை நழுவவிட்டுத் தலைவராகிய துணையைப் பிரிந்த மகளிர்க்கு இந்த மலர்மாலை என்ன பயன் தருவதென்று சொல்லி அழுவாளாயினள்.

(க - து) பிரிவிறாற் காதலருள்ளம் மென்மையடையும்;

* முல்லைப். அள-க. † அகநா. கூகூக.

(வி - ம்) கம்மமென்பது, தொழில். வேலை நிறுத்தினரென்றற்குக் கருவி யொடுக்கினு ரென்ருர். கம்மியருந் தந்தொழில் விடுத்துத் தம் இல்லஞ் செல்லும் மாலை யென்றமையால், தலைவனுந் தான் வினைமேற் சேறலை விடுத்து இல்லந் தங்குதல் வேண்டுமென்னுங் குறிப்புப் பெறப்பட்டது. காதலர்க்கு மயக்கஞ் செய்யும் மாலையாகலின்,* 'மம்மர் கொள் மாலை' யெனப்பட்டது. என்று சொல்லியது தானே கூறிக்கொண்டது. இது, தலைமகள் செலவு உடன்படாமையைத் தலைமகற்குத் தோழி கூறியது. ௩

**394.** செல்சுடர் நோக்கிச் சிதரரிக்கண் கொண்டநீர்
மெல்விரல் ஊழ்தெறியா விம்மிதன்—மெல்விரலின்
நாள்வைத்து நங்குற்றம் எண்ணுங்கொல், அந்தோதன்
தோள்வைத் தணைமேற் கிடந்து

(பொ - ள்) செல் சுடர் நோக்கிச் சிதர் அரிக்கண் கொண்ட நீர் மெல் விரல் ஊழ் தெறியா விம்மி - கதிரவன் மறையும் மாலைப்போது நோக்கிச் சிதறிய செவ்வரி பரந்த கண்கள ஆற்ருமையால் நிறைத்த நீரைத தனது மெல்லிய விரலால் முறையே எடுத்தெறிந்துகொண்டு அழுது, மெல் விரலின் நாள் வைத்து நம் குற்றம் எண்ணுங்கொல் அந்தோ தன் தோள் வைத்து அணைமேல் கிடந்து - தன் கையே தலையணையாகப் படுக்கையின்மேல் ஒருக்கணித்துக் கிடந்து மெலிந்துபோன தன் விரல்களினல் பிரிந்த நாளைக் கணக்கிட்டுக் காலத்தில் இல்லஞ் சேராத நமது குற்றத்தை நினைத்து ஆ, இந்நேரம் நம் துணைவி வருந்துமோ?

(க - து) பிரிவு அருளிரக்கத்தை உண்டாக்கும்.

(வி - ம்) செல்சுடர் அன்மொழித் தொகையாய் மாலைப் போதாயிற்று. கண்ணிறை நீர், இடையிட்டுத் துளி கொள்ளலால், 'ஊழ் தெறியா' என்ருர். 'சுடர் நோக்கிக் கிடந்து தெறியாவிம்மி நாள்வைத்து எண்ணுங்கொல்' என்று கொள்க. இது வினைமுற்றி மீளுந் தலைமகன் இரங்கித் தன்னுள் கூறியது. "நாள்எண் ணீர் மையின் நிலனுங் குழியும், விரலிட் டறவே"† என்றதனல், பிரிந்த மகளிர் நாளெண்ணி வருந்துதல் பெறப்படும். (௪)

* குறுந். ௪௬. † திருக். ௲௨௬௧.

**395.** கண்கயல் என்னுங் கருத்தினல் காதலி
பின்சென்றது அம்ம சிறுசிரல்;—பின்சென்றும்
ஊக்கி யெழுந்தும் எறிகல்லா ஒண்புருவங்
கோட்டிய வில்வாக் கறிந்து.

(பொ - ள்) *கண்கயல் என்னும் கருத்தினல் காதலி பின்சென்றது அம்ம சிறுசிரல் - கண்களைக் கயல்மீன் என்று கருதிய கருத்தினல் அதனைக் குத்தித் தின்னும் பொருட்டு ஆ! நம் காதலியின் பின்னே சென்றது சிச்சிலி என்னுஞ் சிறிய மீன்குத்திப் பறவை; பின்சென்றும் ஊக்கியெழுந்தும் எறிகல்லா ஒண் புருவம் கோட்டிய வில் வாக்கு அறிந்து - ஆனல், அவ்வாறு பின்சென்றும் குத்துதற்கு முனைந்தும் குத்தாதாயிற்று அவளது ஒள்ளிய புருவம் வளைந்த வில்லின் வளைவென்றறிந் தென்க.*

(க - து) *நலம் பாராட்டும் அன்பினல் காமம் மாட்சிமைப்படும்.*

(வி - ம்) *தலைவியின் விழியால் அழிவுற்று மயங்கினைதலின்* இங்ஙனம் விழி நினைந்து நலம் பாராட்டினன். அம்ம, வியப்பு. ஊக்கியெழுதல், ஒரு சொல். எறிகலா வென்பது செய்யுளின்ப நோக்கி ஒற்று மிக்கது. இது, தலைமகன் தன் தலைவியின் நலத்தைப் பாங்கற்கு வியந்து கூறியது.* ௫

**396.** அரக்காம்பல் நாறும்வாய் அம்மருங்கிற் கன்னே
பரற்கானம் ஆற்றின கொல்லோ,—அரக்கார்ந்த
பஞ்சிகொண் டூட்டினும் பையெனப் பையெனவென்று
அஞ்சிப்பின் வாங்கும் அடி.

(பொ - ள்) *அரக்கு ஆம்பல் நாறும் வாய் அம்மருங்கிற்கு - செந்நிறம் பொருந்திய ஆம்பல மலரைப்போல நறுமணத்தோடு விளங்கும் வாயையும் அழகிய இடையையுமுடைய நம் புதல்விக்கு, அன்னே-ஆ, அரக்கு ஆர்ந்த பஞ்சிகொண்டு ஊட்டினும் பையென பையென என்று அஞ்சிப் பின்வாங்கும் அடி பரல் கானம் ஆற்றின*

* திருக்கோ. உ௫.

கொல்லோ - அழகுக்காகச் செந்நிற மிக்க செம்பஞ்சிக் குழம்பைத் தடவினாலும் 'மெதுவாக, மெதுவாக'வென்று அஞ்சிக் கூறிப் பின் இழுத்துக்கொள்ளும் அத்துணை மெல்லிய பாதங்கள் தலைவனோடு உடன்போக்கிற் பிரிந்த இப்போது பரற்கற்களையுடைய கானத்திற் செல்லப் பொறுத்தனவோ?

(க - து) எத்துணை இன்னலையுந் தலைவனுடன் தாங்குதலாற் காதல் பின்னும் மாட்சிமைப்படும்.

(வி - ம்) அரக்காம்பல், செவ்வாம்பல்; நாறு மென்றதனால் மணமுங் கொள்க. "ஆம்பல் நாறும் தேம்பொதி நறுவிரைத் தாமரைச் செவ்வாய்"* யென்றார் பிறரும். மருங்கு, ஆகுபெயர். 'மருங்கிற்கு அடி கானம் ஆற்றினவோ' என்க. செல்லவென ஒரு சொல் வருவிக்க. இது, செவிலித்தாய் தன் மகள் உடன் போக்கிற் பிரிந்து சென்ற சுரத்தருமை நினைந்து இரங்கியது. ௬

**397.** ஓலைக் கணக்கர் ஒலியடங்கு புன்செக்கர்
மாலைப் பொழுதில் மணந்தார் பிரிவுள்ளி
மாலை பரிந்திட் டழுதாள்; வனமுலைமேற்
கோலஞ்செய் சாந்தந் திமிர்ந்து.

(பொ - ள்) ஓலைக் கணக்கர் ஒலி அடங்கு புன் செக்கர் மாலைப்பொழுதில் மணந்தார் பிரிவு உள்ளி - ஏடுகளிற் கணக்கெழுதுங் கணக்கரது அலுவல் தொடர்பான ஆரவாரம் அடங்குகின்ற புல்லிய சிவந்த அந்திப் பொழுதில், தலைவி தன்னை மணந்த கணவரது பிரிவை நினைந்து, மாலை பரிந்திட்டு அழுதாள் வன முலைமேல் கோலம் செய்சாந்தம் திமிர்ந்து - தான் சூடியிருந்த மலர் மாலையை அறுத்தெறிந்து தன் அழகிய கொங்கையின்மேல் தொய்யிலெழுதி அழகு செய்திருந்த சந்தனத்தையுங் கலைத்துதிர்த்து அழுவாளாயினள்.

(க - து) பிரிவுள்ளி இரங்கும் அன்பினால் உடலும் உயிருங் குழைந்து பயனுறுதலையுடைய செவ்வியைப் பெறும்.

---

* சிலப். ௪ : ௭௩-௪.

(வி - ம்) ஒலி, கணக்குத் தீர்த்தலும் அதுபற்றிப் பேசுதலு மான ஆரவாரம். ஒலியடங்குதல், வேலையோய்தல். இக்கருத்து முன்னும் வந்தது.* செக்கரென்றது, அந்திவானத்தின் செவ் வொளியை நினைந்து. கோலஞ் செய்து மாலை சூடியிருந்தமை யால், பிரிவு மேல் நிகழவிருப்பதெனக் கொள்க. திமிர்தல், ஈண்டுத் தேய்த்துதிர்த்தல். பிரிவாற்ருத தலைமகளின் நிலைமையைத் தோழி, தலைமகன் கேட்பத் தன்னுள் இரங்கிக் கூறியது இது. எ

**398.** கடக்கருங் கானத்துக் காளைபின் நாளை
நடக்கவும் வல்லையோ என்றி;—சுடர்த்தொடீஇ!
பெற்ருெருவன் பெருங்குதிரை அந்நிலையே
கற்ருன் அஃதூரும் ஆறு.

(பொ - ள்) கடக்க அரு கானத்துக் காளை பின் நாளை நடக்கவும் வல்லையோ என்றி - வன்மையுடையாருங் கடந்து செல்லுதற் கருமையான காட்டின்கண் காளை யாகிய தலைவன் பின்னே நாளை நீ உடன்போக்கில் நடந்து போகவும் வல்லமையுடையையோ என்று கூறுகின்றனை; சுடர்த் தொடீஇ - ஒளி மிக்க வளைய லணிந்த தோழீ! பெற்ருன் ஒருவன் பெருங்குதிரை அந்நிலையே கற்ருன் அஃது ஊரும் ஆறு - பெருமையிற் சிறந்த குதிரை யொன் றினைப் பெற்ருெருவன் அப்பொழுதே அதனை ஏறி ஊரு நெறியைக் கற்றவனாவன்.

(க - து) ஒருமைப்பட்ட காதலன்பினால் உள்ளம் ஆழ்ந்து ஆற்றலுடைய தாகின்றது.

(வி - ம்) வல்லையோ என்றது, தலைவியின் மென்மை கருதி. உவமையால், கருத்துடையாளொருவன் ஒரு நிலையை எய்தினால் அதற்கான ஆற்றல்கள் அவனகண் உடனே சென்றடையும் என்பது பெறப்படும். தலைவி தனது மெய்யன்பினை இவ்வாறு புலப்படுத்தினாள். தெளிவுபற்றிக் கற்ருன் என இறந்தகாலத் தான் நின்றது; இதனை "இயற்கையுந் தெளிவுங் கிளக்குங் காலை"† யென்பதனாற் கொள்க. இது, உடன்போக்கிற் கிசைந்த தலைவி தோழிக்குக் கூறியது. அ

* நாலடி. சய : ரு.　　† தொல். வினை. சஅ.

**399.** முலைக்கண்ணும் முத்தும் முழுமெய்யும் புல்லும்
இலக்கணம் யாதும் அறியேன்—கலைக்கணம்
வேங்கை வெரூஉம் நெறிசெலிய போலும்என்
பூம்பாவை செய்த குறி.

(பொ - ள்) *முலைக்கண்ணும் முத்தும் முழுமெய்யும் புல்லும் இலக்கணம் யாதும் அறியேன்- நேற்று என்மகள் தன்னுடைய முலைக்காம்பும் முத்துவடமும் அழுந்தும்படி என் உடம்பு முழுமையும் அணைத்துக்கொண்ட உண்மையை யான் சிறிதும் அறியாமற்போனேன்; கலைக் கணம் வேங்கை வெரூஉம் நெறி செலிய போலும் என் பூம்பாவை செய்த குறி - மான்கூட்டங்கள் வேங்கைக்கு அஞ்சிச் சிதறுங் காட்டுநெறியில் இன்று பிரிந்து செல்லு தற்குப்போலும், அழகிய பாவை போல்வாளான என் மகள் அவ்வாறு செய்த அடையாளம்!*

(க - து) *தாயினன்பினையும் மறக்கும் ஆழ்ந்த காத லன்பினால் காமம் இன்பப்பேறுடைய தாகின்றது.*

(வி - ம்) *முத்து, ஆகுபெயர். இலக்கணம, ஈண்டு இயல் பினை யென்னும் பொருட்டு. தன்மாட்டு வைத்த அன்பினால் மகள் இவ்வாறு குறிசெய்த இயல்பினை யென்க. இல்வாறு இயல்பினை நுவலலின் அறிந்திலேன் எனற்பாலது, அறியேன் என நிகழ்வி னின்றது. "இயற்கையுந் தெளிவு" மென்புழி 'இயற்கை' யென்பதனால்* இது கொள்ளப்படும். கலை, மானென்னும் பொதுமையின் வந்தது. செலிய, எச்சம். இது, மகட்போக்கிய தாய் வருந்திக் கூறியது.* கூ

**400.** கண்மூன் றுடையானும் காக்கையும் பையரவும்
என்னீன்ற யாயும் பிழைத்ததென்—பொன்னீன்ற
கோங்கரும் பன்ன முலையாய்! பொருள்வயிற்
பாங்கனார் சென்ற நெறி.

(பொ - ள்) *கண் மூன்று உடையானும் காக்கையும் பை அரவும் என் ஈன்ற யாயும் பிழைத்தது என் - கண்கள்*

* தொல். வினை. சஅ.

மூன்றுடைய சிவபிரானும் காக்கையும் படத்தையுடைய இராகுவென்னும் பாம்பும் என்னை ஈன்று வளர்த்த தாயும் என்மாட்டுப் பிழை செய்தது யாதிருக்கின்றது; பொன் ஈன்ற கோங்கு அரும்பு அன்ன முலையாய் - பொன் போலுஞ் சுணங்கினை மேலெழச் செய்த கோங்கின் அரும்புபோன்ற கொங்கைகளுடைய தோழீ! பொருள் வயின் பாங்கனார் சென்ற நெறி - என் கவற்சிக்கு ஏது, பொருள் காரணமாக நந் தலைவர் பிரிந்து சென்ற கொடிய காட்டுநெறியினது கடுமையேயாகும்.

(க - து) ஆழ்ந்த காதலுணர்வு பிறர்நலம் உள்ளுதற் கிடஞ்செய்யும்

(வி - ம்) பிரிவாற்றாது தலைவி வருந்துவதறிந்து தோழி, தலைமகன் கூட்டம் விரும்பி வருந்துவதாக உட்கொண்டு வேறு கூற, தலைவி அதனை மறுத்துச் சுரத்தின்கண் அவன் எய்தும் இடர் நினைந்து வருந்துதல் தெரித்தாள். தன்னலங் கருதாது தலைவன் நலங்கருதுதல் புலப்படுத்திற்று இச்செய்யுள் "மரையா மரல் கவர"* வெனனுங் கலியினும் இது வரும். தோழி, காம வேட்கையை மிகுவிக்குங் காமனையும் குயிலையும் நிலவையும் பெண்பிறவியையும வெறுத்துக் காமனை மீண்டும் உயிர்ப்பித்த சிவபிரானையும், குயின் முட்டையை அடைகாத்துக் குஞ்சு பொரித்து வளர்த்துவிட்ட காக்கையையும், விழுங்கிய நிலவை மீண்டும உமிழ்ந்த அரவையும், ஈன்று வளாத்த தாயையும் பழிததுக் கூறினமையின் தலைவி, 'பிழைத்ததென்'? என்றாள். 'என் 'னென்றது கற்றதனாலாய பயனென்கொல்' என்புழிப் போல யாதுமின்மை யுணர்த்திற்று. இது, தலைவன் சென்ற சுரத்தருமை நினைந்து தலைவி வருந்தியது. இவை ஒன்பது பாட்டானும், காமம் பிரிந்துள்ளும் முறைகளால் மாட்சிமைப்படும் இயல்பு விளங்கிற்று.

## நாலடியார் இளவழகனுரை

முற்றும்.

---

* கலித். ௬.

## பதினெண் கீழ்க்கணக்கு

### வெண்பா

நாலடி நான்மணி நானாற்பது ஐந்திணைமுப்
பால்கடுகங் கோவை பழமொழி மாமூலம்
இன்னிலைசொல் காஞ்சியுடன் ஏலாதி என்பவே
கைந்நிலைய வாங்கீழ்க் கணக்கு.

---

# பாட்டு முதற்குறிப்பு

# அருஞ் சொற் பொருள்

(எண் - செய்யுளெண்)

அஃகுதல் - குறைதல் 12
அக்காரம் - கருப்பங்கட்டி 112
அக்காரம் - சாக்கரை 206, 374
அக்கு - சங்குமணி 123
அகடு - உறுதி 2
அங்கணநீர் - சாக்கடை நீர் 175
அசா - தளர்ச்சி 201
அசைவு - தளர்ச்சி 150
அட்டு - சமைத்து 271
அடகு - கீரை 289
அடகு - கீரையுணவு 207, 217
அணங்குதல் - வருத்துதல் 241
அத்து - காவி 281
அதர் - வழி 192
அபராணப்போழ்து - பிற்பகற் பொழுது 207
அயில் - கூர்மை 386
அரா - பாம்பு 241
அரிமா - சிங்கம் 141, 152, 198
அருகுதல் - குறைதல் 261
அரை - அடிமரம் 246
அல்கு நிழல் - மாலை நேரத்தின் நிழல் 166
அலகு - அளவு 22, 140
அலரி - மலர் 199
அலவன் - நண்டு 123
அவ்வியம் - அழுக்காறு 322
அவத்தம் - வீண் 327
அளித்து - எளிமையுடையது 15
அளிதல் - வேதல் 219
அளிநீரார் - இரங்கும் இயல்புடையார் 355
அற்றம் - இல்லாமை 78
அறிவு நூல் - சமயநூல் 140
அறை - ஒலிக்கும் 230
அறை - பாறை 360
அன்றில் - ஒருவகைப் பறவை 376
ஆடுதல் - உலாவுதல் 28
ஆணம் - அன்பு 374
ஆதும் - ஆக்கமுறுவோம் 181
ஆள்வினை - முயற்சி 195
இகல் - முரண் 137
இட்டாறு - சிறிய வழி 288
இடுக்கண் - துன்பம் 382
இடுக்கு - சுருக்கு 274
இடும்பை - துன்பம் 282
இம்மியரிசி - ஒருவகைச் சிறிய அரிசி 94
இருந்தை - பானை 258
இருந்தைக்கு-இருந்த உனக்கு 79
இலங்குதல் - விளங்குதல் 227
ஈரம் - அன்பு 138
உகுதல் - சிதைதல் 292
உசாவுதல் - ஆராய்ந்து சூழ்தல் 201
உட்கி-உண்மதிப்புகொண்டு 384
உட்கு - நன்மதிப்பு 102
உட்குதல் - அஞ்சுதல் 164, 384
உட்குதல் - கருதுதல் 83
உடங்கு - ஒருங்கே 173
உப்பு - சுவை 391
உம்மை - மறு பிறவி 58
உயத்திட்டல் - கொண்டு போய்த் தொகுத்தல் 10
உய்ந்தார் - பிழைத்துக்கொண்டவர், தப்பினவர் 277
உரவு நீர் - கடல் நீர் 175
உரன் - அறிவு 65
உரு - அழகு 223
உருகெழு - அச்சம் மிக்க 90
உருத்த - ஊக்கங்கொண்ட 304
உரும் - இடி 164
உருவிற்கு - காட்சிக்கு 240
உலகநூல் - செல்வப்பொருள் தரும்-நூல் 140
உலத்தல் - நிலையழிதல் 185
உலத்தல் - முடிதல் 93
உலறி - கெட்டு 141
உழை - இடம் 167, 286, 349

பண்டம்-(ஈண்டு) உடம்பு 13, 48
பண்ணப் பணைத்த - மிகப் பெருகிய 251
பணைத்த - பெருகிய 251
பத்தர் - தொட்டி 257
பந்தம் - பிணிப்பு 234
பரிசு - (ஈண்டு) மானம் 309
பரிதல் - மேற்கொள்ளல் 60
பரிதல் - விரும்புதல் 182
பரிந்து - இரங்கி 155
பரீஇ - கடித்து 220
பறை - சாவு மேளம் 24, 25
பறை - மேளம் (ஈண்டு மண முரசு) 23, 86
பாடு - பெருமை 105, 187, 252
பாணி - காலம் 362
பாணி - கை 16
பாத்துண்டல் - பகுத்துண்டல் 92, 271
பிலம் - சுரங்கம் 160
பீடு - பெருமை 92
பீள்-முற்றுத இளங்கரு 20, 269
புக்கில் - (ஈண்டு) உடம்பு 41
புதவு - வாயில் 99
புரை - குற்றம் 11, 161
புலந்து - ஊடி 252
புழுக்கல் - சோறு 206
புற்கை - புல்லரிசிக்கஞ்சி 200
புனம் - காடு 180
புனம் - நிலம் 178
புனல் - நீர் 222
பூழை - புழை (துளை) 282
பெண்ணை - பனை 216
பெருமுத்தரையா . 200, 296
போத்த - கோத்த 376
பொரி தாள் விளவு 261
பொரீஇ - பழகி 220
பொருளில் வறுங்கோட்டி-மெய்புணர்வில்லா வீணோர் அவை 155
போத்து - மாசு 351
மகனறிவு தந்தையறிவு 367
மஞ்சு - மேகம் 28
மதலை - வன்மை 197
மதுகை - வலிமை 65, 198, 291
மம்மர் - மயக்கம் 14, 132, 393
மயல் - மயக்கம் 183
மருங்கு - இடம் 8
மருவுதல் - தழுவுதல் 36
மரூஉ - நட்பு 246
மல்லல் - வளப்பம் 296
மலங்கு - ஒருவகை மீன் 375
மறங்கும் - மாறுபடும் 342
மறி - ஆட்டுக்கடா 16
மன்றம் - சபை 23
மாதர் - விருப்பம் 73
மாற்றுதல் - மறுத்தல் 308
மிகைமக்கள் - மேன்மக்கள் 163
மிடி - வறுமை 56
முகிழ் - அரும்பு 262
முட்டிகை - சம்மட்டி 208
முட்டு - இடுக்கண் 238
முட்டு - முட்டுப்பாடு 288
முடுக - கடுக (மிக) 171
முடுகி - விரைந்து 238
முடை - முடைநாற்றம் 48
முத்தரையர் 200, 296
முந்திரி - அளவைப்பெயர் 346
முழுமக்கள - கயவர் 358
முறி - தளிர் 16, 317
முன்னியவை - நினைத்தவை (கடவுள் வாழ்த்து)
மூகை - மூங்கை (ஊமை) 158
மூழை - அகப்பை 321
மை - மேகம் 142
மைத்துனர் - முகமன்மொழிந்து விளையாடுவார் 340
மைந்து - களிப்பு 87
மொக்குள் - குமிழி 27
மோடு - உயரவு 358
யாக்கை - உடல் 28, 30
யாத்தல் - கட்டல் 214

